தினத்தந்தி

வழங்கும்

# விதியை மாற்றும் 40 சித்தர்கள்



ஜீவ சமாதிகளில் வாழும் மகான்களின் அதிசய பெட்டகம்

செ. செந்தில்குமார்

# விதியை மாற்றும்
# 40 சித்தர்கள்

## ஜீவசமாதிகளில் வாழும்
## மகான்களின் அதிசய பெட்டகம்

செ.செந்தில்குமார்




தினத்தந்தி பதிப்பகம் ,
86, ஈ.வி.கே.சம்பத் சாலை,
வேப்பேரி, சென்னை—7.
போன்: 044—25303336 / 25303000
89390 98333, 72999 90399
வாட்ஸ்அப் நம்பர் : 91767 38888
www.dailythanthi.com / https://publication.dailythanthi.com
e mail: mgrthanthipub@dt.co.in




Title : Vithiyai Matrum 40 Sithargal

ISBN: 978-81-939380-5-8

தினத்தந்தி பதிப்பகம்: 57

| | | |
|---|---|---|
| **நூல் தலைப்பு** | : | **விதியை மாற்றும் 40 சித்தர்கள்** |
| **ஆசிரியர்** | : | **செ.செந்தில்குமார்** |
| **முதற்பதிப்பு** | : | ஆகஸ்டு 2019 |
| **விலை** | : | ₹ 150 |
| **வெளியீடு** | : | **©தினத்தந்தி பதிப்பகம்,** |
| | | 86, ஈ.வி.கே.சம்பத் சாலை, |
| | | வேப்பேரி, சென்னை-7. |
| | | போன் : 044-25303336 / 25303000<br>89390 98333, 72999 90399. |
| | | வாட்ஸ்அப் நம்பர் : 91767 38888 |
| | | www.dailythanthi.com |
| | | https://publication.dailythanthi.com |
| | | e mail: mgrthanthipub@dt.co.in |


---

# அணிந்துரை

## சித்தர்களை தெரிந்து கொள்ள

## அருமையான புத்தகம்

**செ.** செந்தில்குமார் எழுதிய "விதியை மாற்றும் 40 சித்தர்கள்" தொகுப்பினைப் படித்தேன். சுமார் 150 வருடங்களுக்குட்பட்ட அதாவது சமீப காலத்திய 40 சித்தர்களைப் பற்றி அறியும் பாக்கியமாக இப்புத்தகம் எனக்கு அமைந்தது.

சித்தர்கள் என்ற சொல் நம் ரத்தத்தில் ஊறிய சொல். பரம்பரை பரம்பரையாய் நம் வழிபாட்டில் தொடரும் சொல். பதினெட்டு சித்தர்களில் ஆரம்பித்து இன்று ஷீரடி பாபா, பாபாஜி வரை நாம் போற்றி வணங்கி வருகின்றோம்.

இன்னமும் அநேக சித்தர்கள் நம்மிடையே நம் கண் எதிரே நமக்காக வாழ்ந்து கொண்டுதான் இருக்கின்றார்கள். நாம்தான் இயந்திர வேகத்தில் மாயையின் பின்னால் ஓடி இவர்களை அறியாமல் வாழ்வின் பயனை வீணடிக்கின்றோம்.

செந்தில்குமார் தமிழ்நாடு முழுவதும் ஓடி ஓடி, தேடி தேடி அரிய பொக்கிஷ செய்திகளை இப்புத்தகத்தில் வார்த்தைகளால் கொட்டிக் குவித்துள்ளார். தான் பார்த்தது, அனுபவித்தது, பிறரும் பயன்பெற வேண்டி சிரத்தையுடன் எழுதியுள்ளார். அரிய முயற்சி. அற்புத முயற்சி. செந்தில்குமார் அவர்களுக்கு மனமார்ந்த பாராட்டுதல்கள்.

சித்தர்கள் — சிவத்தினை அகக் கண்ணால் கண்டவர்கள். அறிவார்ந்த சக்தி கொண்டவர்கள். மருத்துவமோ, வானியலோ, ரசவாதமோ எதிலும் இவர்களே முதன்மையானவர்கள். முழுமையானவர்கள்.

சித்தர்களால் தங்களை அணு அளவு சுருக்கிக் கொள்ளவும் முடியும். எல்லையில்லா அளவு பெருக்கவும் முடியும். எடையே இல்லாத இறகு போல் இருக்கவும் முடியும். சிறிய உருவமானாலும் அசைக்க முடியாத அதிக கனத்துடன் இருக்கவும் முடியும். நொடியில் எங்கும் இருப்பர். பஞ்ச பூதங்கள் இவர்களுக்கு கட்டுப்படும்.

மக்கள் நன்மைக்காக சித்தர்கள் தன்னையும், தன் முகவரியினையும் மறைத்து பாடுபட்டு வந்துள்ளனர். இன்றும் பதஞ்சலியின் 'யோக சாஸ்திரம்'

உடலை காக்கும் காய கல்பம் போல் பின்பற்றப்படுகின்றது.

Sound Mind Sound Body என்பார்கள். மனம் சீரானால் எந்த நோயும் ஒருவரை அணுகாது. மருந்தே தேவை வராது. விஞ்ஞானத்தின் மொழியிலேயே எதனையும் பேசும் செயல்படுத்தும் நான், மெய் ஞானத்தினை என் உள் மனதில் பெருமதிப்பு அளித்து போற்றுகின்றேன்.

"விதியை மாற்றும் 40 சித்தர்கள்" புத்தகம் ஒவ்வொருவர் வீட்டிலும் இருக்க வேண்டிய புத்தகம். அனைவரும் அடிக்கடி படிக்க வேண்டிய புத்தகம். முடிந்த பொழுதெல்லாம் இப்புத்தகத்தில் குறிப்பிட்டுள்ள தலங்களுக்கு சென்று வழிபடுவோம். பல நாட்டினருக்கு கிடைக்காத வாய்ப்பு நம் நாட்டிற்கு கிடைத்துள்ளது. அதனை கடைப் பிடித்து வாழ்வின் உண்மை வெற்றியினை காண்போம்.



கோமதி ஜெயபால்

# பொருளடக்கம்



# 1.கண்ணப்ப சுவாமிகள்

**காவாங்கரை, சென்னை.**

1. கண்ணப்ப சுவாமிகள்

அறிமுகம் இல்லாத ஒருவரைப் பார்த்தவுடன்... அவர் யார்? எங்கிருந்து வருகிறார்? அவருக்கு என்னென்ன பிரச்சினைகள் உள்ளன? என்பன போன்றவற்றை யாராலும் சொல்ல முடியுமா?



கண்ணப்ப சுவாமிகள்

கண்ணப்ப சுவாமிகளால் அப்படி துல்லியமாக சொல்ல முடிந்தது! முக்காலத்தையும் அறிந்தவர்களால் மட்டுமே ஒருவரைப் பார்த்தவுடன், அவர்களைப் பற்றிய எல்லா தகவல்களையும் சொல்ல முடியும். காவாங்கரை கண்ணப்ப சுவாமிகள் முக்காலத்தையும் உணர்ந்தவர். அதனால்தான் அவரால் தன்னை நாடி வந்தவர்களின் பிரச்சினைகளை தாமாகவே சொல்லி, அதற்கு தீர்வும் அளித்து கவலைகளைப் போக்க முடிந்தது.

சென்னையில் இருந்து புழலை அடுத்து செங்குன்றம் செல்லும் சாலையில், காவாங்கரையில் இலங்கை அகதிகள் முகாமை அடுத்து அருட்கோலம் கொண்டு, இந்த அற்புதங்களை நடத்தி வந்தார்.

1961—ம் ஆண்டு ஜீவசமாதி ஆகும் வரை ஏராளமான சிலிர்க்க வைக்கும் செயல்களை நடத்திக் காட்டி அதிசயிக்க வைத்தார்.

அவர் யார்? பெற்றோர் யார்? எந்த ஊரைச் சேர்ந்தவர்? என்பன போன்ற எந்தத் தகவலும் யாருக்கும் தெரியாது. இவரது பூர்வீகம் கேரளா என்று சிலர் சொல்கிறார்கள். ஆனால், அது உறுதி செய்யப்படவில்லை. பர்மா, மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் ஆங்காங்கே தவம் இயற்றியதையும், சுற்றி

அலைந்ததையும் பலர் பார்த்துள்ளனர். திடீரென ஒரு நாள் கடலில் மிதந்தபடியே சென்னை வந்து சேர்ந்துவிட்டா ர்.


இளமை தோற்றத்தில்

திருவொற்றியூர் கடற்கரையில் கரை ஒதுங்கியதைப் பலரும் பார்த்தனர். அப்போது ஆடையின்றி நிர்வாணமாக காணப்பட்டார். நிர்வாண நிலையிலேயே சென்னை தெருக்களில் அலைந்தார். ‘சித்தன் போக்கு... சிவன் போக்கு’ என்பார்களே! அப்படி அவர் அலைந்து திரிந்தார். நீண்ட தாடி, அலங்கோலமான சடை முடியுடன் காணப்பட்டவரைப் பார்த்த எல்லாரும் ‘பைத்தியம்’ என்று நினைத்து கல் வீசி தாக்கி துரத்தினார்கள்.

அவர் ஒரு சித்தர் என்பதை அப்போது எவராலும் கண்டுபிடிக்க முடியவில்லை. சென்னையில் இருந்து புறநகர் பகுதியான காவாங்கரைக்கு சென்ற அவர் மீது சித்ராம்பாள் என்ற பெண் இரக்கம் கொண்டார். ஒரு வேட்டியை எடுத்து இடுப்பில் கட்டி விட்டார். சித்ராம்பாளின் செயலால் கண்ணப்பா சுவாமிகள் தம் நிலையை வெளிப்படுத்தத் தொடங்கினார்.

சித்ராம்பாளை ‘அம்மா’ என்றழைத்தவர்... காவாங் கரையிலேயே நிரந்தரமாக தங்கி விட்டார். அவருக்கு உணவு வழங்கி ஆதரித்த இந்த அம்மையார், ஒரு நாள் சுவாமியின் சடை முடியை அகற்றி, மொட்டை அடிக்க ஒரு அன்பரை அழைத்து வந்தார். சுவாமியின் தலைமுடியைப் பார்த்து, நாற்றம் எடுக்கும்

என்று நினைத்து, முகத்தைத் திருப்பியபடி மொட்டை அடிக்க ஆரம்பித்தார். ஆனால், சுவாமியின் தலையில் இருந்து நறுமணம் வீசியது.

இதுதான் காவாங்கரையில் கண்ணப்ப சுவாமிகள் நடத்திக் காட்டிய முதல் அற்புதமாகக் கருதப்படுகிறது. அதன் பிறகும் அடிக்கடி அற்புதங்கள் நிகழ்த்தினார். அவர் ஒரு சட்டி வைத்திருந்தார். சீரடி சாய்பாபா எப்படி தினமும் பிச்சை எடுத்து சாப்பிட்டாரோ... அது போல சுவாமிகளும் பிச்சை எடுத்தே சாப்பிட்டார். அவருக்கு பொங்கிப் போட ஆயிரம் பேர் காத்திருந்தாலும், கடைசி வரை பிச்சை எடுத்தே உண்டார்.

பிச்சை எடுக்க அவர் பயன்படுத்திய சட்டியை 'அட்சய பாத்திரம்' என்றே சொல்ல வேண்டும். அதில் இருந்து அவர் எடுக்க எடுக்க உணவு வந்தது. இதனால் அவரை 'சட்டிச் சோறு கண்ணா' என அழைத்தனர். நாளடைவில் அது மாறி, 'கண்ணப்ப சுவாமிகள்' என்றானது. என்றாலும் நிறைய பேர் அவரை 'சட்டிச் சித்தர்' என்றும், 'மவுன குரு' எனவும் அழைத்தனர்.

கண்ணப்ப சுவாமிகள் மற்றவர்களை 'நைனா' என்று அழைத்துப் பேசுவார். அப்படி அழைத்துவிட்டால், ஏதோ அற்புதம் நிகழ்த்துகிறார் என்றே அர்த்தம்.

அவர் நடத்திய அதிசயங்கள் ஏராளம்...

பொன் ஆபரணம் செய்யும் ஒருவர், நகை செய்யக் கொடுத்த பணத்தை செலவு செய்துவிட்டார். தற்கொலை செய்ய நினைத்த அவர் பிறகு உதவி கோரி கண்ணப்ப சுவாமிகளை அணுகினார். சுவாமிகள் அவருக்கு 3 கூழாங்கற்களை அடுப்பு தீயில் போட்டு எடுத்துக் கொடுத்தார். அந்த கற்கள் தங்கமாக மாறின. அதை அவரிடம் கொடுத்து, 'போய்யா... பிழைச்சிக்க' என்று அருளி அனுப்பி வைத்தார்.

ஒரு முறை... வேலை முடிந்து களைப்புடன் வீட்டுக்குச் சென்று கொண்டிருந்த சில விவசாயிகளை, "வாருங்கள் சாப்பிடுவோம்!" என அழைத்தார். அதற்கு, "உங்க சட்டியில ஒரு கைப்பிடி சோறுதானே இருக்கு?" என்றனர், தயங்கியபடி.

என்றாலும் விவசாயிகளை உட்கார வைத்து சுவாமிகள் சட்டியில் இருந்து சோறு எடுத்தார். அவர் அள்ள அள்ள சோறு வந்துகொண்டே இருந்தது. விவசாயிகள் ஆச்சரியம் பொங்க பார்த்தனர்.



கருவறை சிலை

மற்றொரு முறை அல்லா துரை என்ற விவசாயி வயலில் உழுது கொண்டிருந்தபோது, அவருக்கு கடும் தாகம் எடுத்தது. அடுத்த நிமிடம் கண்ணப்ப சுவாமிகள் தண்ணீர் கலசத்தை எடுத்து, ஓடி வந்தார். ‘‘தாகமாக இருக்கா... இந்தா குடி!’’ என்று கொடுத்துவிட்டுச்சென்றார்.

ஒரு சமயம் கண்ணப்ப சுவாமியைப் பார்க்க பிராமணர் ஒருவர் வந்திருந்தார். அவருக்கு சாப்பாடு கொடுக்க சுவாமிகள் விரும்பினார். ஆனால், வீட்டில் மீன் குழம்புதான் இருந்தது. இதனால், அவர் சாப்பிட மறுத்தார். ‘‘நீங்கள் விரும்பியது கிடைக்கும்!’’ என்றபடி அவருக்கு உணவு பரிமாறினார். என்னே அதிசயம்... அவர் ஊற்றிய மீன் குழம்பு, பிராமணர் இலையில் மட்டும் கத்திரிக்காய் சாம்பாராக மாறியது.

புற்றுநோய் தாக்கிய ஒருவர் கண்ணப்ப சுவாமியை அணுகி உதவி கேட்டார். உடனே சுவாமிகள் சிரித்துக்கொண்டே... சிகரெட் ஒன்றை கொடுத்து புகைக்கும்படி கூறினார்.

அதிர்ச்சி அடைந்த நோயாளி, ‘‘சாமீ... இத குடிச்சா செத்துப் போவேன்’’ என்றார். சுவாமிகள் அவரிடம் ‘‘குடி’’ என்றார். அந்த நோயாளியும் சிகரெட்டை வாங்கி புகைக்க... புற்று நோய் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போனது. மருத்துவர்களே வியந்து போனார்கள்.

ஒரு நாள் தவறான குற்றச்சாட்டு காரணமாக போலீசார், கண்ணப்ப சுவாமியை கைது செய்தனர். அப்போது இன்ஸ்பெக் டரிடம், ‘‘உங்கள் மனைவி உடல்நலம் பாதிக்கப்பட்டுள்ளார். உடனே அவரைப் போய் காப்பாற்றுங்கள்’’

என்றார். இன்ஸ்பெக்டர் வீட்டுக்குச் சென்றபோது அவர் மனைவி உயிருக்குப் போராடியபடி கிடந்ததைக் கண்டு அதிர்ச்சி அடைந்தார். மனைவியைக் காப்பாற்றிய இன்ஸ்பெக்டர் பிறகு கண்ணப்ப சுவாமியின் பக்தராக மாறினார்.

ஏழைக் குடும்பத்தை சேர்ந்த ஒருவர் தன் மகள் திருமணத்துக்கு ஏற்பாடு செய்துவிட்டு, பணம் இல்லாமல் தவித்தபோது கண்ணப்ப சுவாமிகளின் மகிமை அறிந்து அவரை காண வந்தார். அந்த ஏழையின் கையில் மண்ணை அள்ளிக் கொடுத்து, ‘‘வீட்டுக்குப் போ... எல்லாம் கிடைக்கும்!’’ என்றார்.

அந்த ஏழை திரும்பிச் சென்றபோது வீட்டில் திருமணத் தாலி உள்பட எல்லாம் இருந்தது கண்டு ஆச்சரியப்பட்டார்.

கண்ணப்ப சுவாமிகளின் சீடர் ஒருவர், ஒரு தடவை சபரிமலைக்கு செல்வதாக கூறி புறப்பட்டார். அவரிடம் சுவாமிகள் ஒரு ரூபாய் கொடுத்து, இதை கோவிலின் குறிப்பிட்ட உண்டியலில் போட்டுவிடும்படி கூறினாராம். அந்த பக்தர் சென்றபோது... சுவாமி சொன்னபடி அந்த இடத்தில் உண்டியல் இருந்ததாம். ‘சபரி மலைக்கு வராத சுவாமிகளுக்கு இது எப்படி தெரிந்தது?’’ என ஆச்சரியப்பட்டார்.

இன்னொரு பக்தருக்கு காசியில் உள்ள விஸ்வநாதர் ஆலயப் பிரசாதத்தை வரவழைத்துக் கொடுத்து பிரமிக்க வைத்தார். ஆண்டார்குப்பம் முருகனுக்கு ஒரு நாள் பால் அபிஷேகம் நடந்தபோது, சிலையில் இவரது உருவம் தோன்றிய அதிசயம் நடந்தது. இவரது பக்தரை கொல்ல சிலர் அரிவாளுடன் வந்தனர். இதை அறிந்த சுவாமிகள், தன் பக்தரை அந்த இடத்தில் இருந்து மறையச் செய்துவிட்டார்.

இப்படி சுவாமிகள் நடத்திய அற்புதங்கள் பல... பல!

மகாத்மா காந்தி சுட்டுக் கொல்லப்பட்டபோதும், ரமணர் மரணம் அடைந்தபோதும் உடனே அதை தன் அருகில் இருந்தவர்களிடம் கூறினார். மிக தொலைவில் நடப்பதையெல்லாம்கூட சுவாமிகள் இருந்த இடத்தில் இருந்த படியே சொல்லி, பக்கத்தில் இருந்தவர்களை ஆச்சரியப் படுத்தினார்.

சித்தர்கள் தங்கள் உடல் உறுப்புகளை தனித் தனியாகப் பிரித்து போட்டு ‘நவ கண்ட சித்து’ எனும் யோகம் செய்வது உண்டு. கண்ணப்ப சுவாமிகளும் பல தடவை தன் உடல் உறுப்புகளை தனித் தனியாக கழற்றிப் போட்டதை

பலரும் கண்டு அதிர்ச்சி அடைந்தனர். அதுபோல ஒரே நேரத்தில் பல இடங்களில் தோன்றிய 'சித்தாடலையும்' இவர் நிகழ்த்தியுள்ளார்.

ஜீவசமாதி அடையும் முன்பு... தனக்குரிய இடத்தை தானே தேர்வு செய்தார். அந்த இடம் அப்போது செட்டியார் ஒருவருக்கு சொந்தமானதாக இருந்தது. அதை கேட்க சீடர்களை அனுப்பி வைத்தார். செட்டியாரோ "அந்த இடம் என்னுடையது இல்லை!" எனக் கூறினார்.

இதை கேட்ட சுவாமிகள் 'சர்வே நம்பரை'க்கூட துல்லியமாக சொல்லி, மீண்டும் செட்டியாரிடம் கேட்கும்படி ஆட்களை அனுப்பினார். அந்த எண்ணை சரி பார்த்த போதுதான், குறிப்பிட்ட இடம் அவருக்குரியதுதான் என தெரிய வந்தது.

சுவாமிகளின் மகிமை... ஞான ஆற்றலை அறிந்த செட்டியார், அந்த இடத்தை இலவசமாகவே கொடுத்துவிட்டார். அங்கு 1961—ம் ஆண்டு புரட்டாசி மாதம் மகாளய அமாவாசையில் அஸ்த நட்சத்திரம் கூடிய தினத்தில் கண்ணப்ப சுவாமிகள் முக்தி அடைந்தார்.

அவர் ஏற்கனவே சொன்னபடி உடல் 48 நாட்கள் வைத்து பூஜிக்கப்பட்டு பிறகு ஜீவசமாதி ஆக்கப்பட்டது. முதலில் அதன் மேல் லிங்கம் வைக்கப்பட்டது. காஞ்சி மகா பெரியவரின் யோசனையை ஏற்று கண்ணப்ப சுவாமிகளின் திருவுருவச் சிலையை நிறுவி வழிபாடு செய்கிறார்கள்.

தற்போது இந்த ஜீவசமாதி பெரிய ஆலயமாக மாறியுள்ளது. ஆலயத்துக்குள் சீரடி சாய்பாபா, பாபாஜி, இயேசுநாதர், நாயன்மார்கள், ஆழ்வார்கள், 18 சித்தர்கள் ஆகியோரது சிலைகள் உள்ளன. ஆலயம் சக்திமிக்கதாகவும் இருக்கிறது.

இதனால் ஜீவ சமாதியில் இருந்தபடி கண்ணப்ப சுவாமிகள் அருள்பாலித்து வருகிறார் என்கிறார்கள்.

2004—ம் ஆண்டு சுனாமி தாக்கியபோது, அந்தமானில் உள்ள தன் பக்தரை தட்டி எழுப்பிக் காப்பாற்றினாராம். அவர் தன்னையும் பல தடவை தட்டி எழுப்பி இருப்பதாக கண்ணப்ப சுவாமிகள் ஜீவசமாதி ஆசிரம செயலாளராக இருக்கும் ராமமூர்த்தி கூறுகிறார்.

“தினமும் நள்ளிரவு அங்கு சலங்கைச் சத்தம் கேட்கும், அதைத் தொடர்ந்து காற்று, தென்றலாக வீசும். மறுவிநாடியில் நறுமணத்தை சுவாசிக்க முடியும். அது கண்ணப்ப சுவாமி வந்து செல்வதற்கான அறிகுறி” என்றும் சொன்னார்.

‘சத்தியமாக இரு... சத்தியம் உன்னைக் காப்பாற்றும்’ என்பது கண்ணப்ப சுவாமிகளின் தாரக மந்திரம். இதை மனதில் நிலைநிறுத்தி, ஊதுபத்தி ஏற்றி கண்ணப்ப சுவாமியை வழிபடுபவர்களுக்கு நினைத்தது கைகூடுகிறது. குறிப்பாக மனதில் அமைதி மலர்கிறது!

சென்னை பாரிமுனை, கோயம்பேடு, தாம்பரம் உள்பட பல இடங்களில் இருந்து மாநகர பஸ்களில் போகலாம். காவாங்கரையில் இறங்கி, நடந்து போகிற தூரம்தான்.

அமாவாசை நாளில் போனால், கண்ணப்ப சுவாமியின் கருணை, கூடுதலாகவே இருக்கும். வேண்டிய வரம் பெற்று திரும்பலாம்.





# 2. குருசாமி அம்மா

அரியூர், புதுச்சேரி

2. குருசாமி அம்மா

சித்தர்கள் என்றாலே ஆச்சரியங்களுக்கும், அதிசயங்களுக்கும் பஞ்சமே இராது. அதுவும் பெண் சித்தர்கள் என்றால்...! அவர்கள் நிகழ்த்தும் சித்தாடல்களில் அதிக தனித்துவம் இருக்கும்!

புதுச்சேரி மாநிலம் அரியூரில் வாழ்ந்த ஸ்ரீகுருசாமி அம்மையார் என்ற பெண் சித்தர் நடத்திக் காட்டிய அற்புதம் இன்றும் தொடர்கிறது.




சுமார் 125 ஆண்டுகளுக்கு முன்... அதாவது, 1890—களில் அரியூருக்கு அவர் வந்ததாக குறிப்புகள் மூலம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

இவரது உண்மையான பெயர் குருசாமி அம்மையார் அல்ல.— 'இவர் யார், பெற்றோர் பெயர், எந்த ஊரைச் சேர்ந்தவர், அரியூருக்கு எப்படி வந்தார்?' என்பன போன்ற எந்தத் தகவலும் இல்லை.

வடமாநிலத்தைச் சேர்ந்தவர். புதுச்சேரியில் சிறிது காலம் இருந்துவிட்டு, பிறகு ஊர் ஊராக சென்றிருக்கிறார்.

கண்டமங்கலம்—அரியூர் பகுதியில் காணப்பட்ட அமைதியான சூழலும், பசுமையும் அவருக்குப் பிடித்துப் போக, அங்குள்ள மரத்தடியில் நிரந்தரமாக இருந்துவிட்டார்.

சாப்பாடு, தூக்கம் உள்ளிட்ட எதைப் பற்றியும் கவலை கொள்ளாதவர், அதே மரத்தடியில் எந்நேரமும் தியானத்தில் மூழ்கினார்.

முதலில் கண்டமங்கலம்—அரியூர் பகுதி மக்கள் அவரை கண்டுகொள்ளவில்லை. நாட்கள் செல்லச் செல்ல, ‘தியானத்தில் இருப்பவர் சாதாரண பெண் அல்ல; அவர் ஒரு மாபெரும் சித்தர்!’ என்பதை உணர்ந்தனர். “அம்மா... கண் திறந்து பாருங்கள்” என்றழைத்து அவரிடம் பேசத் தொடங்கினார்கள். குடும்பத்துப் பிரச்சினை, நோய், பணக் கஷ்டம், சுப காரியத் தடைகள் போன்றவற்றை சொல்லி வழிபட்டனர். அவற்றையெல்லாம் புன்னகை ததும்ப கேட்ட குருசாமி அம்மையார், பிரச்சினைகளுக்கு தீர்வு சொல்லி ஆசி வழங்கி அனுப்பி வைத்தார்.

அவரிடம் ஆசி பெற்றவர்களுக்கு பிரச்சினைகள் தீர்ந்தது. செல்வம் சேர்ந்தது. இந்த அற்புதம் மெல்ல, மெல்ல புதுச்சேரியிலும், மற்ற பகுதிகளிலும் பரவியது. அவரிடம் ஆசி பெற தினமும் ஏராளமானவர்கள் வந்தனர்.

அரியூர்—கண்டமங்கலம் பகுதியில் அந்தக் காலத்தில் விவசாயிகள் கஷ்ட நிலையில் இருந்தனர். அவர்களுக்கு பணம் கொடுத்து உதவினார். இத்தகைய செயல்பாடுகளால் அந்த மக்கள் அவரை குருவாக ஏற்று பணிந்தனர். ‘குருசாமி அம்மா!’ என்று பாசத்தோடு அழைத்து, பணி விடைகள் செய்தனர்.

நிரந்தரமாக போதிய இட வசதி கிடைத்ததைத் தொடர்ந்து குருசாமி அம்மையார் தனது தனித்துவமான செயலை நிகழ்த்தத் தொடங்கினார்.

ஒரு பவுர்ணமி தினத்தன்று...

அரியூர்—கண்ட மங்கலம் பகுதி பெண்களை அழைத்தார். காய்ந்த மிளகாய்களை (வத்தல்) அம்மியில் வைத்து அரைத்து, அதை தன் உடல்

முழுவதும் பூசும்படி கூறினார். ஒரே ஒரு காய்ந்த மிளகாய் பிசுறு கண்ணில் பட்டாலே எரிச்சல் தாங்க முடியாது. தலையில் இருந்து பாதம் வரை கிலோ, கிலோவாக காய்ந்த மிளகாயை அரைத்துப் பூசினால் எப்படி இருக்கும். தாங்க முடியுமா?

குருசாமி அம்மையாரோ நன்றாக அரைத்த காய்ந்த மிளகாய் விழுதை மேனியில் பூசிக்கொண்டு சிரித்தபடி ஆசி வழங்கினார். அதன்பிறகு அருகில் உள்ள கிணற்றில் நீராட சென்றார்.




கிணற்றின் மேல் கால் வைத்த மறுவிநாடி அவர் கிணற்றுக்குள் போய்விட்டார். 'அவர் எப்படி கிணற்றுக்குள் இறங்கினார்?' என்பது யாருக்கும் தெரியவில்லை.

சிறிது நேரத்தில் வெளியில் வந்தார். தன் நீள சடை முடியை அப்படியும், இப்படியுமாக ஆட்டி அசைத்து திருப்பினார். அவரது கூந்தலில் இருந்து சிதறிய நீர்த்துளிகள் பலர் மீதுபட்டது. அவர்கள் புத்துணர்ச்சி பெற்றனர். அவர்களது குடும்பப் பிரச்சினைகள் தீர்ந்தன.

குருசாமி அம்மையார் நிகழ்த்திய இந்த அற்புதம் ஒவ்வொரு மாத பவுர்ணமி தினத்தன்றும் தொடரலாயிற்று. அந்நாளில் நூற்றுக்கணக்கான பெண்கள் போட்டிப் போட்டு அரியூர் வந்து காய்ந்த மிளகாயை அரைத்து அவர் மீது பூசி தங்கள் வேண்டுதல்களை நிறைவேற்றினர்.

இந்த சித்தாடலின்போது மற்றொரு அற்புதத்தையும் நிகழ்த்திக் காட்டினார். காய்ந்த மிளகாயை அரைத்து விழுதை பூசிய பிறகு கிணற்றுக்குள் இறங்கும் அவர் தண்ணீருக்குள் மூழ்கி தியானம் செய்ததாக சொல்கிறார்கள்.

அந்தத் தியானத்தின் பலனாக அவர் இருக்கும் தனி அறைக்குள் பானை நிறைய பொங்கல், சுடச் சுட தானாகவே வந்துவிடுமாம். குளித்து முடித்து கிணற்றுக்குள் இருந்து மேலே ஏறி வந்த பிறகு அந்த சாதத்தை பக்தர்களுக்கு தம் கைப்பட எடுத்து அதே சூட்டோடு அன்பாக விநியோகம் செய்வாராம்.

ஆங்கிலேயர்கள் ஆட்சிக் காலத்தில் பல ஆண்டுகளாக இந்த அற்புதம் நடந்துள்ளது. அதன்பிறகு அவர் அங்கேயே ஜீவசமாதி ஆகிவிட்டார். ஆண்டுகள் பல உருண்டோடிய நிலையில் அவரது ஜீவசமாதி இருந்த இடம் செடி, கொடிகள் வளர்ந்து புதர்கள் மண்டி உருமாறிப் போய்விட்டது.

இந்த நிலையில் புதுச்சேரியில் ஏற்பட்ட பிரெஞ்சு ஆட்சிக்கு உட்பட்ட பகுதியாக அரியூர் மாறியது. கண்டமங்கலம், தமிழகத்துக்கு சொந்தமாக இருந்தது.

புதுச்சேரி—தமிழக எல்லையின் மத்தியில் குருசாமி அம்மையாரின் ஜீவசமாதி இருந்தது. பிரெஞ்சுக்காரர்களும், ஆங்கிலேயர்களும் எல்லைப் பாதுகாப்புக்காக அந்தப் பகுதியில் செய்த கெடுபிடிகள் காரணமாக குருசாமி அம்மையாரின் ஜீவசமாதிக்குச் சென்று பக்தர்கள் வழிபட முடியாமல் போய் விட்டது.

நாளடைவில் அந்த ஜீவசமாதி இருந்த இடமே மக்களால் காண இயலாதபடி காடாகிப் போனது. ஆனால், குருசாமி அம்மையார் விட்டுவிடவில்லை. ஜீவசமாதி இருக்கும் இடத்தை எல்லையில்லா சக்தியால் தானே வெளிப்படுத்தி அடையாளம் காட்டினார்.



அந்த அற்புதத்தை தஞ்சை மாவட்டம் அம்மாப்பேட்டையைச் சேர்ந்த நடராஜர் என்பவர் மூலம் நிகழ்த்தினார். இளம் வயதிலேயே துறவறம் பூண்ட நடராஜர், திருவண்ணாமலை சென்று சித்தர்களை சந்தித்து தியானத்தில் ஆழ்ந்தார். அப்போது அவர் மனதில் ‘‘புதுச்சேரிக்குப் போ...’’ என்ற திடீர் உத்தரவு கிடைத்தது.

புதுச்சேரிக்கு வந்தபோது, ‘‘குருசாமி கோவிலுக்குப் போய் சேவை செய்...’’ என்று மற்றொரு உத்தரவு வந்தது.

குருசாமி அம்மையார் பற்றியோ, அவர் ஜீவசமாதி ஆனது குறித்தோ நடராஜருக்கு எதுவும் தெரியாது. எனவே, ‘எந்த குருசாமி கோவிலுக்குப் போவது?’ என்று புரியாமல் தவித்தார்.

அப்போது, ‘‘என் குரலை பின்தொடர்ந்து வா’’ என்று அவர் மனதுக்குள் ஒரு குரல் ஒலித்தது. அது கேட்ட திசையில் நடந்தார். அரியூரில் வந்து நின்றார். புதர் மண்டிய இடத்தில் அமர்ந்து தியானம் செய்தார். மறுவிநாடி... குருசாமி அம்மையார் சிரித்த முகத்துடன் காட்சி கொடுத்தார்.

‘மள மள’வென புதர்களை அகற்றி, அங்கு ஜீவசமாதி இருப்பதை கண்டுபிடித்தார். 1947—ம் ஆண்டு இந்த அற்புதம் நடந்தது.

குருசாமி அம்மையார் ஜீவசமாதியை செப்பனிட்டு சீர்திருத்தி, தீபம் ஏற்றி வழிபாடுகளையும் தொடங்கி வைத்தார். அதுமட்டுமின்றி, குருசாமி அம்மையார் படத்தைக் கொண்டு அவருக்கு திருவுருவ சிலையும் அமைத்தார்.

இதனால், குருசாமி அம்மையாரை வணங்கிட பக்தர்கள் ஆர்வமாக இந்த ஜீவ சமாதியைத் தேடி வரத் தொடங்கினார்கள். சிலை வடிவில் உள்ள குருசாமி அம்மையாரைக் கண்டு மனம் உருகி மீண்டும் காய்ந்த மிளகாயை அரைத்து

பூசும் வழிபாட்டைத் தொடங்கினார்கள். காய்ந்த மிளகாயை அரைப்பதற்கு என்றே 5 அம்மிக்கல் உள்ளன. அதிகாலை ஐந்து மணி முதல் மாலை நாலரை வரை காய்ந்த மிளகாயை எடுத்து வந்து அரைத்து விழுதை சிலை சிரசில் வைத்து, நெய் தீபம் ஏற்றி, கல்கண்டு அல்லது இயன்றதை நைவேத்தியமாக படைத்து வழிபட்டுச் செல்கிறார்கள்.

இத்தலத்தில் காய்ந்த மிளகாயோடு நமது பிரச்சினைகளும் சேர்த்து அரைக்கப்பட்டு விடுவதாக ஐதிகம். கஷ்டங்களை தீர்த்து, நினைத்ததை நிறைவேற்றும் இந்த வழிபாட்டை செய்ய பவுர்ணமி தோறும் குருசாமி அம்மையாரின் ஜீவசமாதி தலத்தில் குவிகிறார்கள். வியாழன் தோறும் முழு காய்ந்த மிளகாயைப் பக்தர்கள் எடுத்து வந்து சிலையின் இரு பக்கமும் வைத்து வழிபடுகிறார்கள்.

அப்படி சேர்ந்து விடும் மிளகாயை மற்றவர்கள் பிரசாதமாக எடுத்துச் செல்கிறார்கள். அந்தக் காய்ந்த மிளகாய்களை 9 அல்லது 11 என்ற எண்ணிக்கையில் மாலை போல தொகுத்து வீட்டு வாசலில் கட்டி விட்டால் எந்தத் திருஷ்டி வந்தாலும் விலகி ஓடிவிடும் என்று நம்புகிறார்கள்.

அதிக வருவாய் இல்லாத இந்த ஜீவசமாதியை, தற்போது துளசி என்பவர் பராமரித்து வருகிறார். வியாழன்தோறும் அன்னதானம் செய்யும் இவர், பவுர்ணமி அன்று மாலை நேரத்தில் 4.30 மணி முதல் 6 மணி வரை, அரைத்த காய்ந்த மிளகாயால் அபிஷேகம் செய்கிறார். அந்தப் பிரசாதத்தை இத்தலத்துக்கு வரும் அமுதா சமீபத்தில் வாங்கி குடித்தார். பிரச்சினைகள் பறந்தோடின. அது அவரை தீவிர பக்தையாக மாற்றி உள்ளது. இதே போல மற்ற பக்தர்களும் மிளகாய் அபிஷேக பிரசாதத்தை வாங்கி பருகுகின்றனர்.

நாளுக்கு நாள் புகழ் பெற்று வரும் இந்த ஜீவசமாதி விழுப்புரம்—புதுச்சேரி தேசிய நெடுஞ்சாலையில் அரியூரில் உள்ளது. பிரதான சாலை ஓரத்திலேயே இருப்பதால் குருசாமி அம்மையாரை வழிபட்டு கைமேல் பலன் பெறலாம்.





# 3.கோம்பை சுவாமிகள்

**ஈத்தாமொழி, நாகர்கோவில்**

## 3. கோம்பை சுவாமிகள்

சித்தர்களுக்கு என்று எந்த அடையாளமும் கிடையாது. அவர்கள் தங்களை ‘சித்த புருஷர்கள்’ என்று ஒருபோதும் சொல்வதே இல்லை. ஆனால், மக்கள் நலன் கருதி தங்களது ‘சித்தாடலை’ நிகழ்த்தும்போதுதான் அவர் ஒரு சித்தர் என்பது மற்றவர்களுக்குத் தெரியவரும். கோம்பைச் சித்தரையும் அப்படித்தான் நாகர்கோவில் சுற்று வட்டாரப் பகுதி மக்கள் அடையாளம் கண்டுகொண்டனர்.

ஒட்டிய வயிறு, தீட்சண்ணியமான பார்வை, ஒரே ஒரு கோவணத் துணி. எப்போதாவதுதான் குளிப்பார், பல் தேய்க்க மாட்டார், பிச்சை எடுத்துத்தான் உண்பார். சில நேரம் நாய்களுடன் சேர்ந்து எச்சில் இலையில் சாப்பிடுவார்.



கோம்பை சித்தர்

திடீரென்று தோன்றுவார்; திடீரென காணாமல் போய்விடுவார். அவர் கையால் மண்ணைத் தொட்டால்கூட தங்கமாக மாறியது. இப்படி பல்வேறு அம்சங்களின் ஒட்டுமொத்த ஆச்சரியக் கலவையாக கோம்பைச் சித்தர் திகழ்ந்தார்.

நாகர்கோவில், வடசேரி, தாழக்குடி, ஈத்தமொழி பகுதிகளில் சுமார் 60 ஆண்டுகள் அவர் சுற்றித் திரிந்தார். முதலில் அந்த மகானை, ஏதோ

பைத்தியம் என்று நினைத்து பலரும் ஒதுக்கிவிட்டனர். கோம்பைச் சித்தர் நிகழ்த்திய சில அதிசயங்களை நேரில் பார்த்த பிறகே அவர் மாபெரும் சித்தர் என்பதை மக்கள் உணர்ந்தனர். அதன்பிறகே அவரிடம் நெருங்கினார்கள்.

“சாமி! நீங்க யார்? எந்த ஊர்? எப்படி இங்கே வந்தீங்க?” என்று கேட்டனர். அதற்கு சித்தர் “கோம்பை” என்பதையே மீண்டும், மீண்டும் பதிலாக கூறினார். இதனால் மக்கள் அவரை “கோம்பைச் சித்தர்” என்று அழைத்தனர்.

நீண்ட தேடலுக்குப் பிறகு, கோம்பை என்பது மதுரை மாவட்டம் பெரியகுளம் தாலுகாவில் மேற்குத் தொடர்ச்சி மலை அடிவாரத்தில் உள்ள ஒரு சிறிய கிராமம் என்று தெரியவந்தது. அந்த ஊரில் ஜமீன்தாராக இருந்த சம்தளவாய் என்பவருக்கு மகனாகப் பிறந்தவர்தான் இந்தச் சித்தர் என்பதை அறிந்து ஆச்சரியம் அடைந்தனர்.



கருவறை

அவரது இயற்பெயர் வேல்தளவாய்!

அவர் சித்தராக மாறியது எப்படி?

ஜமீன்தார் சம்தளவாயிடம் நிறைய பசுக்கள் இருந்தன. அதில் ஒரு பசு, கன்று போட்டது. ஆனால், அந்தப் பசு தன் கன்றுக்கு பால் கொடுக்க மறுத்தது. அதற்கு பதிலாக மலையில் எங்கோ அது பாலை சொரிந்துவிட்டு வருவது தெரிந்தது. இந்த ரகசியத்தைக் கண்டுபிடிக்க நினைத்த வேல் தளவாய், பசுவைப் பின்தொடர்ந்து சென்றார். அப்போது அவருக்கு வயது 14.

குகைக்குள் சென்ற பசு, அங்கிருந்த முனிவருக்கு பால் கொடுத்தது. இந்த காட்சியைக் கண்டு சிறுவன் ஆச்சரியம் அடைந்தான். முனிவர் கண் திறந்துப் பார்த்தார். மறுவிநாடி... வேல் தளவாய் உடலுக்குள் ஏதோ ஒரு ஒளி புகுந்து சிலிர்ப்பு ஏற்பட்டது. அதாவது, முனிவர் பார்த்த பார்வையே 'அருள் தீட்சை'யாக மாறி வேல்தளவாயை ஆட்கொண்டுவிட்டது. அக்கணமே சித்தப் புருஷராக மாறிவிட்டார்.

இச்சம்பவத்துக்குப் பிறகு வேல்தளவாய் தன்னை மறந்தார். குடும்பத்தைத் துறந்தார். உற்றார், உறவினர்களை மறந்தார். அவர் மனம் இறைவனைத் தேடியது.

ஒரு நாள் தாயிடம் சென்றவர், "அம்மா இனி நீ என்னைத் தேடக்கூடாது" என்று சொல்லிவிட்டு வீட்டில் இருந்து வெளியேறினார். காடு மேடாக சுற்றி அலைந்தார். இமயமலையில் நிர்வாணமாக உலாவினார். அங்கு அவர் சுமார் 100 ஆண்டுகள் வாழ்ந்ததாக சொல்கிறார்கள்.

தஞ்சையிலும் சில ஆண்டுகள் இருந்தார். இந்தியாவின் பல பகுதிகளுக்கும் சென்று சித்துகள் செய்தார். 1865–ம் ஆண்டு நாஞ்சில் நாடு செய்த தவப் பயனால் வடசேரியில் எழுந்தருளினார். ஓர் அற்புதத்தை நிகழ்த்திக் காட்டி அதன் மூலமாகத் தான் வடசேரிக்கு சென்றார். அந்த அற்புத நிகழ்வு ஆச்சரியமூட்டும் செய்தியாகும். அக்கால கட்டத்தில் நாஞ்சில் பகுதி மக்கள் கழுகுமலைக்குச் (தற்போது தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ளது) சென்று உழவு மாடுகள் வாங்குவது வழக்கம். அப்படி வடசேரியைச் சேர்ந்த 2 பேர் கழுகுமலையில் மாடுகள் வாங்கிவிட்டு நடந்து சென்றுகொண்டிருந்தனர்.

வழியில் ஒட்டிய வயிறோடும், கந்தல் துணி கோவணத்துடனும் நின்று கொண்டிருந்த கோம்பைச் சித்தரை அவர்கள் பார்த்தனர். 'அய்யோ பாவம்!' என நினைத்து சித்தருக்கு உணவும், உடையும் கொடுத்தனர். பிறகு

மாடுகளை ஓட்டிக்கொண்டு நடக்கத் தொடங்கினார்கள். கோம்பைச் சித்தரும் அவர்கள் பின்னால் நடக்கலானார். வாகன வசதி இல்லாத காலம். கழுகுமலையில் இருந்து வடசேரிக்கு மாடுகளை ஓட்டிச் செல்ல மூன்று நாட்களாகும். கழுகுமலையில் இருந்து புறப்பட்ட சில மணி நேரத்துக்குள்ளேயே அவர்கள் இருவருக்கும் சோர்வு ஏற்பட்டது.

ஓரிடத்தில் மாடுகளைக் கட்டிவிட்டு தூங்கச் சென்றனர். அப்போது ஒட்டிய வயிறோடு கண்ணில்பட்ட நபர், தங்களை பின்தொடர்ந்து வந்திருப்பதைப் பார்த்தனர். அவரை சித்தர் என்று அறியாதவர்கள் நன்றாக அயர்ந்து தூங்கிவிட்டனர். சிறிது நேரம் கழித்து விழித்துப் பார்த்தனர். அவர்களுக்கு அதிர்ச்சியாகவும், ஆச்சரியமாகவும் இருந்தது. அவர்கள் இருவரும் தங்கள் மாடுகளுடன் வடசேரி எல்லை அருகில் இருந்தனர்.



ஜீவசமாதி தோற்றம்

அது எப்படி?

‘மூன்று நாட்கள் நடக்க வேண்டிய தூரத்தை சில மணி நேர தூக்கத்தில் கடந்தது எப்படி?’ என்று நினைத்து தவித்தனர். அப்போது ஒட்டிய வயிறோடு தங்களுடன் வந்த நபரும் அங்கு நிற்பதைக் கண்டனர்.

‘எல்லாம் இவர் வேலையாகத்தான் இருக்கும்!’ என நினைத்தனர். அவரிடம் ஏதோ ஒரு சக்தி இருப்பதை உணர்ந்தனர். அவர்களில் ஒருவர் கோம்பைச் சித்தரை தம்மோடு அழைத்துச் சென்று, தன் வீட்டில் தங்க வைத்தார்.

சித்தரைக் குளிக்க வைக்க அவரது குடும்பத்தினர் எவ்வளவோ முயன்றனர். பல நாட்களாகியும் குளிக்கவில்லை. ஆனால், அவரிடம் இருந்து துர்நாற்றம் வந்ததில்லை. திடீரென ஒரு நாள் காணாமல் போய்விட்டார். வடசேரியில் உள்ள மற்றொரு தெருவில்... கைகளில் எச்சில் இலைகளுடன், தோளில் குப்பைக் கூளத்தை அள்ளிப் போட்டுக்கொண்டு சென்றபடி இருந்தார்.

அடுத்த நிமிடம்... நாலு தெரு தள்ளி ஒரு இடத்தில் தோன்றுவார். சில நேரங்களில் வடசேரியின் வடக்குப் புறத்திலும் இருப்பார். தெற்குப் புறத்திலும் நிற்பார். ஒரே தருணத்தில் பல இடங்களில் தோன்றி சிலிர்க்க வைத்தார்.

இந்த சித்தாடல்களுக்குப் பிறகே கோம்பைச் சித்தரின் மகிமை, வடசேரி மக்களுக்கு புரிந்தது. அது மற்ற ஊர்களுக்கும் பரவியது. நிறைய பேர், கோம்பைச் சித்தரை நாடி வந்து சந்தித்து பலன் பெற்றனர்.

பலரின் நோய்களைத் தீர்த்தார். வடசேரியைச் சேர்ந்த ஒரு பெண், பண்டரிபுரத்தில் பாம்பு கடித்து உயிருக்குப் போராடியபோது சித்தர் ஓடோடிச் சென்று அவருக்கு மூலிகைச் சாறு கொடுத்து காப்பாற்றினார். பில்லி, சூனியங்களால் பாதிக்கப்பட்டவர்களை கண்டால், தம் ஆன்ம சக்தியால் அவர்களது பிரச்சினைகளை தெரிந்துகொள்வார். அவர்கள் கேட்காமலே பில்லி, சூனியத்தில் இருந்து விடுவிப்பார்.

தென்காசியைச் சேர்ந்த துறவி ஒருவர், நீண்ட நாட்களாக வயிற்று நோயால் அவதிப்பட்டு வந்தார். அவருடைய வயிற்றில் மண்ணை அள்ளி சித்தர் தேய்தார். அன்றே அந்த நோய் காணாமல் போய்விட்டது.

அதுபோல நாகமணி என்ற பெண், கண் பார்வை இல்லாமல் சிரமப்பட்டு வந்தார். அவர் கண் அருகில் ஏதோ எழுதிய சித்தர், நான்கு துளி துளசிச் சாறு விட்டார். நான்கே நாளில் நாகமணி அம்மையாருக்கு பார்வை வந்தது. இவற்றை அறிந்து நாஞ்சில் நாட்டின் பல பகுதிகளில் இருந்தும் ஏராளமானவர்கள் வந்து கோம்பைச் சித்தரை வணங்கி நோய்களைத் தீர்த்துக்கொண்டனர்.

ஒரு நாள் திடீரென தன் கோவணத்தின் ஒரு பகுதியை இழுத்து கசக்கி “ப்பூ...” என்று ஊதினார். அருகில் இருந்தவர்கள் “சித்தரய்யா... என்னாச்சு?” என்று கேட்டனர்.

அதற்கு, “மதுரை மீனாட்சி அம்மன் சேலையில் தீப்பிடித்து விட்டது. அதைத்தான் அணைத்தேன்” என்றார். அவர் சொன்னது போல அன்றைய தினம் மீனாட்சி அம்மன் சேலையில் தீப்பிடித்த விவரம் ஓரிரு நாள் கழித்து தெரியவந்தது.

நாகர்கோவிலில் புகழ் பெற்ற பயோனியர் குமாரசுவாமியின் தாயார் சிவகாமி அம்மையாரும் கோம்பைச் சித்தரை அணுகி அருள் பெற்றார் என்பது குறிப்பிடத்தக்கது. ஏழை, பணக்காரர்கள் எல்லோரையும் சமமாகப் பாவித்த சித்தர், யார் கட்டுப்பாட்டிலும் இல்லாமல் சுதந்திரமாக நாகர்கோவிலில் சுற்றித் திரிந்தார்.

ஒரு நாள் அவரைக் கொல்ல சிலர் அரிவாள், கத்தி, கம்புகளுடன் வந்தனர். உடனே சித்தர் தன் உடம்பை பல துண்டு, துண்டுகளாக சிதறச் செய்தார். அதைப் பார்த்து, வந்தவர்கள் பயந்து அலறி அடித்து ஓடினார்கள்.

1961—ம் ஆண்டு ஒரு நாள் திருவிதாங்கூர் மன்னர் ஸ்ரீமூலம் திருநாள், திருவனந்தபுரத்தில் இருந்து நாகர்கோவிலுக்கு வந்தார். அவர் வரும்போது கோம்பைச் சித்தர், கோவணத்துடன் எதிரில் வந்துவிடக் கூடாதே என்று போலீசார் பயப்பட்டனர்.

எனவே, கோம்பைச் சித்தரைப் பிடித்து அறை ஒன்றில் அடைத்து பூட்டினார்கள். மன்னர் நாகர்கோவில் வந்து கொண்டிருந்தார். திடீரென அவர் முன்பு கோம்பைச் சித்தர் தோன்றினார். மன்னரை கூர்மையாகப் பார்த்தார். போலீசாருக்கு அதிர்ச்சியாக இருந்தது.

‘அறையில் போட்டுப் பூட்டப்பட்டவர் எப்படி வெளியில் வந்தார்?’ என திகைத்து நின்றனர். அப்போது மன்னர் கரம் கூப்பி, சித்தரை வணங்கினார். அவரின் நெற்றியில் கை வைத்த சித்தர், “உன் முற்பிறவி சாபம் இன்றோடு முடிந்தது. போய் வா” என்றார்.

மகிழ்ச்சி அடைந்த மன்னர், புதிய பட்டாடை எடுத்து சித்தருக்கு போர்த்தினார். மறுவிநாடி அந்த ஆடையைத் தூக்கி எறிந்துவிட்டு சித்தர் மாயமாய் மறைந்து

போனார்.

நூற்றுக்கணக்கானவர்கள் கண் எதிரில் நடந்த இந்த சம்பவத்துக்குப் பிறகு கோம்பைச் சித்தரின் மகிமை, நாஞ்சில் மண்டலம் முழுக்கப் பரவியது. வடசேரியில் நீண்ட நாள் இருந்த அவர் திடீரென தாழக்குடிக்கு சென்றார்.

தாழக்குடியில் சுப்பையன் என்பவர் சுவாமி மீது அளவு கடந்த பாசம் கொண்டு, அவருக்குப் பணிவிடைகள் செய்தார். தன் குழந்தைக்கு ‘கோம்பை’ என்றே பெயர் சூட்டி இருந்தார். அது போல ஆன்மிகப் புரட்சி செய்த ஸ்ரீநாராயண குரு, கோம்பைச் சித்தரிடம் அளவற்ற பாசமும், பக்தியும் கொண்டிருந்தார் என்பது நிறைய பேருக்குத் தெரியாது. இவர் சுமார் 350 ஆண்டுகள் வாழ்ந்ததாக யாழ்ப்பாணத்தில் இருந்து வெளிவந்த ஒரு இதழில் குறிப்பிடப்பட்டிருந்தது.

ஒரு தடவை சாலிய சமுதாய ஆச்சாரிய சுவாமிகள் வடசேரிக்கு வந்தபோது, கோம்பைச் சித்தரைக் கண்டதும் உடனே பல்லக்கில் இருந்து இறங்கி, அதில் சித்தரை ஏற்றி அழைத்துச் சென்றார். இப்படி பல்வேறு தரப்பினரையும் ஈர்த்த கோம்பை சுவாமிகள் 17.6.1924 அன்று ஈத்தாமொழி கடற்கரையோரம் இருந்த தென்னந்தோப்புக்குள் சென்று அமர்ந்தார். அங்கிருந்து அருளாசி வழங்கி வந்தார்.

தன்னை காண வரும் பக்தர்களுக்காக அந்தத் தோப்புக்குள் தன் கால் பெருவிரலால் அழுத்த... ஒரு தீர்த்தம் தோன்றியது. கிணறாக உள்ள கோம்பைத் தீர்த்தத்தில் இப்போதும் நல்ல தண்ணீர் வருகிறது.

18.12.1925 அன்று கோம்பைச் சித்தர் ஏகாதசி திதியில் முக்தி அடைந்தார். அதே இடத்தில் ஜீவசமாதி அமைக்கப்பட்டது. தற்போது அந்தத் தலம் ‘கோம்பேஸ்வரர் ஆலயம்’ என்றே அழைக்கப்படுகிறது.

அங்கு ஒவ்வொரு மாதமும் அமாவாசை, பவுர்ணமி, மூலம் நட்சத்திர நாட்களில் சிறப்புப் பூஜை நடத்தப்படுகிறது. நாகர்கோவில் அண்ணா பேருந்து நிலையத்தில் இருந்து பஸ்சில் (தடம் எண் 38), கோம்பை சித்தர் ஜீவ சமாதிக்குச் செல்லலாம்.



# 4.ஸ்ரீ அக்கா பரதேசி சுவாமிகள்

புதுச்சேரி

## 4. ஸ்ரீ அக்கா பரதேசி சுவாமிகள்

புதுச்சேரியை 'சித்தர்களின் உறைவிடம்' என்று சொல்லலாம். அங்கு எந்தப் பகுதிக்கு சென்றாலும் சித்தர்களின் ஜீவ சமாதியைப் பார்க்க முடியும். மிகக்குறுகிய நிலப்பரப்பளவு கொண்ட புதுச்சேரியில் 41 சித்தர்கள், ஜீவசமாதிகளில் அருள் ஒளி வீசிக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் ஒவ்வொரு விதமான சித்தாடல்கள் புரிந்து மக்களை வியக்க வைத்தனர். ஏழை—எளியவர்களுக்கு தேவையானவற்றைக் கொடுத்தனர். அந்த வகையில் புதுவை வைத்திக்குப்பம் பகுதியில் வசித்த ஸ்ரீஅக்கா பரதேசி சாமிகள் தனித்துவம் கொண்டவர். 19—ம் நூற்றாண்டின் தொடக்கம்...



ஜீவ சமாதி முன்பகுதி

சிதம்பரத்தில் உள்ள ஒரு தெருவில் நின்றபடி இளைஞன் ஒருவன் பிச்சை எடுத்துக் கொண்டிருந்தான். "அக்கா... காசு தாங்க. அக்கா... காசு தாங்க" என்று கையேந்திக் கேட்டான்.

வயதான பெண் மணி ஒருவரிடமும் பிச்சைக் கேட்டான். பிச்சை போட மறுத்த அவர், ''நல்ல வாட்டசாட்டமாக இருக்கிறாயே! ஏதாவது வேலை செய்து சாப்பிட வேண்டியதுதானே? ஏன் இப்படி பிச்சை எடுக்கிறாய்?'' என்றார்.

அதற்கு, “வேலை பார்க்க தயார். எனக்கு யார் வேலை தருவார்கள்?” என்று அவன் திருப்பிக் கேட்டான்.

உடனே அப்பெண், “இப்போ என் சொந்த ஊருக்குப் போறேன். என்னோடு வா. உனக்கு ஒரு நல்ல வேலை வாங்கித் தர்றேன்” என்று கூறி அவனை அழைத்துச் சென்றார்.

தனக்கு தெரிந்தவர்கள் மூலம் எப்படியோ செஞ்சி காவல் நிலையத்தில் போலீஸ்காரராக வேலைக்குச் சேர்த்து விட்டார். இளைஞனும் அமைதியாக வேலை செய்து வந்தான்.

அப்போது யாருமே சித்த புருஷர் என்று அவரை அறிந்திருக்கவில்லை. அவர் ஒரு மகான் என்பதை வெளிப்படுத்தும் சம்பவம் ஒரு நாள் அதே போலீஸ் நிலையத்தில் நடந்தது.



அன்று போலீஸ் தலைமை அதிகாரி, மீன்கள் வாங்கி வந்தார். இளைஞனிடம் கொடுத்து, “என் வீட்டில் கொடுத்துவிட்டு வா...” என்று அனுப்பி வைத்தார். ‘மதியம் மீன் குழம்பு சாப்பிட போகிறோம்’ என்ற ஆசையுடன் சென்றார்.

ஆனால், வீட்டில் மீன் குழம்பு வைக்கப்படவில்லை. அதிகாரி விசாரித்தபோது, மீன்களைக் கொண்டு வந்து கொடுக்கவில்லை என்று தெரிந்தது. அதிகாரிக்கு கோபம் தாங்க முடியவில்லை.

‘இவனை விடக் கூடாது. போலீஸ் வேலையில் இருந்து விரட்ட வேண்டும்’ என்று முடிவு செய்தார். அர்த்தராத்திரி 12 மணிக்கு திடீரென காவல்

நிலையத்துக்குச் சென்றார். அப்போது விழித்திருந்து பணியாற்ற வேண்டிய அந்த இளைஞன் நன்றாக அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தான்.

இதை காரணமாக வைத்து வேலையில் இருந்து நீக்க திட்டமிட்டார். மறுநாள் காலையில் காவல் நிலையத்துக்கு வந்த அதிகாரி, அவனை அழைத்து... ‘‘நேற்று ராத்திரி ‘டூட்டி’யில் இருக்கும்போது ஏன் தூங்கினாய்?’’ என்று கேட்டார்.

அதற்கு, ‘‘நான் தூங்கவில்லையே! நீங்கள் வந்தபோது இங்குதானே இருந்தேன்’’ என்றான். அதோடு, நள்ளிரவில் அதிகாரி வந்தது முதல் புறப்பட்டு சென்றது வரை நடந்த அத்தனை நிகழ்வுகளையும் கண்ணாடி போல பிரதிபலித்தான்.

‘‘அய்யா... நீங்க புறப்படும்போதுகூட உங்க ‘பைக் ஸ்டார்ட்’ ஆகல. நீங்க மிதி மிதின்னு மிதிச்ச பிறகுதானே ‘ஸ்டார்ட்’ ஆச்சு’’ என்றான். போலீஸ் அதிகாரிக்கு ஆச்சரியமாக இருந்தது. ‘நாம் வரும்போது இவன் தூங்கிக்கொண்டுதானே இருந்தான்! பிறகு எப்படி நடந்ததையெல்லாம் துல்லியமாகச் சொல்கிறான்?’ என்று தவித்தார். பிறகு, ‘‘சரி, நேற்று நான் வாங்கிக் கொடுத்த மீன்களை என் வீட்டில் ஏன் கொடுக்கவில்லை?’’ என்றார். அதற்கு, ‘‘நான் மீன்களை கொடுத்துட்டேனே! வேண்டுமானால் அந்த மீன்களை வாங்கி வந்து காட்டட்டுமா?’’ எனக் கேட்டான்.

அதிகாரிக்கு குழப்பமாகிவிட்டது. ‘‘சரி... போய் வாங்கிட்டு வா பார்க்கலாம்!’’ என்றார்.




விறுவிறுவென புறப்பட்டுச் சென்றவன் சில நிமிடங்களில் திரும்பி வந்தான். அவன் கைகளில் நேற்று கொடுத்த மீன்கள் அப்படியே இருந்தன. ‘‘இந்தாங்க சார்... நீங்க வாங்கிக் கொடுத்த மீன்!’’ என்று கொடுத்தான்.

அதிகாரி ஆச்சரியத்தின் உச்சத்தில் இருந்தார். என்றாலும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல், ‘‘இப்ப மீன்கள் கெட்டுப் போய் இருக்குமே! எப்படி சாப்பிட முடியும்?’’ என்றபடி ஆத்திரத்தில் மீன்களை துண்டு துண்டாக வெட்டிப் போட்டுவிட்டார். உடனே இளைஞன், ‘‘அய்யா... மீன்கள் கெடவில்லை. இதோ பாருங்க’’ என்றான், இயல்பாக! மறுவிநாடி... மீன்கள் உயிர் பெற்று துள்ளிக் குதித்தன.

அதிகாரி அதிர்ச்சியில் உறைந்து போனார். இளைஞனோ, ‘‘இங்கே என் வேலை முடிந்துவிட்டது’’ என்று சொல்லியபடி, போலீஸ் உடையை கழற்றி கொடுத்துவிட்டு, செஞ்சியில் இருந்தே வெளியேறிவிட்டார்.

அதன்பிறகே அவர் ஒரு சித்தர் என்பதை போலீஸ் அதிகாரி உணர்ந்தார். இளைஞனை தேடி அலைந்தார். நீண்ட தேடலுக்குப் பிறகு, புதுச்சேரியில் இருப்பது தெரிந்தது. அவன் யார் என்ற விவரங்களும் கிடைத்தன.

அந்த இளைஞன், இலங்கையைச் சேர்ந்தவன். ஈழத் தமிழர்களின் கலாச்சார தலைநகரான யாழ்ப்பாணத்தில் உள்ள வார்க்கோவிடை பகுதியில் புகழ்பெற்ற கோடீஸ்வரர் ஒருவரின் மகனாகப் பிறந்தான். அவனது இயற்பெயர் மாசிலா மணி. சிலர் அவனை கண்ணையன் என்றும் அழைத்தது உண்டு. இளம் வயதில் திடீரென அவனுக்குள், 'முக்தி பெறுவது எப்படி?' என்ற எண்ணம் உதித்தது. சொத்து, சுகத்தை எல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டு காடுகளில் அலைந்தான். பிறகு ஒரு யோகியிடம் யோகா, தியானம் பயின்றான். குறுகிய காலத்தில் 'சற்குரு நாதர்' என்ற புகழைப் பெற்றான். அவன் மனம் எப்போதும் இறைவன் மீதே மையம் கொண்டிருந்தது.

'தெய்வத்திடம் இரண்டற கலப்பது எப்படி?' என ஆழமாக சிந்தித்தபோது, மற்றவர்களுக்கு புண்ணியத்தை சேர்த்துக் கொடுக்கும் பிச்சை எடுப்பதை மேற்கொள்ள முடிவு செய்தான். அவன் பிச்சை கேட்டபோது யாழ்ப்பாணம் நகர மக்கள் அவனது அருமை உணராமல் இகழ்ந்து பேசினார்கள்.

இதை அடுத்து தமிழ் நாட்டுக்குப் புறப்பட்டு வந்தான். நடராஜ பெருமான் ஆட்சி செய்யும் சிதம்பரத்தில் தங்கி இருந்தான். நடராஜரையும், திருமூலரையும் கண்டு பேரானந்தம் பெற்றவன், அங்கு வருவோர், போவோரிடம் பிச்சை எடுத்து உண்டான். பிறகுதான் சிதம்பரத்தில் இருந்து செஞ்சி சென்று போலீஸ் வேலை பார்த்து கூடவே, அற்புதங்கள் நிகழ்த்திவிட்டு புதுச்சேரிக்கு வந்து சேர்ந்தது!



அழகான உள்புற மண்டபம்

புதுச்சேரியில் அந்த இளைஞன், விநாயகர் சிலை ஒன்றை செய்து வழிபட்டு வந்தான். சிறு வயதில் இருந்தே அவனுக்கு விநாயகரை மிகவும் விரும்பி, மனம் உருகி கும்பிடும் பழக்கம் இருந்தது.

ஒரு நாள் தன் கைப்பட செய்திருந்த விநாயகர் சிலையை இளம் பெண் ஒருவர் வந்து மாலை அணிவித்து வழிபட்டாள். இதனால் மகிழ்ச்சி அடைந்து, அந்தப் பெண் கையைப் பிடித்து முத்தமிட்டு மகிழ்ச்சியை வெளிப்படுத்தினான்.

ஆனால் அவளோ, ‘‘உன் சகோதரி போல இருக்கும் என்னிடம் இப்படி நடந்து கொள்ளலாமா?’’ என்றாள். இதனால் மனம் வருந்தினான். செய்த தவறை உணர்ந்தான். அதன் பிறகு தன்னை சந்திக்கும் எல்லா பெண்களையும் ‘‘அக்கா’’ என்றே அழைத்தான்.

இதனால் நாளடைவில் புதுச்சேரி மக்கள் ‘‘அக்கா சாமிகள்’’ என அழைக்கத் தொடங்கினார்கள். புதுச்சேரி மக்கள் கண் எதிரில் ஏராளமான அற்புதங்களை நடத்திக் காட்டினார். குறிப்பாக ஏழைகளின் நோய்களைத் தீர்த்து பிரமிக்க வைத்தார்.

தங்கள் வீட்டில் வந்து சாப்பிட மாட்டாரா என்று மக்கள் ஏங்கும் அளவுக்கு அவரது புகழ் பரவியது. அவர் எந்த வீட்டுக்குச் சாப்பிடச் சென்றாலும் மறக்காமல் ஒரே ஒரு காசை தவறாமல் கேட்டு வாங்குவார். அந்த நாணயத்தை சோலைத்தாண்டவன் குப்பத்தில் நடுத்தெருவில் வாழ்ந்த குடும்பத்தாரிடம் கொடுப்பார். அவர்கள் வாங்க மறுத்தபோதும் வற்புறுத்தி கொடுத்துவிடுவார்.

ஒரு நாள் அவர், ‘‘முன் ஜென்மத்தில் உங்களிடம் நான்பட்ட கடன் முடிந்துவிட்டது’’ என்றார். அதன்பிறகு மாயமாகிப் போனார்.

அக்கா சாமிகள் எங்கு போனார் என்று புதுச்சேரி மக்கள் தேடினார்கள். அப்போது இலங்கை யாழ்ப்பாணத்தில் உள்ள தெருக்களில் அவர் அலைந்து கொண்டிருப்பது தெரியவந்தது.

அங்கே ஒரு பணக்காரர், அக்கா சாமிகள் மீது சந்தேகம் கொண்டார். போலி சாமி என்று நினைத்தார். அவர், ‘‘சாமி... உங்களுக்கு அன்ன அபிஷேகம் செய்யலாமா... தாங்குவீர்களா?’’ என்று கேலியாக கேட்டார்.

அந்தப் பணக்காரருக்கு பாடம் புகட்ட நினைத்த அக்கா சாமிகள், ‘‘அபிஷேகத்தை ஏற்க தயார்’’ என்றார். மறுநாள் பணக்காரர் அண்டா, அண்டாவாக சோறு சமைத்து சுடச் சுட அக்கா சாமிகள் மீது கொட்டி அன்னாபிஷேகம் செய்தார்.

சுமார் 30 நிமிடங்கள் கழித்து... உடல் வெந்து போயிருப்பார் என்று கருதி அவர் மீது கொட்டப்பட்ட அன்னத்தை கலைத்தனர். உள்ளே அக்கா சாமிகள் சிரித்தபடி இருந்தார். அவர் உடல் சந்தனம் பூசப்பட்ட நிலையில் தெய்வீகமாகக் காட்சியளித்தது. பணக்காரர் ஆச்சரியத்தோடு பார்த்தார். மறுவிநாடி அவரது பார்வையே பறிபோய் விட்டது!

‘‘அய்யா.... என்னை மன்னியுங்கள். உங்கள் மகத்துவம் தெரியாமல் தவறு செய்துவிட்டேன். எனக்கு மீண்டும் பார்வை வரம் தாருங்கள்’’ என்று மன்றாடினார்.

அதற்கு அக்கா சாமிகள், ‘‘நான் புதுச்சேரி செல்கிறேன். அங்கு வா, உனக்கு விமோசனம் கிடைக்கும்’’ என்றார். அதன்படி அக்கா சாமிகளைப் பின் தொடர்ந்து அந்தப் பணக்காரரும் புதுவை வந்தார்.

ஒரு நாள் அவரிடம், ‘‘இன்று உனக்கு பார்வை கிடைத்து விடும்... போ’’ என்றார். அக்கா சாமிகள் சொன்னபடியே அவர் பார்வை கிடைக்கப் பெற்று இலங்கை திரும்பினார்.

அந்தக் காலகட்டத்தில் புதுச்சேரி வைத்திக்குப்பத்தில் நாராயணன் என்பவர், தனக்கு இறைவன் அசரீரியாக உத்தர விட்டதால், மனோன்மணி அம்மனுக்கு ஆலயம் அமைத்து வழிபட்டு வந்தார். அக்கா சாமிகள் சென்று அந்த ஆலயத்தில் அமர்ந்தார். அதோடு நாராயணனை தன் சீடராகவும் ஏற்றுக்கொண்டார். மூலிகை மருந்துகள் தயாரிப்பதற்கு அக்கா சாமிகளுக்கு மிகவும் உதவியாக இருந்தார் நாராயணன். ஒரு கார்த்திகை மாதம். அந்த நாராயணன், தீபத் திருவிழாவைக் காண திருவண்ணாமலைக்குச் செல்ல வேண்டும். ‘பத்து நாள் கழித்துத்தான் திரும்பி வருவேன்’ என்றார்.

‘அவ்வளவு நாட்கள் மூலிகை மருந்து தயாரிக்காவிட்டால் ஏழைகளுக்கு உதவ முடியாதே...’ என்று வருத்தப்பட்ட அக்கா சாமிகள், ‘திருவண்ணாமலைக்குச் செல்ல வேண்டாம். அங்கு தீபம் ஏற்றுவதை நீ இங்கு இருந்தே பார்க்கலாம்!’ என்றார்.

சொன்னபடியே கார்த்திகை தீபத் திருநாள் தினத்தன்று மாலையில் தீபம் ஏற்றப்பட்போது, அக்கா சாமிகள் ஓர் இடத்தை சுட்டிக் காட்ட, அங்கு திருவண்ணாமலை தீபக் காட்சிகள் சினிமா படம் போல தெரிந்தது. நாராயணன் உள்ளிட்ட பலரும் இருந்த இடத்தில் இருந்தே திருவண்ணாமலை தீபத்தைக் கண்டு தரிசித்தனர். இப்படி எத்தனையோ அற்புதங்கள் நிகழ்த்திய அக்கா சாமிகள், 1872—ம் ஆண்டு ஜூன் மாதம் முக்தி அடைந்தார். கடைசி மூச்சு வரை வீடுகளில் பிச்சை எடுத்தே சாப்பிட்ட அவருக்கு வாழைக்குளம் அருகே உள்ள குதிரைக்குளத்தில் ஜீவசமாதி கட்டப்பட்டுள்ளது.

அதை ‘அக்கா சாமி மடம்’ என்கிறார்கள் புதுச்சேரி மக்கள். ஒவ்வொரு ஆண்டும் ஜூன் மாதம் குரு பூஜை நடத்தப்படுகிறது. அங்கு அக்கா சாமி சீடரான நாராயண பரதேசிக்கும் ஜீவசமாதி உள்ளது. அவர்களது அருள் மழை தினம், தினம் பொழிகிறது. புதுச்சேரிக்கு போகும்போது மறக்காமல் அக்கா சாமியையும், அவரது சீடரையும் தரிசனம் செய்யுங்கள். அற்புதம் நடப்பதைப் பார்ப்பீர்கள்.



# 5. ராமசாமி சித்தர்

ஒட்டன்சத்திரம்

## 5. ராமசாமி சித்தர்

'சித்தர்கள் யாரும் இப்போது இல்லை!' என்று நிறைய பேர் நினைக்கிறார்கள். ஆனால், உண்மையில் நாடெங்கும் 'சித்த புருஷர்'கள் இருக்கிறார்கள். தங்கள் சித்தாடல்கள் மூலம் நேரடியாகவும், மறைமுகமாகவும் மக்களுக்கு அருள்புரிந்து வருகிறார்கள். நம் அருகிலேயே இருக்கும் அவர்களது மகிமைகளை நாம்தான் சரியாக புரிந்து கொள்வதில்லை.


ராமசாமி சித்தர்

அவர்களோ யாரிடமும் எதையும் எதிர்பார்ப்பதில்லை. மற்றவர்கள் பார்வையில் பித்தர்களாக தோன்றும் அவர்கள் முக்தி பெற்ற பிறகே, சித்தர்கள் என்ற உண்மையை நாம் உணர்கிறோம். "அடடா... அந்த சித்தரிடம் ஆசி பெறாமல், பெரும் புண்ணியத்தை தவற விட்டுவிட்டோமே...!" என்று பிறகு வருத்தப்படுவார்கள்.

ராமசாமி சித்தரையும் எல்லாரும் அப்படித்தான் நினைத்தனர். அவரது பேச்சும், செயல்பாடுகளும் எதிர்காலத்தில் நடக்கப் போவதைச் சொல்வதாக இருந்தன. ஆனால், சிலருக்கு மட்டுமே அதை உணரும் பாக்கியம் கிடைத்தது.

அவருக்கு வயது 585 ஆண்டுகள் என்று ஒரு தடவை சொல்லப்பட்டது. அதை பலரும் நம்ப மறுத்தனர். கேலி செய்தனர்.




பிறகு, அது உண்மை என்று தெரியவந்தபோது பிரமித்துப் போனார்கள். இந்த மகிமைக்குரிய ராமசாமி சித்தர், ஒட்டன்சத்திரத்தில் வாழ்ந்து வந்தார். அங்கு மெயின் ரோட்டில் உள்ள சகுந்தலா பாத்திரக் கடை வாசல் அருகில்தான் அமர்ந்திருப்பார்.

ராமசாமி சித்தரின் பெற்றோர் யார்? அவரது சொந்த ஊர் எது? ஒட்டன்சத்திரத்துக்கு எந்த ஆண்டு, எப்படி வந்தார்? என்பன போன்ற எந்த கேள்விகளுக்கும் விடை இல்லை.

அவரை ‘சித்தர்’ என்று கண்டு கொண்ட வர்கள், “சாமி… நீங்கள் எங்கிருந்து வந்தீர்கள்?” என்று எத்தனையோ தடவைக் கேட்டுப் பார்த்தனர். ஆனால், ராமசாமி சித்தர் எதற்கும் பதில் சொன்னதே இல்லை. அவர் பெயர் கூட ஒட்டன்சத்திரம் மக்களுக்கு முதலில் தெரியாது. அவர் பெயர் தெரியாததால் ‘சாமி’ என்றும், ‘பெரியவர்’ எனவும் அழைத்து வந்தனர்.

அவர் பெயரை தெரிந்துகொள்ளும் ஆர்வம் யாரிடமும் ஏனோ தோன்றவில்லை. என்றாலும் ஓர் அற்புதத்தால் ராமசாமி சித்தர், தமது திருப்பெயரை ஒட்டன்சத்திரம் மக்களுக்கு தெரிய வைத்தார். அங்கு புகழ்பெற்ற வர்த்தக பிரமுகராக சோமசுந்தரம் பிள்ளை என்பவர் திகழ்ந்தார். அவர் தலைமையில், சுமார் 60 நபர்கள் கொண்ட குழு, வட இந்தியாவுக்கு புனித யாத்திரை புறப்பட்டது. காசி, ரிஷிகேசம், அரித்வார், பத்ரிநாத் என்று அவர்களது பயணப் பட்டியல் இருந்தது.

ரிஷிகேசத்தை அடைந்தவர்கள் ஒரு வனப் பகுதியில் நடந்து சென்று கொண்டிருந்தனர். அப்போது திடீரென வந்த ஒரு குரல், இவர்கள் அனைவரையும் ஈர்த்தது. “ஒட்டன்சத்திரத்தில் இருந்து வந்தவனெல்லாம் இங்க வாங்கடா…” என்று அதிகாரமாக கூப்பிட்டது அந்தக் குரல்.

ஒட்டன்சத்திரத்துக்காரர்கள் திடுக்கிட்டார்கள். ‘பாஷையே புரியாத இந்த ஊரில் நம்மை யார் இவ்வளவு அதிகாரமாகக் கூப்பிடுவது?’ என்று கடும் அதிர்ச்சி அடைந்தனர். பிறகு, ஆர்வம் மேலோங்க அனைவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

அங்கே… ஒற்றைக்காலில் நின்றபடி, தவக் கோலத்தில் சாது ஒருவர் இருந்தார். நீண்ட ஜடாமுடியுடன் காணப்பட்டார். எடுத்த எடுப்பிலேயே அவர், “வாங்கடா ஒட்டன்சத்திரத்து ஆளுங்களா! உங்களையெல்லாம் நான்தான் கூப்பிட்டேன். உங்க ஊரில் ராமசாமி சித்தன் எப்படி இருக்கான்?” என்று கேட்டார்.

“யார் சாமீ… நீங்க சொல்ற பேர்ல எங்க ஊர்ல யாருமே இல்லையே!” என்றனர் ஊர்க்காரர்கள்.

“அடேய்… பாத்திரக்கடை வாசல்ல எந்நேரமும் உட்கார்ந் திருப்பானே! அவன்தான் ராமசாமி சித்தன். அவனுக்கு வயது என்ன தெரியுமா? ஐநூத்தி எண்பத்தைந்து. சரி ஊருக்குப் போனதும் அவன்கிட்ட போய் ரிஷிகேசத்துல

ஒத்த கால்ல தவம் செய்ற நடராஜ சாமி விசாரிச்சேன்னு சொல்லுங்க'' என்றார்.

அந்தச் சாமியார் சொன்னதைக் கேட்டு ஒட்டன்சத்திரத்துக் காரர்கள் மிகவும் ஆச்சரியம் அடைந்தனர். 'நம்ம ஊரில்... நமக்கே தெரியாமல் ராமசாமி சித்தர்னு யார் இருக்கிறார்?' என யோசித்தனர். பெரும்பாலானவர்களுக்கு அப்படி ஒரு சித்தர் இருப்பதாகவே சிந்தனையில் தோன்றவில்லை.

'சரி... ஊருக்குப் போய் அது யார்னு விசாரித்துக் கொள்வோம்!' என்று முடிவு செய்துகொண்டனர். ஆனால், ரிஷிகேசம் முழுக்க அலைந்து திரிந்த அவர்களுக்கு, சுற்றுலா மீது இருந்த நாட்டத்தால் ராமசாமி சித்தர் என்பவர் யார் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற உந்துதல் குறைந்து போனது.

இரு வார பயணத்தின் இறுதியில் அவர்கள் ராமசாமி சித்தரை முற்றிலும் மறந்தே போய்விட்டனர். வடமாநிலத்தில் இருந்து ஒட்டன்சத்திரம் வந்து சேர்ந்த 60 பேரும் தங்கள் ஊர்களுக்குச் செல்ல பிரிந்தனர். அவர்கள் அனைவரையும் அனுப்பிவிட்டு, சோமசுந்தரம் பிள்ளை என்பவர் தன் உறவினர்களுடன் வீட்டுக்குப் புறப்பட்டார். அப்போது அவர்களை ஒரு குரல் அதிகாரமாக, கம்பீரமாக அழைத்தது.

''ரிஷிகேசம் போனவன் எல்லாம் இங்க வாங்கடா...!''

குரல் வந்த திசையில் சோமசுந்தரம் குடும்பத்தினர் திரும்பிப் பார்த்தனர். அங்கு அதே பாத்திரக்கடை வாசல் அருகே சாமியார் உட்கார்ந்திருந்தார்.

''ஏன்டா என்னைப் பாக்காமப் போறீங்க? ரிஷிகேசத்துல ஒத்தக்கால்ல தவம் செஞ்சிக்கிட்டிருக்கிற நடராஜசாமி என்னை விசாரிச்சான்ல...! அதைப் பத்தி எதுவுமே சொல்லாமப் போறீங்க?'' என்றார்.

அவர் குரலில் ஆவேசமும், கோபமும் காணப்பட்டது. அப்போதுதான் சோமசுந்தரம் பிள்ளைக்கும், அவரது குடும்பத்தினருக்கும் எல்லாம் புரியவந்தது.

'ரிஷிகேசத்துல தவம் இருக்கிற சாமியார் சொன்ன ராமசாமி சித்தர் இவர்தானா...?' என்று உணர்ந்து மெய் சிலிர்த்தனர். அதன் பிறகே ஒட்டன்சத்திரம் மக்களுக்கு அவருடைய பெயர் ராமசாமி என்பது தெரியவந்தது.

சோமசுந்தரம் பிள்ளை அவரிடம், ‘‘சாமி... எங்களை எல்லாம் மன்னிக்கணும். வீட்டுக்கு போற அவசரத்துல உங்கக்கிட்ட சொல்ல மறந்துட்டோம்’’ என்றார்.

அதற்கு ராமசாமி சித்தர், ‘‘சரிடா... போங்கடா போங்க! எல்லாரும் நல்லா இருப்பீங்க’’ என்று ஆசீர்வதித்து அனுப்பி வைத்தார்.

இந்த நிகழ்வு எல்லாருக்கும் மிகுந்த ஆச்சரியத்தைக் கொடுத்தது. ரிஷிகேசத்தில் தவம் இருக்கும் சித்தருக்கு ஓட்டன்சத்திரத்தில் உள்ள ராமசாமியை எப்படி தெரிந்தது? அதுபோல ஓட்டன்சத்திரத்தில் பாத்திரக்கடை வாசல் அருகே இருக்கும் ஒருவருக்கு ரிஷிகேசத்தில் தவமிருக்கும் நடராஜ் சித்தர் பற்றி எப்படி தெரிந்தது?

விடை கண்டுபிடிக்க முடியாத இந்த அதிசயம் பற்றி ஓட்டன்சத்திரம் மக்கள் ஆச்சரியம் மல்க பேசினார்கள். அதன்பிறகு ராமசாமி சித்தரின் புகழ் ஓட்டன்சத்திரத்தையும் கடந்து பரவத் தொடங்கியது. நிறைய பேர் ராமசாமி சித்தரை தேடி வந்து ஆசி பெற்றுச் சென்றனர். வெளியூர்களில் இருந்து வருபவர்கள் விதவிதமாக உணவு வகைகளை சமைத்து எடுத்து வருவது உண்டு. அவற்றை பெரும்பாலும் ராமசாமி சித்தர் ஏறெடுத்துக்கூட பார்க்க மாட்டார். சிலரிடம் உரிமையோடு கேட்டு வாங்கிச் சாப்பிடுவார். அப்படி உணவு கொடுத்தவர்களின் குடும்பங்களில் மங்களம் நடந்தது.

சிலர் கார்களில் பந்தாவாக சாப்பாடு எடுத்து வருவார்கள். அவர்களை அடிக்காத குறையாக விரட்டி விடுவார். பெரும்பாலும் ரவி ‘ஸ்டூடியோ’வில் இருந்து வரும் உணவையே சாப்பிடுவார். ராமசாமி சித்தர் வழக்கமாக இருக்கும் இடம் அருகே அசைவ ஓட்டல் ஒன்று உண்டு. அதன் பிரியாணியை விரும்பி வாங்கிச் செல்வார்கள்.

தன்னை நாடி வரும் சிலரிடம் ராமசாமி சித்தர், ‘‘டேய்... அந்தக் கடையில் போய் பிரியாணி வாங்கிட்டு வாடா’’ என்பார். உடனே வாங்கிக் கொடுப்பார்கள்.

பிரியாணியை ராமசாமி சித்தர் சாப்பிடுவார். பிறகு, ‘‘சரி... உன் பாவமூட்டை குறைந்துவிட்டது. போடா!’’ என்பார். அதா வது, ராமசாமி சித்தர், பிரியாணியை ருசித்து சாப்பிட வில்லை. ‘தன்னை நாடி வந்தவர்களின் குறைகளைத் தின்று தீர்த்துவிட்டார்’ என்று அர்த்தமாம்.

ஒரு தடவை அன்பர் ஒருவர் வாங்கிக் கொடுத்த 'சிக்கன்' பிரியாணியை சாப்பிட்டார். பிறகு, சமைக்கப்பட்ட அந்தக் கோழியை உயிருடன் தட்டில் வரவழைத்துக் காட்டினார். அதன்பின்பே ராமசாமி சித்தர் பிரியாணி சாப்பிட்டால், அது மற்றவர்களின் பிணி தீர்ப்பதற்கே என்பதை ஒட்டன்சத்திரத்து மக்கள் புரிந்துகொண்டனர்.

அப்புறம், ராமசாமி சித்தர் பிரியாணி கேட்டால் யாரும் யோசிப்பதில்லை. தவறாகவும் நினைப்பதில்லை. ஒரு தடவை பழனியைச் சேர்ந்த ராஜம்மாள் சங்கரன் என்ற பிராமணப் பெண், ஒட்டன்சத்திரம் சித்தர் பற்றி கேள்விப்பட்டு அவர் எப்போதும் காணப்படும் பாத்திரக்கடைக்கு வந்தார்.

அங்கே படிக்கட்டில் சித்தர் அமர்ந்திருந்தார். ராஜம்மாள் வந்ததுமே ராமசாமி சித்தர் ''வாம்மா... உன்னைத்தான் தேடுகிறேன்! வா...'' என்றார். மனம் நெகிழ்ந்தபடியே அவரைப் பணிந்து வணங்கினார் ராஜம்மாள்.

பிறகு, ''பக்கத்துல ஓட்டல் இருக்கு. அங்கே போய் ஒரு பிரியாணி பொட்டலம் வாங்கிட்டு வா'' என்றார். ராஜாம்மாளுக்கு தூக்கி வாரிப் போட்டது. என்ன செய்வது என்று தெரியாமல் தயங்கியவாறே நின்றிருந்தார். ''என்னம்மா... 'பிரியாணி வாங்கிட்டு வா'ன்னு சொன்னேனே! அப்படியே நிக்கிறே? புறப்படு...'' என்றார்.

அதற்கு ராஜம்மாள், ''நான் வேணா காசு தர்றேன். யாரையாவது அனுப்பி வாங்கிட்டு வரச் சொல்லலாமா?'' எனக் கேட்டார்.

''அதெல்லாம் வேலைக்கு ஆகாதும்மா! நீயே கடைக்குப் போய் வாங்கிட்டு வா... சீக்கிரம்'' என்று அவசரப்படுத்தினார். 'சரி, விதி விட்ட வழி!' என்று நினைத்தபடி ராஜம்மாள் அந்த ஓட்டலுக்கு சென்றார். இவரைப் பார்த்தவுடனே புரிந்து கொண்ட ஓட்டல் உரிமையாளர், பிரியாணியைக் கட்டிக் கொடுத்தார்.

பொட்டலத்துடன் வந்த ராஜம்மாள் அதை சித்தர் அருகே வைத்துவிட்டு, சற்றே நகர்ந்து நின்றார். ''பொட்டலத்தை இப்படி வெச்சிட்டா எப்படி? நீயே பிரி!'' என்று சித்தர் சொன்னதும், பொட்டலம் சுற்றப்பட்டிருந்த நூலை மெல்லப் பிரித்தார்.

‘‘இந்தாங்க சாமி!’’ என்றபடி கண்களை மூடிய நிலையிலேயே பொட்டலத்தை நீட்டினார்.

‘‘கண்ணைத் திறந்து பாரம்மா...! உன் கையில் இருக்கிற பொட்டலம் எந்த அளவுக்கு மணம் வீசுதுன்னு. அதன் பிறகு என்கிட்ட கொடு’’ என்றார் சித்தர்.

மிகுந்த தயக்கத்துடன் கண்களைத் திறந்து தன் கையில் இருந்த பொட்டலத்தைப் பார்த்த ராஜம்மாளுக்கு அதிர்ச்சி கலந்த ஆச்சரியம் ஏற்பட்டது. காரணம், பொட்டலத்தில் இப்போது இருந்தது பிரியாணி அல்ல... நெய் வடியும் சர்க்கரைப் பொங்கல். இப்படி பல தடவை அவர் அதிசயம் நிகழ்த்தி உள்ளார். பெரும்பாலும் அவர் யாரிடமும் எளிதில் பேச மாட்டார். தனக்குத் தானே ஏதேதோ பேசிக்கொள்வார். அது என்னவென்று யாருக்குமே புரியாது. கையில் ஒரு நோட்டு வைத்திருப்பார். அதில் ஆங்கிலத்தில் ‘மளமள’வென எழுதுவார். என்ன எழுதுகிறார் என்பது பலருக்கும் தெரியாது.

அவர் பெரும்பாலும் ஒரு குல்லா அணிந்திருப்பார். இஸ்லாமிய அன்பர் ஒருவர் ஆசையுடன் கொடுத்தாராம். எனவே அதை அகற்றுவதே இல்லை.

அவர் முக்காலமும் அறிந்த ஞானி ஆவார். ஒருவரைப் பார்த்தவுடன் அவரது கடந்த பிறவிகளை, அவர் செய்த பாவ—புண்ணியங்களை தெரிந்துகொள்ளும் ஆற்றலுடன் இருந்தார்.  அந்த பிறவிக்கு ஏற்ப பலரை துன்பங்களில் இருந்து காப்பாற்றினார்.

ஒரு தடவை பாத்திரக்கடை அருகே உட்கார்ந்து இருந்தபோது, வேகமாக சென்ற லாரியில் இருந்து கருவாடு விழுந்தது. அதைப் பார்த்த ராமசாமி சித்தர், அவ்வழியாக சென்றுகொண்டிருந்த ஒருவரை அழைத்து, ‘‘இந்த கருவாட்டை சுட்டு எடுத்துட்டு வா’’ என்றார்.

அதற்கு அந்த நபர், ‘‘வள்ளலாரின் வழியில் வந்தவன் நான். செத்தாலும் சாவேனே தவிர கருவாடு சுட மாட்டேன்’’ என்றார்.

உடனே ராமசாமி சித்தர், ‘‘என்னடா சொல்கிறாய்?’’ என்றார். அதற்கு அந்த நபர், ‘‘செத்தாலும் சாவேனே தவிர கருவாடு சுட மாட்டேன்’’ என்று மீண்டும் கூறினார்.

‘‘சரி... போ! உன் விதியை நீயே தீர்மானித்துவிட்டாய். சாயங்காலம் 5 மணிக்கு இருக்க மாட்டாய்’’ என்றார்.

ராமசாமி சித்தர் சொன்னது போலவே அந்த நபர் 4.45 மணிக்கு மாரடைப்பு ஏற்பட்டு மரணம் அடைந்தார். சித்தர் கூறியபடி அவர் கருவாடை சுட்டிருந்தால் உயிர் பிழைத்திருப்பார் என்கிறார்கள். இத்தகைய தகவல்களை பழனியில் உள்ள ஒரு கல்லூரியில் பேராசிரியராக பணி புரிந்த கண்ணன் கூறினார். தற்போது கும்பகோணத்தில் குடியேறியுள்ள அவர் அடிக்கடி ஒட்டன்சத்திரம் சென்று ராமசாமி சித்தரைச் சந்திப்பதை வழக்கமாக வைத்திருந்தார். சித்தர் பற்றி அவர் மேலும் ஒரு தகவலையும் கூறினார்.



கும்பகோணம் கண்ணன்

‘‘அது ஒரு சனிக்கிழமை. சித்தரை தரிசிப்பதற்காகப் போனேன். சோமசுந்தரம் பிள்ளை வீட்டில் இருந்து ரசம் வாங்கி வரச் சொன்னார். வாங்கி வந்து கொடுத்தேன். குடித்தார்.

பிறகு, அவரைத் தரிசித்துக் கொண்டிருக்கும்போது... ‘பாதையை மறைக்காதேடா! குழிக்குள் இறங்குடா...’ என்பதைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார். இதன் காரணம் என்னவென்று முதலில் எனக்குப் புரியவில்லை. அவர் கூடிய சீக்கிரமே சமாதி ஆகப் போகிறார் என்பதைத்தான் இப்படிக் குறிப்பால் சொல்லி இருக்கிறார்.

அடுத்த சனிக்கிழமையே ராமசாமி சித்தர் சமாதி ஆகிவிட்டார். 1987—ம் ஆண்டு தை மாதம் விசாக நட்சத்திரத்தில் முக்தி அடைந்தார். சித்தர் அடக்கம் ஆவதற்கு காங்கிரஸ் பிரமுகரான பழநியப்பா, நாகனம்பட்டி ரோட்டில் இடம் தந்தார். இங்குதான் ராமசாமி சித்தரின் ஜீவ சமாதி இருக்கிறது.

பெரிய குழி வெட்டி, அதற்குள் நான் இறங்கினேன். அப்போதுதான் ‘குழிக்குள் இறங்குடா’ என்று சித்தர், முந்தைய சனிக்கிழமை சொன்னதன் பொருள்

எனக்குப் புரிந்தது.

விபூதி, உப்பு, வில்வம், மலர்கள் போன்றவற்றை நிரப்பி சித்தரை அடக்கம் செய்தோம். நான் கொண்டு சென்ற ஒரு சிவப்புத் துண்டை அவரது உடம்பில் மேலே போர்த்தினேன். மாபெரும் சித்த புருஷரை அடக்கம் செய்த பேறு எனக்குக் கிடைத்தது.

எல்லா காரியங்களும் முடிந்து இரவு சுமார் பதினொரு மணிவாக்கில் ஒட்டன்சத்திரத்தில் இருந்து பழநிக்குப் பேருந்தில் புறப்பட்டேன். சுமார் 4 கி.மீ. தொலைவில் விருப்பாட்சிமேட்டைக் கடக்கும்போது பஸ் நிதானமாகச் சென்று கொண்டிருந்தது. அப்போது எதேச்சையாக சாலையின் இடது பக்கம் கவனித்த நான் ஆச்சரியத்தில் மூழ்கிப் போனேன்.

அங்கே ராமசாமி சித்தர் நடந்து போய்க்கொண்டிருந்தார். அவரது திருமேனியில் நான் எப்படிப் போர்த்தினேனோ அதே நிலையில் அந்த சிவப்புத் துண்டு கிடந்தது. எனக்கு இரவு முழுக்கத் தூக்கமே வரவில்லை. விடிந்ததும் வீட்டைவிட்டுக் கிளம்பி ஒட்டன்சத்திரம் சென்றேன். ராமசாமி சித்தரின் சமாதியைப் பார்த்தேன். அவரது சமாதியில் — தலைப் பகுதிக்கு நேராக தரையில் அரை அடி நீளத்துக்கு ஒரு வெடிப்பு காணப்பட்டது.

உடனே பழநிக்குச் சென்று தங்கவேல் சுவாமிகளிடம் சொன்னேன். “ராமசாமி சித்தர் தன் அருள் ஆற்றலை மட்டும் அங்கே வைத்துவிட்டு, சரீரத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டு விட்டாராப்பா! அவர் இப்போது வேறு பிரதேசத்தில் உலவிக்கொண்டிருப்பார். அவர் போன ஊர் புண்ணியம் பெறும்” என்றார்.

சுமார் இரண்டு மாதங்கள் கழித்து கேரளாவில் ஏதோ ஒரு குக்கிராமத்தில் ராமசாமி சித்தரைப் பார்த்ததாக நண்பர் ஒருவர் சொன்னார்” என்று முடித்தார்.

ராமசாமி சித்தர் பற்றி இப்படி எத்தனையோ ஆச்சரிய அதிசயங்கள் உள்ளன. அவர் ஜீவசமாதியாகி உள்ள இடத்தில் அழகான ஆலயம் அமைக்கப்பட்டு வருகிறது.

அங்கு நெய் விளக்கேற்றி வழிபட்டால் ஆன்மா சுத்தமாகி, நமது வினைகள் தீரும்!



# 6. ஸ்ரீவிட்டோபா சுவாமிகள்

போளூர்

## 6. ஸ்ரீவிட்டோபா சுவாமிகள்

எண்ணெய் தேய்க்காத தலை, குளிக்காததால் உடல் முழுவதும் அழுக்கு, ஆங்காங்கே கிழிந்து தொங்கிய ஆடை...

இவை எது பற்றியும் எந்த கவலையும் இல்லாமல், திருவண்ணாமலை மாவட்டம் போளூர் அருகே உள்ள ஒரு கிராமத்துத் தெருவில், அந்த சித்த புருஷர் நடந்து சென்று கொண்டிருந்தார்.

யாரிடமும் அவர் கையேந்தி எதுவும் கேட்கவில்லை. வெறித்துப் பார்த்தப்படி அவர் சென்று கொண்டிருந்தார். "சித்தன் போக்கு சிவன் போக்கு" என்பார்களே.... அப்படி இருந்தது அவர் நிலை.




அந்த கிராமத்து இளைஞர்கள் சிலர் அவரை சூழ்ந்து கொண்டனர். அவர் ஒரு மகான் என்பதை அறியாமல் அவரை கேலியும் கிண்டலும் செய்தனர்.

"உன் பெயர் என்ன?" "உனக்கு எந்த ஊர்? ஏன் இந்த ஊருக்குள் வந்தாய்?" என்று அடுத்தடுத்து பல கேள்விகள் கேட்டனர்.

அந்த சித்த புருஷர் எந்த கேள்விக்கும் பதில் சொல்லவில்லை. மவுனமாக நின்றார்.

இதனால் ஆத்திரம் அடைந்த இளைஞர்கள், ‘‘உம்மை எப்படி பேச வைப்பது என்று எங்களுக்குத் தெரியும்’’ என்றபடி குறடு ஒன்றை எடுத்து வந்தனர்.

சித்தரின் வாய்க்குள் குறடை நுழைத்து நாக்கைப் பிடித்து வெளியில் இழுத்தனர். அவர் வலியால் துடித்தார்.

பிறகு குறடால் அவர் இரு தாடைகளையும் சேர்த்து இறுக்கி நசுக்கினார்கள். குறடு பதிந்து, சதை கிழிந்து ரத்தம் வழிந்தோடியது. வலி பொறுக்காமல் அந்த சித்தர், ‘‘விட்டோபா.... விட்டோபா....’’ என்று கதறினார்.

கிராமத்து இளைஞர்கள் மகிழ்ச்சியால் துள்ளினார்கள். ‘‘டேய், இவரு பேரு விட்டோபாவாம்’’ என்று குதூகலித்தனர்.

அன்று முதல் அந்த மகானின் பெயர் ‘‘விட்டோபா’’ என்றானது. சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்பு இந்த சம்பவம் நடந்தது.


கருவறை

விட்டோபா சுவாமிகளை குறடால் நசுக்கி துன்புறுத்திய அந்த கிராமத்து இளைஞர்கள், அடுத்த சில தினங்களில் காலராவால் பாதிக்கப்பட்டு அடுத்தடுத்து உயிரிழந்த போதுதான் விட்டோபாவின் ஆற்றலை போளூர் பகுதி மக்கள் முதன் முதலாக உணர்ந்தனர். அதன்பிறகே அவரை மக்கள் கையெடுத்து கும்பிடத் தொடங்கினார்கள்.

எத்தனையோ அதிசயங்கள், எத்தனையோ அற்புதங்களை செய்து ஆயிரக்கணக்கானோர் வாழ்வை மேம்படுத்திய விட்டோபா சுவாமிகள் 1909—ம் ஆண்டு போளூரில் ஜீவசமாதி ஆனார். அவர் ஜீவசமாதியை தரிசிக்க சென்றிருந்தோம்.

சென்னையில் இருந்து பஸ்சில் போளூரை சென்றடைய 4 மணி நேரமாகிறது. போளூர் பஸ் நிலையம் அருகில் உள்ள மார்க்கெட் சமீபமாக விட்டோபா சுவாமிகளின் ஜீவசமாதி அமைந்துள்ளது. நாங்கள் பிற்பகல் 2 மணிக்கு சென்றிருந்தோம். தகவல் அறிந்து பூஜை செய்யும் சுப்பிரமணிய சாமி வந்து விட்டோபாவுக்கு ஆராதனை செய்து மனம் உருக வழிபட உதவினார். அந்த ஜீவசமாதிக்குள் தியானம் செய்வதற்கு ஏற்ற அமைதியான சூழல் உள்ளது. ஜீவ சமாதி மீது லிங்கம் நிறுவப்பட்டுள்ளது.

கருவறைக்கு அடுத்த மண்டபத்தில் விட்டோபாவின் சிலை உள்ளது. வெளியில் விட்டோபாவின் கற்சிலை உள்ளது. பிரகாரத்தை சுற்றி வந்த போது, விட்டோபா சுவாமிகள் பற்றிய தகவல்களை மனம் பின்னோக்கிச் சென்று அசை போட்டது.

விட்டோபா சுவாமிகள் பிறந்து, வளர்ந்தது சென்னை திருவல்லிக்கேணி, திருவட்டீஸ்வரன் பேட்டையில் வசித்த ஒரு சாதாரண ஏழை குடும்பத்தில். அவர் பெற்றோர் நாகோஜிராவ்—புஜிபாய். இவர்கள் மராட்டியத்தில் இருந்து புலம் பெயர்ந்து வந்து சென்னையில் குடியேறி தையல் தொழில் செய்து வந்தனர்.

அந்த தம்பதிக்கு பிறந்த கடைசிக் குழந்தைதான் விட்டோபா. பெற்றோர் அவருக்கு தோதா என்று பெயரிட்டு வளர்த்தனர்.

தோதாவுக்கு படிப்பில் ஆர்வம் வரவில்லை. அதற்கு பதில் மகா விஷ்ணுவின் அவதாரங்களில் ஒன்றான பாண்டுரங்கன் மீது அவனுக்கு ஈர்ப்பு ஏற்பட்டது.

எப்போதும் அவன் வாய் “விட்டோபா.... விட்டோபா....” என்றே முணுமுணுத்தது. ஒருநாள் தோதா திருவட்டீஸ்வரன்பேட்டை குளத்து மீன்களுக்கு பொரி போட்டுக் கொண்டிருந்த போது திருவோடு ஒன்று தண்ணீரில் மிதந்தபடி காணப்பட்டது.

தோதா குளத்துக்குள் குதித்து அந்த திருவோடை எடுத்து வந்தான். கரையில் நின்ற சாமியாரிடம் கொடுத்தான்.

மகிழ்ச்சி அடைந்த சாமியார், ''உனக்கு என்ன வேண்டும். கேள்'' என்றார். தோதா வேறு எது பற்றியும் யோசிக்கவில்லை. ''என் விட்டோபாவை எனக்கு காட்ட முடியுமா?'' என்றான்.

அந்த சாமியார் சிரித்துக் கொண்டே தோதா தலையில் கையை வைத்து அழுத்த, தோதாவின் கண்களுக்கு, ''விட்டல..... விட்டல.... பாண்டுரங்கா....'' கோஷத்துடன் விட்டோபா காட்சியளித்தார். சிறிது நேரத்தில் காட்சி மறைந்தது.

தோதா துடித்துப் போனான். விட்டோபாவை மீண்டும் பார்க்க வேண்டும் என்று அவன் மனம் ஏங்கியது. ஆனால் திருவோடு சாமியார் மறைந்து விட்டார். அவரை கண்டுபிடித்து விட்டோபா தரிசனத்தை மீண்டும் காண வேண்டும் என்று நினைத்தான். சாமியார் எங்காவது இருப்பாரா என்று திருவல்லிக்கேணியில் உள்ள தெருக்களில் சுற்றி வந்தான்.



ஜீவ சமாதிக்குள் இருக்கும் சித்தர் சிலை

சில நாட்கள் வீட்டுக்கு கூட வராமல் சாமியாரையும் விட்டோபாவையும் தேடி தோதா அலைந்தான். ஒரு கட்டத்தில் வீட்டுக்கு வருவதையே நிறுத்தி விட்டான்.

கிழிந்த சட்டை, அழுக்கேறிய உடம்புடன் விட்டோபா... விட்டோபா என்று சொன்னபடி சென்னை தெருக்களில் அலைந்தான். மகன் இப்படி ஆகி விட்டானே என்று கவலைப்பட்ட நாகோஜிராவ், ஒருநாள் தோதாவை கண்டுபிடித்து அழைத்து வந்தார்.

மகனை அழுக்கு தீர குளிக்க செய்தார். அப்போது ‘‘விட்டோபாவை காட்டிய திருவோடு சாமியாரை பார்க்கணும். என்னை விட்டு விடுங்கள்’’ என்று வீட்டை விட்டு வெளியேறி தோதா ஒரே ஓட்டமாக ஓடி விட்டான். அவனை யாராலும் பிடிக்க முடியவில்லை.

தோதா இப்போது பரவச நிலைக்கு மாறி இருந்தான். உலக வாழ்வு அவனிடம் இருந்து விலகி இருந்தது. அவன் மனம் பிரம்மத்தில் லயித்து விட்டது.

தன் உடல் பற்றியோ, மனம் பற்றியோ அவன் துளியளவும் கவனம் செலுத்தவில்லை. ‘‘இது என் உடல் அல்ல, இது என் மனம் அல்ல’’ என்ற நிலையில் அவன் இருந்தான்.

சென்னையை விட்டு வெளியேறிய அவன் கால்கள் திருவண்ணாமலையில் போய் தான் நின்றன. ஒரு தர்ம சத்திரத்துக்குள் தோதா நுழைந்தான். சாப்பாடு கொடுத்தார்கள். சாப்பிட்டான். அன்றிரவு சத்திரத்தை மூட வந்த காவலாளி தோதாவை வெளியே போக சொல்ல, தோதா மறுத்து விட்டான். சரி உள்ளேயே கிட என்றபடி காவலாளி சத்திரத்தைப் பூட்டி வீட்டு சென்று விட்டார்.

மறுநாள் காலை சத்திரத்தை திறக்க வந்த காவலாளிக்கு பயங்கர அதிர்ச்சி. அறைக்குள் போட்டு பூட்டிய தோதா தெருவில் நடந்து வந்து கொண்டிருந்தான். தோதா முழுமையான சித்தப்புருஷராக மாறி இருந்தார்.

தோதாவை குளிப்பாட்டி, புத்தாடை அணியச் செய்து ஆராதனை செய்தனர். அந்த காலகட்டத்தில் திருவண்ணாமலையில் ரமணரும், சேஷாத்திரி சுவாமிகளும் இருந்தனர்.

இளம் சித்தரான தோதாவிடம் ஆசி பெற கூட்டம் அலைமோதியது. சித்தர்கள் கைபட்டாலே இரும்பும் தங்கமாகி விடும் என்று நினைத்த ஒருவர் தன்னிடம் இருந்த நாணயத்தை கொடுத்தார். அந்த நாணயத்தை வாய்க்குள் போட்டு சவைத்து விட்டு தோதா துப்ப, அது தங்கமாக மாறி இருந்தது.

திருவண்ணாமலையில் தோதா சிறிது நாளே இருந்தார். பிறகு அவர் பர்வதமலைக்கு சென்று தவம் செய்தார். சில ஆண்டு தவத்துக்குப் பிறகு திருச்சூர் என்ற ஊருக்குள் தோதா சென்றார். அந்த ஊரில்தான் சில இளைஞர்கள் தோதா தாடையை குறடால் இறுக்கி துன்புறுத்திய சம்பவம் நடந்தது. அவர் விட்டோபா.... விட்டோபா.... என்று கதறியதால், தோதா என்ற இயற்பெயர் மறைந்து விட்டோபா என்ற பெயர் தோன்றி நிலைத்து விட்டது.

போளூருக்கு வந்த விட்டோபா சுவாமிகள் செக்கு மேட்டு பகுதியில் உள்ள சாக்கடை தண்ணீர் ஓடும் இடத்தில் அமர்ந்தார். போளூர் முழுக்க பகலில் சுற்றித் திரிந்த அவர் இரவில் அந்த சாக்கடை பக்கத்தில் வந்து படுத்துக் கொள்வார்.

மிகக் குறுகிய காலத்தில் அவர் மகிமையை போளூர் மக்கள் உணர்ந்து கொண்டனர். போட்டி போட்டுக் கொண்டு விட்டோபா சுவாமிகளுக்கு சாப்பாடு கொடுத்தனர்.

அவற்றையெல்லாம் வாங்கி நாய்களுக்கும், காக்கைகளுக்கும் போட்டு விடுவார். பிறகு குப்பைத் தொட்டியில் சிதறி கிடக்கும் உணவை எடுத்து சாப்பிடுவார். திடீரென சாக்கடை தண்ணீரை அள்ளி குடிப்பார். அவரது இந்த செயல்கள் போளூர் மக்களால் புரிந்து கொள்ள முடியாதபடி இருந்தது.

திடீரென ஏதாவது ஒரு கடைக்குள் செல்வார். அங்கிருக்கும் பொருட்களை எடுத்து தெருவில் போகும் ஏழைகளுக்கு கொடுத்து விடுவார்.

சில நாள் நிர்வாணமாக சுற்றி வருவார். இதனால் கோபம் அடைந்த சிலர் அவரை வெட்டிக் கொல்ல திட்டமிட்டனர்.

அன்றிரவு அவர்கள் அரிவாளுடன் சென்றபோது, விட்டோபா துண்டு, துண்டாக உடல் சிதறி கிடந்தார். தங்களுக்கு முன் அவரை யாரோ வெட்டி கொலை செய்து விட்டதாக, வந்தவர்கள் மகிழ்ச்சியுடன் திரும்பிச் சென்றனர்.

ஆனால் விட்டோபா நவகண்ட யோகம் மூலம் தன் உடலை தானே துண்டு, துண்டாக சிதறடித்திருந்தார் என்பது பிறகுதான் தெரிந்தது. அவரை கொல்ல திட்டமிட்டவர்கள், மறுநாள் காலை அவர் உயிருடன் இருப்பதை பார்த்து திகைத்தனர்.

விட்டோபா மகிமையை உணர்ந்து, அவரை வணங்கி, அவருக்கு தேவையான உதவிகளை செய்து கொடுத்தனர். இப்படி ஒட்டு மொத்த போளூர் மக்கள் அனைவரும் நாளடைவில் விட்டோபாவிடம் ஆசி பெறும் பக்தர்களாக மாறினார்கள்.

அடுத்த சில ஆண்டுகளில் விட்டோபா புகழ் மற்ற ஊர்களுக்கும் பரவியது. தினமும் ஏராளமானவர்கள் வந்து விட்டோபாவிடம் ஆசி பெற்றனர்.

அவர்கள் விரும்பியதை எல்லாம் விட்டோபா பெற்றுக் கொடுத்தார். ஒரு சமயம் பலத்த மழை பெய்து செக்கு மேடு தெரு முழுவதும் சுமார் 10 அடிக்கு மழைத் தண்ணீர் தேங்கி விட்டது. அங்கு படுத்திருந்த விட்டோபா சுவாமிகள் என்ன ஆனாரோ என்று எல்லாரும் கவலைப்பட்டனர்.

வெள்ளம் வழிந்தபோது அந்த பகுதி சேறு மேடாக மாறி இருந்தது. சேற்றை அகற்றியபோது உள்ளே விட்டோபா தியான நிலையில் இருந்தார். தண்ணீர் ஊற்றியதும் சிரித்தப்படி எழுந்தார். இந்த சம்பவத்துக்குப் பிறகு போளூர் வாசிகள் ஒன்று சேர்ந்து விட்டோபாவுக்கு மடம் ஒன்று கட்டிக் கொடுத்தனர்.

சுமார் 20 ஆண்டுகள் அந்த மடத்தில் அமர்ந்து பல்லாயிரக் கணக்கானவர்களின் நோய்களை தீர்த்து அருளினார். பவுர்ணமி நாட்களில் அவர் அன்னதானம் வழங்க செய்தார்.

இடது கையை தன் கழுத்தில் பிடித்தபடி அவர் செய்த அற்புதங்கள் ஏராளம். அந்த வடிவத்திலேயே அவர் ஜீவசமாதியில் அவர் சிலைகள் அமைந்துள்ளன.

அந்த ஜீவ சமாதியில் இருந்து இன்றும் அருள் அலை வீசியபடி உள்ளது. அது நிதர்சனமான உண்மை.

ஒரு தடவை பூஜை வைக்கும் சுப்பிரமணியசாமி உடல்நலக் குறைவால் கண்ணீர் விட்டு கதறி அழுதபடி தூங்கிய போது, கனவில் தோன்றிய விட்டோபா, ‘‘ஏன் கவலைப்படுகிறாய்.... நான் பார்த்துக் கொள்கிறேன்’’ என்றாராம்.

நம்பிக்கையோடு சென்றால், நிச்சயம் நாம் விரும்பியதை விட்டோபா சுவாமிகள் தருவார்.





# 7.பூண்டி ஆற்று சுவாமிகள்

பூண்டி

## 7. பூண்டி ஆற்று சுவாமிகள்

அமைதியற்ற இந்த உலகில் நாம் ஆனந்தத்தையும், அமைதியையும் பெற வேண்டுமானால், அதற்கு நாம் "சாதுக்களின் பாதக் கமலங்களில் அடைக்கலம்" புக வேண்டும். இறை மனிதர்களான அவர்களால் மட்டுமே நமக்குரிய நல்ல வாழ்க்கையை அமைத்துத் தர முடியும். எத்தனையோ சித்தர்கள், எண்ணற்ற வர்களின் வாழ்வில் ஒளியேற்றி வைத்துள்ளனர். சித்தர்களின் பார்வை பெற்ற சிலர் ஆன்ம பலம் பெற்று, தாங்கள் யார் என்பதை உணர்ந்துள்ளனர்.

அநூபூதி ஞானம் பெற்று, மக்களோடு மக்களாக வாழ்ந்து, உலாவிய சித்தர்களைப் பார்ப்பதே மிகப்பெரும் புண்ணியம் ஆகும். சித்தர்கள் தரிசனம் பாவ விமோசனம் என்பார்கள். சித்தர்கள் பார்வை நம் மீது பட்டாலே முன் ஜென்ம வினைகள் அனைத்தும் நீங்கி விடும். அப்படிப் பார்த்த உடனேயே புண்ணியம் தரும் மகானாகத் திகழ்ந்தவர் பூண்டி ஆற்று சுவாமிகள். கடந்த நூற்றாண்டில் வாழ்ந்த இவர் மகான்களுக்கு எல்லாம் மகானாக இருந்தார்.

திருவண்ணாமலையில் இருந்து சுமார் 20 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள பூண்டியில் இவர் வாழ்ந்தார். இவர் பெற்றோர் யார்? எந்த ஊரைச் சேர்ந்தவர்? பூண்டிக்கு எப்போது, எப்படி வந்தார்? என்ற விபரம் எல்லாம் யாருக்கும் தெரியாது.

ஒல்லியான உருவம், நீண்ட தாடி, அழுக்கான தலை முடி, கூர்மையானப் பார்வை, கிழிந்த உடை.... பூண்டி மகான் எப்போதும் இந்த கோலத்தில்தான் காணப்பட்டார்.

ஒரு சட்டைக்கு மேல் இன்னொரு சட்டை, அதற்கு மேல் மற்றொரு சட்டை என்று நான்கைந்து சட்டைகள் அணிந் திருப்பார். கையில் ஒரு பெரிய அழுக்கு மூட்டை. அதில் பழைய கிழிந்த துணி, பிளாஸ்டிக் பொருட்களை எடுத்து வைத்திருப்பார்.

இத்தகைய கோலத்தில் பூண்டி மகானை பார்த்த எல்லாரும் முதலில் அவரை பித்தர் என்றே நினைத்தனர். 1940களில் அவர் கலசப்பாக்கத்துக்கு எங்கிருந்தோ ரெயிலில் வந்து இறங்கியதாக கூறப்படுகிறது. காக்கரை சுடுகாடு பகுதிக்கு சென்று தங்கினார். முட்புதர்களுக்கு மத்தியில் படுத்திருப்பார். கலசபாக்கம் தங்கவேல் நயினார் என்பவர்தான் பூண்டி மகானின் மகிமையை முதன் முதலில் கண்டு கொண்டார். அவர் தன் வீட்டுக்கு மகானை அழைத்துச் சென்று உணவு கொடுப்பார்.




நாளடைவில் பூண்டி மகான் சிறப்பை அறிந்த மக்கள் அவரைத் தேடி வரத் தொடங்கினார்கள். அவர்களுக்கு பூண்டி மகான் திருநீறு, மூலிகைச் சாறு கொடுத்தார்.

அவர் கையால் விபூதி பூசி விட்டால், உடம்பில் சிலிர்ப்பு ஏற் பட்டு புத்துணர்ச்சி பெற்றதை பலரும் அனுபவத்தில் உணர்ந்தனர். அவர் கொடுத்த மூலிகைகள் தீராத நோய்களை தீர்த்தது. இதனால் மிக குறுகிய காலத்தில்

அவர் கலசப்பாக்கம் சுற்றுப் பகுதி மக்களிடையே மிகவும் ஆதரிக்கப்படுபவராக மாறினார்.

ஆனால் பூண்டி மகான் யாரிடமும், எதையும் எதிர்பார்க்க வில்லை. ஒருநாள் காக்கரை சுடுகாடு பகுதியில் இருந்து வெளியேறிய அவர் அழுக்கு மூட்டையோடு கலசப்பாக்கம், பூண்டி, வில்வாரணி, பர்வதமலை, பிரயாம்பட்டு, காஞ்சி, கடலாடி, சிங்காரவாடி, தென்மாதிமங்கலம், பில்லூர், பழங்கோவில், மாம்பாக்கம், ஏலத்தூர் பகுதிகளில் சுற்றித் திரிந்தார்.

பர்வதமலையில் சுற்றித் திரிந்த அதே நேரத்தில் அவர் தென்மாதி மங்கலத்தில் சென்று கொண்டிருப்பார். அதே சமயத்தில் பூண்டியில் உள்ள கோவிலிலும் உட்கார்ந்து கொண்டிருப்பார். இப்படி ஒரே சமயத்தில் பல இடங்களில் அவர் காட்சியளித்து பிரமிப்பை ஏற்படுத்தினார்.

கலசப்பாக்கம், பூண்டி பகுதி மக்கள் அவரை ஆச்சரியத்தோடு பார்த்தனர். அவரது உண்மையான பெயர் தெரியாததால், அவரை அழுக்குசாமி என்றனர். சிலர் மூட்டை சாமி என்றனர்.

இந்த நிலையில் அவர் பூண்டி பகுதியில் மட்டும் தங்கி இருக்கத் தொடங்கினார். பூண்டியில் உள்ள செய்யாற்றின் கரையில் தங்குவதை வழக்கமாகக் கொண்டார். இதனால் அவர் பெயர் பூண்டி மகான் ஆற்று சுவாமிகள் என்றானது.


கருவறை

அவரது மகிமையை உணர்ந்து, சிலர் அவரை தங்கள் வீட்டோடு வைத்துக் கொள்ள ஆசைப்பட்டனர். ஆனால் பூண்டி மகான் யார் வலையிலும் சிக்கவில்லை.

ஒரு தடவை வில் வாரணியைச் சேர்ந்த கணக்குப் பிள்ளை, தன் வீட்டுக்கு பூண்டி மகானை அழைத்து சென்றார். சாமியை தன் வீட்டிலேயே தங்க வைத்து விட வேண்டும் என்ற திட்டத்துடன் அவருக்கு சாப்பாடு கொடுத்து விட்டு, சாமியை உள்ளே வைத்து விட்டு கதவை வெளியே பூட்டி விட்டார்.

நள்ளிரவு மாட்டுக்கு தண்ணீர் வைக்கும் தொட்டியில் இருந்து சத்தம் கேட்கவே கணக்குப் பிள்ளை எழுந்து போய் எட்டிப் பார்த்தார். அங்கு 5 குடம் தொட்டி தண்ணீரை பூண்டி மகான் குடித்துக் கொண்டிருந்தார். கணக்குப் பிள்ளைக்கு அதிர்ச்சியாக இருந்தது. வீடு பூட்டப்பட்ட நிலையில் இருக்க சாமி எப்படி வெளியில் வந்தார் என்று மிரண்டு போனார்.

ஓடிப்போய் பூண்டி மகான் காலில் விழுந்து கதறி அழுது மன்னிப்புக் கேட்டார். இந்த சம்பவத்துக்குப் பிறகு பூண்டி மகானை யாரும் தங்கள்

கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க இயலாது என்பதை மக்கள் முழுமையாக உணர்ந்தனர்.


ஜீவ சமாதியின் வெளிப்புறத் தோற்றம்.

மக்கள் தொல்லையில் இருந்து விடுபட்ட பூண்டி மகான் செய்யாற்றுகரையில் குடியேறினார். அங்குள்ள சப்பாத்தி கள்ளியை பிடுங்கி சாப்பிடுவார். ஆற்று மணலை எடுத்து தின்பார். கோடை வெயிலில் மணல் கொதிப்பது போல சுடும் நிலையில், அந்த மணலில் மலர்ப் போர்வையில் படுத்திருப்பவர் போல சுகமாக படுத்திருப்பார். இப்படி பல விஷயங்களில் வித்தியாசமாக நடந்து கொண்டார்.

சில சமயம் தவத்தில் உட்கார்ந்து விட்டால் வெயில், மழை பாராமல் நாள் கணக்கில் அமர்ந்திருப்பார். சில சமயம் அவர் சிங்கம் கர்ஜனை செய்வது போல கர்ஜனை செய்வார். நடக்கத் தொடங்கி விட்டால் நிற்காமல் ஊர், ஊராக நடந்து கொண்டிருப்பார். அவரை தேடிச் சென்றால் நிச்சயம் குறைகளை தீர்த்து வைப்பார். இதனால் மிகக் குறுகிய காலத்தில் அவரை ‘‘சித்தப்புருஷர்’’ என்று மக்கள் அடையாளம் கண்டு கொண்டனர்.

1943—ம் ஆண்டு பூண்டி மக்கள் தங்கள் ஊரில் பல ஆண்டு களாக மழை பெய்யவில்லையே என்று கவலைப்பட்டனர். பூண்டி சுவாமிகளிடம் போய் தங்கள் குறையை சொன்னார்கள்.

‘‘இன்றிரவு மழை வரும்’’ என்றார். அவர் சொன்னது போலவே அன்றிரவு பலத்த மழை பெய்தது. செய்யாற்றில் வெள்ளம் கரைபுரண்டோடியது. 2 நாட்கள் கழித்துத்தான் வெள்ளம் குறைந்தது. மழை ஓய்ந்த பிறகே மக்களுக்கு மகானின் நினைவு வந்தது. அய்யோ.... சாமி என்ன ஆனாரோ

தெரியவில்லையே என்று தேடினார்கள். பூண்டி மகான் வழக்கமாக இருக்கும் செய்யாற்று கரையில் உள்ள இடத்தில் மண் மூடி இருந்தது.

மண்ணை அகற்றி பார்த்தபோது பூண்டி மகான் எந்த சலனமும் இல்லாமல் தியானத்தில் இருந்து தன்னை விடுவித்துக் கொண்டு எழுந்தார். அதன் பிறகு பூண்டி மக்கள் அவரை கடவுளாகவே கருதி வழிபட்டனர். செய்யாற்றுக்குள் ஒரு தடவை அவர் "நவகண்ட யோகம்" மூலம் தன் உடலை துண்டு, துண்டாக்கி ஆங்காங்கே போட்டிருந்தார். அதைப் பார்த்து பலரும் பயத்தில் அலற, உடனே உடல்களை ஒன்றாக்கிக் காட்சி கொடுத்தார்.



சுவாமிகள் பாதம்

ஒரு தடவை மாணவர்கள் பள்ளி முடிந்து வீடு திரும்பியபோது, பூண்டி மகான் ஒரு மாணவனை பார்த்து, "டேய் ஜட்ஜ் இங்க வாடா" என்றழைத்தார். அந்த மாணவர் பிற்காலத்தில் நீதிபதி ஆனது குறிப்பிடத்தக்கது. இப்படி அற்புதத்துக்கு மேல் அற்புதம் செய்த பூண்டி சுவாமிகள் 1959—ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 12—ந்தேதி பூண்டியில் சாலையோரம் உள்ள ஒரு வீட்டின் திண்ணையில் அமர்ந்தார். அதன் பிறகு அவர் ஜீவசமாதி ஆகும் வரை, அதாவது சுமார் 19 ஆண்டுகள் அவர் எழுந்து நடக்கவில்லை.

அந்த வீட்டுத் திண்ணையில் அப்படியே உட்கார்ந்து விட்டார். அந்த 19 ஆண்டுகளில் அவர் நிகழ்த்திய சித்தாடல்கள் ஆச்சரியத்தின் உச்சமாக இருந்தன. 1960களில் அவரை தினம், தினம் ஏராளமானவர்கள் தேடி வந்தனர். அவர்கள் ஆசையோடு உணவுப் பொருட்கள் வாங்கி வருவார்கள். அவர் யாரிடம் வாங்கி சாப்பிடுகிறாரோ அவருக்குப் பிறவிப் பயன் கிடைத்தது போன்ற நிலை ஏற்படும்.

சிலரைப் பார்த்ததும் அவர்கள் செய்த பாவங்கள், திரைப்படக் காட்சிகள் போல அவருக்கு தெரிந்து விடும். அவர்கள் எது கொடுத்தாலும் கையால் தொடமாட்டார். ‘‘போ.... போ....’’ என்று விரட்டி விடுவார். அவர்கள் கொடுக்கும் பொருட்களையும் மூலையில் தூக்கி வீசி விடுவார். அப்படி அவர் வீசிய உணவுப் பொருட்கள் மலை போல் குவிந்து விடும். அவை தோஷமானவை என்பதால், அவற்றை யாரையும் தொட விட மாட்டார்.

மாதக் கணக்கில் அவை கிடக்கும். ஆனால் சிறு துர்நாற்றம் கூட அங்கிருந்து வராது. ஒரு தடவை சுவாமியைப் பார்க்க சென்னையில் இருந்து ஒரு பெண் வந்திருந்தார். வழியில் சிலர் அவர் அணிந்திருந்த தங்க நகைகளைப் பறித்துச் சென்று விட்டனர்.

சுவாமியிடம் வந்து அந்த பெண் அழுது புலம்பினார். அந்த பெண்ணை சமரசம் செய்த சுவாமிகள் ஒரு இரும்புக் கம்பியை எடுத்து வரச் சொன்னார். அந்த கம்பியை வாங்கி பூண்டி மகான் கூர்மையாகப் பார்த்து விட்டு அந்த பெண்ணிடம் திருப்பிக் கொடுத்தார். அந்த இரும்புக் கம்பி தங்கக் கம்பியாக மாறி இருந்தது. அதை நேரில் பார்த்தவர்கள் ஆச்சரியத்தில் உறைந்து போனார்கள்.

ஒரு தடவை ஒரு திருடனைப் பிடிக்க முடியாமல் திணறிய போலீசார் சாமிகளிடம் வந்து கேட்டனர். அந்த திருடன் இருக்கும் இடத்தை மிகத் துல்லியமாக சாமிகள் காட்டினார்.

ஒரு தடவை ஒரு ஏழைப் பெண்ணுக்கு 2 சிறிய கல்லை எடுத்து வரச் செய்து அவற்றை வைர கம்மல்களாக மாற்றி கொடுத்தார். பூண்டியைச் சேர்ந்த சுப்பிரமணிய சாமி என்பவர் பூண்டி மகானுக்கு பிரதம சீடராக இருந்தார்.

அவர் திருவண்ணாமலை கோவிலில் தேர் திருவிழாவை பார்க்க புறப்பட்டார். அவரைத் தடுத்து நிறுத்திய சுவாமிகள், இருந்த இடத்திலேயே அந்த தேர் பவனி காட்சியைத் காட்டினார்.

பூண்டி வழியாக செல்லும் ஒரு பால்காரர் தினமும் மகானுக்கு ஒரு கப் பால் கொடுப்பது வழக்கம். ஒரு நாள் அவரிடம் எல்லா பாலையும் எடுத்து வருமாறு சொன்ன மகான், கேனில் இருந்த பால் முழுவதையும் குடித்தார்.

சிறிது நேரத்தில் அவர் பால் முழுவதையும் வாந்தியெடுத்து வெளியேற்றினார். அப்போது தான் பாலில் விஷப்பூச்சிகள் கிடந்தது எல்லாருக்கும் தெரிந்தது. சிவபெருமான் ஆலகால விஷத்தை உண்டு தேவர்களைக் காப்பாற்றியது போல பூண்டி மகான் விஷ பாலை குடித்து மக்களை காப்பாற்றியிருந்தார்.

ஒருநாள் வெள்ளையன் என்பவர் சுவாமிக்கு சாப்பாடு கொண்டு வந்தார். சாமி இருந்த இடத்தில் சிறுத்தைப் புலி படுத்திருப்பதை கண்டு அலறியடித்து ஓடினார். ஊர்க்காரர்கள் திரண்டு வந்து பார்த்தபோது பூண்டி மகான் அங்கு சிரித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்.

பூண்டியில் மகான் அமர்ந்திருந்த வீட்டுக்கு எதிரே டீக்கடை வைத்திருப்பவர் தினமும் அதிகாலை 5 மணிக்கு சாமிக்கு டீ கொண்டு கொடுப்பதை வழக்கத்தில் வைத்திருந்தார். ஒரு நாள் அதிகாலை 5 மணிக்கு அவர் டீ கொண்டு போன போது சாமி இருந்த இடத்தில் பெரிய கருநாகம் ஒன்று படுத்திருந்ததாம். அவர் அலறியபடி ஓடினார். அக்கம் பக்கத்தில் இருந்தவர்கள் தடி கம்புகள் எடுத்து வந்து பார்த்தபோது, உள்ளே பூண்டி மகான் சிரித்தபடி படுத்திருந்தார்.

தனக்கு உணவு தரும் தங்கவேலு என்பவர் வீட்டுக்கு ஒருநாள் திடீரென சென்ற பூண்டி மகான், ‘‘உன்னிடம் உள்ள நிலக்கடலைகளை இப்போது விற்க வேண்டாம். அதை சொல்லவே வந்தேன்’’ என்றார். அதை கண்டு கொள்ளாத தங்கவேலு நிலக்கடலையை விற்க செய்யாற்று கரையோரம் வெயிலில் காய வைத்தார். திடீரென மழை பெய்து எல்லா நிலக்கடலையும் தண்ணீரோடு சென்று விட்டது.

ஒரு நாள் பூண்டி மகான் வேலூரில் ஒரு கர்ப்பிணிப் பெண்ணுக்கும், திருவண்ணாமலையில் ஒரு லாரி டிரைவருக்கும், பூண்டியில் ஒரு பெண்ணுக்கும் ஒரே சமயத்தில் தோன்றி உதவிகள் செய்த அற்புதத்தை நிகழ்த்தினார்.

— இப்படி ஆயிரக்கணக்கான அற்புதங்களை பூண்டி மகான் நிகழ்த்தினார். பூண்டி பகுதி மக்கள் அவற்றை இன்னமும் ஆச்சரியத்தோடு சொல்கிறார்கள். அவற்றையெல்லாம் எழுத வேண்டுமானால் பக்கங்கள் போதாது. அது போல

பூண்டி மகான் எப்போதும் பரிபாஷையில்தான் பேசுவார். அதை பூண்டி கிராமத்து மக்கள் இப்போதும் நினைவில் வைத்து சொல்கிறார்கள்.




சீரடி சாய்பாபா ஒரு தடவை தன் குரு பற்றி கூறுகையில், "என் குரு இருந்த இடத்திலேயே 12 ஆண்டுகள் அமர்ந்திருந்தார். அவருக்கு எல்லா பணிவிடைகளையும் நான் செய்தேன்" என்று கூறியிருந்தார்.

இதையடுத்து சீரடி சாய் பாபாவின் குரு யார் என்பதை கண்டுபிடிக்க நாடெங்கும் உள்ள சித்தப் புருஷர்கள் பற்றி ஆய்வு நடத்தப்பட்டது. அப்போது பூண்டி மகான்தான் ஒரே இடத்தில் 19 ஆண்டுகள் அமர்ந்திருந்தது தெரிய வந்தது. எனவே சீரடி சாய் பாபா பக்தர்கள் பூண்டி மகானை சாய்பாபாவின் குருவாக கருதுகிறார்கள்.

"வந்த வேலையை விட்டுட்டு பந்தக் கால பிடிச்சிக்கிட்டு நிக்கிறான் பாரு"

"கறந்த பால் மடி ஏறாது"

"கரும்பு ருசியா இருக்குனு வேரோடு புடுங்கிட கூடாது" — இப்படி நிறைய பரிபாஷைகள் அடிக்கடி சொல்வார். அதன் அர்த்தத்தை புரிந்து கொண்டவர்கள் தப்பித்துக் கொள்வார்கள்.

சாதாரண மனிதர்கள் மட்டுமல்ல காஞ்சி மகா பெரியவர், கிருபானந்த வாரியார், விசிறி சாமியார் உள்பட ஏராளமான வர்கள் பூண்டி மகானின் அற்புதத்தை உணர்ந்து புகழ்ந்தனர். ஏராளமான சித்தர்கள் பூண்டிக்கு வந்து சாமியை தரிசனம் செய்வதை வழக்கில் வைத்திருந்தனர்.

அவர்கள் பூண்டி மகானின் பார்வை தங்களுக்கு புண்ணியத்தைத் தரும் என்று நம்பி பூண்டி மகான் அருள் பார்வைக்காக நாள் கணக்கில் காத்து கிடந்ததுண்டு.

பூண்டி மகான் முக்தி அடைவதற்கு 3 நாட்களுக்கு முன்பு "அளந்து போடக் காத்திருக்கிறேன். கையைப் பிடிப்பார் யாரும் இல்லை. அதனால் கடையை மூடி விடலாம் என்றிருக்கிறேன்" என்றார். ஒரு நாளைக்கு முன்பு, "18 சித்தர்களிடமும் சொல்லி விட்டேன். நான் வந்த வேலை முடிந்து விட்டது" என்றார்.

வாழ்நாள் முழுவதும் சித்தாடல் மூலம் மழை பெய்வித்த பூண்டி மகான் 1978—ம் ஆண்டு நவம்பர் மாதம் 3—ந்தேதி முக்தி அடைந்தார். அன்று முழுவதும் பூண்டியில் பலத்த மழை பெய்தது. அதே சமயத்தில் திருச்செந்தூரில் கடற்கரையில் தோன்றி ஒரு தம்பதிக்கு காட்சி கொடுத்தார்.

அவர்கள் ஆச்சரியத்துடன், “சாமி பூண்டியில் இருந்து எப்ப திருச்செந்தூருக்கு வந்தீங்க?” என்று கேட்டு விசாரித்தனர். அன்று மாலை நாளிதழில் பூண்டி மகான் முக்தியான தகவலைப் படித்து ஆச்சரியமும், அதிர்ச்சியும் அடைந்தனர். இப்போதும் கூட பூண்டி மகான் தன்னை நம்புபவர்களுக்கு உதவுவதாக சொல்கிறார்கள்.

அவர் 19 ஆண்டுகள் அமர்ந்திருந்த பகுதி அருகில் பூண்டி மகானின் ஜீவசமாதி கோவில் கருங்கல்லால் கட்டப்பட்டுள்ளது.

பலி பீடம், நந்தி முன்புறம் இருக்க கருவறையில் சிங்கத்துடன் பூண்டி மகானின் சிலை உள்ளது.

கருவறையின் நான்குபுறமும் வாசல் உள்ளது. மற்றொரு அறையில் பூண்டி மகானின் பாதம் உள்ளது. அவசியம் வழிபட வேண்டிய ஒன்று.





# 8. ஸ்ரீ முத்துகிருஷ்ண சுவாமிகள்

சூட்டுப்பொத்தை, வள்ளியூர்

8. ஸ்ரீ முத்துகிருஷ்ண சுவாமிகள்

அகத்தியர் பற்றி உங்களுக்குத் தெரிந்து இருக்கும்... கயிலாயத்தில் சிவபெருமான் – பார்வதி திருமணம் நடந்தபோது வட பகுதி தாழ்ந்து தென் பகுதி உயர்ந்ததால், உலகை சமப்படுத்த ஈசனால் தென்பகுதிக்கு அனுப்பி வைக்கப்பட்டவர் அகத்தியர்.

பொதிகை மலையில் தங்கி தமிழ்க் கடவுள் முருகப் பெருமானின் ஆணைப்படி “அகத்தியம்” என்னும் இலக்கண நூலை எழுதினார். சிவ பூஜைக்காக கமண்டலத்தில் அவர் கொண்டு வந்த கங்கை நீரை காகம் வடிவில் வந்த விநாயகர் தட்டி விட்டதால் தான் காவிரி நதி உருவானது என்பார்கள்.



அட்டமா சித்தி பெற்ற பதினென் சித்தர்களுள் இவர் தனித்துவமும், முக்கியத்துவமும் பெற்றவர். ஏராளமான சித்த மருத்துவ நூல்களை

தமிழர்களுக்காக எழுதிச் சென்ற அந்த ஜீவன் முக்தர் பதினொன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்திருக்கலாம் என்று பெரும்பாலான ஆய்வாளர்கள் கருதுகிறார்கள். நான்கு அடி உயரமே உடைய அவரை வழிபட்டால் முன் வினை சாபங்கள், பாவங்கள் அனைத்தும் நீங்கி, மனதில் அமைதியும் வாழ்வில் செல்வமும் உண்டாகும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த அகத்திய முனிவர் மீண்டும் 19—ம் நூற்றாண்டில் அதே நெல்லை மாவட்டத்தில் ஒரு சித்தராக தோன்றினார் என்று சொன்னால், நிறைய பேர் அதை நம்புவதற்கு மறுப்பார்கள். ஆனால் நம்பித்தான் ஆக வேண்டும்.

அகத்தியரின் அம்சமான அந்த சித்த புருஷரின் பெயர் ஸ்ரீமுத்து கிருஷ்ண சுவாமிகள்.

அகத்தியர் உயரம் 4 அடி. இவரது உயரமும் 4 அடி. அகத்தியர் பொதிகை மலையில் வாழ்ந்தார். ஸ்ரீமுத்து கிருஷ்ண சுவாமிகள் பொத்தையில் வாழ்ந்தார். நெல்லை மாவட்டம் வள்ளியூருக்கு மிக அருகில் இந்த பொத்தை மலை உள்ளது. அகத்தியர் வாழ்ந்த பொதிகை மலையின் தொடர்ச்சிதான் பொத்தை மலை என்பது குறிப்பிடத்தக்கது.

ஸ்ரீமுத்து கிருஷ்ணசாமி சித்தர் வசித்த பொத்தை மலைப் பகுதியை சூட்டுப் பொத்தை என்று அழைக்கிறார்கள். இந்த மலைக்கு ஸ்ரீமுத்துகிருஷ்ண சுவாமிகள் எங்கிருந்து, எப்படி வந்தார் என்ற விவரம் எல்லாம் யாருக்கும் தெரியாது. என்றாலும் அவர் 1734—ம் ஆண்டு பிறந்ததாக கணித்துள்ளனர். தோற்றத்தில் மட்டுமின்றி எந்த நோயாக இருந்தாலும் அதை உடனே தீர்த்து வைத்த காரணத்தாலும் வள்ளியூர் சுற்றுப் பகுதி கிராம மக்கள் அவரை அகத்தியரின் மறு அவதாரமாக கருதி வழிபட்டனர்.

சகல சித்திகளையும் கைவரப் பெற்றிருந்த அவர் அவற்றை கொண்டு ஏராளமான அற்புதங்கள் செய்தார். ஆனால் அந்த சித்தாடல்கள் பற்றிய குறிப்புகளை யாரும் தொகுத்து வைக்காத காரணத்தால் அவரது அவதாரச் சிறப்பு நிறைய பேருக்குத் தெரியாமலே உள்ளது. அதுபோல அவர் தன்னை புகைப்படம் எடுக்க ஒரு போதும் அனுமதி கொடுக்கவில்லை. இதனால் அவரது தோற்றத்தை காணும் பாக்கியம் கூட தற்போதைய பிறவியில்

இருப்பவர்களுக்கு கிடைக்காமல் போய் விட்டது. என்றாலும் அவர் செய்த சில அற்புதங்கள் செவி வழிச் செய்தியாக இன்னமும் பகிரப்பட்டு வருகிறது.

ஸ்ரீமுத்து கிருஷ்ண சுவாமிகள் தினமும் மாலையில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் திடீரென மறைந்து விடுவார். மறு வினாடி பொத்தை மலை உச்சியில் நிற்பார். அந்த மலை உச்சியில் இருந்து பார்த்தால் திருச்செந்தூர் முருகப்பெருமான் ஆலயம் நன்கு தெரியுமாம். தினமும் மாலை அந்த மலை உச்சிக்கு வந்து விடும் ஸ்ரீமுத்து கிருஷ்ண சுவாமிகள், திருச்செந்தூர் முருகனுக்கு நடத்தப்படும் சாயரட்சை பூஜையை கண்டுகளிப்பாராம்.

திருச்செந்தூரில் பூஜை முடிந்த மறு வினாடி அவர் மலையடிவாரத்துக்கு வந்து விடுவார். இந்த அற்புதத்தை நிறைய பேர் நேரில் பார்த்து வியந்ததுண்டாம். அதுபோல சுவாமிகள் ஆண்டுக்கு ஒரு தடவை கார்த்திகை மாதம் பொத்தை மலை சிகரத்தில் திருக்கார்த்திகை தீபம் ஏற்றுவதை வழக்கத்தில் வைத்திருந்தார். அவர் ஏற்றும் தீபம் பல மைல் தொலைவுக்கு தெரிந்ததாம்.ஒரு தடவை கார்த்திகை தீபம் திருநாளன்று அந்த பகுதியில் மாடு மேய்க்கும் சிறுவர்கள் வந்து, ‘‘அய்யா நாங்களும் உங்களுடன் மலை உச்சிக்கு வருகிறோம். எங்களையும் அழைத்துச் செல்லுங்கள்’’ என்றனர்.

முதலில் அதை ஏற்க முத்து கிருஷ்ண சித்தர் தயங்கினார். சிறுவர்கள் வலியுறுத்தவே அவர்களையும் பொத்தை மலை உச்சிக்கு அழைத்துச் செல்ல சித்தர் சம்மதித்தார். சிறுவர்களை அழைத்து, ‘‘முதலில் என் கைகளை பிடித்துக் கொள்ளுங்கள்’’ என்றார். சிறுவர்களும் ஓடோடி வந்து அவர் கையைப் பிடித்துக் கொண்டனர்.

‘‘சரி, கண்ணை மூடிக் கொள்ளுங்கள். நான் சொல்லும் வரை எந்த காரணம் கொண்டும் கண்ணைத் திறக்கக் கூடாது’’ என்றார். சிறுவர்களும் ‘‘சரி’’ என்று கண்களை மூடிக் கொண்டனர்.

அடுத்த வினாடி, சிறுவர்களிடம் சித்தர், ‘‘என்ன இன்னும் கண்ணை மூடிக் கொண்டிருக்கிறீர்கள். கண்ணைத் திறங்கள். நாம் மலை உச்சிக்கு வந்து விட்டோம்’’ என்றார். சிறுவர்கள் கண்ணைத் திறந்தனர். அனைவரும் மலை உச்சியில் நிற்பதை கண்டு மிகவும் மகிழ்ச்சி அடைந்தனர். பூஜைகள் முடிந்த பிறகு அதே மாதிரி சித்தரின் கையைப் பிடித்துக் கொண்டு மலையில் இருந்து

தரைக்கு கண்ணை மூடி கண்ணைத் திறப்பதற்குள் வந்து விடுவார்கள். பல தடவை சிறுவர்களுக்காக ஸ்ரீமுத்து கிருஷ்ண சுவாமிகள் இந்த சித்தாடலை நடத்தினார்.

சித்தருடன் பொத்தை மலை உச்சிக்கு சென்று விட்டு வரும் சிறுவர்கள், அதுபற்றி ஊரில் உள்ளவர்களிடம் சொல்ல, அது சுற்றுப் பகுதிகளில் எல்லாம் பரபரப்பாக பேசப்பட்டது. நிறைய பேர் சித்தரை தேடி வந்து தரிசித்து சென்றனர்.

தன்னை நாடி வந்தவர்களை அவர் ஒரு போதும் ஏமாற்றியதே இல்லை. ஒரு தடவை இளம்பெண் ஒருவர் சாலையில் தனியாக நடந்து சென்று கொண்டிருந்தார். அவர் மீது ஆசைப்பட்ட 4 பேர் அவரை பின் தொடர்ந்தனர்.

ஒரு கட்டத்தில் அந்த பெண்ணை அவர்கள் விரட்டத் தொடங்கினார்கள். அந்த காமுகர்களிடம் இருந்து எப்படி தப்பிப்பது என்று பயந்தபடி ஓடிய அந்த பெண்ணுக்கு பொத்தை மலையடிவாரத்தில் சித்தர் குடிசையில் வசிப்பது நினைவுக்கு வந்தது. உடனே அந்த பெண் வேகமாக சித்தர் குடிசை நோக்கி ஓடினார். இளம்பெண் ஓடி வருவதையும் 4 பேர் அவரை துரத்தி வருவதையும் கண்ட சித்தர் மறுவினாடியே விபரீதத்தை உணர்ந்து கொண்டார்.




அவர் அந்த 4 பேரையும் பார்த்து “அப்படியே நில்லுங்கள்” என்றார். ஆனால் அந்த 4 பேரும் சித்தரை கண்டு கொள்ளாமல், அவரை ஒரு பொருட்டாகவே நினைக்காமல், அந்த பெண்ணை விரட்டுவதிலேயே குறியாக இருந்தனர். இதைக் கண்டதும் ஸ்ரீமுத்து கிருஷ்ண சித்தருக்கு கோபம், கோபமாக வந்தது. அவர் ஏதோ ஒன்றை சொல்லியபடி முணுமுணுக்க அந்த 4 பேருக்கும் கண் பார்வை பறிபோய் விட்டது. திடீர் குருடர்களாகி விட்டனர்.

அவர்கள் 4 பேரும் தட்டுத்தடுமாறிக் கொண்டிருக்க, சித்தர் அந்த பெண்ணிடம், “நீ போக வேண்டிய இடத்துக்கு போய் சேரம்மா....” என்று கூறி அனுப்பி வைத்தார். அப்போதுதான் அந்த 4 பேரும் சித்தரின் மகிமையை உணர்ந்து, அவரிடம் அழுது புலம்பி, இனி இப்படி நடந்து கொள்ள மாட்டோம் என்று மன்னிப்பு கேட்டனர். அதன் பிறகே அவர்களுக்கு பார்வைத் திரும்ப கிடைத்தது.

மற்றொரு தடவை வள்ளியூர் போலீசார் திடீரென சித்தரை தேடி வந்தனர். திருடர்களுக்கு உதவி செய்ததற்காக உங்களை விசாரிக்க வேண்டியதுள்ளது. எனவே எங்களுடன் போலீஸ் நிலையத்துக்கு வாருங்கள் என்று கூறி சித்தரை அழைத்து சென்றனர்.

சம்பூத்து என்ற ஊர் அருகே சென்றபோது சித்தர் தனக்கு மிகவும் தாகமாக இருப்பதாக கூறினார். உடனே போலீசார் அவரை அங்குள்ள ஒரு ஊற்றில் தண்ணீர் குடிக்குமாறு கூறினார்கள்.

தண்ணீர் குடிக்க சென்ற சித்தர் திடீரென மாயமாகி விட்டார். கண் முன்னே அவர் மறைந்ததால் போலீசார் அதிர்ச்சி அடைந்தனர். என்ன செய்வது என்று புரியாமல் திகைத்து நின்றனர். அப்போது பொத்தை மலை உச்சியில் சங்கநாதம் ஒலித்தது. போலீசார் தலையை உயர்த்தி பொத்தை மலை உச்சியைப் பார்த்தபோது அங்கு முத்துகிருஷ்ண சித்தர் நின்று கொண்டிருந்தார். வெலவெலத்துப் போன போலீசார் அரண்டு போனார்கள். ஏற முடியாத அந்த மலை உச்சிக்கு அவர் எப்படி போனார் என்று பயந்து போனார்கள்.

சித்தரைப் பார்த்து கையெடுத்துக் கும்பிட்டு விட்டு அங்கிருந்து திரும்பிப் பார்க்காமல் ஒரே ஓட்டமாக ஓடி விட்டனர். இப்படி முத்து கிருஷ்ண சித்தர் நிகழ்த்திய சாதனைகள், மகிமைகளை சொல்லிக் கொண்டே போகலாம்.

சித்தர் நினைத்திருந்தால் சுக போகமாக, செல்வச் செழிப்போடு வாழ்ந்திருக்கலாம். ஆனால் பால், தயிர், நெய் கூட சேர்க்காமல் மிக எளிய வாழ்க்கை வாழ்ந்தார்.

1913—ம் ஆண்டு ஒருநாள் அவர் தம் பக்தர்களிடம், கார்த்திகை மாதம் ஏகாதசி திதியன்று ஜீவசமாதி ஆகப் போவதாக கூறினார். பிறகு தான் ஜீவ சமாதி ஆக விரும்பும் இடத்தையும் அவரே தேர்வு செய்து சுட்டிக்காட்டினார். சொன்னபடி குறிப்பிட்ட நாளில், குறிப்பிட்ட இடத்தில் அவர் ஜீவ சமாதியானார். 179 ஆண்டுகள் அவர் இந்த உலகில் வாழ்ந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

அவர் தன்னை புகைப்படம் எடுக்க அனுமதிக்காத காரணத்தால் அவரது சிலையை செய்ய முடியவில்லை. என்றாலும் அவர் அகத்தியரின் அம்சமாக

கருதப்படுவதால் அகத்தியரின் சிலா ரூபத்தை வைத்துள்ளனர். முத்துக்கிருஷ்ண சித்தர் முந்தையப் பிறவியில் அகத்தியராக இருந்தார் என்பது பல ரிஷி நாடிகள் ஆய்வு மூலம் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.

எனவே சூட்டுப் பொத்தை மலையடிவாரத்துக்கு வரும் பக்தர்கள் முத்துக்கிருஷ்ண சித்தரை அகத்தியராக கருதி சிறப்பான வழிபாடுகள் செய்து செல்கிறார்கள். அது மட்டுமின்றி அவரது குரு பூஜையும் ஆண்டு தோறும் கார்த்திகை மாதம் சிறப்பாக நடத்தப்படுகிறது. முத்துக்கிருஷ்ண சித்தர் உயிரோடு இருந்த போது, ‘‘இந்த பொத்தை மலையைச் சுற்றி தேர் ஓடும். மக்கள் கிரிவலம் வருவார்கள்’’ என்றார். அவர் சொன்னது போலவே பொத்தை மலையடிவாரத்தில் தேர் ஓடுகிறது.

பவுர்ணமி தோறும் நூற்றுக்கணக்கானோர் அந்த மலையை சுற்றி கிரிவலம் வருகிறார்கள்.





# 9.ஸ்ரீ கம்பளி சுவாமிகள்

புதுச்சேரி

## 9. ஸ்ரீ கம்பளி சுவாமிகள்

சூப்பர் ஸ்டார் ரஜினிகாந்தின் ஆரம்பக் கால சினிமா படங்களைப் பார்த்தால், அவர் விதவிதமான ஸ்டைல்களில் சிகரெட் புகைப்பதைக் காணலாம். அவர் சிகரெட் பற்ற வைக்கும் அழகே தனி ரசனையாக இருக்கும். ரஜினி தீக்குச்சியை ஏதாவது ஒரு இடத்தில் உரசினால்தான் தீ பிடிக்கும். ஆனால் நாம் பார்க்கப் போகும் புதுமை சித்தரான கம்பளி சுவாமிகள் தீக்குச்சி இல்லாமலே தீ பற்ற வைக்கும் அதிசயத்தை நடத்தியவர். அவர் சுருட்டு புகைக்கும் ஸ்டைல் ரஜினி ஸ்டைலையும் மிஞ்சியது.



ஜீவ சமாதி நுழைவு வாயில்

கம்பளி சுவாமிகள் சுருட்டை உருவி வாயில் வைத்தபடி அக்கம், பக்கம் பார்ப்பார். சுருட்டைப் பற்ற வைக்க நெருப்பு கேட்பார். பெரும்பாலும் அவருக்கு யாராவது தீப்பெட்டி கொடுப்பார்கள். ஒருநாள் யாரும் தீப்பெட்டி கொடுக்கவில்லை.

எல்லாரும் தங்களிடம் தீப்பெட்டி இல்லை என்று சொல்லி விட்டனர்.

கம்பளி சுவாமிகள் கவலையேபடவில்லை. “போங்கடா... நீங்களும் உங்க தீப்பெட்டியும்” என்று சொன்னபடி வாயில் வைத்திருந்த சுருட்டுக்கு முன்னால்

தன் வலது ஆட்காட்டி விரலை உயர்த்திக் காட்டினார். மறு வினாடி அவர் ஆட்காட்டி விரலில் இருந்து கிளம்பிய நெருப்பு, சுருட்டில் பற்றிக் கொண்டது.

எல்லாரையும் பார்த்து சிரித்தபடி கம்பளி சுவாமிகள் ஸ்டைலாக சுருட்டை புகைத்தார். அவர் வாய்வழியாக கொஞ்சம் கூட புகை வெளியில் வரவில்லை. கம்பளி சுவாமிகள் செய்த இந்த அதிசயத்தை நேரில் பார்த்த மக்கள் ஆச்சரியத்தின் உச்சத்துக்கு சென்றனர்.

இப்படி வித்தியாசமான முறைகளில் பல சித்தாடல்களை கம்பளி சுவாமிகள் 18—ம் நூற்றாண்டில் நிகழ்த்தி காட்டினார். அந்த அதிசயங்களை பார்க்கும் பாக்கியம் புதுச்சேரி மக்க ளுக்குத்தான்கிடைத்திருந்தது.

முதலில் புதுச்சேரி மக்கள் கம்பளி சுவாமிகளை சித்த புருஷராகப் பார்க்கவில்லை. பாவம்... ஏதோ வழிப்போக்கர் போல தெரிகிறது என்று நினைத்தனர். ஏனெனில் கம்பளி சித்தரும் அத்தகையத் தோற்றத்தில்தான் இருந்தார். ஆங்காங்கே கிழிந்த, அழுக்குப் படிந்த ஒரு கம்பளிப் போர்வையை அவர் எப்போதும் தன் உடம்பைச் சுற்றி மூடி இருப்பார். ஒரு கையில் ஏதாவது குப்பையை அள்ளி வைத்திருப்பார். மற்றொரு கையில் சுருட்டு வைத்திருப்பார்.

எப்போதும் அந்த சுருட்டு புகைந்தபடியே இருக்கும். எப்போது அந்த சுருட்டை அவர் பற்ற வைத்தார்? எப்போது புகைத்து முடிப்பார்? எப்போது அதை தூர விட்டெறிவார் என்றெல்லாம் யாருக்கும் தெரியாது. கம்பளிப் போர்வை சுற்றிய கோலத்தைப் பார்த்து மக்கள் அவரை கம்பளி சுவாமிகள் என்றழைக்க, அந்த பெயரே நிலைத்து விட்டது. உண்மையில் அவர் பெயர் யாருக்குமே தெரியாது.

ஆனால் சென்னையில் அவர் அரசின் உயர் பதவியில் இருந்தது தெரிய வந்துள்ளது. திருமணமாகி மனைவி மற்றும் குழந்தைகளுடன் வாழ்ந்து வந்த அவருக்கு இஸ்லாமிய ஞானி ஒருவர் அறிமுகம் ஆகி இருக்கிறார்.

அந்த ஞானியை குருவாக ஏற்று இவர் செயல்பட்டு வந்தார். ஒருநாள் இஸ்லாமிய ஞானி திடீரென எங்கே போனார் என்று கண்டுபிடிக்க முடியாதபடி மறைந்து போனார். அதன் பிறகே இந்த உலகில் தனக்கென ஒரு தனிப்பாதை இருப்பதாக கம்பளி சுவாமிகள் உணர்ந்தார். மனைவி, குழந்தைகள், உறவினர்கள், நண்பர்கள் அனைவரையும் உதறித் தள்ளி விட்டு வீட்டில் இருந்து வெளியேறினார். கம்பளிப் போர்வை ஒன்றை எடுத்து உடலை சுற்றிக்

கொண்டு சென்னையில் இருந்து நடக்கத் தொடங்கினார். கால் போனப் போக்கில் நடந்தார்.

பசித்தால் ஏதாவது ஒரு கிராமத்துக்குள் செல்வார். சொல்லி வைத்தது போல அவருக்கு உணவு கிடைத்து விடும்.

இப்படியே ஊர், ஊராக அலைந்து, திரிந்து கடைசியில் புதுச்சேரிக்கு போய் சேர்ந்தார். கருவடிக்குப்பத்தில் உள்ள சித்தானந்த சுவாமிகளின் ஜீவசமாதி அமைந்துள்ள இடத்துக்கு சென்று ஒரு ஓரமாக அமர்ந்து விட்டார்.

சித்தானந்த சுவாமிகளை தரிசனம் செய்ய வருபவர்கள் முதலில் இவரை கண்டு கொள்ளவில்லை. சில வாரங்கள் கழிந்த பிறகே "யார் இவர்?" என்று விசாரிக்கத் தொடங்கினார்கள். தன்னைப் பற்றிய எந்த விவரத்தையும் வெளியிட மறுத்த கம்பளி சுவாமிகள், தன்னை நெருங்கியவர்களிடம் அற்புதங்களை நிகழ்த்தினார். உடல் நலக்குறைவோடு வந்தவர்களின் நோய்களை உடனுக்குடன் தீர்த்து வைத்தார்.

எந்த நோயாக இருந்தாலும் ஏதாவது பச்சிலையை எடுத்து கொடுப்பார். கூடவே விபூதியும் கொடுப்பார். அதுதான் மருந்து. கம்பளி சுவாமிகளின் கைபட்ட பச்சிலையும், விபூதியும் எந்த நோயையும் தீர்க்கும் மாபெரும் ஆற்றலைப் பெற்றிருந்தது.



இதன் காரணமாக மிக குறுகியக் காலத்தில் கம்பளி சித்தரின் புகழ் புதுச்சேரி மற்றும் சுற்றுப் பகுதி மக்களிடம் பரவியது. மக்கள் நம்பிக்கையோடு வந்து அவரிடம் பச்சிலை, விபூதி பெற்றுச் சென்றனர்.

கம்பளி சித்தரை மேலும் மேலும் மக்கள் நெருங்கிப் பழகிய பிறகுதான், அவரிடம் ஏராளமான வித்தைகள் புதைந்து கிடப்பதை கண்டு கொண்டனர். இரும்பை தங்கம் ஆக்கும் ரசவாத வித்தை, இவருக்கு மிக, மிக எளிதான கலையாக இருந்தது.

கஷ்டப்பட்ட சில பெண்களுக்கு அவர் இரும்பை தங்கம் ஆக்கி கொடுத்து மகிழ்ச்சி அடையச் செய்துள்ளார். இதை கவனித்து வந்த புதுச்சேரியைச் சேர்ந்த இரண்டு பேருக்கு ரசவாத வித்தையை எப்படியாவது கம்பளி சுவாமியிடம் இருந்து கற்று, பெரிய கோடீசுவரர்களாகி விட வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது.

கம்பளி சித்தரிடம் போய் அவர்கள் இருவரும் சீடர்கள் போல வேலைக்கு சேர்ந்தனர். அவர்களது உண்மையான நோக்கத்தை ஞானத்தால் அறிந்து கொண்ட கம்பளி சித்தர் அவர்கள் இருவரையும் தன்னோடு இருக்க அனுமதிக்கவில்லை.

இதனால் ஆத்திரம் அடைந்த அவர்கள் இருவரும் கம்பளி சுவாமிகளைக் கயிற்றால் கட்டிப் போட்டு அடித்து சித்ரவதை செய்தனர். அந்த சித்ரவதைகளைப் பொறுத்துக் கொண்ட சுவாமிகள், அவர்கள் இருவருக்கும் சில போதனைகளைச் சொன்னார்.




“இந்த உலகில் எதுவும், யாருக்கும் சாசுவதம் ஆனது அல்ல. எல்லாமே நிலையற்றது. உங்கள் ஆத்மா பயணத்தை உணருங்கள்” என்று எடுத்துரைத்தார்.

கம்பளி சுவாமிகளிடம் இருந்து நிச்சயமாக ரசவாத வித்தையை தெரிந்து கொள்ள முடியாது என்பதை உணர்ந்தனர். இதனால் வெறுப்படைந்த அந்த இருவரும் கம்பளி சுவாமிகளை உதறி விட்டு சென்றனர். கம்பளி சுவாமிகளிடம் இன்னொரு அற்புதமான ஆற்றலும் இருந்தது. அதாவது ஒரே நேரத்தில் மூன்றுக்கும் மேற்பட்ட இடங்களில் தோன்றி, காட்சிக் கொடுப்பதை சர்வ சாதாரணமாக நடத்திக் காட்டினார்.

ஒரு தடவை புதுச்சேரியைச் சேர்ந்த ஒரு முரடன் கம்பளி சுவாமிகளிடம் வேண்டும் என்றே தகராறு செய்தான். கம்பளி சுவாமிகளை மரத்தில் கட்டி வைத்து அடித்தான்.

அப்போது அங்கு வந்த ஒருவர், “இப்போதுதான் 5 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள கடைத்தெருவில் கம்பளி சாமியை பார்த்தேன். இவர் யார் அவர் போலவே இருக்கிறாரே?” என்று கேட்டார்.

முரடனுக்கு குழப்பமாகி விட்டது. உடனே 5 கி.மீ. தொலைவில் உள்ள கடைத்தெருவுக்குச் சென்றான். அங்கு கம்பளி சுவாமிகள் சிரித்தபடி நடந்து சென்று கொண்டிருந்தார்.

உடனே முரடன், கம்பளி சுவாமிகளை பிடித்து அங்குள்ள ஒரு மரத்தில் கட்டிப் போட்டான். பிறகு மீண்டும் பழைய இடத்துக்கு வந்தான்.

அங்கும் கம்பளி சித்தர் கட்டிப் போடப்பட்ட நிலையில் இருந்தார். அது எப்படி ஒரே நேரத்தில் 2 இடங்களில் கம்பளி சுவாமி இருக்க முடியும் என்று அந்த முரடனுக்கு தவிப்பாகி விட்டது. கம்பளி சுவாமி மிகப்பெரிய மகான் என்பதை அப்போதுதான் முரடன் உணர்ந்தான். 5 கி.மீ. தொலைவில் கட்டிப் போட்டு விட்டு வந்த கம்பளி சுவாமிகளிடம் மன்னிப்பு கேட்க வேண்டும் என்று நினைத்தபடி ஓடினான்.

வழியில் எதிரே கம்பளி சுவாமிகள் நடந்து வந்து கொண்டிருந்தார். முரடனை நேருக்கு நேராகப் பார்த்ததும் சினேகமாக சிரித்தார்.

‘‘சுருட்டு பற்ற வைக்கணும். தீப்பெட்டி இருந்தா கொடு’’ என்றார். முரடன் அடித்ததோ, மரத்தில் கயிற்றால் கட்டி போட்ட சிறு சலனம் கூட அவரிடம் இல்லை. இந்த அதிசயத்தால் பயந்த அந்த முரடன் கம்பளி சுவாமிகளின் காலில் விழுந்து, தன்னை மன்னித்து அருளும்படி கதறி, கதறி அழுதான்.

தனி நபர்களிடம் தனது ஆற்றலை இப்படி வெளிப்படுத்திய கம்பளி சுவாமிகள் சில சமயம் கடைகளுக்குள் சென்றும் சித்தாடல் செய்வார். அவர் ஏதாவது ஒரு கடைக்குள் நுழைந்து ஏதாவது ஒரு பொருளை எடுத்துச் சென்றால் அந்த கடை விரைவிலேயே லாபம் கொழிக்கும் கடையாக மாறி விடும். இதை அறியாத கள் கடைக்காரன் ஒருவன், கம்பளி சுவாமிகள் மனம் விரும்பி கேட்ட பிறகும் கள் கொடுக்க மறுத்தான். அதன் பிறகு அவன் கடையில் ஒரு தம்ளர்கள் கூட விற்கவில்லை. வழக்கமாக வரும் வாடிக்கையாளர்கள் கூட வேறு கடைகளுக்கு சென்றனர்.

கள் கடைக்காரருக்கு 2 நாட்களுக்குப் பிறகுதான் விவரம் தெரிய வந்தது. அவர் கம்பளி சுவாமிகள் காலில் விழுந்து உபசரித்து கள் கொடுத்தார். அதன் பிறகே அவர் கடையில் முன்பு போல வியாபாரம் நடக்கத் தொடங்கியது. இப்படி தினம், தினம் சித்தாடல்கள் நடத்தி புதுச்சேரி மக்களின் மனதில் கம்பளி சுவாமிகள் நீங்காத இடத்தைப் பிடித்தார். குறிப்பாக சித்தானந்த சுவாமிகளின் ஜீவ சமாதி அருகே அமர்ந்து அவர் என்ன சொன்னாலும் அது 100 சதவீதம் அப்படியே நடந்தது.

இதனால் சித்தானந்த சுவாமிகளின் மறு அம்சமாக கம்பளி சுவாமிகள் இருக்கக் கூடுமோ என்று புதுவை மக்கள் நினைத்தனர். அந்த அளவுக்கு கம்பளி சுவாமிகள் புதுவை மக்களை ஈர்த்திருந்தார்.

இந்த நிலையில் 1874—ம் ஆண்டு டிசம்பர் மாதம்.... ஒரு நாள் புதுவையில் வரலாறு காணாத மழை பெய்தது. ஊரில் உள்ள ஓடைகளில் எல்லாம் மழைத் தண்ணீர் வெள்ளமாக பெருக்கெடுத்து ஓடியது.

மழை சீற்றத்தில் பாதிக்கப்பட்ட மக்கள் கம்பளி சுவாமிகளை எப்படியோ மறந்து போனார்கள். மழை ஓய்ந்து சகஜ நிலை திரும்பிய பிறகே கம்பளி சுவாமியைத் தேடத் தொடங்கினார்கள். எங்கு தேடியும் கம்பளி சுவாமிகளை காண இயலவில்லை.

அப்போது வெள்ளவாரி ஓடை பகுதிக்கு சென்று சிலர் தேடினார்கள். அவர்கள் காதில் திடீரென ‘‘கம்பளி தண்ணீயிலே, கம்பளி தண்ணீயிலே’’ என்ற குரல் அசரீரி போல பல தடவை தொடர்ந்து கேட்டது.

ஆச்சரியம் அடைந்த அவர்கள் வெள்ள வாரி ஓடை தண்ணீர் பகுதி முழுவதும் பார்த்தனர். ஒரு இடத்தில் அவர்கள் கண்ட காட்சி அதிசய பிரளயத்தை ஏற்படுத்தியது. தண்ணீர் மீது கம்பளி சுவாமிகள் தவக் கோலத்தில் இருந்தார். வெள்ளமாக ஓடும் தண்ணீர் மீது அவர் ஆடாமல், அசையாமல் இருந்ததை பார்த்தவர்கள், இது நிஜம்தானா என்று மெய் மறந்தனர். கம்பளி சுவாமிகளை பார்த்து கைக் கூப்பி கும்பிட்டனர்.

கண் திறந்த கம்பளி சுவாமிகள், தான் ஜீவ சமாதி ஆகப் போவதாகவும் அதை எப்படி செய்தல் வேண்டும் என்றும் விவரித் தார். ஜீவ சமாதியில் ஆண்டு தோறும் தவறாமல் குரு பூஜை நடத்த வேண்டும் என்றும் கட்டளையிட்டார்.

அடுத்த நிமிடம் அந்த தவக் கோலத்திலேயே அவர் உடல் தண்ணீருக்குள் மூழ்கியது. அப்படியே அவர் ஜல சமாதி ஆகி விட்டார். சிறிது நேரம் கழித்து தவம் செய்த நிலையில் அவர் உடல் ஒரு இடத்தில் கரை ஒதுங்கியிருந்தது. அதை எடுத்து சுவாமிகள் சொன்னபடி, சொன்ன இடத்தில் ஜீவ சமாதி அமைக்கப்பட்டுள்ளது.

தட்டாஞ்சாவடி தொழில்பேட்டையின் வடக்கே உள்ள அந்த ஜீவ சமாதியை தற்போது ஆனந்தா ஆசிரமம் நிர்வகித்து வருகிறது. இப்போதும் அந்த ஜீவ சமாதி பகுதியில் கம்பளி சுவாமிகளின் அருள் அலையடித்தபடி உள்ளது. தீராத வியாதி உடையவர்கள், அந்த ஜீவ சமாதியில் காலடி எடுத்து வைத்தாலே போதும், உடலும் உள்ளமும் குளிர்ச்சி பெறுவதை அனுபவப்பூர்வமாக உணர்கிறார்கள்.





# 10. ஸ்ரீ தோபா சுவாமிகள்

வேலூர்



குடங்களை எடுத்துக் கொண்டு அந்த 4 பெண்களும் தண்ணீர் பிடிக்க சென்றனர். ஊருக்கு வெளியில் உள்ள கிணற்றில் தண்ணீர் எடுத்துக் கொண்டு வீடு நோக்கி நடந்து கொண்டிருந்தனர்.

வழியில்.... ஒரு வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்த தோபா சுவாமிகள், அந்த பெண்களை பார்த்ததும், "என் தலையில் தண்ணீரை ஊற்றுங்கள்— நான் குளிக்க வேண்டும்" என்றார். தோபா சுவாமிகளின் தெய்வீக ஆற்றலை அந்த 4 பெண்களும் நன்கு அறிந்தவர்கள்.


ஸ்ரீ தோபா சுவாமிகள்

என்றாலும் மீண்டும் தண்ணீர் எடுக்க நீண்ட தொலைவுக்கு நடக்க வேண்டுமே என்று கவலையுடன் நினைத்தபடியே தோபா சுவாமிகள் மீது தண்ணீரை ஊற்றினார்கள். எல்லா குடங்களில் உள்ள தண்ணீரை ஊற்றி முடித்ததும், "சரி போதும் போங்க" என்றார் தோபா சுவாமிகள்.

வீடு திரும்பிய 4 பெண்களும் தண்ணீர் எடுப்பதற்காக மற்ற பாத்திரங்களை தூக்க முயன்றபோது தான் கவனித்தனர்.... எல்லா பாத்திரங்களிலும் தண்ணீர்

நிரம்பி இருந்தது. இந்த அற்புதம் வேலூர் முழுக்க பரவியது. எல்லோரும் தோபா சுவாமிகளின் சித்தாடல் பற்றியே ஆச்சரியம் பொங்க பேசினார்கள்.

வேலூரில் அவர் ஜீவ சமாதியாகி 167 ஆண்டுகள் ஆகி விட்டது. இன்றும் தோபா சுவாமிகளின் அற்புதங்கள் மக்களிடையே மங்காமல் ஆச்சரியத்தோடு பேசப்படுகிறது.

யார் இந்த தோபா சுவாமிகள்? ஆங்கிலேயர் ஆட்சி நடந்தபோது இந்த மகான் மதுரையில் அவதாரம் எடுத்தார். சிவகுருநாத பிள்ளை — சிவகாமி தம்பதியரின் மகனாக பிறந்த இவருக்கு ராமலிங்கம் என்று பெயரிட்டனர்.


முன்பக்கத் தோற்றம்

எல்லா சிறுவர்களையும் போல ராமலிங்கமும் பள்ளிக் கூடத்துக்கு சென்றான். படிப்பில் தனித்துவம் பெற்றுத் திகழ்ந்தான். இந்த நிலையில் ஆங்கிலேயர்களின் படைப்பிரிவில் பணியாற்றி வந்த ராமலிங்கத்தின் தந்தை சிவகுருநாத பிள்ளை திடீரென மரணம் அடைந்தார். இதனால் அந்த படைப்பிரிவு வேலையை ராமலிங்கத்துக்கு கொடுத்தனர்.

ராணுவத்தில் சேர்ந்து அவர் எல்லா பயிற்சிகளையும் கற்று தேர்ந்தார். அந்த காலகட்டத்தில் ராமலிங்கத்திடம் மாற்றங்கள் ஏற்பட்டது. பணி நேரம் தவிர

மற்ற நேரங்களில் தியானத்தில் ஆழ்ந்தார். அதை நேரில் பார்த்த உயர் அதிகாரி, ‘‘ராமலிங்கம் சாதாரண மனிதன் அல்ல. மிகப்பெரிய மகான்’’ என்று கூறினார். இந்த நிலையில் ஒருநாள் ஆங்கிலேய படைகளுக்கும் எதிரிப் படை களுக்கும் இடையே போர் ஏற்பட்டது. ராமலிங்கம் நிகழ்த்திய ஒரு அற்புதத்தால், அந்த போரில் ஆங்கிலேயர்கள் மிக எளிதில் வெற்றி பெற்றனர். இந்த சம்பவத்துக்குப் பிறகு படை வீரர் வேலையை ராமலிங்கம் ராஜினாமா செய்தார்.

சென்னையை சுற்றியுள்ள பகுதிகளில் பிச்சைக்காரர் போல அலைந்து திரிந்தார். கால் போன போக்கில் நடந்தார். அவரை எல்லோரும் ‘‘பைத்தியம்’’ என்று ஏளனம் செய்து விரட்டினார்கள்.

அதுபற்றி துளியும் வருத்தப்படாத ராமலிங்கம், தன் மனதில் திருஞானசம்பந்தரை மானசீக குருவாக ஏற்று, அவர் பாடல்களை பாடியபடி தெருக்களில் அலைந்தார். நாளடைவில் அவர் தன்னையே மறந்து போனார். தான் அணிந்திருக்கும் உடைகள் கூட சுமையாக இருப்பதாக கருதிய அவர் அவற்றை கழற்றி தூர வீசினார். முழு நிர்வாணமாக அலைந்தார். அவதூதராக மாறியதால் தெருவில் அவரை கண்ட பெண்கள் பயந்து, அலறி ஒதுங்கி சென்றனர். சிறிது நாளில் அவர் வட சென்னை தெருக்களில் தங்குவதை வழக்கத்தில் கொண்டார். உற்றார், உறவினர்கள் கைவிட்ட நிலையில் சிறுவர்கள் மட்டும் அவரிடம் அன்போடு பழகினார்கள்.

அந்த சிறுவர்களுக்கு ராமலிங்கம், திருஞான சம்பந்தர் பாடிய முதல் பதிகமான ‘‘தோடுடைய செவியன்’’ என்ற பதிகத்தை சொல்லி கொடுத்தார். பிறகு அந்த சிறுவர்களை பார்க்கும் போதெல்லாம், ‘‘தோடுடைய செவியன்’’ பதிகத்தைப் பாடும்படி கூறினார்.

கொஞ்ச நாட்களுக்குப் பிறகு அவர், அந்த சிறுவர்களிடம், ‘‘தோ பா’’ என்று மட்டுமே கூறத் தொடங்கினர். இதில் ‘‘தோ’’ என்பது ‘‘தோடுடைய செவியன்’’ பதிகத்தை குறிக்கும். ‘‘பா’’ என்பது ‘‘பாடுங்கள்’’ என்பதைக் குறிக்கும்.

ராமலிங்கம் அடிக்கடி சிறுவர்களிடம் தோபா, தோபா என்று சொன்னதால், சிறுவர்கள் அவரை தோபா சுவாமிகள் என்று அழைக்கத் தொடங்கினர்.

இதனால் அவருக்கு ராமலிங்கம் என்ற பெயர் மறைந்து ‘‘தோபா சுவாமிகள்’’ என்ற பெயர் நிலைத்தது.

சித்தர்கள் ஆத்ம சக்தியை உணர்ந்தவர்கள் என்பது உங்களுக்கு தெரிந்திருக்கும். அதாவது ஒருவரை பார்த்ததும் அவர் பிறவிகளையும், அந்த ஆத்மாவின் இயல்பையும் சித்தர்கள் தெரிந்து கொள்வார்கள்.

தோபா சுவாமிகளும் ஆத்ம சக்தியை நிரம்பப் பெற்றிருந்தார். அதனால்தான் அவர் திருவொற்றியூரில் ஒரு தெருவில் உட்கார்ந்து கொண்டு, வருவோர் போவோரையெல்லாம் அவரவர் குணங்களுக்கு ஏற்ப ‘‘நாய் போகிறது. நரி வருகிறது. கழுதை போகிறது’’ என்றார்.

அப்போது அவர் திடீரென, ‘‘இதோ மனிதன் வருகிறான்’’ என்றார். அவர் பார்த்த திசையில் வடலூர் வள்ளலார் வந்து கொண்டிருந்தார். தோபா சுவாமிகள் அருகில் வந்த வள்ளலார், அவரிடம் சிறிது நேரம் பேசினார். பிறகு நகருக்குள் இப்படி திகம்பர நிலையில் இருப்பதை மறுபரிசீலனை செய்யுங்கள் என்றார். சென்னையை விட்டு வேறு இடத்துக்கு செல்லுமாறு வள்ளலார் கூறியதை தோபா சுவாமிகள் ஏற்றுக் கொண்டார். அதற்கான சந்தர்ப்பத்துக்காக காத்திருந்தார்.

ஒருநாள் முஸ்லிம்கள் வசிக்கும் தெருவில் நிர்வாண நிலையில் தோபா சுவாமிகள் நடந்து சென்று கொண்டிருந்தார். அவரைப் பார்த்து அதிருப்தி அடைந்த ஒருவர், சாக்குப்பை தைக்கும் ஊசியை எடுத்து தோபா சுவாமிகள் மீது வீசினார்.

ஆனால் அந்த ஊசி தோபா சுவாமிகள் மீது படவில்லை. யார் வீசினாரோ, அவர் அடிவயிற்றில் போய் பாய்ந்தது. ரத்தம் வழிந்தோட அவர் அலறித் துடித்தார்.

தோபா சுவாமிகளின் மகிமையை உணர்ந்து, மன்னிப்பு கேட்டு கதறினார். மனம் இரங்கிய தோபா சுவாமிகள், அவர் வயிற்றில் பாய்ந்திருந்த ஊசியை கூர்ந்து பார்த்தார். அடுத்த வினாடி ஊசி தானாக கீழே விழுந்தது. அது மட்டுமின்றி அவர் வயிற்றில் ஊசி குத்திய சுவடே இல்லாமல் போனது.

ஆச்சரியத்தில் மிதந்த அந்த இஸ்லாமிய பிரமுகர், தோபா சுவாமிகளை மீண்டும் பணிந்து வணங்கினார். அதோடு ‘‘தோபா மசூதி’’ என்று சுவாமிகள்

பெயரில் ஒரு பள்ளிவாசலையும் கட்டினார். இப்படி நிறைய பேரை தோபா சுவாமிகள் ஆட்கொண்டார்.

தோபா சுவாமிகளின் மகிமை கொஞ்சம், கொஞ்சமாக சென்னை மக்களுக்குத் தெரியத் தொடங்கியது. ஒரு சமயம் அவர் பொதுமக்களுக்கு இடையூறாக இருப்பதாக கூறி, போலீஸ் காரர் ஒருவர் பிரம்பை எடுத்துக் கொண்டு அடிக்க பாய்ந்தார். ஓங்கிய அவரது கை அப்படியே நின்று போனது. அதன் பிறகே போலீசாருக்கு தோபா சுவாமிகளின் ஆற்றல் தெரிய வந்தது.

அந்த போலீஸ்காரர் கெஞ்சி கூத்தாடி மன்னிப்பு கேட்ட பிறகே அவரது கை மீண்டும் செயல்பட தொடங்கியது. சுவாமிகள் வேளச்சேரிக்கு சென்றபோது சிதம்பர சுவாமி வந்து சந்தித்தார். அப்போது அவரிடம் தோபா சுவாமிகள், "எலிதான் பொந்துக்குள் இருக்கும். நீயும் ஏன் அப்படி இருக்கிறாய்?" என்றார். அதன் பிறகே சிதம்பர சுவாமி குகைக்குள் தவம் இருப்பதை தவிர்த்து வெளியில் வந்தார்.

இப்படி நிறைய பேருக்கு ஞானம் வழங்கிய தோபா சுவாமிகள், சிலருக்கு கேட்டால்தான் கொடுத்தார். சிலருக்கு கேட்காமலே தன் அருளால் அதிசயங்களை நிகழ்த்தி காட்டினார்.

ஒரு தடவை மண்பாண்டம் செய்யும் தொழிலாளியின் மனைவிக்கு தன் கையால் சாப்பாடு கொடுத்தார். பிறகு அவர்களிடம், "உன் வயிற்றில் ஒரு சித்தன் பிறப்பான்" என்று அருளாசி வழங்கினார். அவர் சொன்னது போலவே அந்த பெண்ணுக்கு மகன் பிறந்தான்.

அந்த பையன் பிற்காலத்தில் "ஏகாம்பரச் சிவயோகி" என்ற பெயரில் துறவியாக வாழ்ந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. அதுபோல ஒரு தடவை விரக்தியுடன் காணப்பட்ட ஒருவரை, வடக்கு திசை பார்த்து தோபா சுவாமிகள் தள்ளி விட்டார்.

மறுநிமிடம் அந்த நபர் ஞானம் பெற்று தவம் செய்ய தொடங்கி விட்டார். தோபா சுவாமிகள் செய்த இந்த செயலை அஸ்த மஸ்தகசை யோக உபதேச நெறி என்கிறார்கள்.

மற்றொரு தடவை ஒரு வீட்டின் முன்பு பிச்சை கேட்டு நின்றார். அந்த வீட்டுக்காரன் தோபா சுவாமிகளை திட்டி விரட்டினான். அப்போது தோபா சுவாமிகள் சிரித்தபடி தன் கையில் ஒரு மாம்பழத்தை வரவழைத்து, "இதை உன் மனைவிக்கு கொடு. நிச்சயம் குழந்தை பிறக்கும்" என்றார்.

அந்த வீட்டுக்காரன் ஆடி போய் விட்டான். தனக்கு 2 மனைவிகள் இருந்தும் குழந்தை இல்லாதது இவருக்கு எப்படி தெரியும்? என்று நினைத்தான். பிறகு அந்த மாம்பழத்தை வாங்கி தன் இளைய மனைவிக்கு கொடுத்தான்.

அவள் அந்த மாம்பழத்தை சாப்பிட்ட அடுத்த 10—வது மாதம் அழகான ஆண் குழந்தை பிறந்தது. அந்த குழந்தைக்கு தோபா என்று பெயரிட்டனர். இந்த நிகழ்வுக்குப் பிறகு நிறைய பெண்கள், தோபா சுவாமிகளிடம் கனி பெற்று புத்தர பாக்கியத்தை அடைந்தனர். தோபா சுவாமிகளின் உருவத்தை மனதில் நிறுத்தி, ஆழ்ந்த தியானம் செய்த பல பெண்களுக்கு புத்திர பாக்கியம் கிடைத்தது. அந்த குழந்தைகளுக்கு தோபா என்றே பெயரிட்டனர். இப்போதும் தோபா என்ற பெயருடைய பலர் சென்னை, செங்கல்பட்டு, ஆற்காடு, வேலூர் பகுதிகளில் உள்ளனர் என்பதே இதற்கு சாட்சியாகும்.

ஒருநாள் உயர் போலீஸ் அதிகாரி ஒருவர் தன் குடும்பத்தினருடன் சென்று கொண்டிருந்தபோது நிர்வாணமாக எதிரில் வந்த தோபா சுவாமிகளைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தார். அவரை விரட்டும்படி போலீஸ் அதிகாரியின் மனைவி கூறினார்.

உடனே அந்த போலீஸ் அதிகாரி உத்தரவின்பேரில் தோபா சுவாமிகளை கையில் விலங்கு பூட்டி போலீசார் பிடித்துச் சென்று சிறையில் அடைத்தனர். பிறகு அந்த உயர் போலீஸ் அதிகாரி தன் வீட்டுக்குப் புறப்பட்டுச் சென்றார்.

அங்கு அவர் வீட்டு வாசலில் தோபா சுவாமிகள் சிரித்தபடி நின்று கொண்டிருந்தார். அதிர்ச்சி அடைந்த போலீஸ் அதிகாரி போலீஸ் நிலையத்துக்கு சென்று பார்த்தார்.

சிறை அறை எப்படி பூட்டப்பட்டதோ, அப்படியே இருந்தது. அப்படி இருக்கும்போது தோபா சுவாமிகள் கை விலங்கை உடைத்துக் கொண்டு, எப்படி வெளியில் வந்தார் என்பது புரியாமல் தவித்தார். அப்போது "அனிமா"

எனும் சித்தியால் அணு வடிவத்துக்கு மாறி, குறுகி, தோபா சுவாமிகள் சிறையில் இருந்து வெளியேறி இருப்பது தெரிந்தது.

தோபா சுவாமிகளின் மகிமையை உணர்ந்த போலீஸ் அதிகாரிக்கு அவர் மீது பாசம், பற்று, பயம் ஏற்பட்டது. அடிக்கடி அவர் தோபா சுவாமிகளை சந்தித்து ஆசி பெற்றார்.

தோபா சுவாமிகள் முழு நிர்வாணமாக சென்னைக்குள் சுற்றுவது அவருக்கு ஆபத்தை ஏற்படுத்தி விடக்கூடும் என்று பயந்தார். எனவே ‘‘வேறு எந்த ஊருக்காவது போய் விடுகிறீர்களா?’’ என்று கேட்டார்.

அதற்காகத்தானே இவ்வளவு நாட்களும் தோபா சுவாமிகள் காத்துக் கொண்டிருந்தார். உடனே ‘‘சரி’’ என்று சம்மதித்தார்.

குதிரை வண்டி தயாரானது. தோபா சுவாமிகளை அதில் ஏற்றினார்கள். ‘‘சுவாமி உங்களுக்கு எந்த ஊரில் இறங்க வேண்டும் என்று தோன்றுகிறதோ... அங்கு இறங்கிக் கொள்ளலாம்’’ என்று அந்த போலீஸ் அதிகாரி தெரிவித்து விடைபெற்றார்.



கருவறை தோற்றம்

குதிரை வண்டி புறப்பட்டது. பூந்தமல்லி, காஞ்சீபுரம், தாமல், காவேரிபாக்கம், வாலாஜாபேட்டை, ராணிப்பேட்டை, ஆற்காடு என்று குதிரை வண்டி சென்றது. வேலூர் வந்ததும் "நிறுத்து...." என்றார். குதிரை வண்டியில் இருந்து இறங்கிய தோபா சுவாமிகள் திரும்பிப் பார்க்காமல் விறுவிறுவென நடந்தார்.

வேலூர் சைதாப்பேட்டையில் தற்போது மார்க்கெட் உள்ள பகுதிக்குள் சென்றார். அங்கு ஒரு இஸ்லாமியரின் வீட்டுக்குள் நுழைந்தார். இதுதான் என் இருப்பிடம் என்று கூறி அங்கு உட்கார்ந்து கொண்டார்.

நிர்வாணமாக ஒருவர் ஊருக்குள் வந்ததைக் கண்டதும் அந்த தெருவில் உள்ளவர்கள் திரண்டனர். கையில் கிடைத்ததைக் கொண்டு சுவாமிகளை சரமாரியாக அடிக்கத் தொடங்கினார்கள். உடனே சுவாமிகள் கரிமா சித்தியை வெளிப்படுத்தினார்.

இந்த சித்தாடல் காரணமாக யாரெல்லாம் தோபா சுவாமிகளை அடித்தார்களோ, அந்த அடி ஒவ்வொன்றும் அவர்கள் மீதே திருப்பப்பட்டது.

இதைக் கண்டு அந்த பகுதி மக்கள் ஆச்சரியமும், அதிர்ச்சியும் அடைந்தனர்.

வந்திருப்பவர் மிகப்பெரிய மகான் என்பதை உறுதிசெய்து, அவர் பற்றி விசாரித்தனர். தோபா சுவாமிகள் பற்றிய விவரங்கள் தெரிந்ததும், அவரை துன்புறுத்துவதை கைவிட்டனர். என்றாலும் சிலர், அவரை ஒரு கயிற்றில் கட்டி பிடிக்க முயன்றனர். எத்தனை முறை கயிற்றால் கட்டினாலும் ‘‘லகிமா’’ எனும் சித்தாடல் மூலம் அவர் தப்பினார்.

இதையடுத்து விஷம் கொடுத்து சுவாமிகளை கொல்ல சிலர் முயன்றனர். ஆனால் விஷம் என்று தெரிந்ததும் தோபா சுவாமிகள் அதை வாங்கிக் குடித்து விட்டு சிரித்தபடி அலைந்தார். அதன் பிறகே இவரை யாராலும், எதுவும் செய்ய முடியாது என்ற உண்மையை உணர்ந்து அவரை விரட்டும் முயற்சியை சைதாப்பேட்டை பகுதி மக்கள் அடியோடு கைவிட்டனர்.

வேலூர் மக்கள் தன்னைப் பற்றி சரியாக புரிந்து கொண்டனர் என்ற நிலை ஏற்பட்ட பிறகு தோபா சுவாமிகள் ஊர் முழுக்க சுற்றி வந்தார். 12 ஆண்டுகள் அவர் வேலூரில் வாழ்ந்து வியப்பூட்டும் ஏராளமான சித்தாடல்களை செய்தார். தினமும் அவர் பிச்சை எடுத்தே சாப்பிட்டார். ஏதாவது ஒரு வீடு முன்பு போய் நின்று, ‘‘சின்னி சோறு கொண்டு வா’’ என்பார். சோறு போடப்பட்டதும் அதை மூன்று கவளமாக பிடிப்பார். ஒரு கவளம் சாதத்தை விண்ணை நோக்கி வீசுவார். அது கீழே விழாது. எங்கு போகும் என்றும் தெரியாது. மாயமாய் மறைந்து விடும்.

அடுத்த கவளம் சாதத்தை தன்னை சுற்றி நிற்கும் நாய், பூனை போன்ற பிராணிகளுக்கு போடுவார். அந்த சாதம், எந்தெந்த பிராணி எதை விரும்பி சாப்பிடுமோ, அதுவாக மாறிவிடும். தினமும் இந்த அற்புதம் நடக்கும்.

மூன்றாவது கவளம் சாதத்தை மட்டும் சுவாமிகள் சாப்பிடுவார். வேறு எதையும் சாப்பிட மாட்டார்.

அவர் ஏதாவது ஒரு கடைக்குள் சென்றால், அந்த கடையே செல்வ செழிப்பாக மாறிவிடும். ஒருதடவை எண்ணெய் கடைக்குள் புகுந்த அவர், எல்லா எண்ணெய்யையும் எடுத்து தன் மீது ஊற்றினார். தெருவெங்கும் எண்ணெய், வெள்ளம்போல ஓடும் அளவுக்கு எண்ணெய்க் குளியல் நடத்தி விட்டு போய் விட்டார்.

திகைத்துப்போன அந்த எண்ணெய் கடைக்காரர், திரும்பி கடைக்குள் சென்றபோது இன்ப அதிர்ச்சிக்குள்ளாகினார். அவர் கடைக்குள் இருந்த எல்லா அண்டாக்களிலும் எண்ணெய் நிரம்பி வழிந்தபடி இருந்தது.

அதுபோல ஒருநாள் மதியம் சுவாமிகள் ஒரு வீடு முன்பு நின்று ‘‘சின்னி சோறு போடு’’ என்றார். அப்போதுதான் அந்த வீட்டில் உலை கொதித்துக் கொண்டிருந்தது. சாதம் இல்லை என்று சொல்வதற்கு பயந்து போன அந்த வீட்டுப்பெண், பாதி வெந்த சாதத்தை எடுத்து வந்து சுவாமிகளின் சட்டியில் போட்டாள்.

அடுத்தநொடி அந்த சாதம் முழுமையான வெந்த சாதமாக மாறியது. தோபா சுவாமிகள் சிரித்துக் கொண்டே ஆசீர்வதித்து விட்டு சென்றார். அந்த பெண் வீட்டுக்குள் திரும்பிச் சென்றபோது சாதம் வடிக்கப்பட்டு சாப்பிட தயார் நிலையில் இருந்தது. அதோடு குழம்பு, கூட்டு வகைகளும் இருந்தன.

இப்படி வேலூரில் தோபா சுவாமிகள் செய்த அற்புதங்களை சொல்லிக் கொண்டே போகலாம். நூற்றுக்கணக்கானோர் அவரால் செல்வந்தர் ஆனார்கள். நூற்றுக்கணக்கான பெண்கள் குழந்தை செல்வம் பெற்றனர். அவர்களில் அரசு உயர் பதவியில் அதிக சம்பளத்தில் வேலை பார்த்த ஒருவர் தோபா சுவாமிகளை குருவாக ஏற்று தினமும் வழிபட்டு வந்தார்.

திடீரென வேலை பறிக்கப்பட்டதால் அவர் கஷ்டத்துக்கு தள்ளப்பட்டார்.

ஒருநாள் அவரிடம் தோபா சுவாமிகள், ‘‘நாளைக்காகும்’’ என்று சொல்லி ஆசீர்வதித்து அனுப்பினார். மறுநாள் அந்த நபருக்கு மீண்டும் அரசு வேலை கிடைத்தது.

அவர் தனது முதல் 2 மாத சம்பளத்தை கொண்டு, வேலூர் சைதாப்பேட்டையில் தோபா சுவாமிகள் முதன் முதலாக எந்த வீட்டுக்குள் நுழைந்தாரோ, அந்த வீட்டை விலை கொடுத்து வாங்கி காணிக்கையாக சுவாமிகளுக்கு அர்ப்பணம் செய்தார்.

பிறகு தோபா சுவாமிகள் அந்த வீட்டில் இருந்தபடி அருளாசி வழங்கி வந்தார். அப்போது சிவநாதர் என்பவர் வந்து தோபா சுவாமிகளின் சீடராக சேர்ந்தார்.

1849—களில் ஒருநாள் அவரிடம் தோபா சுவாமிகள், ‘‘இவ்வளவு காலம் இந்த உடல் கூட்டில் இருந்து விட்டேன். இனி லிங்கத்துக்குள் ஒடுக்க நிலைக்கு

செல்லப் போகிறேன்'' என்றார்.

இதையடுத்து அந்த வீட்டில் தோபா சுவாமிகளுக்கான ஜீவ சமாதியை சிவநாதர் அமைத்தார். முதலில் அந்த இடம் சிறு குகை போல இருந்தது.

தோபா சுவாமிகள் அதில் சில திருத்தங்கள் செய்யச் சொன்னதைத் தொடர்ந்து அந்த குகை சற்று பெரிதாக கட்டப்பட்டது. 1850—ம் ஆண்டு சாதாரண வருடம் பங்குனி மாதம் 27—ந்தேதி (புதன்கிழமை) பிரதமை திதி, ரேவதி நட்சத்திரம் தினத்தன்று தோபா சுவாமிகள் அந்த குகைக்குள் சென்று பத்மாசனத்தில் அமர்ந்து தியானத்தில் மூழ்கினார். அப்படியே ஒடுக்க நிலைப்பெற்று ஈசனோடு இரண்டற கலந்து விட்டார்.

அவர் ஜீவசமாதி மீது லிங்கம் நிறுவப்பட்டது. அவரை அறிந்த ஒவ்வொருவரும் தோபா சுவாமிகளை தெய்வமாக கருதி வழிபட்டு நினைத்த பலனை பெறுகிறார்கள்.

ஒரே ஒரு பிரகாரத்துடன் தோபா சுவாமிகளின் ஜீவசமாதி ஆலயம் அமைந்துள்ளது. பிரகாரத்தில் திருஞானசம்பந்தர் சிலையும் நிறுவப்பட்டுள்ளது.

தோபா சுவாமிகளுக்கு தொண்டு செய்த சிவநாதர் உடலும் தோபா சுவாமிகள் எதிரில் வைக்கப்பட்டது. அதன் மீது நந்தி சிலை நிறுவப்பட்டுள்ளது. ஆண்டுதோறும் இந்த ஆலயத்தில் தோபா சுவாமிகள் சமாதி அடைந்த நாளில் குருபூஜை நடத்தப்படுகிறது.





# 11. குரு சித்தானந்த சுவாமிகள்

புதுச்சேரி

11. குரு சித்தானந்த சுவாமிகள்

கடலூர் வண்டிப்பாளையத்தில் 18—ம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றி கணக்கில் அடங்கா சித்தாடல்கள் புரிந்தவர் குரு சித்தானந்த சுவாமிகள். கடலூரில் பெரிய கோவில் என்றழைக்கப்படும் பாடலீஸ்வரர் ஆலயத்துக்கு பூ கட்டி கொடுக்கும் பணியில் தங்களை அர்ப்பணித்துக் கொண்ட குடும்பத்தில் பிறந்தார். ஒருநாள் பலத்த மழை பெய்து கடலூர் வெள்ளத்தில் மிதந்தது.


ஸ்ரீ குரு சித்தானந்த சுவாமிகள்

என்றாலும் பாட லீஸ்வருக்குரிய மாலையை எடுத்துக் கொண்டு, மழைத் தண்ணீரில் நீந்தி சென்ற சித்தானந்தன் அதை கோவில் வாசலில் கட்டி விட்டு வந்தார். அன்றிரவு வெள்ளம் வடிந்து விட்டது.

மறுநாள் காலை ஆலயத்தை திறக்க சென்ற பூசாரி, வழியில் சித்தானந்தரை பார்த்து, ‘‘ஏன் நேற்று பூ கொண்டு வர வில்லை’’ என்றார். அதற்கு சித்தானந்தர், ‘‘நேற்று நான் அந்த மாலையை வாசலில் கட்டி விட்டு வந்தேன். ஈசனுக்கு தேவை என்றால் அதை எடுத்து அவரே அணிந்திருப்பார்’’ என்றார்.

சித்தானந்தர் ஏதோ விளையாட்டுக்கு சொல்கிறார் என்று நினைத்தபடி பூசாரி சென்று விட்டார். கோவிலை அடைந்த போது அவர் கண்ணில் எந்த பூவும் தென்படவில்லை.

ஆனால் கருவறையை திறந்தபோது பூசாரி அதிர்ச்சிக்குள்ளானார். சித்தானந்தர் கொடுத்த மாலை பாடலீஸ்வரர் மீது அணிவிக்கப்பட்டிருந்தது. இந்த சம்பவம் மூலம் சித்தானந்தர் அட்டமா சித்திகளைப் பெற்றவர் என்பதை கடலூர் மக்கள் தெரிந்து கொண்டனர். அவரைத் தேடி நிறைய பேர் வந்தனர்.

சித்தானந்தர் கொடுக்கும் விபூதியை பூசினாலே நோய்கள் தீர்ந்தன. செல்வம் பெருகியது. குழந்தை பாக்கியம் கிடைத்தது.

இதன் காரணமாக சித்தானந்தரின் புகழ் கடலூரையும் கடந்து பரவியது. புதுச்சேரியைச் சேர்ந்த முத்துக்குமாரசாமி பிள்ளை என்பவர் கடலூர் சென்று சித்தானந்தரை சந்தித்து பேசினார். அவர் விரும்பி அழைத்ததின் பேரில் சித்தானந்தர் புதுச்சேரிக்கு வந்தார். முத்துக்குமாரசாமி பிள்ளையின் வீட்டில் தங்கியிருந்து ஆன்ம ஞான மேம்பாட்டை செய்து வந்தார்.

முத்தியால் பேட்டையைச் சேர்ந்த முத்தையா முதலியாரும், சொக்கலிங்க முதலியாரும் சித்தானந்த சாமிகளின் தீவிர பக்தர்களானார்கள். சித்தானந்தரைப் பூஜிப்பது சிவனையே பூஜிப்பது போல உள்ளது என்று கூறினார்கள்.

இதனால் புதுச்சேரியைச் சேர்ந்த பலரும் போட்டி போட்டு சித்தானந்த சுவாமிகளை தங்கள் வீட்டுக்கு அழைத்தனர். சித்தானந்த சுவாமிகளும் யார் அழைத்தாலும் ஏற்றுக் கொள்வார்.

பகல் முழுக்க அவர் புதுச்சேரி வீதிகளில் சுற்றித் திரிவார். ஆனால் எங்கு சென்றாலும் இரவில் தூங்குவதற்கு முத்துக் குமாரசாமி பிள்ளை வீட்டுக்கு வந்து விடுவார்.

புதுச்சேரி வீதிகளில் செல்லும்போது, குழந்தைகளைப் பார்த்து விட்டால் சித்தானந்த சுவாமிகளின் உள்ளம் குதூகலமாகி விடும்.

அவர்களோடு சென்று விளையாடுவார். அப்போது அவர் சிறு குழந்தை போலவே மாறி விடுவார்.

தன்னுடன் விளையாடும் சிறுவர் – சிறுமிகளை மகிழ்விக்க அவர் நினைத்துப் பார்க்க முடியாத சித்தாடல்களையெல்லாம் அரங்கேற்றினார். மணலை அள்ளி சிறுவர்கள் கையில் கொடுப்பார். அது மிக்சராகவும் இனிப்பு வகைகளாகவும் மாறி இருக்கும்.

ஒரு தடவை சிறுமி ஒருத்தி விளையாடுவதற்காக சிறு பெட்டி நிறைய கூழாங்கற்களை சேகரித்து வைத்திருந்தாள்.

அந்த கூழாங்கற்களை எடுத்து ஒரு துணியைப் போட்டு மூடி சித்தானந்தர் திருப்பிக் கொடுத்தார்.

அந்த துணியை விலக்கிப் பார்த்த சிறுமிகள் ஆச்சரியத்தில் நம்ப முடியாமல் திகைத்தனர். அந்த பெட்டியில் இருந்த கூழாங்கற்கள் அனைத்தும் உயர்ரக சாக்லேட்டுகளாக மாறி இருந்தன.


கோபுரம்

இத்தகைய அற்புதங்களால் சித்தானந்தரை எங்கே கண்டாலும் சிறுவர் – சிறுமிகள் சூழ்ந்து கொள்வது வழக்கமாக இருந்தது. ஒரு தடவை சிறுவர்கள், ‘‘மயிலம் முருகன் கோவில் விழாவுக்கு எங்களை அழைத்துச் செல்லுங்கள்’’ என்று நச்சரித்தனர்.

‘‘சரி.... அழைத்துப் போகிறேன்... இப்போது தூங்குங்கள்’’ என்று சித்தானந்தர் கூறினார். சிறுவர்கள் தூங்கியபோது, அவர்கள் கண்ணில் மயிலம் முருகன் கோவில் விழா காட்சிகள் திரைப்படம் போல ஓடியது. சிறிது நேரம் கழித்து விழித்தெழுந்த சிறுவர்களிடம், ‘‘என்ன மயிலம் முருகனை பாத்தீங்களா?’’ என்று சித்தானந்தர் சிரித்துக் கொண்டே கேட்க சிறுவர்களும் ஆச்சரியத் துடன் தலையாட்டி விட்டுச் சென்றனர்.

அது போல ஒரு தடவை, முத்தையா முதலியாரின் மகன் ஆனந்தன் மிகவும் கவலையுடன் சித் தானந்தரிடம் வந்து, ‘‘இன்று திருவண்ணாமலையில் கார்த்திகை தீபம் ஏற்றுவார்கள். என்னால்தான் தீபத்தை காண செல்ல முடியவில்லை’’ என்றார். உடனே சித்தானந்தர் ‘‘இதற்கெல்லாம் கவலைப்படலாமா... நிச்சயம் நீ தீபத்தை நேரில் பார்த்து தரிசனம் செய்வாய்’’ என்று கூறி விட்டுச் சென்றார்.

அன்றிரவு, ஆனந்தனுக்கு கனவு கண்டது போல காட்சிகள் ஓடின. திருவண்ணாமலை மலை உச்சியில் தீபம் ஏற்றப்படுவது போன்றும், அண்ணாமலையாருக்கு அரோகரா, என்று கோஷம் போடுவது போன்றும் காட்சிகள் தெரிந்தன. அதோடு புதுச்சேரியைச் சேர்ந்த தன் தெருக்காரர்களுடன் பேசிக் கொண்டே தான் கிரிவலம் செல்வது போலவும் கனவு கண்டார். மறுநாள் காலை எழுந்து தான் கண்ட கனவு பற்றி வீடு முன்பு நின்று யோசித்துக் கொண்டிருந்தார்.

அப்போது அந்த தெருவைச் சேர்ந்த ஒருவர் வந்து, ‘‘என்ன ஆனந்தா..... திருவண்ணாமலையில் எங்களோடு தீபம் பார்க்க வந்தாய். திடீரென காணாமல் போய் விட்டாய். எப்போது வீட்டுக்கு திரும்பி வந்தாய்?’’ என்றார்.

இதைக் கேட்ட ஆனந்தனுக்கு தலை சுற்றுவது போல இருந்தது. திருவண்ணாமலைக்கு செல்லாமலே அங்கு போய் விட்டு வந்த அற்புதத்தை

தனக்குள் சித்தானந்த சித்தர் ஏற்படுத்தியதை நினைத்து ஆச்சரியப்பட்டார். எல்லாரிடமும் அதை சொல்லி மகிழ்ந்தார். இதனால் முத்தையா முதலியார் குடும்பத்தினர் சித்தானந்த சுவாமிகளை கண்கண்ட தெய்வமாக கருதினார்கள். அவருக்கு விருப்பமானதை எல்லாம் செய்து கொடுத்தனர்.

சித்தானந்த சுவாமிகளுக்கு பச்சைப்பயிறு பாயாசம், உளுந்து வடை இரண்டும் மிகவும் பிடிக்கும். அதை அடிக்கடி செய்து கொடுப்பார்கள்.

ஒரு காலகட்டத்தில் சித்தானந்தர் தினமும் சித்தாடல் செய்து புதுச்சேரி மக்களை ஆச்சரியப்படுத்தினார். அவர் எந்த கடைக்குள் சென்று வருகிறாரோ... அந்த கடை செழிப்பானதாக மாறி விடும். இதை உணர்ந்திருந்த வியாபாரிகள், சித்தானந்தர் தங்கள் கடைக்கு வர மாட்டாரா என்று தினமும் காலை ஆவலோடு காத்திருப்பார்கள். சில சமயம் அவர் புதுச்சேரியின் மற்ற பகுதிகளில் என்ன நடக்கிறது என்பதை இருந்த இடத்தில் இருந்தபடியே சொல்லி பிரமிப்பை ஏற்படுத்தினார்.


ஜீவ சமாதியில் உள்ள பாரதி சிலை

புதுச்சேரி மக்கள் அவரை போற்றி வழிபட்ட நிலையில் ஒரு குடிகாரன் அவரிடம், “நீர் என்ன பெரிய சித்தரா?.... சாராயம் குடித்து இருக்கிறீரா? மது குடித்தால் ஆன்மிக உலகம் அற்புதமாக தெரியும். ஒரு கிளாஸ் தருகிறேன். குடிக்கிறீரா?” என்றான்.

அவனுக்கு பாடம் புகட்ட நினைத்த சித்தானந்தர், ‘‘சரி.. தா... குடிக்கிறேன்’’ என்று கூறி சாராயத்தை வாங்கிக் குடித்தார். அவர் சாராயத்தை குடிக்க.... குடிக்க, அந்த குடிகாரனுக்கு போதை ஏறத் தொடங்கியது.

அவன் மிரண்டு போனான். சாராயம் குடிக்காமலே தனக்குள் எப்படி போதை ஏறுகிறது என்று தவித்தான். சிறிது நேரத்தில் தலை சுற்றி மயங்கி விழுந்து விட்டான்.

சித்தானந்த சுவாமிகளோ... சாராயம் குடித்த சுவடு ஒரு துளி கூட இல்லாமல் புறப்பட்டு சென்று விட்டார். இந்த தகவல் புதுச்சேரி முழுக்க பரவியது.

குடிகாரனின் உறவினர்கள் ஓடி வந்து சித்தானந்தர் காலில் விழுந்து மன்னிப்பு கேட்டனர். இதனால் மனம் இரங்கிய சித்தானந்தர், ‘‘டேய் எழுந்திரு’’ என்றார். அடுத்த வினாடி மயங்கிக் கிடந்த குடிகாரன் எழுந்தான்.

ஒரு தடவை அவரும் முத்துக்குமாரசாமி பிள்ளையும் கருவடிக்குப்பம் வழியாக நடந்து சென்று கொண் டிருந்தனர். அப் போது முத்துக் குமாரசாமி பிள் ளை ஒரு தோட்டத்தை காண்பித்து அது தனக்குரியது என்றார்.


கருவறை

உடனே சித்தானந்தர் அந்தத் தோட்டத்துக்குள் சென்று பார்த்தார். ஓரிடத்தை மட்டும் உற்றுப் பார்த்து விட்டு, ‘‘இது இங்கேதான் இருக்கப் போகிறது. இது இங்கே தான் இருக்கப் போகிறது’’ என்றார்.

1837—ம் ஆண்டு வைகாசி மாதம் 28—ந்தேதி அவர் ஜீவசமாதி ஆகப் போவதாக கூறினார். தன்னை எப்படி சமாதிப்படுத்த வேண்டும் என்றும் அவர் கூறினார். அவர் குறிப்பிட்ட தினத்தன்று பத்மாசனத்தில் அமர்ந்தார். கண்களை மூடி சமாதி நிலையை அடைந்தார். அவர் திருமேனிக்கு அபிஷேக, ஆராதனைகள் செய்யப்பட்டன. பிறகு அவர் உடலை சமாதிக்கு எடுத்துச் சென்றனர்.

அப்போது திடீரென சித்தானந்த சுவாமிகள் உயிர்த்தெழுந்தார். தனக்கு அபிஷேக, ஆராதனைகள் உரிய விதிப்படி செய்யப்படவில்லை என்று அதிருப்தியை வெளியிட்டார்.

சித்தருக்குரிய ஆராதனைகளை எப்படி செய்ய வேண்டும் என்று மீண்டும் சொல்லிக் கொடுத்தார். பிறகு மீண்டும் சமாதி நிலைக்கு சென்றார். அவர் சொன்ன இடத்தில் ஜீவசமாதி ஆலயம் லிங்கத்துடன் அமைக்கப்பட்டது. அங்கு சித்தானந்த சுவாமிகள் மடமும் கட்டப்பட்டுள்ளது.

தென் பகுதியில் தெப்பக்குளம் ஒன்று வெட்டப்பட்டது. இந்த ஜீவசமாதிஆலயம் மிகப்பெரிய ஆலயமாக திகழ்கிறது. நுழைவுப் பகுதியில் புதுச்சேரியில் உள்ள சித்தப்புருஷர்களின் சிலைகள் அழகுற அமைக்கப்பட்டுள்ளன. பாரதியார் சிலையும் உள்ளது.

சுந்தர விநாயகர், தட்சிணாமூர்த்திக்கு தனி சன்னதிகள் உள்ளன. சித்தானந்த சுவாமிகள் உணவு உண்பதற்கு பயன்படுத்திய கருங்கல் அங்கு வைக்கப்பட்டுள்ளது. கர்ப்பிணி பெண்கள் அதில் அமர்ந்து சென்றால் சுகப்பிரசவம் நடக்கும் என்று நம்புகிறார்கள்.

ஆன்மாவை மேம்படுத்த விரும்புபவர்கள் இங்கு வந்து ஆழ்நிலை தியானம் செய்து பயன்பெறுகிறார்கள். சாதாரண மக்களுக்கு, உண்மையான வேண்டுதல்கள் தடையின்றி நிறைவேறுகிறது.

அமாவாசை தோறும் இங்குள்ள அரச மரத்தில் இருந்து ஒரு நாகம் இறங்கி வந்து மரத்தை மூன்று முறை சுற்றி விட்டு பிறகு மரத்தில் ஏறி மறைந்து விடும்

அதிசயம் நடப்பதாக சொல்கிறார்கள்.

புதுச்சேரியில் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் சிலை அமைந்துள்ள கருவடிக்குப்பத்தில் இந்த ஜீவசமாதி உள்ளது.





# 12. ஸ்ரீ சுப்பையா சுவாமிகள்

திருக்கழுக்குன்றம்

## 12. ஸ்ரீ சுப்பையா சுவாமிகள்

ஆற்றல்மிகு சித்தாடல்களை அடிக்கடி நிகழ்த்தி காண்பித்து திருக்கழுக்குன்றம் பகுதி மக்களை திக்குமுக்காடச் செய்தவர் சுப்பையா சுவாமி. மக்களுக்கு சேவை செய்யும் பொருட்டு, அவர் நடத்திய சித்தாடல்கள் இன்றும் அப்பகுதியில் புகழ்ந்து பேசப்படுகிறது.

கடந்த நூற்றாண்டில் இந்த மகான் திருக்கழுக்குன்றம் மலை உச்சியில் உள்ள குகையில் வசித்து வந்தார். அந்தக் கால கட்டத்தில் திருக்கழுக்குன்றம் மலை மீது தினமும் இரண்டு கழுகுகளுக்கு உணவு கொடுப்பார்கள்.



ஸ்ரீ சுப்பையா சுவாமிகள்

கழுகுகள் உணவருந்துவதை பார்க்க தினமும் மதியம் திருக்கழுக்குன்றத்துக்கு நூற்றுக் கணக்கான சுற்றுலாப் பயணிகள் வருவார்கள். அவர்கள் சுப்பையா சுவாமிகளிடமும் ஆசி பெற்றுச் செல்லத் தவறுவதில்லை.

அந்த சமயத்தில் சிலரிடம், அவர்கள் கேட்காமலே, அவர்களது பிரச்சினைகளை சொல்வார். கேட்பவர்களுக்கு அதிர்ச்சியாகவும் ஆச்சரியமாகவும் இருக்கும். இவருக்கு எப்படி இது தெரியும் என்று நினைப்பார்கள். அடுத்த வினாடி அவர்களது பிரச்சினைக்கு தீர்வும் அளித்து

சுப்பையா சுவாமி அனுப்பி வைப்பார். என்ன முடிவு எடுப்பது என்பது புரியாமல், மனதுக்குள் குமைந்து கொண்டிருந்தவர்களுக்கு, சுப்பையா சித்தரின் வாக்கு வசந்தத்தை ஏற்படுத்துவதாக அமைந்தது.

இப்படி சுப்பையா சுவாமிகள் தாமாக முன் வந்து ஆயிரக்கணக்கானவர்களுக்கு அருளாசி வழங்கி, அவர்களது வாழ்வில் உள்ள பல்வேறு பிரச்சினைகளை தீர்த்து வைத்து மிகப்பெரிய மறுமலர்ச்சியை ஏற்படுத்தி உள்ளார். அந்தக் காலகட்டத்தில் திருக்கழுக்குன்றம் மலை மீது நடந்து செல்வதற்கு சரியான படிக்கட்டுகளுடன் பாதை வசதி இல்லை.

அந்த குறையை நிவர்த்தி செய்ய திருக்கழுக்குன்றம் மலையில் படிக்கட்டுகள் அமைக்கும் பணி தொடங்கியது.

சுமார் 200 படிக்கட்டுகள் கட்டி முடிக்கப்பட்ட நிலையில் ஒரு இடத்தில் மட்டும் மிகப்பெரிய பாறை குறுக்கே காணப்பட்டது. இதனால் மலைப் பாதையை தொடர்ந்து அமைப்பதில் இடையூறு ஏற்பட்டது.

அந்த பாறையை வெடி வைத்து தகர்த்தால் அது சிதறும். ஏற்கனவே கட்டப்பட்டுள்ள படிக்கட்டுகள் மீது உருண்டு விழுந்து சேதத்தை ஏற்படுத்தக் கூடும். எனவே அந்த பாறையை எப்படி அகற்றுவது என்பது புரியாமல் கோவில் தேவஸ்தான அதிகாரிகள் பல கோணங்களில் ஆலோசித்தும் தீர்வு காணாமல் தவித்தனர். அப்போது அதிகாரிகளுக்கு சுப்பையா சுவாமி பற்றி நினைவு வந்தது.

சித்தரிடம் போய் பிரச்சினையை சொன்னார்கள். அது கேட்டு சிரித்த சித்தர் கண்மூடி சில வினாடிகள் தியானம் செய்தார்.

பிறகு அந்த பெரிய பாறையில் எந்த இடத்தில் துளையிட வேண்டும்? எத்தனை துளைகள் போட வேண்டும்? அதில் எத்தனை அடி ஆழத்துக்கு வெடி மருந்து வைக்க வேண்டும்? என்றெல்லாம் சுப்பையா சித்தர் கூறினார். அது மட்டுமின்றி, அந்த பெரிய பாறை உடைக்கப்படும்போது, அது ஏற்கனவே கட்டப்பட்ட படிக்கட்டுகளில் 3 படிக்கட்டுகளை மட்டும் சேதப்படுத்தும் என்றும், அந்த பாறை மூலம் கிடைக்கும் கற்களை வைத்து மேலும் 60 படிக்கட்டுகள் அமைக்க முடியும் என்றும் சுப்பையா சுவாமிகள் விளக்கமாக தெரிவித்தார்.

அவர் சொன்னபடி பாறையைத் தகர்த்தனர். யாருக்கும், எந்த சேதமும் ஏற்படவில்லை. சித்தர் சொன்னபடி மிகச்சரியாக 60 படிக்கட்டுகள் கட்ட கற்கள் கிடைத்தன. இந்த சம்பவத்துக்குப் பிறகு சுப்பையா சித்தரின் ஒவ்வொரு வார்த்தையும் சத்திய வார்த்தையாக திருக்கழுக்குன்றம் பகுதி மக்களுக்கு தெரிந்தது. அவரை நம்பிச் சென்று அவரிடம் தங்களை ஒப்படைத்தனர்.

அவரைப் பார்த்து தரிசனம் செய்வதே சக்தி வாய்ந்ததாக கருதப்பட்டது. இத்தகைய சிறப்புடைய சுப்பையா சுவாமிகள் இங்கிலாந்துக்கு சென்று பார்—அட்—லா படிக்க ஆசைப்பட்டவர் என்பதும் ஆனால் விதி அவரை சித்த புருஷராக மாற்றி விட்டது என்பதும் பிறகுதான் தெரிய வந்தது.

தூத்துக்குடி மாவட்டம் ஆழ்வார்த் திருநகரி அருகில் உள்ள கடையனோடை என்ற ஊர் இவரது பூர்வீகமாகும். வில்லிமுத்து கோனார் — நாராயண வடிவு தம்பதிக்கு மகனாக 23—11—1908 அன்று அவர் பிறந்தார்.

அவர் ஊர் அருகில் நவ திருப்பதி தலங்கள் உள்ளன. பள்ளி முடிந்ததும் அவர் அந்த ஆலயங்களுக்கு சென்று வழிபடுவது வழக்கம். இதனால் 7 வயதுக்குள் அவரிடம் இருந்து அமானுஷ்ய சக்திகள் வெளிப்பட தொடங்கின.



ஆலய தோற்றம்.

அவரை 6—ம் வகுப்பு படிப்புக்காக குலசேகரன்பட்டினத்தில் உள்ள பள்ளியில் சேர்த்தனர். பள்ளி விடுமுறை நாட்களில் அருகில் உள்ள திருச்செந்தூர் முருகன் தலத்துக்கு சென்று வள்ளி குகையிலும், ஆலயத் திருப்பணி செய்த மூவர் சமாதியிலும் அமர்ந்து தியானம் செய்யத் தொடங்கினார். இதனால்

மூவர் சமாதியில் இருந்த காசி சுவாமிகள், மவுன சுவாமிகள், ஆறுமுக சுவாமிகள் ஆகிய மூவரின் சித்துக்கலைகள் சுப்பையாவுக்குள் ஊடுருவின. சூட்சுமத்தில் ஊடுருவிய அந்த அருள், சுப்பையாவை தெய்வ தன்மைக்கு மாற்றின.

இதற்கிடையே திருச்செந்தூர் மூவர் சமாதிக்கு வந்த சாதுக்கள் சிலர், சுப்பையாவுக்கு சக்தி மிகுந்த மூலிகைகள் பற்றியும், அதன் மூலம் மக்கள் பிணிகளை எப்படி தீர்ப்பது என்பது பற்றியும் சொல்லி கொடுத்தனர். இதனால் 14 வயதுக்குள் சித்த மருத்துவம் அவரது வசமானது. இதற்கிடையே பள்ளி படிப்பை முடித்த அவர் மதுரை அமெரிக்கன் கல்லூரியில் பி.ஏ. ஆனர்ஸ் படித்தார். அப்போது கல்யாணம் ராமசாமி என்பவர் துணையோடு அஷ்டமா சித்துக்கலையை தெரிந்து கொண்டார்.

அதன் தொடர்ச்சியாக மூலிகைகள் மூலம் தன் உடலை சீர்படுத்தினார். அடுத்து காற்றை மட்டுமே சுவாசித்து வாழும் “வேதித்தல்” எனும் அற்புத கலையும் அவர் வசமானது. எனவே உணவு, உறக்கம் பற்றி கவலைப்படாத நிலைக்கு அவர் உயர்ந்தார்.

மனம், சொல், செயல் மூன்றையும் கட்டுப்படுத்தினார். திருப்பதி, வடலூர், விருத்தாசலம் உள்பட பல கோவில்களுக்கு சென்று தியானத்தில் மூழ்கினார்.

இங்கிலாந்துக்கு சென்று படிக்க ஆசைப்பட்ட தங்கள் மகன் சன்னியாசியாகி விடுவானோ என்று பயந்த அவரது பெற்றோர் சுப்பையாவுக்கு திருமணம் செய்து வைக்க முடிவு செய்தனர். ஆனால் அவர் அதை ஏற்க மறுத்து வடமாநில யாத்திரைகள் சென்று முழுமையான சித்த புருஷரானார்.

40 வயது வரை பல புண்ணியத் தலங்களுக்கு சென்று வந்த அவர் பிறகு வடலூர் வந்து வள்ளலார் அருள்வழியைப் பின்பற்றத் தொடங்கினார்.

ஒருநாள் வள்ளல்பெருமான் அவருக்கு காட்சி கொடுத்து “திருக்கழுக்குன்றம் செல்” என்று உத்தரவிட்டார். அதன்படி 1951—ம் ஆண்டு வடலூரில் இருந்து நடந்தே திருக்கழுக்குன்றம் வந்து சேர்ந்தார். நான்கு வேதங்களாக உள்ள 4 மலைகளையும் பார்த்த சுப்பையா இனி இதுதான் தனது இருப்பிடம் என்று முடிவு செய்தார். முதலில் அவர் திருக்கழுக்குன்றம் மலையடிவாரத்தில்

தங்கினார். வேத கிரீஸ்வரரை வழிபட வருபவர்களுக்கு ஆன்மீகத்தை போதித்தார்.

ஒருநாள் திருக்கழுக்குன்றம் மலை மீதேறி விட்டு கீழே இறங்கிக் கொண்டிருந்தபோது வேதகிரீஸ்வரர் தன்னை தடுப்பது போல உணர்ந்தார். அன்று முதல் கழுகுகள் பாறைக்கு நேர் மேற்கில் இயற்கையாக பிரிந்திருக்கும் இரண்டு மலைக் குன்றுகளுக்கிடையே தங்கி தவத்தில் ஆழ்ந்தார்.

சுமார் 9 ஆண்டுகள் அந்து குகைக்குள் இருந்தார். இதனால் அவருக்கு "திருக்கழுக்குன்றம் சித்தர்" என்ற பெயர் ஏற்பட்டது. அவரை நன்கு அறிந்தவர்கள் சுப்பையா சித்தர் என்றழைத்தனர்.

முதலில் அனைவரிடமும் பேசி ஆசி வழங்கி வந்த சித்தர், நாளடைவில் மவுனநிலைக்கு மாறினார். தேவைப்படும்போது சிலேட்டில் எழுதி காட்டினார்.

சில ஆண்டுகளில் அந்த பழக்கமும் நின்று போனது. கை ஜாடை மூலம் சைகையில் பேசி விளக்கம் அளித்தார்.

அவரிடம் ஒருவர், "இரவில் இங்கு தனிமையில் எப்படி இருப்பீர்கள்?" என்று கேட்டார். அதற்கு சுப்பையா சித்தர், "இல்லாமல் இருப்பேன்" என்றார்.

அவரது பார்வை பட்டாலே பிரச்சினைகள் விலகி ஓடிவிடும் என்று மக்கள் நம்பினார்கள். சிலரைப் பார்த்ததும் "சரியாகிடும் போ" என்பார். இப்படி அவர் சொல்லி விட்டால் அந்த வினாடியே பிரச்சினை தீர்ந்து விட்டதாக மக்கள் கருதுவார்கள். உண்மையிலே அந்த பிரச்சினைகள் தீர்ந்து விடும்.

சுப்பையா சித்தரை நேரில் சந்தித்த ஒவ்வொருவரும் புத்துணர்ச்சி பெற்றனர். நிறைய வியாபாரிகள் அவரால் வாழ்வு பெற்றனர்.

51 வயதை பூர்த்தி செய்திருந்த அவர் திடீரென ஒருநாள், ஆன்மாவை பிரித்து இறைவனுடன் ஐக்கியமாகப் போவதாகக் கூறினார். சொன்னபடி 3—1—1960 அன்று அவர் உயிரை பிரித்து பரிபூரணம் ஆனார்.

அவரது உடலை மலைக் குகை யில் இருந்து கீழே கொண்டு வந்து செங்கல்பட்டு செல்லும் சாலையில் வேதகிரீஸ்வரர் தேவஸ்தானத்துக்கு சொந்தமான இடத்தில் ஜீவசமாதி வைத்தனர். தான் தவம் இருந்த மலைக்குகையை பார்க்கும் வகையில் கிழக்கு திசை நோக்கிய வண்ணம் அவர் அமர்த்தப்பட்டார்.

40 நாட்கள் பூஜை செய்த பிறகு ஜீவ சமாதியை திறந்து பார்த்தனர். அவர் உடல் அப்படியே இருந்தது. “உச்சிப்பார்த்தால்” என்ற முறைப்படி அவரது தலைமுடிகள் மேல் நோக்கி நிமிர்ந்திருப்பதை கண்டனர்.

10 மாதங்கள் சென்ற பிறகு சமாதியை பிரித்து ஆலயமாக கட்டும் பணி நடந்தது. அப்போதும் அவர் உடல் அப்படியே இருந்தது. சிலிர்த்துப் போன பக்தர்கள் கருவறை மற்றும் ஒரு பிரகாரத்துடன் சுப்பையா சுவாமிகளின் ஆலயத்தை அமைத்தனர். கருவறைக்குள் சுப்பையா சுவாமிகளின் கருங்கல் திருமேனி பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. 2017 ஆம் ஆண்டு முதல் இந்த ஜீவ சமாதியை சீரமைக்கும் பணி நடந்து வருகிறது.

மாதம் தோறும் திருக்கழுக்குன்றத்துக்கு கிரிவலம் செய்ய செல்பவர்கள் சித்தரின் மகிமையை மனப்பூர்வமாக உணர்கிறார்கள். அவர்களில் சிலருக்கு ஸ்ரீசுப்பையா சித்தர் காட்சி கொடுத்ததும் உண்டு. அவர் ஜீவசமாதி ஆலயத்தில் நம்பிக்கையோடு நம் பாதம் பட்டாலே நாம் புண்ணியம் செய்தவர்களாகி விடுவோம்.





# 13.ஸ்ரீ ஜட்ஜ் சுவாமிகள்

புதுக்கோட்டை

## 13. ஸ்ரீ ஜட்ஜ் சுவாமிகள்

தமிழ்நாட்டில் ஆயிரக்கணக்கான சித்தர்களின் ஜீவ சமாதிகள் உள்ளன. ஒவ்வொரு ஜீவ சமாதியும், ஒவ்வொரு வகையில் தனித்துவம் கொண்டதாக

திகழ்கின்றன.

புதுக்கோட்டையில் உள்ள ‘ஜட்ஜ்’ சுவாமிகள் அதிஷ்டானம், முற்றிலும் மாறுபட்ட அம்சங்களுடன் செயல்பட்டு வருகிறது. தமிழக சுற்றுலாத் துறை நடத்திய 108 அம்மன்கள் தரிசனம் சுற்றுப் பயணத்தை மேற்கொண்ட போது, ‘ஜட்ஜ்’ சுவாமிகள் அதிஷ்டானத்தில் அமர்ந்து தியானம் செய்யும் பெரும் பேறு கிடைத்தது.



ஸ்ரீ ஜட்ஜ் ஸ்வாமிகள்

அமைதி... அமைதி... அப்படி யொரு அமைதியை இந்த அதிஷ்டானத்தில் அனுபவிக்க முடிந்தது. மற்ற ஜீவசமாதிகளில் இல்லாத அரிய சூழலால் ‘ஜட்ஜ்’ சுவாமிகளின் அருளை எளிதில் பெற முடிகிறது.

இவர் ஆந்திராவில் கோதாவரி ஆற்றங்கரையில் உள்ள தவளேஸ்வரம் எனும் ஊரில் அவதரித்தார். ஒரு காலத்தில் ஆற்றின் குறுக்கே அணைக் கட்டப்பட்டதால், தவளேஸ்வரமே தண்ணீரில் மூழ்கியது.



அங்கிருந்தவர்கள் பல ஊர்களுக்கு இடம் பெயர்ந்தனர். அவ்வாறு விசாகப்பட்டினத்துக்கு இடம் பெயர்ந்த வேதமூர்த்தி சாஸ்திரிகளின் மகனாக 'ஜட்ஜ்' சுவாமிகள் பிறந்தார். இவரது உண்மையான பெயர் தெரியவில்லை.

ராமபிரானின் தீவிர பக்தரான வேத மூர்த்தி சாஸ்திரிகள், தன் மகனின் ஜாதகத்தைப் பார்த்த உடனேயே இது உலகுக்கு ஒளியும், வழியும் காட்ட வந்த தெய்வக் குழந்தை என்பதை அறிந்தார்.

எனவே, வேதங்கள் அனைத்தையும் மகனுக்கு கற்றுக் கொடுத்தார். உரிய பருவத்தில் உபநயனம் பெற்ற மகனை, வேதங்களில் ஆழ்ந்த அனுபவம் பெற வைக்க நினைத்தார்.

ஆனால், மகனுக்கு சட்டம் படிக்க வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. அதன் மூலம் தனது ஆங்கில அறிவை மேம்படுத்திக் கொள்ள முடியும் என்று நினைத்தார். இறுதியில் மகனின் ஆசையை நிறைவேற்ற வேத மூர்த்தி சாஸ்திரிகள் விசாகப் பட்டினத்தில் இருந்து சென்னைக்கு இடம் மாறினார். திரு வல்லிக்கேணியில் குடி யேறினார்.

சென்னையில் ‘ஜட்ஜ்’ சுவாமிகள் சட்டமும் படித்தார். வேத நெறிகளையும் கற்றார். சட்டப் படிப்பு முடித்ததும் தன்னை வழக்கறி ஞராகப் பதிவு செய்துகொண்டு தொழிலைத் தொடங் கினார். அவருக்கு பெற்றோர் திருமணம் செய்து வைத்தனர். அவருக்கு 2 மகன்கள் பிறந்தனர்.

மிக ஆழ்ந்த வேதப் படிப்பு காரணமாக ‘ஜட்ஜ்’ சுவாமிகள் பணத்துக்கு ஆசைப்படாமல் நியாயமாகவும், நேர்மையாகவும் வக்கீல் தொழிலை செய்து வந்தார். சுமார் 20 ஆண்டுகள் சென்னையில் ஏழை — எளியவர்கள் நலனுக்காக கோர்ட்டுகளில் வாதாடிய இவரின் புகழ் இந்தியா முழுக்க பரவியது.

இந்த நிலையில் திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் நீதி பரிபாலனம் செய்ய மிகவும் தகுதியான ஒருவர் தேவை என்று மன்னர் விரும்பினார். நாடெங்கிலும் சட்டத்தில் புகழ் பெற்றவர்கள் யார்— யார் உள்ளனர் என்று ஆலோசனை நடத்தினார்.

அப்போது, சென்னையில் வழக்கறிஞர் தொழில் செய்து வந்த ‘ஜட்ஜ்’ சுவாமிகள் பற்றி அவருக்கு தெரியவந்தது. திருவனந்தபுரம் அனந்தபத்ம நாப சுவாமி கோவில் பிரசாதத்துடன் ஒரு பிரதிநியை சென்னைக்கு அனுப்பி நேரில் பேச வைத்தார். திருவிதாங்கூர் மன்னரின் அழைப்பை ‘ஜட்ஜ்’ சுவாமிகள் உடனடியாக ஏற்றுக் கொண்டார்.

சென்னையில் இருந்து குடும்பத்தோடு திருவனந்தபுரத்துக்கு இடம் பெயர்ந்தார். அவருக்கு மன்னர் எல்லா உபசரிப்புகளும் செய்தார்.

இதனால் மகிழ்ச்சி அடைந்த சுவாமிகள், தலைமை நீதிபதி பொறுப்பை சிறப்புடன் மேற்கொண்டார். அவர் அளித்த ஒவ்வொரு தீர்ப்பும் மிகுந்த தர்ம— நியாயங்களை கொண்டதாக இருந்தன. இதனால் மன்னர் முதல் கடைநிலை மக்கள் வரை அனைவரும் அவரைப் போற்றினார்கள். இந்த நிலையில்தான் இறைவன் அவரை ஆட்கொண்ட அதிசய நிகழ்வு நடந்தது.

அவர் முன்பு ஒரு கொலை வழக்கு விசாரணைக்கு வந்தது. திருவனந்தபுரத்தில் குடியேறிய 6 ஆண்டுகளில் அவருக்கு மிகவும் சவால் விடும் வகையில் அந்த வழக்கு அமைந்தது. ‘கொலையாளி’ என்று குற்றம் சாட்டப்பட்டவரைப் பார்த்ததும், ‘ஜட்ஜ்’ சுவாமிகளின் உள் மனதில் புயல்

வீசியது. அவன் குற்றவாளி அல்ல... நிரபராதி என்று உறுதியாக நம்பினார். அதுதான் உண்மையும் கூட!

ஆனால், சாட்சியங்கள் அனைத்தும் அவனை கொலைகாரன் என்றன. வாதங்களின் முடிவும் அப்படியே அமைந்தன. அந்த வகையில் பார்த்தால், குற்றவாளிக்கூண்டில் நிறுத்தப்பட்டிருப் பவனுக்கு சட்டப்படி மரண தண்டனைதான் விதிக்கப்பட வேண்டும். அந்தத் தண்டனையை வழங்க 'ஜட்ஜ்' சுவாமிகளின் மனம் இடம் கொடுக்கவில்லை.

'ஓர் அப்பாவியின் உயிரைப் பறிப்பதற்கு நான் யார்? அநியாயமாக தண்டித்தால்... அந்த ஆன்மாவுக்கு செய்யும் மிகப் பெரிய தீங்கு அல்லவா இது?' என்று நினைத்தார். அவருக்குள் உண்டான நெருடல் காரணமாக தீர்ப்பு வழங்குவது தள்ளிக்கொண்டே போனது. 'சட்டத்தின்படி நடப்பதா அல்லது தர்மத்தின்படி நடப்பதா?' என்று ஒரு நாள் மிகவும் ஆழ்ந்து சிந்தித்தார். அதில், தர்மமே வென்றது.

அந்தத் தர்ம சிந்தனையானது 'ஜட்ஜ்' சுவாமிக்குள் ஆத்ம ஞானத்தின் தேடலை அதிகப்படுத்தியது. 'நான் யார்?' என்ற கேள்வியும், அதைத் தொடர்ந்து உருவான உபகேள்விகளும் அவருடைய மனதை உலுக்கின.

மறுநிமிடம்... வீட்டைவிட்டு வெளியேறினார். மனைவி, குடும்பத்தைத் துறந்தார். கால் போன போக்கில் நடந்தார். அடுத்த வேளை உணவுக்கு என்ன செய்வது? செலவுக்கு ஏது வழி? மாற்று உடைக்கு எங்கே போவது? எதைப் பற்றியும் சிந்திக்கவில்லை. ஊர் ஊராக நடந்தார். திருவனந்தபுரத்தில் இருந்து நாகர்கோவில், திருச்செந்தூர், திருநெல்வேலி, மதுரை, திருச்சி, தஞ்சாவூர், திருவாரூர், சிதம்பரம், திருவண்ணாமலை, காஞ்சிபுரம் என நடந்துகொண்டே இருந்தார்.

உணவு கிடைத்தால் சாப்பிடுவார். இல்லையெனில் உபவாசம் இருந்துவிடுவார். கோவில்களிலும், ஜீவ சமாதிகளிலும் தியானம் மேற்கொண்டார். தெருவோரத்தில் எங்காவது படுத்துத் தூங்குவார்.

அப்போதுதான் அவருக்குள், ஒரு சிந்தனை எழுந்தது. தன்னை நெறிப்படுத்த ஒரு குரு வேண்டும் என்ற தேடல் தொடங்கியது.

குருவைத் தேடி பல ஊர்களுக்கும் அலைந்தார். காஞ்சிபுரத்தில் அதற்கு விடை கிடைத்தது. அங்குள்ள உபநிஷத மடத்தின் தலைவர், ‘‘நீ எதிர்பார்ப்பது விரைவில் கிடைக்கும். இன்னும் வடக்கே போ...’’ என்றார்.

மகிழ்ச்சி அடைந்த ‘ஜட்ஜ்’ சுவாமிகள், காஞ்சிபுரத்தில் இருந்து காளஹஸ்திக்கு சென்றார். கோவில் அருகே உள்ள தவச்சாலை முன்னே போய் அமர்ந்தார். ஒரு வாரம் பட்டினியாகக் கிடந்தார். அரசவையில் தலைமை நீதிபதியாக பகட்டாக வாழ்ந்தவர், இங்கே கிழிந்த ஆடையுடன் காணப்பட்டார். உள்ளம் மட்டும் ஆத்மஞானம் தரும் குருவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது.

திடீரென ஒருநாள் அந்தத் தவச்சாலை தலைவர் அவதூத மகராஜ், வெளியில் வந்தார். ‘ஜட்ஜ்’ சுவாமிகளை கட்டிப் பிடித்து உச்சி முகர்ந்தார். தீட்சை அளித்து, முழுத் துறவி ஆக்கினார்.

‘ஜட்ஜ்’ சுவாமிகளுக்கு ‘ஸ்ரீசத்குரு சதாசிவ ப்ருமேந்திர சரஸ்வத்யவ சுவாமிகள்’ என்று பெயர் சூட்டினார். அன்றே... கிழிந்த உடைகளைக் கழற்றி எறிந்துவிட்டு அவதூதராக மாறினார். அதாவது, முழு நிர்வாண நிலைக்கு வந்துவிட்டார்.

காளஹஸ்தியில் இருந்து அதே கோலத்தில் ரிஷிகேசத்துக்கு பயணமானார். மலைக் குகைகளில் தவம் இருந்தார். அது அவரை சித்தப் புருஷராக உயர் நிலைக்கு உயர்த்தியது.

பல ஆண்டுகள் கழித்து வயதான நிலையில் மீண்டும் அவதூதராக தமிழ்நாட்டுக்கு வந்தார். நிறைய இடங்களில் கல் வீசி தாக்கினார்கள். எல்லாவற்றையும் புன்சிரிப்புடன் ஏற்றுக் கொண்டார்.


ஆலய தோற்றம்

சில இடங்களில் மட்டும் சித்தாடல் நிகழ்த்தினார். அது அவரது சிறப்பை வெளிப்படுத்தின. மானாமதுரையில் கடும் சோதனைக்குப் பிறகு கிருஷ்ணமூர்த்தி என்ற இளைஞருக்கு தீட்சைக் கொடுத்தார். பின்னாளில் அந்தக் கிருஷ்ணமூர்த்தி, சீடர் சுவயம்பிரகாசராக மாறினார்.

அதன் பிறகும் ‘ஜட்ஜ்’ சுவாமிகள் ஒரு இடத்தில் அமரவில்லை. யாத்திரையைத் தொடர்ந்தபடி இருந்தார். 1936—ல் திருச்சி தாயுமான சுவாமி கோவிலுக்குச் சென்றபோது, தான் ஜீவ சமாதி ஆக வேண்டிய காலம் நெருங்கிவிட்டதை உணர்ந்தார்.

அங்கிருந்து நார்த்த மலைக்கு சென்று தியானத்தில் அமர்ந்தார். அந்தத் தியான நிலையிலேயே நிர்விகல்ப சமாதியில் மூழ்கினார். அவரை நன்கு அறிந்திருந்த பக்தர்கள், அதே நிலையிலேயே புதுக்கோட்டைக்கு தூக்கி வந்தனர்.

பல்லவன் குளக்கரை வட பகுதியில் ஜீவசமாதியில் வைக்கப்பட்டார். சில மாதங்களுக்கு பிறகு அங்கு வழிபாடு, பூஜை முறைகள் நின்றுபோனது. புதுக்கோட்டை மக்களும் ‘ஜட்ஜ்’ சுவாமிகளை மறந்தார்கள்.

சுமார் 16 ஆண்டுகள் கழித்து ஒரு சீடரின் முயற்சியால் ‘ஜட்ஜ்’ சுவாமிகளின் அதிஷ்டானம் மீண்டும் சிறப்புப் பெற்றது. ஸ்ரீசாந்தானந்த சுவாமிகள் காலத்தில் அது புவனேஸ்வரி ஆலயமாக உருவெடுத்தது.

புதுக்கோட்டை கீழ ஏழாம் வீதியில் அமைந்துள்ள இந்த ஆலயத்தின் நுழைவாயில் எதிரில் ‘ஜட்ஜ்’ சுவாமிகள் ஜீவசமாதி உள்ளது. வலது புறம் புவனேஸ்வரி, இடதுபுறம் அஷ்ட தசபுஜ மகாலட்சுமிகள் அருள் பாலிக்கிறார்கள். புவனேஸ்வரியைப் பார்த்துக்கொண்டே இருக்கலாம். அத்தனை அழகு.

இத்தலத்துக்குள் செல்பவர்கள் 18 சித்தர்களையும் தரிசனம் செய்யலாம். அடுத்து நால்வர், 25 தலை கொண்ட சதாசிவர், பஞ்சமுக ஆஞ்சநேயர், பஞ்சமுக கணபதி, அய்யப்பன், தட்சிணாமூர்த்தி, காசி விஸ்வநாதர், லட்சுமி நரசிம்மர் சந்நதிகளை வழிபடலாம்.

சுத்தம், அமைதி ஆகியவை இந்த அதிஷ்டானத்தின் சிறப்பாக உள்ளது. இங்கு தரப்படும் மஞ்சள் குங்குமம் ரசாயனங்களின் கலப்பு இல்லாதது. புவனேஸ்வரி எதிரில் உள்ள ஸ்ரீசக்கர மேருவும் சக்தி வாய்ந்தது. இப்படி ஒரே கூரைக்குள் பலவிதமான சக்திகளிடம் பலாபலன்களைப் பெறலாம்.

குறிப்பாக ‘ஜட்ஜ்’ சுவாமிகளை நினைத்து தியானம் செய்பவர்களுக்கு மனதில் அமைதி தேடி வருகிறது. அந்த அமைதியை பெறுவதற்காகவே தினமும் அந்த அதிஷ்டானத்துக்கு ஏராளமானோர் வந்து செல்கிறார்கள். நீங்களும் சென்று வரலாமே!





# 14. தலையாட்டி சித்தர்

பெரம்பலூர்

## 14. தலையாட்டி சித்தர்

தலையாட்டி சித்தர். பெயரே வித்தியாசமாக இருக்கிறது அல்லவா?

பெரம்பலூரைச் சேர்ந்த இந்த மகான், 1960—70களில் நிறைய பேருக்கு கண்கண்ட தெய்வமாகத் திகழ்ந்தார்.




அவர் செய்த சித்தாடல்களும், மருத்துவச் சேவைகளும் ஏராளம்... ஏராளம். அதில் 99 சதவீத நிகழ்வுகள் இந்த உலகுக்குத் தெரியாமலே போய் விட்டன.

வெளியில் தெரிந்த 1 சதவீத அற்புதங்கள் மிகவும் ஆச்சரியப்படுத்துவதாக உள்ளன. இத்தனைக்கும் தலையாட்டி சித்தர் பந்தாவாக வாழ்ந்தவர் அல்ல. மிகவும் எளிமையாக வாழ்ந்தவர்.

சுமார் நாலேமுக்கால் அடி உயரமே இருப்பார். கருப்பான நிறம். சுமார் 5 அடி நீளமுள்ள ஜடாமுடியை தலையை சுற்றி கட்டி இருப்பார்.

அதை சுற்றி துணி யைக் கட்டிக் கொள்வார்.

கொஞ்சமாக தாடி, மீசை. எப்போதும் மஞ்சள் நிறத்தில், முழங் கால் வரை நீண்ட அங்கி அணிந்திருப்பார். பச்சை நிறத்தில் வேட்டி கட்டியிருப்பார்.

இடுப்பில் ஒரு கலரில் துண்டு கட்டியிருப்பார். தோளில் மற்றொரு கலரில் துண்டு போட்டு இருப்பார். மொத்தத்தில் 5 விதமான கலர்களில் ஆடை அணிந்திருப்பார்.

இந்த தோற்றத்தில் தலையாட்டி சித்தரைப் பார்க்க மிகவும் வித்தியாசமாக இருக்கும். "இவர்.... சித்தரா....?" என்று கூட பலர் எள்ளி நகையாடி இருக்கிறார்கள்.

ஆனால் அவர் சொன்னது எல்லாம் அப்படியே நடந்தது. அவர் கையால் என்ன கொடுக்கிறாரோ... அதை வாங்கி சாப்பிட்ட வர்களுக்கு நோய்கள் குணமானது.

நீரிழிவு நோய் என்றால் இனிப்பு வகைகளை கண்ணில் காட்ட மாட்டார்கள். ஆனால் தலையாட்டி சித்தரோ, மிகக் கடுமை யான நீரிழிவு நோயுடன் வந்தவருக்கு அல்வா கொடுத்தார். ஆச்சரியப்படும் வகையில் ஒரே மாதத்தில் நீரிழிவு நோய் காணா மலே போய் விட்டது.

இந்த அற்புத அனுபவத்தைப் பெற்றவர் யார் தெரியுமா?


ஜீவ சமாதி

தமிழ் திரை உலகுக்கு வளம் சேர்க்கும் வகையில் திரைப் படங்கள் தயாரித்த ஜுபிடர் பிக்சர்ஸ் நிறுவனம் பற்றி உங்களுக்குத் தெரிந்து இருக்கலாம். அண்ணா, எம்.ஜி.ஆர்., கருணாநிதி, ஜானகி ராமச்சந்திரன் ஆகிய 4 முதல்வர்களுக்கு சம்பளம் கொடுத்த சிறப்பும் பெருமையும் இந்த பட நிறுவனத்துக்கு உண்டு. டி.எம்.சவுந்தரராஜனை பின்னணி பாடகராக உருவாக்கியதும் இந்த நிறுவனம்தான்.

இந்த நிறுவனத்தை உருவாக்கிய சோமசுந்தரம் மறைந்த பிறகு அவரது மகன் காசி, படத் தயாரிப்பில் ஈடுபட்டார். ஆனால் திரை உலகில் அவர் நிறைய சோதனைகளை சந்திக்க வேண்டியதிருந்தது.

1976—ம் ஆண்டு திடீரென அவருக்கு சர்க்கரை நோய் எனும் நீரிழிவு நோய் தாக்கியது. சுமார் 4 ஆண்டுகள் அவர் அந்த நோயுடன் கடுமையாகப் போராடினார். படத் தயாரிப்புப் பணிகளை நிறுத்தி விட்டு அவர் நீரிழிவு நோயை குணப்படுத்த பல்வேறு டாக்டர்களாக பார்த்துக் கொண்டிருந்தார்.

எந்த டாக்டர் கொடுத்த மருந்தும் அவர் நோய் தாக்கத்தை குறைக்கவில்லை. அப்போது அவரது நண்பர்கள் ராமமூர்த்தி, சாமிநாதன் இருவரும், “பெரம்பலூரில் பிரம்ம ரிஷி மலையடி வாரத்தில் தலையாட்டி சித்தர்னு ஒருத்தர் இருக்கிறார். அவரைப் பார்த்து விட்டு வரலாம்” என்றனர்.

காசி முதலில் சித்தரைப் பார்க்க விரும்பவில்லை. ஆனால் நண்பர்கள் தொடர்ந்து வற்புறுத்தியதால் பெரம்பலூருக்கு புறப்பட்டுச் சென்றார்.

அங்கு ஒரு மரத்தடியில் தன் பக்கத்தில் இருந்தவர்களிடம் குழந்தை போல கலகலவென தலையாட்டிச் சித்தர் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார். ஜுபிடர் பிக்சர்சின் காசியை பார்த்ததும் “வாங்க.... வாங்க....” என்று வரவேற்றார்.

அவரிடம், காசிக்கு மிகக் கடுமையான நீரிழிவு இருப்பதாக தெரிவிக்கப்பட்டது. “அப்படியா...?” என்று சிரித்தவர் ஒரு பொட்டலத்தை எடுத்துப் பிரித்தார்.

உள்ளே அல்வா இருந்தது. அதை எடுத்து, “ம்ம்... சாப்பிடுங்கள்” என்று கொடுத்தார். காசிக்கு கடும் அதிர்ச்சி. “சாமி எனக்கு நிறைய சுகர் இருக்கு. நான் அல்வா சாப்பிடக் கூடாது” என்றார்.

“உன் வியாதிக்கு இதுதான் மருந்து” என்று கூறிய தலையாட்டி சித்தர் அந்த அல்வாவை வற்புறுத்தி சாப்பிட வைத்தார். அந்த அல்வாவில் மூலிகைகள்

வாசம் வீசியது. பிறகு நிறைய சிறு சிறு பொட்டலங்களை எடுத்தார்.

அந்த பொட்டலங்களில் மூலிகைப் பொடி இருந்தது. அவற்றை ஒரு மாதம் சாப்பிட சொன்னார். சித்தர் சொன்னபடி 1 மாதம் அந்த பொடியை காசி சாப்பிட்டார். 1 மாதம் கழித்து பரிசோதனை செய்து பார்த்தபோது காசிக்கு நீரிழிவு நோய் இருந்த சுவடே இல்லாமல் போய் இருந்தது.

ஆச்சரியத்தின் உச்சத்துக்கே சென்று விட்ட காசி அதன் பிறகு தலையாட்டி சித்தரை முழுமையாக நம்பினார். அவருக்குத் தேவையான உதவிகளை செய்து கொடுத்தார்.

அதோடு தலையாட்டி சித்தரை சென்னைக்கு வரவழைத்து ஜுபிடர் பிக்சர்ஸ் நிறுவனத்தில் தங்கியிருந்து விட்டு போகச் சொல்வார். காசி மீது கொண்ட அன்பு காரணமாக தலையாட்டி சித்தர் மாதம் ஒரு தடவை சென்னை வருவார்.

அவர் சென்னை வந்தால், அந்த தகவல் காட்டுத் தீயாக பரவி விடும். அரசு உயர் அதிகாரிகள், போலீஸ் உயர் அதிகாரிகள், சினிமா பிரபலங்கள், தொழில் அதிபர்கள் கூட்டம், கூட்டமாக வந்து தலையாட்டி சித்தரிடம் ஆசி பெறுவார்கள். அவர் தொட்டுத் தரும் திருநீறைப் பெறுவதற் காகவே பலரும் வருவது உண்டு.

போலீஸ் உயர் அதிகாரிகள் பொன் பரமகுரு, துரை ஆகியோர் அதில் குறிப்பிடத்தகுந்தவர்கள். கிண்டி குதிரைப் பந்தய மைதானத்தில் புக்கியாக இருந்த பாலசுப்பிரமணியம் என்பவரும் சித்தர் அன்பை நிரம்பப் பெற்றிருந்தார்.

அவரிடம் ஒருநாள், “கடுமையா சண்டை போட்டு துரைக்கு பதவி வாங்கி இருக்கேன்” என்று சித்தர் கூறினார். அவர் கூறியது அப்போது யாருக்கும், எதுவும் புரியவில்லை.

மறுநாள் சென்னை நகர போலீஸ் கமிஷனராக துரை நியமனம் என்ற அறிவிப்பு வெளியான போதுதான், சித்தர் முன்தினம் கூறியது எல்லாருக்கும் நினைவுக்கு வந்துள்ளது.

சித்தர் தம்மைப் பற்றி முன்பே கூறியதை அறிந்த போது துரையும் நெகிழ்ச்சி அடைந்தாராம்.

இப்படி தலையாட்டி சித்தர் சொன்னதெல்லாம் நடந்தது. இதனால் அவரைத் தேடி வருபவர்கள் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்தது.

சித்தர் எங்கெல்லாம் சென்றரோ, அங்கெல்லாம் பக்தர்களும் சாதுக்களும் சென்றனர். அவர்களுடன் ஜுபிடர் பிக்சர்ஸ் காசியும் சென்றார். அடர்ந்த காடுகளுக்குள் கூட அவர்கள் அலைந்து திரிந்தனர்.

ஜுபிடர் பிக்சர்சின் பிற்கால படங்கள் சரியாக ஓடாததால் காசிக்கு திடீரென கடன் பிரச்சினை ஏற்பட்டது. அந்த நிறுவனத் துக்கு சொத்துக்கள் இருந்தும் விற்பனை செய்ய முடியாத சிக்கல் நீடித்தது.

ஒருநாள் பெரம்பலூரில் சித்தருடன் காசியும் தங்கியிருந்தார். திடீரென சித்தர், காசியைப் பார்த்து, ''உன் கடன் பிரச்சினை தீரும் நேரம் வந்து விட்டது. ஊருக்குப் போ. வடக்கே இருந்து ஒருவர் வந்து உன் பிரச்சினையைத் தீர்ப்பார்'' என்றார். உடனே காசி சென்னை புறப்பட்டு வந்தார். தலையாட்டி சித்தர் சொன்னபடியே மும்பையில் இருந்து ஒருவர் வந்திருந்தார். அவர் மூலம் காசியின் கடன் பிரச்சினைகள் தீர்ந்தன.

இதனால் மகிழ்ச்சி அடைந்த காசி, தலையாட்டி சித்தருக்கு வேன் ஒன்று வாங்கிக் கொடுத்தார். அதோடு பெரம்பலூரில் சித்தர் தங்கி இருந்த மரத்தடி பகுதியில் ஆசிரமம் கட்டவும் உதவினார்.

ஒரு தடவை தலையாட்டி சித்தர் சென்னை வந்து ஜுபிடர் பிக்சர்ஸ் அலுவலகத்தில் தங்கி இருந்தபோது, எல்லாம் இன்ப மயம், கடல் மீன்கள், கோழிக்கூவுது உள்பட பல படங்களில் துணை டைரக்டராக பணியாற்றிய ராஜ்குமார் சென்று பார்த்தார்.

அவரைப் பார்த்ததும் சித்தர் ''வா ராஜா வா, ராஜா வந்தாச்சு'' என்று கூறி ஆசீர்வதித்து விபூதி கொடுத்தார்.

அப்போது அவருக்கு 3 சொட்டு தைலத்தை சித்தர் கொடுத்தார். அதை குடித்த ராஜ்குமாருக்கு 3 நாட்களுக்கு உடலும், மனமும் புத்துணர்ச்சியுடன் வாசனையாக இருந்ததாம்.




சித்தரிடம் மனதை பறிகொடுத்த ராஜ்குமார் சினிமாவை துறந்து விட்டு பெரம்பலூர் வந்து விட்டார். சித்தரோடு வாழ்ந்த ராஜ்குமார், தற்போது பிரம்மரிஷி மலையடிவாரத்தில் தலையாட்டி சித்தருக்கு ஆலயம் அமைத்து, அன்னைச் சித்தர் ராஜ்குமார் குருஜியாக மாறி சிறப்பாக அன்னதானம் மற்றும் பூஜைகள் நடத்தி வருகிறார்.

இப்படி ஏராளமானவர்களைக் கவர்ந்த தலையாட்டி சித்தரின் இயற்பெயர் என்ன தெரியுமா? பழனிச்சாமி. சிறுவாச்சூர் அருகில் உள்ள அயலூர் இவரது பூர்வீகம். மருதை – புரவாயி தம்பதியருக்கு மகனாக பிறந்த இவர் இளம் வயதில் மற்றவர்களைப் போல சாதாரணமாகத்தான் இருந்தார். திருமணமாகி ஒரு குழந்தையும் பெற்றெடுத்த பிறகு அவர் வாழ்வில் திடீர் சோகம் ஏற்பட்டது. மனைவியும் குழந்தையும் அடுத்தடுத்து மரணம் அடைந்ததால் உலக வாழ்வு வெறுத்து வீட்டை விட்டு வெளியேறினார்.

சுமார் 15 ஆண்டுகள் கழித்து அவர் பெரம்பலூருக்கு திரும்பிய போது சித்தப்புருஷராக மாறி இருந்தார். இடைப்பட்ட காலத்தில் அவர் மகாலிங்கசாமி என்ற மகானை சந்தித்ததாகவும் அவரிடம் “ஞானம்” தொடர்பாக விவாதம் ஏற்பட்டதாகவும் கூறப்படுகிறது.

அப்போது மகாலிங்கசாமி ஒரு புற்றுக்குள் கையை விட்டு பாம்பிடம் இருந்து கல் பெற்று பழனிச்சாமியிடம் கொடுத்தாராம். அந்த கல்லைத் தொட்ட மறுநிமிடம் பழனிச்சாமி உடல் நடுங்கியது. அவருக்குள் பெரும் மாற்றங்கள் உருவானது.

சித்தப்புருஷராக மாறி ஊர் திரும்பினார். அவர் தலை மட்டும் தொடர்ந்து ஆடியபடி இருந்ததால் தலையாட்டி சித்தர் என்று அழைக்கத் தொடங்கினார்கள். நாளடைவில் அவர் பெயர் தலையாட்டி சித்தர் என்று நிலைத்து விட்டது. சித்த மருத்துவத்தில் கரை கண்ட அவர் எவ்வளவு பெரிய கொடூர நோய்களையும் தீர்க்கும் ஆற்றல் பெற்றிருந்தார். அதன் மூலம் கிடைத்த பணத்தை கொண்டு அன்னதானம் செய்தார். தனக்கென எந்த சொத்தும் அவர் சேர்த்துக் கொள்ளவில்லை.

அவர் வாழ்ந்த காலத்தில் அந்த இடம் சாதுக்களின் சரணாலயமாகத் திகழ்ந்தது. அவர் அடிக்கடி ஏதாவது ஒரு மலைக்கு சென்று விடுவார். சதுரகிரி மலை, பர்வத மலை, குற்றால மலை என்று தன்னோடு பலரையும் அழைத்து செல்வார்.

சதுரகிரி மலையில் அவர் பெயரில் இப்போதும் கூட ஒரு மடம் உள்ளது. மலையில் உள்ள செடிகள் மற்றவர்களுக்கு ஒரே மாதிரி தெரியும். ஆனால் அவர் இந்த செடி இந்த நோயை தீர்க்கும். அந்த செடி அந்த நோயைத் தீர்க்கும் என்று சொல்லி பறித்துத் தருவார்.

எல்லா ஜீவராசிகளிடமும் அவர் அன்போடு இருந்தார். ‘‘ஏய் கருப்பா.....’’ என்பார். கருப்பு நாய் ஓடி வந்து அவர் முன் நிற்கும். ‘‘சாப்பிடு....’’ என்பார் அது சாப்பிடும்.

அவரது மகிமையை அறிந்த சிலர் அவர் மூலம் இரும்பை தங்கம் ஆக்கும் வித்தையைக் கற்றுக் கொள்ள அவரையே சுற்றி, சுற்றி வந்தனர். ஆனால் சித்தர் அவர்களை அருகில் சேர்க்காமல் துரத்தி விட்டு விட்டார்.

அவர் எதை தொட்டு கொடுத்தாலும் அதில் ஆற்றல் இருக்கும். அவர் கையால் கொடுக்கும் மருந்துக்கு இரட்டிப்பு சக்தி உண்டு. அது போல அவர் ஏராளமான அற்புதங்கள் நிகழ்த்தினார்.



ஒரு தடவை அவர் தன் அன்பர்களுடன் தஞ்சையில் ஒரு ஓட்டலில் சாப்பிட சென்றார்.

சாப்பிட்டு முடித்த பிறகுதான் தெரிந்தது, யாரிடமும் பணம் இல்லை என்பது.

"என்னப்பா... நீங்க" என்று சிரித்துக் கொண்டே சித்தர் தலைப் பாகையை கழற்ற அதற்குள் இருந்து 10 ரூபாய் நோட்டுகள் விழுந்ததாம். உடன் சென்றவர்களுக்கு பயங்கர அதிர்ச்சி, ஆச்சரியம். ஏனெனில் சித்தர் ஒரு போதும் பணம் வைத்துக் கொள்ளாதவர். அவசரத்துக்காக அவர் பணம் வரவழைத்து அற்புதம் நிகழ்த்தியுள்ளார்.

ஒரு தடவை கிண்டி ரேஸ்கோர்ஸ் புக்கி பாலசுப்பிரமணியம் பெங்களூரில் நடந்த குதிரை பந்தயத்துக்கு சென்றிருந்தார். அன்றிரவு அறையில் தங்கி இருந்தார்.

அதிகாலை 3 மணிக்கு அவர் காதில் சித்தர் பேசுவது போல இருந்தது. குறிப்பிட்ட ஒரு நம்பரை சொல்லி, அந்த குதிரை மீது பணம் கட்டுமாறு கூறினார்.

திடுக்கிட்டு விழித்த பாலசுப்பிரமணியம், குளித்து விட்டு குதிரை ரேசுக்குப் போனார். அந்த நம்பர் குதிரை மீது யாரும் பணம் கட்டவில்லை. பாலசுப்பிரமணியமும் பணம் கட்டாமல் விட்டு விட்டார். குதிரைப் பந்தயம் தொடங்கியது. லேசாக மழைத் தூறிக் கொண்டிருந்தது. சித்தர் காதில் சொன்ன நம்பருடைய குதிரை முதலாவதாக வந்தது. சித்தர் சொல்லியும்

கேட்காமல் வாய்ப்பை தவறவிட்டு விட்டதற்காக பாலசுப்பிரமணியம் வருத்தப்பட்டார்.

திரை உலகை சேர்ந்தவர்களில் பஞ்சு அருணாசலம், கங்கைஅமரன் ஆகியோர் சித்தருடன் பழகியவர்கள்.

தலையாட்டி சித்தர் ஜீவசமாதியான பிறகு இவர்கள் எல்லாரும் சேர்ந்து அங்கு சிறு ஆலயம் அமைத்து கொடுத்துள்ளனர்.

பெரம்பலூர் பஸ் நிலையத்தில் இருந்து நடந்து செல்லும் தூரத்தில் தலையாட்டி சித்தரின் ஜீவசமாதி உள்ளது.

அங்கிருந்து சுமார் 4 கி.மீ. தொலைவில் பிரம்மரிஷி மலை உள்ளது. மிகுந்த அதிர்வலைகளைக் கொண்ட இம்மலையில் 210 சித்தர்கள் வாசம் செய்வதாக சொல்கிறார்கள்.

கலிகாலம் முடியும் போது, இம்மலை 1 கோடி ஜீவ வித்துக்களை பாதுகாக்கும் மலையாக திகழும் என்று சித்தர் வாக்கில் கூறப்பட்டுள்ளது.

எனவே தலையாட்டி சித்தரின் அருளைப் பெற்றால் இப்பிறவியில் மட்டுமல்ல..... அடுத்தடுத்த பிறவிகளிலும் ஆன்ம பலத்தை மேம்படுத்திக் கொள்ள முடியு ம்.





# 15.ஸ்ரீ சத்ரு சம்ஹார மூர்த்தி சுவாமிகள்

திருச்செந்தூர், திருச்சி, தான்றீஸ்வரம்

## 15. ஸ்ரீ சத்ரு சம்ஹார மூர்த்தி சுவாமிகள்

துறவு என்பது வெளி வேஷமல்ல; அது உள்ளத்தில் நிறைவேற வேண்டிய ஒப்பற்ற வெற்றியாகும்.

உள்ளத்தில் எரியும் ஆசைகள் தணியாமல் இருந்தாலோ... வெளி வேஷங்களாலோ எந்தவித பயனும் இல்லை. எத்தகைய வாழ்க்கை வாழ்ந்தாலும் சரி; எந்தக் காரியம் செய்தாலும் சரி... உள்ளத்தில் தூய்மை வேண்டும்.



ஸ்ரீ சத்ரு சம்ஹார மூர்த்தி சுவாமிகள்

உள்ளம் தூய்மை பெற என்ன செய்ய வேண்டும்? பகவானை நினைத்து தியானத்தில் மூழ்குங்கள். அப்படி மூழ்கினால்தான் உள்ளம் தூய்மை பெறும் என்று ‘பஜ கோ விந்தம்’ சொல்கிறது.

இப்படி மனத் தூய்மை பெற்றதற்கு சித்தப் புருஷர் ஸ்ரீசத்ரு சம்ஹார மூர்த்தி சுவாமிகளை உதாரணமாக சொல்லலாம். தியானத்தால் உள்ளத்தை துப்புரவுப்படுத்திய அவர் அதன் மூலம் வியத்தகு சாதனைகள் புரிந்தார்.

சத்ரு சம்ஹார மூர்த்தியின் வாழ்க்கை எப்படியெல்லாம் மாறியது என்பதை நாம் தெரிந்து கொண்டால்தான், அவர் தியானத்தில் பெற்ற வெற்றியை உளமார உணர முடியும்.

புதுக்கோட்டை மாவட்டம் ஆலங்குடி தாலுகா அன்பு கோவில் கிராமத்தைச் சேர்ந்த தம்பதியர் நல்லமுத்து—பொன்னம்மாள். திருச்சி மாவட்டம் வாதிரிப்பட்டியில் குடியேறியிருந்தனர். அவர்களுக்கு 13.6.1880—ல் ஆண் குழந்தை பிறந்தது. அந்த குழந்தைக்கு கனகசபாபதி என்று பெயரிட்டு வளர்த்து வந்தனர்.

புதுச்சேரி சென்று தன் மாமா வீட்டில் தங்கி இருந்து 10—ம் வகுப்பு வரை படி த்தார். 1901—ல் அவருக்கும், சொர்ணத்தம்மாள் என்பவருக்கும் திருமண ம் நடந்தது. இவர்களுக்கு 2 மகள்கள், ஒரு மகன் பிறந்தனர்.




கனகசபாபதியின் இல்லற வாழ்வு இப்படி அமைதியாக போய் கொண்டிருந்தபோது, அவருக்குள் ஆன்மிகத் தேடல் திடீரென அதிகரித்தது. 1915—ம் ஆண்டு தனது 35—வது வயதில் சிதம்பரம் கோவில் கும்பாபிஷேகத்தை காண சென்றார்.

அன்றே இல்லற வாழ்வை துண்டித்தார். சுமார் ஓராண்டு எங்கெல்லாமோ சுற்றித் திரிந்தார். அவரது மாமா ஒரு ஊரில் அவரை கண்டுபிடித்து வாதிரிப்பட்டிக்கு அழைத்து வந்தார்.

கடியப்பட்டியில் அவருக்கு ஆசிரியர் வேலையும் வாங்கிக் கொடுத்தார். ஆனால், கனகசபாபதிக்கு அந்த வேலையில் மனம் ஒட்டவில்லை. 1917—ம் ஆண்டு மீண்டும் வீட்டைவிட்டு வெளியேறி மாயமானார். சுமார் 11 ஆண்டுகளாக எங்கு போனார், என்ன செய்தார்? என்று தெரியவில்லை. 1928—ம் ஆண்டு திருச்சி மலைக்கோட்டை நந்தி கோவில் தெருவில் உள்ள நாகநாத சுவாமி கோவிலில் தியானக் கோலத்தில் இருந்ததை கண்டுபிடித்தனர்.

ஆசிரியர் கனகசபாபதியாக உள்ளே சென்றவர்! அருள்திரு சத்ரு சம்ஹாரமூர்த்தியாக வெளியில் வந்திருந்தார். 11 ஆண்டுகள் தவமும்,

தியானமும் அவரை சித்தராக மாற்றி இருந்தது. அட்டமா சித்திகள் கைவரப் பெற்றிருந்தார். ஒருவரைப் பார்த்ததும் அவரது முப்பிறவிகளை அறிந்துகொள்ளும் ஆற்றல் அவருக்குள் மலர்ந்திருந்தது.

நடப்பதை முன்கூட்டியே அறியும் சக்தியும் தவவலிமையால் அவருக்கு கிடைத்திருந்தது. இதனால் அவர் சொன்னவை எல்லாம் அப்படியே நடந்தன. இந்த சக்திகளை எல்லாம் அவர் தன்னை முன்னிலைப் படுத்தவோ அல்லது வெற்று விளம்பரம் தேடிக்கொள்ளவோ பயன்படுத்தவில்லை. மாறாக, மனிதர்களிடம் பின்னிப் பிணைந்துள்ள வஞ்சகம், சூது, கோபம், பொறாமை, பொய், திருட்டு, புறம் பேசுதல், கெடுதல் செய்தல், பெண்ணாசை, மண்ணாசை, பொன்னாசை போன்றவற்றை ஒழிக்க பயன்படுத்தி னார்.

மனிதர்களிடம் உள்ள இந்த தீயக் குணங்களை சத்ருவாக கருதினார். அவற்றையெல்லாம் சம்ஹாரம் செய்து வந்தார்.

இதனால் அவரை ‘சத்ரு சம்ஹார மூர்த்தி’ என்று அழைக்க... நாளடைவில் அந்த பெயரே நிலைத்துவிட்டது.

இவர் எந்த ஊருக்குச் சென்றாலும், அங்கு ஏதாவது மரத்தடியில் ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்துவிடுவார். விராலிமலை சந்தைப் பேட்டையில் வன்னி மரத்தடியில் அமர்ந்து அருளாசி வழங்கியதால், அவ்வூர் மக்கள் அவரை ‘வன்னி மரத்து சுவாமி’ என்று அழைக்கத் தொடங்கிவிட்டனர். இதனால் சுவாமிகள், விராலிமலையில் இருந்து திருச்சிக்கு வந்துவிட்டார். திருச்சியில் கோர்ட்டு வளாகத்தில் தீயணைப்பு நிலையம் அருகில் மகிழ மரத்தடியில் அமர்ந்தார்.

அந்த சமயத்தில் மகிழ மரம் பட்டுப் போய் காய்ந்திருந்தது. சத்ரு சம்ஹார மூர்த்திகளின் தவ வலிமையால் அம்மரம் மீண்டும் துளிர்த்தது. அம்மரத்தடியில் இங்கிலாந்து ஜார்ஜ் மன்னர்களின் படங்களை வைத்து பூஜை செய்து வந்தார். ஜார்ஜ் மன்னர்கள் படத்துக்கு ஏன் அவர் பூஜை செய்தார்? அந்த ரகசியம் இதுவரை யாருக்கும் தெரியவில்லை.

அங்கு சில ஆண்டுகள் இருந்துவிட்டு, குடுமியான் மலைப் பகுதிக்கு இடம் மாறினார் சுவாமிகள். அங்கே அத்தி மரத்தடியில் அமர்ந்து தியானம் செய்வதை வழக்கத்தில் வைத்திருந்தார்.

ஒரு நாள் ஆழ்ந்த தியானத்தில் இருந்தபோது, குடுமியான் மலைக்கு வடக்கே வீரப்பட்டி எனும் ஊர் அருகே அடர்ந்த காட்டுக்குள் தான்றி மரம் ஒன்று இடி விழுந்து பட்டுப் போய் நிற்பதை தன் ஞானத்தால் அறிந்தார்.

தான்றி மரம் மிகவும் சக்தி வாய்ந்ததாகும். இதன் வட பாகம் கைலாசமாக கருதப்படுவதால், அதை வடக்கு நோக்கி கும்பிட்டால் காசிக்கு சென்று வந்த பலன் கிடைக்கும் என்பது ஐதீகம்.

அதுபோல அம்மரத்தை தெற்கு நோக்கி கும்பிட்டால் சக்தியின் அருளும், மேற்கு நோக்கி வணங்கினால் வருணப் பகவானின் கடாட்சமும், கிழக்கு நோக்கி தரிசித்தால் சிவபெருமானின் கருணையும் கிடைக்கும் என்று வரையறுத்துள்ளனர். அது மட்டு மின்றி, எவ்வளவு கடுமையான சனி தோஷத்தையும் விரட்டும் சக்தி இந்த தான்றி மரத்துக்கு உண்டு என்பது குறிப்பிடத்தக்கது.

அதன் பின்னணியில் புராணக் கதை உள்ளது.

ஒரு தடவை உத்திர மகராஜாவை ஆகாய மார்க்கமாக ரதத்தில் நளன் அழைத்துச் சென்றுகொண்டிருந்தான். அப்போது அவரது அங்கவஸ்திரம் கீழே விழுந்துவிட்டது.

நளன் ரதத்தை நிறுத்திவிட்டு இறங்கி வந்தான். ராஜாவின் அங்கவஸ்திரம், தான்றி மரத்தில் சிக்கி கிடப்பதைக் கண்டான். வழிபாடு செய்து வணங்கிவிட்டு, அந்த மரத்தில் ஏறினான். அதன் 4 திசைகளில் நீட்டிக் கொண்டிருந்த கிளைகளில் இருந்த 4 கனிகளை பறித்து சாப்பிட்டான்.

அப்போது அங்கு சனி பகவான் தோன்றினார். ‘‘தான்றி மரத்தை வழிபட்டதால் உன்னிடம் இருந்து நான் விலகுகிறேன்’’ என்று கூறி அருளாசி வழங்கினார்.

இந்த நிகழ்வு மூலம், தான்றி மரத்தை வழிபட்டால் சனி தோஷத்தின் பிடியில் இருந்துவிடுபடலாம் என்று தெரியவந்தது. இத்தகைய சிறப்புடைய மரத்தை மீண்டும் துளிர்க்க செய்தால், மக்கள் அதை வழிபட்டு மிகுந்த பயன் அடைவார்கள் என்று சத்ரு சம்ஹாரமூர்த்தி சுவாமிகள் நினைத்தார்.

உடனேயே குடுமியான் மலையில் இருந்து புறப்பட்டு பாம்பு புற்றுகளும், கருவேலம் மரங்களும், சப்பாத்திக் கள்ளிகளும், ஆவாரஞ் செடிகளும்

நிறைந்த அடர்ந்த புதர்கள் கொண்ட தாண்டி காட்டுப் பகுதிக்கு வந்தார். அங்கு பட்டு போய் நின்றிருந்த தான்றி மரத்தைக் கண்டார்.

அதன் அடிப்பாகத்தில் இருந்த பொந்துக்குள் நுழைந்து பத்மாசனத்தில் உட்கார்ந்து தியானத்தில் அமர்ந்தார். அவரது தவத்தின் பயனாக அம்மரம் சிறிது நாளிலேயே துளிர்த்தது. பிறகு இலைகளுடன் பரவிப் படர்ந்து பூத்துக் குலுங்கியது. 1935—ம் ஆண்டு இந்த அற்புதம் நடந்தது.

இத்தகவல் பரவியதும் சுற்றுப் பகுதி மக்கள் திரண்டு வந்து சுவாமிகளையும், தான்றி மரத்தையும் வழிபட்டு சென்றனர். அதன் பிறகு பல ஊர்களுக்குச் சென்று அற்புதங்கள் நிகழ்த்தினார்.

திருச்சியில் பாம்பு கடித்த பெண்ணை உயிர் பிழைக்க வைத்தார். ஒரு தடவை வாதிரிப்பட்டியில் திரவுபதி அம்மன் கோவிலில் விழா நடந்தபோது, பலத்த மழை பெய்து தண்ணீர் வெள்ளமாக ஓடியது. கோவில் அருகில் வெட்ட வெளியில் சுவாமிகள் தியானத்தில் ஆழ்ந்திருந்தார். அவர் மீது ஒரு துளிகூட படவில்லை.

அதோடு மழை தண்ணீரும் அவரை நெருங்காமல் வட்டமாக சுற்றிச் சுழன்று ஓடியது. இதை கண்ட பக்தர்கள் மெய் சிலிர்த்துப் போனார்கள். மற்றொரு தடவை பங்குனி திருவிழாவுக்காக நார்த்தாமலைக்குச் சென்றார். வழியில் கீழ்குறிச்சி என்ற ஊரில், குளத்தில்இறங்கி குளித்தார். காலை 7 மணிக்கு தண்ணீருக்குள் மூழ்கியவர், திடீரென மாயமாகி விட்டார்.




சுவாமிகளை காணவில்லையே என்ற பரபரப்புடன் பலர் குளத்துக்குள் இறங்கி தேடினார்கள். ஆனால், கண்டுபிடிக்க இயலவில்லை. மாலை 5 மணிக்கு சுவாமிகள் சிரித்தபடி தண்ணீருக்குள் இருந்து வெளியேறினார். பிறகு அனைவரும் சுவாமிகளுடன் நார்த்தாமலை சென்றனர்.

அப்போது அங்கு வந்த ஒருவர், ''சுவாமி... மதியம் நீங்கள் திருச்சியில் வைத்து சொன்னபடி அன்னதானத்துக்கு ஏற்பாடு செய்துவிட்டேன்'' என்றார். எல்லோருக்கும் தூக்கி வாரிப் போட்டது.

'கீழ்குறிச்சி குளத்துக்குள் மூழ்கியவர், திருச்சிக்கு எப்படி போனார்?' என்று ஆச்சரியப்பட்டனர். திருச்சியில் சுவாமிகள், உடல் நலம் பாதிக்கப்பட்டிருந்த சிறுவனுக்கு சிகிச்சையும் அளித்தார் என்பதைக் கேட்டபோது பக்தர்களின் ஆச்சரியம் இரட்டிப்பானது.

இது போல பல தடவை அவர் ஒரே நேரத்தில் 2 அல்லது 3 இடங்களில் தோன்றி அற்புதம் செய்துள்ளார்.

1938—ம் ஆண்டு திருச்செந்தூர் முருகன் கோவிலில் நடந்த வைகாசி விசாக விழாவுக்கு புறப்பட்டுச் சென்றார். முருகப் பெருமானால் ஆணவம் சம்ஹாரம் செய்யப்பட்ட அந்த அற்புதத் திருத்தலத்தில், லட்சக்கணக்கான மக்களின் தோஷத்தை விரட்டி சுவாமிகள் அற்புதம் செய்தார்.

மே மாதம் முதல் திருச்செந்தூர் கடற்கரையில் அமர்ந்திருந்தார். அக்டோபர் தொடக்கத்தில், “நான் கம்பி நீட்டப் போகிறேன்” என்று தனக்கு நெருக்கமானவர்களிடம் தெரிவித்தார்.

திருச்செந்தூருக்கு வருமாறு பக்தர்களுக்கு தகவல் அனுப்பினார்.

அவர் சொன்னபடியே 11—ந்தேதி ‘வெகுதான்ய’ ஆண்டு புரட்டாசி மாதம் 25—ந்தேதி செவ்வாய்க்கிழமை பரணி நட்சத்திரத்தில் பரிபூரணமானார். அவரது ஜீவசமாதி திருச்செந்தூர் கடற்கரையில் மூவர் சமாதிகளுக்கு தெற்கே அய்யா வைகுண்ட சுவாமி பதிக்கு மிக அருகில் அமைக்கப்பட்டுள்ளது.

அமைதியும், குளுமையுமாகத் திகழும் அந்த ஜீவசமாதி கருவறைக்குள் லிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டு வழிபாடு நடந்து வருகிறது.

திருச்செந்தூர் தலத்துக்கு செல்பவர்கள் முருகப் பெருமானின் அருளை பெறுவதோடு குரு பகவானின் கருணையையும் பெற முடியும். ஆனால், அருகில் அதே கடற்கரையில் உள்ள சத்ரு சம்ஹார சுவாமிகள் ஜீவ சமாதிக்கும் சென்று வழிபட்டால் சனிக் கிரகத்தின் கொடிய தோஷங்களில் இருந்து விடுதலைப் பெற முடியும் என்பது நிறைய பேருக்குத் தெரியாமலே உள்ளது.

அடுத்தத் தடவை திருச்செந்தூருக்கு செல்லும்போது முருகரை வழிபட்ட கையோடு சத்ரு சம்ஹார மூர்த்தியையும் தரிசிக்கலாம்.

இந்த ஜீவ சமாதியில் தியானம் செய்து, சத்ரு சம்ஹார சுவாமிகளிடம் மனம் உருக வேண்டிக்கொண்டால், ஏவல், பில்லி சூனியம் மற்றும் கோர்ட்டு வழக்குகளில் இருந்து விடுபட முடியும். மாமியார் கொடுமைக்கு ஆளான மருமகள்கள் எத்தனையோ பேர் இங்கே வழிபட்டு நல்வாழ்க்கை அமையப் பெற்றுள்ளார்கள்.

‘ஸ்ரீ சத்ரு சம்ஹார மூர்த்தி சுவாமிகள் ஒடுக்கம் — செல்வ தீர்த்தம்’ என்று பெயரிடப்பட்டுள்ள இந்த ஜீவசமாதி ஆலயத்தில் இருந்து பிடிமண் எடுத்துச் சென்று, பட்ட மரம் துளிர்த்த இடமான தான்ரீஸ்வரத்தில் ஆலயம் அமைத்துள்ளனர். கனகசபை ‘கமிட்டி’யைச் சேர்ந்தவர்கள் அங்கு வழிபாட்டை நடத்தி வருகிறார்கள். ஏழரைச் சனி, ஜென்ம சனியால் பாதிக்கப்பட்டவர்கள் தோஷ நிவர்த்திக்காக ஏராளமாக வருகிறார்கள்.

தினமும் அங்கு அன்னதானம் நடக்கிறது. பரணி நட்சத் திர நாட்களில் சிறப்புப் பூஜைகள் செய்யப்படுகின்றன. புதுக் கோட்டையில் இருந்து இலுப்பூர் செல்லும் வழித்தடத்தில் தான்றீஸ்வரம் உள்ளது. விராலிமலையில் இருந்து புதுக்கோட்டை போகும் பஸ்சிலும் செல்லலாம்.

திருச்சியில் அவர் அமர்ந்திருந்த ஐகோர்ட்டு வளாக மகிழ மரத்தடியிலும் ஆலயம் கட்டப்பட்டுள்ளது. அங்கு மாதந்தோறும் பரணி நட்சத்திர தினத்தன்று மதியம் மகேஸ்வர பூஜை நடத்தப்பட்டு, நூற்றுக்கணக்கானவர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது.

திருச்சி திருவளர்ச்சிப்பட்டியலில் உள்ள 'பெல் ஆபீசர்ஸ் சொசைட்டி', சோழ மாதேவி, வீரப்பட்டி, குடுமியான் மலை, வாதிரிப்பட்டி ஊர்களிலும் சத்ரு சம்ஹார மூர்த்தி சுவாமிகளுக்கு ஆலயங்கள் கட்டப்பட்டுள்ளன.

தீயணைப்பு நிலைய ஊழியர்கள், சுவாமிகள் மீது மிகுந்த பற்றுதலுடன் உள்ளனர். ஸ்ரீரங்கம், துறையூர், ஜெயங்கொண்டம், பெரம்பலூர், புதுக்கோட்டை, அறந்தாங்கி, திருமயம், இலுப்பூர், ஆலங்குடி, நாகப்பட்டினம், நன்னிலம், கரூர், பட்டுக்கோட்டை, பேராவூரணி ஆகிய 14 ஊர்களில் தீயணைப்பு நிலையத்தில் சத்ரு சம்ஹார மூர்த்திகளுக்கு ஆலயம் கட்டி அவர்கள் வழிபட்டு வருகிறார்கள். தமிழ்நாட்டில் எந்த ஒரு சித்தப் புருஷருக்கும் கிடைக்காத தனித்துவமான சிறப்பு இதுவாகும்.





# 16.ஸ்ரீ சதானந்த சுவாமிகள்

பெருங்களத்தூர், சென்னை.

## 16 . ஸ்ரீ சதானந்த சுவாமிகள்

ஆங்கிலேயர்கள் ஆட்சி நடந்து கொண்டிருந்த காலம் அது. சென்னையில் நாராயணசாமி என்பவர் போலீஸ்காரராக பணியாற்றிக் கொண்டிருந்தார்.



ஸ்ரீ சதானந்த சுவாமிகள்

அப்போது திருட்டுக் கும்பல் ஒன்று பல வீடுகளில் கைவரிசை காட்டியது. ஆங்கிலேயர்களுக்கு அந்த திருட்டுக் கும்பல் கடும் சவாலாக இருந்தது.

ஆங்கிலேய போலீஸ் உயர் அதிகாரி ஒருவர் நாராயணசாமியை அழைத்து, "இன்று மாலைக்குள் அந்த திருடர்களை கண்டுபிடித்து கைது செய்ய வேண்டும். இல்லை யென்றால் நீங்கள் போலீஸ் வேலையில் இருந்து நீக்கப்படுவீர்கள்" என்று உத்தரவிட்டார்.

மனம் சோர்ந்து போன நாராயணசாமி திருடர்களை எங்கு போய் பிடிப்பது என்று யோசித்தபடி கூவம் ஆற்றின் கரையோரமாக நடந்து வந்து கொண்டிருந்தார். அந்த காலகட்டத்தில் சென்னை தற்போது உள்ளது போல

இல்லை. கிராமிய மண்வாசனையுடன் இருந்தது. கூவம் ஆறு மிகவும் சுத்தமான தண்ணீருடன் ஓடிக் கொண்டிருந்தது.

அந்த ஆற்றின் கரையோரமாக நடந்து வந்து கொண்டிருந்த நாராயணசாமி தற்போது கன்னிமாரா ஓட்டல் இருக்கும் பகுதிக்கு வந்ததும் நின்றார்.

அப்போது அங்கு பாலத்தின் மீது உட்கார்ந்திருந்த ஒரு சாமியார் ''நாராயணா இங்கு வா'' என்று அழைத்தார். போலீஸ்காரர் நாராயணசாமிக்கு கடும் அதிர்ச்சியாகி விட்டது.

வெறும் கோவணம் மட்டும் கட்டிக் கொண்டு ஆண்டி போல இருக்கும் இவரை இதற்கு முன்பு தாம் பார்த்ததே இல்லையே... இவருக்கு எப்படி நமது பெயர் தெரியும் என்று ஆச்சரியத்தோடு அவர் அருகில் சென்றார்.

''அய்யா.... என்னையா அழைத்தீர்கள்?'' என்றார். ''ஆமாம் நாராயணா...'' என்ற அவர், ''இன்று மாலைக்குள் திருடர்களை பிடிக்காவிட்டால் உனக்கு வேலை போய் விடும்..... அப்படித் தானே'' என்றார். நாராயணசாமி ஆச்சரியத்தின் உச்சிக்கே சென்று விட்டார்.

''யார் இவர்? நம்மை பற்றிய விஷயங்களை எல்லாம் புட்டு... புட்டு.... வைக்கிறாரே'' என்று நினைத்துக் கொண்டே ''ஆமாம் அய்யா'' என்றார்.

''கவலைப்படாதே, நீ தேடும் திருடர்கள் தற்போது சைதாப் பேட்டையில் பாலத்துக்கு கீழே பதுங்கி இருக்கிறார்கள். முட்புதர்களாக உள்ள தாழம்பு காட்டுக்குள் இருக்கும் அவர்கள் அங்குதான் நகைகளை சேர்த்து வைத்துள்ளனர். இன்னும் சிறிது நேரத்தில் அவர்கள் நகைகளை பங்கு போட்டுக் கொள்ள போகிறார்கள். அந்த சமயத்தில் நீ அங்கு சென்றால் அந்த திருடர்களைப் பிடித்து விடலாம். சீக்கிரம் போ'' என்றார்.

இதைக் கேட்டதும் நாராயணசாமிக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. ''சாமி.... ரொம்ப நன்றி சாமி.... இப்போதே போகிறேன்'' என்று கூறிவிட்டு சென்றார். சாமியார் சொன்னபடி நாராயணசாமி அந்த திருடர்களைப் பிடித்து கொடுத்து உயர் அதிகாரிகளிடம் பாராட்டுப் பெற்றார்.

மறுநாள்... அந்த சாமியாரைப் பார்த்து நன்றி சொல்ல வேண்டும் என்று நாராயணசாமி சென்றார். ஆனால் நேற்று பார்த்த இடத்தில் அந்த சாமியாரை

காணவில்லை. பல இடங்களில் தேடியும் அவரால் சாமியாரை கண்டுபிடிக்க இயலவில்லை.

அன்று முதல் சுவாமிகளை நேரில் காண வேண்டும் என்ற ஆர்வம் மனதில் அதிகரித்தது. ஒரு கட்டத்தில் சாமியை எப்போது பார்ப்போம் என்று மனதில் ஏக்கம் கொழுந்து விட்டு எரிந்தது.

அந்த காலத்தில் சென்னையில் டிராம் வண்டிதான் போக்கு வரத்துக்கு பயன்படுத்தப்பட்டது. ஒருநாள் கவர்னர் வருகைக் கான பாதுகாப்புப் பணியில் நாராயணசாமி ஈடுபட்டிருந்தார். அப்போது தற்செயலாக டிராம் வண்டிக்குள் சாமிகள் அமர்ந்து செல்வதை கண்டார்.

விடுவாரா.... அவர்? அந்த டிராம் வண்டியை பின்தொடர்ந்து சென்றார். மயிலாப்பூரில் டிராம் வண்டியில் இருந்து இறங்கிய சுவாமிகள் சித்திரைக்குளம் பகுதிக்கு சென்றார். குளக்கரையில் தவத்தில் அமர்ந்தார்.

இந்த குளத்துக்கு உண்மையில் சித்தர்குளம் என்றுதான் பெயர். ஏராளமான சித்தர்கள் அந்த குளக்கரையில் தவம் இருந்தார்களாம். பிறகுதான் அதன் பெயர் எப்படியோ சித்திரைக்குளம் என்று மாறிப் போனது.

செம்பாக்கத்தில் சமாதி அடைந்துள்ள பொன்னம்பல சுவாமிகள், புரசைவாக்கம் குயப்பேட்டை சச்சிதானந்த சுவாமிகள், வியாசர்பாடி கரபாத்திர சுவாமிகள், வீர சுப்பையா சுவாமிகள், குழந்தைவேல் சுவாமிகள் உள்பட பலர் இந்த குளக்கரையில் தவம் இருப்பதுண்டு. அவர்களுடன் இந்த சுவாமியும் தவம் இருப்பதை போலீஸ்காரர் நாராயணசாமி பார்த்தார்.

அவர் திருவல்லிக்கேணியில் மனைவி மற்றும் குழந்தைகளுடன் வசித்து வந்தார். எனவே அவர் தினமும் சுவாமிகளை சந்தித்துப் பேசுவதை வழக்கமாக்கினார். அதன்பிறகே அந்த சுவாமிகள், "சித்தப்புருஷர்" என்பது வெளியில் தெரியத் தொடங்கியது.

இந்த சித்தப்புருஷரின் இயற்பெயர் காசிநாதன். சுமார் 230 ஆண்டுகளுக்கு முன்பு இவர் தஞ்சை தரணியில் ரங்கராயர் என்பவரது மகனாகப் பிறந்தார்.

நன்றாக படித்துத் தேர்ந்த அவர் 1800—ம் ஆண்டு திருவிடை மருதூரில் ரெயில் நிலைய அதிகாரியாக பணியாற்றினார். சிறந்த சிவபக்தரான அவருக்கு திடீரென வாழ்வில் விரக்தி ஏற்பட்டது.

தமது வாழ்வுக்கு வேறு ஏதோ ஒரு அர்த்தம் இருப்பதாக நினைத்தார். அதைத் தேடி அலைந்தார். அப்போது அவருக்குள் குருவைத் தேடும் சிந்தனை தோன்றியது.

பல இடங்களில் அலைந்த அவருக்கு இறுதியில் திருவிடை மருதூரில் தாத்தாத்ரேய பீடத்தில் அவதூதராக இருந்த சுயம்பிரகாச மவுனசாமியின் அருள்பார்வை கிடைத்தது. அவரி டம் சீடராக சேர்ந்தார். இல்லறத்தை துறந்து துறவறம் பூண்ட அவருக்கு சுயம்பிரகாச மவுனசாமிகள் தீட்சை வழங்கினார்.

அதோடு அவருக்கு சதானந்த சுவாமிகள் என்ற பெயரையும் சூட்டினார். சுயம்பிரகாச மவுனசாமிகளிடம் நவ கண்ட யோகத்தை கற்றுக் கொண்ட சுவாமிகள், எப்போதும் தியானத்தில் அமர்ந்தார். அவரது நீண்ட தியானத்தால் குண்டலினி சக்தியை உச்சிக்கு கொண்டு வந்து ஆத்ம ஞானம் பெற்றார்.




சிவனை அறிந்த சித்தராக மாறிய சதானந்தர் சுவாமிகள் நவ கண்ட யோகத்தில் தனித்துவம் பெற்றார். நவ கண்ட யோகம் என்பது தனது உடலை 9 துண்டுகளாகப் பிரித்துப் போட்டு விடும் யோக வித்தையாகும். இந்த யோகத்தில் கரை கண்ட சதானந்தர் திருவிடைமருதூரில் இருந்து பல பகுதிகளுக்கும் சென்றார். இறுதியில் சென்னை வந்தார். வந்த இடத்தில் போலீஸ்காரர் நாராயணசாமிக்கு அற்புதம் செய்து ஈர்த்தார்.

பொதுவாக ஆத்ம ஞானம் பெற ஆசைப்படுபவர்கள், குருவைத் தேடி ஊர், ஊராக அலைவதுண்டு. ஆனால் நாராயணசாமிக்கு அந்த பிரச்சினை இல்லை. சதானந்தர் அவரைத் தேடி வந்து ஆட்கொண்டார்.

ஒருநாள் கூட தவறாமல் சதானந்தரை சித்திரைக் குளத்துக்கு சென்று சந்தித்த நாராயணசாமிக்கு 10 ஆண்டுகளாக குழந்தை இல்லாத ஏக்கம் இருந்தது. ஒருநாள் மனைவியுடன் சென்று அவர், சதானந்தரிடம் தன்மனக் குறையைக் கூறினார். சதானந்த சுவாமிகள் மூன்று பிடி சாதம் கொடுத்து, இதை சாப்பிடு, உனக்கு மூன்று குழந்தைகள் பிறக்கும் என்றார். முதல் குழந்தை சற்று கால் ஊனமாக பிறக்கும் என்றும் கூறினார்.

சதானந்த சுவாமிகள் சொன்னது போலவே நாராயண சாமிக்கு முதலில் கால் மெல்லியதாக ஆண் குழந்தை பிறந்தது. அதன்பிறகு ஒரு ஆண் குழந்தை, ஒரு பெண் குழந்தை பிறந்தது. இந்த அற்புதத்தால் சதானந்தர் மீதான நம்பிக்கை நாராயணசாமியிடம் அதிகரித்தது. இதனால் போலீஸ் வேலையை உதறி விட்டு சதானந்த சுவாமிகளிடம் முதன்மை சீடராக சேர்ந்தார்.



கருவறை

நாராயணசாமிக்கு சென்னை புறநகரான பெருங்களத்தூரில் 60 செண்ட் இடம் இருந்தது. ஒருநாள் அவர் சதானந்த சுவாமிகளை அங்கு அழைத்து வந்து மடம் அமைத்து கொடுத்து அமரச் செய்தார்.

அப்படி வரும் போது ஒரு இடத்தைப் பார்த்து இது தாம் மற்றும் பரம் என்றார். அந்த இடம்தான் இன்றைய தாம்பரம் என்பது குறிப்பிடத்தக்கது.

மயிலாப்பூரில் இருந்த வரை எத்தனையோ பேருக்கு முக்திக்கான வழியைக் காட்டிய சதானந்தா சுவாமிகள் பெருங்களத்தூரிலும் பலரது வினைகளின் முடிச்சை அவிழ்த்து சீர்படுத்தினார். பெரும்பாலும் அவர் தன்னை புகழ்படுத்த சித்தாடல்களை வெளியிட்டதில்லை.

அதற்கு பதில் எப்போதும் நிஷ்டையிலேயே இருப்பார். அடிக்கடி தன் உடம்பை 9 துண்டுகளாக்கி நவ கண்ட யோகத்தில் ஆழ்ந்து விடுவார்.

ஒருநாள் அவர் கை, கால்கள் துண்டு, துண்டாக சிதறி கிடப்பதை கண்ட கிராம மக்களில் சிலர் பயந்து ஓடினார்கள். அன்று முதல் தன்னை பார்க்க வருபவர்கள், மடம் அருகே வந்ததும் கை தட்டுங்கள் அல்லது ‘‘ஓம்—தத்—சத்’’ என்று கூறி விட்டு வாருங்கள் என்றார்.

அன்று முதல் அந்த கிராம மக்கள் சதானந்த சுவாமிகளை சந்திக்க செல்லும் முன்பு ‘‘ஓம்—தத்—சத்’’ என்று கூறுவதை வழக்கப் படுத்தினார்கள். இன்றும் சில பக்தர்கள் சதானந்தசுவாமிகள் ஜீவ சமாதி அருகே வந்ததும் ‘‘ஓம்—தத்—சத்’’ என்று சொல்வதைக் காணமுடிகிறது.

ஒருமுறை சித்திரை மாத வெயில் காரணமாக மழை இல்லாமல் பயிர்கள் வாடுவதாகவும், குடிநீருக்கு கஷ்டப் படுவதாகவும் கிராம மக்கள் வந்து சதானந்த சுவாமிகளிடம் முறையிட்டனர். உடனே சுவாமிகள், அருகில் உள்ள விநாயகர் கோவிலை காண்பித்து, அங்குள்ள விநாயகர் சிலையை தலை கீழாக கவிழ்த்து வைத்து விட்டு போங்கள் என்றார்.

அவர் சொன்ன மாதிரியே கிராம மக்களும் செய்ய, அந்த கிராமத்தில் 2 நாட்கள் தொடர் மழை பெய்து ஏரி, குளங்கள் எல்லாம் நிறைந்தன. கிராமமே குளிர்ந்து போனது. இதனால் மகிழ்ச்சி அடைந்த கிராம மக்கள் சுவாமிகளிடம் நன்றி கூற வந்தனர்.

அவர்களிடம் விநாயகர் சிலையை மீண்டும் நேராக வைக்கச் சொன்னார். இப்படி பல தடவை சுவாமிகள் அந்த கிராமத்தில் அற்புதங்கள் செய்தார். இதனால் நாளடைவில் அந்த கிராமத்துக்கே சதானந்தபுரம் என்ற பெயர் ஏற்பட்டு விட்டது. 1922—ம் ஆண்டு தை மாதம் மகம் நட்சத்திரத்தில் சதானந்த சுவாமிகள் ஜீவ சமாதி அடைந்தார்.

அவர் பரிபூரணமான இடத்தில் லிங்கம் அமைத்து ஆலயம் உருவாக்கப் பட்டுள்ளது. ஜீவசமாதி ஆலயங்களில் இந்த ஆலயம் மிகப்பெரியதாக உள்ளது. சதானந்த சுவாமிகளின் அடுத்தடுத்த சீடர்கள் நாராயணசாமி, பாலுசாமி உள்பட 7 பேர் அங்கு ஜீவ ஐக்கியம் ஆகி இருக்கிறார்கள்.

அதனால்தானோ என்னைவோ அங்கு அல்லல் தீர்க்கும் ஆனந்த அதிர்வலைகள் அதிகம் காணப்படுகிறது. அந்த ஜீவசமாதி பகுதிக்குள் காலடி எடுத்து வைத்ததுமே மனதில் அமைதி தேடி வந்து ஒட்டிக் கொள்கிறது. ஏழை சிறுவர்களின் படிப்புக்கு உதவியும், கோசாலை நடத்தியும் சதானந்தர் மடம் சிறப்பாக செயல்பட்டு வருகிறது. மாதம் ஒரு தடவை மகம் நட்சத்திரம் தினத் தன்று இங்கு சிறப்பு வழிபாடுகளும் அன்னதானமும் நடத்தப்படுகிறது.

மகம் நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் இங்கு அன்னதானத்துக்கு உதவி செய்தால் சதானந்த சுவாமிகளின் முழு ஆசியையும் பெறலாம்.

இந்த ஜீவ சமாதி ஆலயம் பெருங்களத்தூர் பஸ் நிலையத்தில் இருந்து சுமார் 2 கி.மீ. தொலைவில் சதானந்தபுரத்தில் உள்ளது. மிக எளிதாக சென்று ஆத்ம ஞானம் பெறலாம். இரண்டே இரண்டு ஊதுபத்தி ஏற்றி தியானம் செய்தால் சதானந்த சுவாமிகள் உங்களுக்குள்ளும் வந்து அற்புதம் செய்வார். ஆத்மார்த்தமாக செய்தால் அந்த பலனை அனுபவிக்கலாம்.





# 17. ஸ்ரீ இசக்கி சுவாமிகள்

திருவண்ணாமலை

17. ஸ்ரீ இசக்கி சுவாமிகள்

திருவண்ணாமலையில் கிரிவலம் எப்போது தொடங்கியது? யாருக்கும் தெரியாது. உமையாளே... முதன் முதலாக கிரிவலம் செய்ததாக புராணங்களில் குறிப்பு உள்ளது.

திருவண்ணாமலை மலையை ஒரு தடவை சுற்றி வர சுமார் 3 மணி நேரம் முதல் 4 மணி நேரமாகும். சிலர் 5 மணி நேரமாக நடப்பார்கள். சிலர் 2 மணி நேரத்தில் கூட சுற்றி முடித்து விடுவதுண்டு. ஆனால் வெகு சிலருக்கு மட்டுமே கிரிவலம் வரும் போது சித்தர்களை உணரும் புண்ணியம் கிடைக்கும்.



ஸ்ரீ இசக்கி சுவாமிகள்

மகத்துவம் மிகுந்த இந்த கிரிவலம், இடையில் சில நூற்றாண்டுகள் மக்களிடம் நடைமுறையில் இல்லாமல் போய் விட்டது. சிவன் அருளால் கடந்த நூற்றாண்டில் கிரிவலம் மீண்டும் புத்துயிர் பெற்றது. அதற்கு காரணமாக இருந்தவர் இசக்கி சுவாமிகள்.

“வா என்றழைக்கும் மலை திருவண்ணாமலை” என்பார்கள். அதாவது அடியார்களை பொறி வைத்துப் பிடித்து ஈர்த்துக் கொள்ளும் சக்தி,

திருவண்ணாமலைக்கு உண்டு என்பார்கள்.

இசக்கிசாமி சுவாமிகளும் அப்படி திருவண்ணாமலையால் ஈர்க்கப் பட்டவராவார். இவர் திருவண்ணாமலையில் கிரிவலத்தை 1008 தடவை உருண்டே..... அங்க பிரதட்சணமாக செய்தவர். நடப்பதற்கே நான்கு மணி நேரமாகும்போது அங்கப் பிரதட்சணமாக உருண்டபடியே 16 கி.மீ கிரிவல பாதை தொலைவை கடப்பதை கொஞ்சம் கற்பனை செய்து பார்த்தால் பிரமிப்பாக இருக்கும்.

இந்த பிரமிப்பை ஏற்படுத்திய இசக்கி சுவாமிகள்தான் கிரிவல மகிமையை மக்கள் மத்தியில் மலரச் செய்தார். இதற்காக இவரை 13 வயதிலேயே ஈசன் ஆட்கொண்டு விட்டார்.

இசக்கி சுவாமிகளின் பூர்வீகம் தூத்துக்குடி மாவட்டம் ஸ்ரீவைகுண்டம் அருகில் உள்ள விட்டலாபுரம். செல்லப்பெருமாள் பிள்ளை—முத்தம்மாள் தம்பதியரின் மகனாக அவர் 1917—ம் ஆண்டு பிறந்தார். செல்லப்பெருமாள் பிள்ளை தீவிர சிவபக்தர். 1930—ம் ஆண்டு அவர் திருவண்ணாமலையில் கார்த்திகை தீபம் பார்க்க குடும்பத்தோடு வந்தார். அப்போது இசக்கி சுவாமிகளுக்கு பதிமூன்று வயது. ஸ்ரீவைகுண்டத்தில் இருந்து அவர்கள் பல நாட்களாக நடந்து திருவண்ணாமலை வந்து சேர்ந்தனர்.

அன்றே அவர்கள் கிரிவலம் செய்தனர். திருவண்ணாமலை கிரிவலப் பாதையில் மொத்தம் 8 லிங்கங்கள் உள்ளன. அந்த லிங்கங்களை தரிசனம் செய்தபடி செல்லப்பெருமாள் பிள்ளை தன் குடும்பத்தினருடன் நடந்து கொண்டிருந்தார். நான்காவது லிங்கமான நிருதி லிங்கம் அமைந்துள்ள பகுதிக்கு வந்தபோது சிறுவனாக இருந்த இசக்கிக்குள் ஏதோ ஒரு மன உந்துதல் ஏற்பட்டது. சிவபெருமான் அந்த இடத்தில் வைத்துதான் இசக்கியை ஈர்த்தார் என்று சொல்கிறார்கள்.

நிருதி லிங்கத்தை சுற்றி வந்தபோது இசக்கியின் உள்மனம் எண்ண அலைகளால் கொந்தளித்தது. ‘‘போகாதே.... நில்.... இங்கேயே உட்கார். மனதை ஒருமுகப்படுத்தி என்னையேப் பார்.... தியானம் செய்.....’’ என்ற குரல் இசக்கி மனதுக்குள் எதிரொலித்தது.

சிறுவன் இசக்கி ஒரு நிமிடம் தடுமாறிப் போனான். என்ன செய்வது என்று தெரியவில்லை. அங்கேயே உட்கார மனம் சொல்கிறது. ஆனால் இவை ஏதும் அறியாத செல்லப்பெருமாள் பிள்ளை வேகமாக நடந்தபடி இசக்கியை இழுத்துக் கொண்டு சென்று விட்டார். பவுர்ணமி ஒளியில் மலையின் தென்பாகம் சிவனும் பார்வதியுமாக இசக்கிக்குத் தெரிந்தது. மலையின் மேற்கு பகுதி மூன்று மலைகளாக ஆக்கல், காத்தல், அழித்தல் என்பதை உணர்த்துவதாகத் தோன்றியது. அடி அண்ணாமலை, குபேர லிங்கத்தை கடந்தபோது மலை பஞ்சமுகமாகக் காட்சி அளித்தது.

இந்த மலைப் பகுதி சிவனின் ஐந்து முகத்தை பிரதிபலிக்கிறது. மேற்கு முகம் ஆக்கலையும், வடக்கு முகம் காத்தலையும், தெற்கு முகம் அழித்தலையும், கிழக்கு முகம் மறைத்தலையும், மேல் நோக்கிய முகம் அருள்வதையும் குறிக்கிறது.

இந்த பஞ்சமுகம் அருகில் வந்ததும், இசக்கி மனம் குளிர்ந்தது. அந்த இடத்தில் அவருக்கு ஈசனின் திருக்கயிலாயத் தரிசனம் கிடைத்தது. அங்கு அமர்ந்து ‘‘தியானம் செய்’’ என்று அவர் உள்மனதில் மீண்டும் குரல் ஒலித்தது. ஆனால் பெற்றோரிடம் அவரால் அந்த வயதில் எதையும் சொல்லத் தெரியவில்லை. திருவண்ணாமலையில் கார்த்திகை தீப திருவிழாவில் கலந்து கொண்டு விட்டு, பல்வேறு தலங்களுக்குச் சென்று வழிபட்டு, அவர்கள் ஊர் திரும்பினார்கள்.

ஊரில் பள்ளிப் படிப்பை முடித்த இசக்கிக்கு திருமணமும் நடந்தது. என்றாலும் அவர் மனம் மட்டும் திருவண்ணாமலையை நினைத்தபடியே இருந்தது. இடையிடையே திருவண்ணாமலை வந்து சென்ற அவர் 1959—ம் ஆண்டு ஆவணி மாதம் திருவண்ணாமலை வந்த பிறகு, மீண்டும் ஊருக்கு திரும்பிச் செல்லவில்லை. திருவண்ணாமலையிலேயே தங்கி விட்டார். பஞ்ச முக தரிசன பகுதியில் தியானத்தில் ஆழ்ந்து விடும் இசக்கி சுவாமிகள், தினமும் கிரிவலம் வருவதை வழக்கமாக்கினார். கைகளை தலைக்கு மேல் உயர்த்தி கூப்பியப்படி ‘‘ஓம் நமசிவாய’’ என்ற பஞ்சாட்சர மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே கிரிவலம் வருவார். சில நாட்கள் காலை, மாலை இரு தடவை கிரிவலம் வருவார். சில தடவை உருண்டபடி அங்க பிரதட்சணமாக கிரிவலம் வருவார்.

மற்ற நேரங்களில் வெயிலானாலும் சரி, மழையானாலும் சரி பஞ்சமுகம் தரிசனம் பகுதியில் ஒரு கல் மீது ஏறி ஒற்றைக் காலில் நின்றபடி தியானத்தில் ஆழ்ந்து விடுவார். இதனால் அவருக்கு "பஞ்சமுக சுவாமிகள்" என்ற பெயர் ஏற்பட்டது. இசக்கி சுவாமிகளின் கிரிவல செயல்களால், அவர் புகழ் தமிழ்நாடு முழுவதும் பரவியது. தினமும் நூற்றுக்கணக்கானவர்கள் திருவண்ணாமலை வந்து இசக்கி சுவாமிகளுடன் சேர்ந்து கிரிவலம் செல்வதை பாக்கியமாகக் கருதினார்கள்.

இசக்கி சுவாமிகள் முன்னே நடந்து செல்ல, அவர் பின்னால் ஏராளமானோர் "அரோகரா அண்ணாமலையாருக்கு அரோகரா....." என்றபடி கிரிவலம் சென்றனர். அப்படி செல்லும் போது சித்தப்புருஷர்களையும், யோகிகளையும் இசக்கி சுவாமிகள் காண நேரிட்டது. அந்த சித்தர்களின் பார்வை பட, பட இசக்கி சுவாமிகளும் மகிமை வாய்ந்த சித்தராக மாறினார்.

பஞ்சமுக தரிசன பகுதியில் தியானம் இருக்கும்போது, அவர் என்ன சொல்கிறாரோ, அதெல்லாம் நடந்தது. நிறைய பேர் இசக்கி சுவாமிகளின் அருள்வாக்கால் செல்வந்தர்களாக மாறினார்கள். அவர் கையால் திருநீறு பெற்றவர்களின் நோய்கள் நீங்கியது. இதனால் அவரைத் தேடி வருபவர்கள் எண்ணிக்கை அதிகரித்தது.

அவர்கள் தங்கள் குறையைச் சொன்னதும், "நீ 10 தடவை கிரிவலம் செய்", "நீ 30 தடவை கிரிவலம் செய்" என்பார். அவர் சொன்னபடி கிரிவலம் செய்து முடிக்கப்படும்போது, பக்தர்களின் குறைகள் நீங்கி இருக்கும். இப்படி இசக்கி சுவாமிகள் சொல்ல... சொல்ல கிரிவலம் செய்யும் பக்தர்கள் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்தது. இதன் மூலம் திருவண்ணாமலையில் சில நூற்றாண்டுகளாக தடைபட்டிருந்த கிரிவலம் மீண்டும் புத்துயிர் பெற்றது. இன்று உலகம் முழுக்க திருவண்ணாமலை கிரிவலம் புகழ் பெற்றிருக்கிறது என்றால் அதற்கு இசக்கி சுவாமிகளின் வழி காட்டுதலும் ஒரு காரணமாகும்.

தன்னை நாடிவரும் பக்தர்களிடம், "கிரிவலம் தான் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் தீர்வு தரும்" என்று அடிக்கடி இசக்கி சுவாமிகள் சொல்வார். சிலரை அவர் 144 நாட்கள் கூட கிரிவலம் வரச் சொல்லியதுண்டு.




1975—ம் ஆண்டு பஞ்சமுகத்தருகே ஒரு பாறை மீது மணிக்கணக்கில் அவர் கடும் வெயிலில் தன்னை மறந்து தியானத்தில் ஆழ்ந்ததை பக்தர்கள் ஆச்சரியத்தோடு பார்த்தனர். அது போல மற்றொரு தடவை அடி அண்ணாமலையார் கோவில் வடக்கு பகுதியில் உள்ள கவச தீர்த்த கரையில் அவர் கடும் விரதம் இருந்தார். அந்த விரதத்துக்கு மனம் இரங்கி, அந்த இடத்தில் அவருக்கு சிவபெருமான் காட்சியளித்ததாக கூறப்படுகிறது.

குளிர் அடித்தாலும் சரி, வெயில் அடித் தாலும் சரி 'சிவாய நம ஓம்' என்று சொல்லிய படி மலையில் சுற்றிய படி இருப்பார். ஒரு தடவை மலை மீது அவர் சுற்றி வந்தபோது வழி தெரியாமல் எங்கோ சென்று விட்டார். இருளில் தவித்த அவரை விறகு வெட்டி வேடத்தில் சிவபெருமான் கீழே அழைத்து வந்ததாக சொல்கிறார்கள்.

25 ஆண்டுகளுக்கும் மேலாக திருவண்ணாமலை ஈசனே கதி என்று கிடந்த இவர், ஒருநாள் கூட கிரிவலம் செல்லாமல் இருந்ததே இல்லை. 1986—ல் அவர் திருவண்ணாமலை மலை அடிவாரத்தில் தன் உடம்பில் உள்ள காற்றை நிறுத்தி விட்டு சிவனுடன் கலந்து விட்டார். அவர் எப்போதும் பஞ்சமுக தரிசனப் பகுதியில் தியானம் இருந்ததால், அவருக்கு அங்கு ஜீவசமாதி அமைக்கப்பட்டது. அடுத்த தடவை திருவண்ணாமலை கிரிவலத்துக்கு செல்லும்போது, குபேர லிங்கம் கடந்ததும் தயாராகி விடுங்கள். இசக்கி சுவாமிகள் ஜீவசமாதியில் மறக்காமல் வழிபடுங்கள்.

நீங்கள் இஷ்டப்பட்டதெல்லாம், இடையூறு இல்லாமல் நிறைவேற காண்பீர்கள்.





# 18. ஸ்ரீ தேங்காய் சித்தர்

புதுச்சேரி

## 18. ஸ்ரீ தேங்காய் சித்தர்

தேங்காயை உடைத்தால் சட்னி வைக்கலாம். நமக்கு தெரிந்தது இதுதான். ஆனால் தேங்காயை உடைத்தால், அதனுள் தோன்றும் காட்சிகள் மூலம் எல்லாவித பிரச்சினைகளையும் தீர்த்துக் கொள்ள முடியும் என்ற அற்புதத்தை ஒரு சித்தர் நிகழ்த்திக் காட்டினார்.



ஸ்ரீ தேங்காய் சித்தர்

சித்தர்களின் உறைவிடமாகத் திகழும் ஞான பூமியான புதுச்சேரியில் இந்த தேங்காய் சித்தர் வாழ்ந்தார்.

ஏராளமானவர்களை தன் பால் ஈர்த்த இந்த அபூர்வ சித்தர், தேங்காயை உடைக்க, உடைக்க தன்னை நாடி வந்தவர்களின் பிரச்சினைகளையும்

உடைத்தார். ஆயிரக்கணக்கானவர்கள் அவரால் புதிய வாழ்வு பெற்றனர்.

அதிசய சித்தராக வாழ்ந்து மறைந்த இவரது ஜீவசமாதி புதுச்சேரி வில்லியனூர் தட்டாஞ்சாவடியில் உள்ளது. அவரது அற்புதம் இன்றும் பேசப்படுகிறது. இதனால் ஏராளமானோர் அவர் ஜீவ சமாதிக்கு வந்து தேங்காயை உடைத்து வைத்து வழிபாடு செய்து செல்கிறார்கள்.

சமீபத்தில் அந்த ஜீவ சமாதி ஆலயத்துக்கு சென்றிருந்தோம். குடில் போல இருந்த அவரது ஜீவசமாதி, தற்போது சிறு ஆலயமாக கட்டப்பட்டுள்ளது.

தற்போதும் உயிர்த் துடிப்புடன் அருள் மழை பொழிந்து வரும் இந்த சித்தர் புதுச்சேரி மக்களிடம் தன்னைப் பற்றிய எந்த தகவலையும் சொன்னதில்லை. இதனால் அவரது உண்மையான பெயர் என்ன என்பது கூட யாருக்கும் தெரியாமலே போய் விட்டது.

நீண்ட நாட்களுக்குப் பிறகே, இந்த சித்தர் சென்னையைச் சேர்ந்தவர் என்பது தெரிய வந்தது.

சென்னையில் சிறு வயதில் அவர் எங்கு வாழ்ந்தார்? அவருக்கு எப்படி ஆத்ம ஞான தாகம் ஏற்பட்டது? சித்தப்புருஷராக அவர் எப்படி தன்னை மேம்படுத்தி கொண்டார்? புதுச்சேரிக்கு எப்படி, எப்போது வந்தார்? புதுச்சேரி மண்ணை ஏன் விரும்பினார்? — இப்படி அடுக்கடுக்கான எந்த கேள்விக்கும் விடை கிடைக்கவில்லை.

ஒரு தடவை சித்தர் தம் குடும்பத்தினருடன் மலேசியா நாட்டுக்குச் சுற்றுப்பயணம் சென்றிருந்தாராம். அங்கு அவர் திடீரென காணாமல் போய் விட்டார். மலேசியாவில் எங்கு தேடியும் அவர் கிடைக்கவில்லை. இதனால் அவர் குடும்பத்தினர் ஏமாற்றத்துடன் நாடு திரும்பினார்கள்.

சில ஆண்டுகள் கழித்து, மலேசியாவில் காணாமல் போன அவர் புதுச்சேரியில் சித்தராக வலம் வருவதை அவரது உறவினர்கள் கண்டு ஆச்சரியப்பட்டனர். மலேசியாவில் இருந்து அவர் எப்படி புதுச்சேரிக்கு வந்தார் என்பதற்கு இது வரை விடை கிடைக்கவில்லை. புதுச்சேரி உழவர்கரையில்தான் இவர் முதன் முதலில் மக்களிடம் தன்னை வெளிப்படுத்திக் கொண்டார். அங்கு ஒரு வீட்டின் திண்ணையில் சில நாட்கள் தங்கி இருந்தார்.

பிறகு அவர் அங்கிருந்து வெளியேறி தற்போது ஜி.என்.பாளையம் என்று அழைக்கப்படும் குருவப்ப நாயகர் பாளையம் எனும் பகுதிக்கு வந்தார். அந்த பகுதி மக்கள் அவரை வரவேற்று ஆதரித்து, ஆசி பெற்றனர்.

சில நாட்கள் கழித்து வில்லியனூர் தட்டாஞ்சாவடி சுல்தான் பேட்டை என்று அலைந்து கொண்டிருந்தார். ஒரு கட்டத்தில் அவர் ஆழ்ந்த தியானம் செய்ய ஆரவாரம் இல்லாத இடத்தை தேடினார்.

அப்போது வில்லியனூர், தட்டாஞ்சாவடியில் மணவெளி கிராமம் பகுதியில் தண்டுகார மேடு என்ற சாலையோரக் காட்டுப்பகுதி அவருக்கு பிடித்துப் போனது. அங்கு அவர் தங்கியிருக்க அந்த பகுதி மக்கள் சிறு குடிசை ஒன்று அமைத்து கொடுத்தனர்.

அந்த பகுதி இஸ்லாமிய பெருமக்கள் அவரை மகிழ்ச்சியோடு ஆதரித்தனர். அவருக்கு தினமும் உணவு கொடுத்தது அவர்கள்தான்.

முதலில் தேங்காய் சித்தர் தன்னைத் தேடி வந்தவர்களுக்கு மூலிகை சிகிச்சையே அளித்தார். தீர்க்க முடியாத நோய்களுக்கு கூட அவர் மூலிகை மருந்து கொடுத்து குணப்படுத்தினார்.

அவர் தயாரித்த பச்சிலை மூலிகைகளுக்கு எல்லா நோய்களும் கட்டுப்பட்டன. அவர் கைப்பட்டாலே நோய்கள் பறந்தோடி விடுவதாக மக்களிடம் நம்பிக்கை பரவியது.

ஆனால் சில ஆண்டுகளில் அவரது மருத்துவப் பணி குறைந்தது. அவர் ஆத்ம ஞானம் மூலம் மக்களின் துயர்களை துடைக்கத் தொடங்கினார்.

பிரச்சினை என்று மனத் துயரத்துடன் வருபவர்களிடம் முழு தேங்காயை வாங்கி வரச் சொல்வார். அந்த தேங்காயை இரண்டாக உடைப்பார்.

அந்த தேங்காய் நேர் கோடு போட்டது போல கன கச்சிதமாக சரி சமமாக உடைந்து விட்டால்... இன்றோடு உன் பிரச்சினை முடிந்தது, போய் வா என்பாராம். அவர் சொன்னது போலவே பிரச்சினைகள் தீர்ந்தன. தேங்காய் சற்று மாறுபட்டு இரண்டாக உடைந்தால் ஏதோ பிரச்சினை இருக்கிறது என்று அர்த்தமாம். உடனே அவர் தேங்காய் மூடியின் உள்ளே பார்ப்பார்.

தேங்காய்க்குள் நீல நிறத்தில் பென்சிலால் எழுதியது போல எழுத்துக்கள் தெரியும். சித்தரின் கண்களுக்கு மட்டுமே அந்த எழுத்துக்கள் தெரியும்.

மற்றவர்களின் கண்களுக்கு அந்த எழுத்துக்கள் தெரியாது. அந்த எழுத்துக்களை வாசித்து, பிரச்சினைக்கு சித்தர் தீர்வு கூறுவார். பிறகு அந்த தேங்காய் மூடிகளில் ஒன்றை வந்தவரிடம் கொடுத்து அதை பூஜை அறையில் வைத்து வழிபட்டு வரச் சொல்வார். அந்த தேங்காய் மூடியை வழிபட, வழிபட பிரச்சினைகள் விலகி ஓடி விடும்.



தேங்காய் சித்தரின் ஜீவ சமாதி (பழைய தோற்றம்).

தினமும் நூற்றுக்கணக்கானவர்களின் பிரச்சினையை அவர் இப்படி தேங்காயை உடைத்துப் பார்த்து தீர்த்து வைத்தார். இதனால் நாளுக்கு நாள் அவரை நோக்கி தேங்காயும் கையுமாக நிறைய பேர் திரண்டனர்.

சில சமயம் சிலர் கொண்டு வரும் தேங்காயில் எதிர்காலத்தில் நடக்கப் போகும் சம்பவங்கள், திரைப்படக் காட்சி போல தெரியுமாம். அந்த காட்சியைப் பார்த்து இப்படி நடக்கப் போகிறது என்று சொல்வாராம். சில நாட்களில் அது மிகத் துல்லியமாக அப்படியே நடக்குமாம்.

இந்த அதிசயத்தால் மக்கள் அவரை தேங்காய் சித்தர் என்றும் தேங்காய் சுவாமிகள் என்றும் அழைத்தனர். நாளடைவில் அவருக்கு இந்த பெயர்களே நிலைத்து விட்டது.

தேங்காய் சித்தரின் புகழ் மிகக் குறுகிய காலத்தில் உலகம் முழுவதும் பரவியது. பிரான்ஸ் நாட்டில் வசித்து வந்த புதுச்சேரி நெல்லித்தோப்புப் பகுதியைச் சேர்ந்த கப்லே என்பவருக்கும் தேங்காய் சித்தரின் மகிமை தெரிய வந்தது. கப்லே மிகக் கொடிய நோய் ஒன்றால் கடும் அவதிப்பட்டு வந்தார். பிரான்சில் உள்ள உயர் டாக்டர்களிடம் காண்பித்தும் அவர் நோய் குணமாகவில்லை.

தேங்காய் சித்தரை பார்க்கலாம் என்று நினைத்த அவர் உடனே பிரான்சில் இருந்து புதுச்சேரிக்கு புறப்பட்டு வந்து விட்டார்.

ரோட்டோரத்தில் புதர்கள் நிறைந்த பகுதியில் சாதாரணமாக இருந்த தேங்காய் சித்தரைப் பார்த்ததும் இவரால் எப்படி நோய் குணமாகும் என்ற சந்தேகம் கப்லேக்கு தோன்றியது. சரி.... வந்தது வந்து விட்டோம்... பார்க்கலாம் என்று சித்தர் முன்பு போய் நின்றார். தனக்கு வந்துள்ள நோய் பற்றி விளக்கமாக கூறினார். அது கேட்டு புன்னகைத்த சித்தர் ஏதோ ஒரு பச்சிலையை எடுத்து கசக்கி சாறு எடுத்தார். மூன்று நாட்கள் உடலில் தேய்க்கும்படி கூறினார்.

நான்காவது நாள்... கப்லே புது மனிதராக இருந்தார். அவரை பல ஆண்டுகளாக வாட்டி வதைத்துக் கொண்டிருந்த நோய் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது.

ஆச்சரியத்தால் கப்லேக்கு எதையும் நம்ப முடியவில்லை. தேங்காய் சித்தரின் காலில் விழுந்த அவர், ‘‘சாமீ.... உங்களுக்கு என்ன வேணும் கேளுங்க... செய்து தருகிறேன்’’ என்றார். சித்தரோ எதுவும் வேண்டாம் என்றார்.

கப்லே விடவில்லை. ‘‘என் நோயை குணப்படுத்திய உங்களுக்கு நான் ஏதாவது செய்ய வேண்டும். என்ன வேண்டும் சொல்லுங்கள்’’ என்று பிடிவாதமாக கேட்டார்.

அவர் வற்புறுத்தலை மீற முடியாத சித்தர், ‘‘சரி... கடைசிக் காலத்தில் நான் இருக்க ஒரு இடம் வாங்கிக் கொடு’’ என்றார். உடனே கப்லே, ‘‘சாமீ... இப்ப நீங்க இருக்கிற இந்த இடத்தையே வாங்கித் தந்து விடட்டுமா,’’ என்று கேட்டார்.

அதற்கு சித்தர், ‘‘இந்த இடம் வெளிச்சமா மாறப் போவுது. அதனால் இந்த இடம் வேண்டாம்’’ என்றார்.

(சித்தர் கூறியது போல அவர் அமர்ந்திருந்த இடத்தில்தான் தற்போது வில்லியனூர் துணை மின் நிலையம் அமைந்துள்ளது. பல ஆண்டுகளுக்கு முன்பே இந்த இடம் இப்படி மாறப் போகிறது என்பதை அறிந்துதான் சித்தர் அந்த இடம் வெளிச்சமாகப் போகிறது என்றது ஆச்சரியப்பட வைக்கிறது)


ஜீவ சமாதி புதிய தோற்றம்

சித்தர் அந்த இடம் வேண்டாம் என்றதும், ‘‘உங்களுக்குப் பிடித்த இடத்தை நீங்களே தேர்வு செய்து காட்டுங்கள்’’ என்றார் கப்லே.

உடனே தேங்காய் சித்தர் எழுந்து நடந்தார். தற்போது ஜீவசமாதி உள்ள இடத்தைக் காட்டி இதை வாங்கிக் கொடு என்றார்.

கப்லேயும் அந்த இடத்தை வாங்கிக் கொடுக்க அங்கே தேங்காய் சித்தர் இடம் மாறினார். அந்த இடத்தில் இருந்தபடி அவர் ஏராளமான அற்புதங்களை நடத்தினார்.

ஒருநாள் அந்த பகுதியைச் சேர்ந்த சில இளைஞர்கள் சித்தரை சோதித்துப் பார்க்க முடிவு செய்தனர். பச்சை மட்டையில் ஒருவனை செத்து விட்டவன் போல படுக்க வைத்து தூக்கி வந்தனர்.

‘‘அய்யா... இவன் செத்து விட்டான். இவனுக்கு உங்கள் ஆற்றலைப் பயன்படுத்தி உயிர் கொடுங்கள்’’ என்றனர்.

சித்தர் அந்த இளைஞர்களை பரிதாபமாகப் பார்த்தார். ‘‘ஆமாண்டா இவன் விதி முடிந்து விட்டது. செத்துட்டான். தூக்கிட்டுப் போங்க’’ என்றார்.

அதைக் கேட்டு இளைஞர்கள் ஒருவரைப் பார்த்து ஒருவர் சிரித்தனர். அப்போது சித்தர் அவர்களிடம், ‘‘டேய்.... என்னை சோதித்தது போதும்டா.... நீங்கள் இவனை பச்சை மட்டையில் படுக்க வச்ச போதே பூநாகம் கடிச்சி செத்துப் போயிட்டாண்டா.... தூக்கிட்டுப் போங்கடா’’ என்றார்.

அதிர்ச்சி அடைந்த இளைஞர்கள் பதற்றத்துடன் அவனை எழுப்ப, அதன் பிறகே உண்மையிலேயே அவன் பாம்பு கடித்து செத்துப் போயிருந்தது எல்லோருக்கும் தெரியவந்தது. இந்த சம்பவத்துக்குப் பிறகு தேங்காய் சித்தரை பரிசோதித்துப் பார்க்கும் துணிச்சல் யாருக்கும் வரவில்லை.

நோய்கள், பிரச்சினைகளை எளிதில் தீர்த்து வைத்த தேங்காய் சித்தர் பில்லி, சூனியம் போன்றவற்றை களைவதிலும் புகழ் பெற்றிருந்தார். சிலரது பில்லி – சூனியத்தை அவர் பாட்டிலுக்குள் அடைத்து காட்டுவதுண்டாம்.

இப்படி எளிதில் நம்ப முடியாதவைகளையெல்லாம் நிகழ்த்தி காட்டிய சித்தர் ஒருநாள், நான் போகப் போகிறேன் என்று தன் அருகில் இருந்தவர்களிடம் கூறினார். பிறகு யோக நிலையில் அ மர்ந்தார். அப்படியே பரிபூரணம் ஆகிவிட்டார்.

தேங்காய் சித்தர் ஜீவசமாதியான நாள் துல்லியமாகத் தெரியாததால் ஒவ்வொரு ஆண்டும் தை மாதம் பூசம் தினத்தன்று குரு பூஜை நடத்தி வருகிறார்கள்.

ஒவ்வொரு மாதமும் முதல் திங்கட்கிழமை சிறப்புப் பூஜை நடத்துகிறார்கள். இந்துக்கள் மட்டுமின்றி இஸ்லாமியர்களும் தேங்காய் சித்தரைத் தேடி வந்துஅருள் பெற்றுச் செல்கிறார்கள். இந்த ஜீவ சமாதியில் தேங்காய் உடைத்து வைத்து வழிபட்டால் நிச்சயம் பிரச்சினைகள் தீரும் என்ற நம்பிக்கை உள்ளது.



# 19. ஸ்ரீ பாடகச்சேரி சுவாமிகள்

திருவொற்றியூர், சென்னை.

19. ஸ்ரீ பாடகச்சேரி சுவாமிகள்

“நான் மறைந்தாலும் என்னை நம்பி இருப்பவர்களுக்கு நான் என்றும் துணையாக இருப்பேன். என்னை நம்பாதவர்களுக்கும் நம்பிக்கை வரும் பொருட்டு உதவிகள் செய்வேன்” என்று தன்னைத் தேடி வந்தவர்களிடம் அடிக்கடி பாடகச்சேரி ராமலிங்க சுவாமிகள் சொல்வது வழக்கம்.

1876—ம் ஆண்டு அவதாரம் எடுத்து 1949—ம் ஆண்டு பரிபூரணம் ஆன இந்த சுவாமிகள் தம் வாழ்நாளில் நிகழ்த்திய அற்புதங்களும், சித்தாடல்களும் ஏராளம்.




மரணம் அடைந்த 3 பேரை விபூதி பூசி உயிர் பிழைக்க வைத்த சிறப்பு இவருக்கு உண்டு. அதில் இருந்து, இவர் எவ்வளவு பெரிய ஆற்றல் பெற்ற மகான் என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

பாடகச்சேரி ராமலிங்க சுவாமிகள் என்று சொல்லப்பட்டாலும் இவரது உண்மையான பெயர் என்ன என்று இதுவரை யாருக்கும் தெரியாது. கோவை மாவட்டம் மஞ்சம்பாளையத்தில் இவர் பிறந்தார்.

இவரது மூதாதையர்கள் ஆந்திர மாநிலம் அனந்த்பூர் மாவட்டத்தில் உள்ள உருவிகொண்டா எனும் கிராமத்தைச் சேர்ந்தவர்கள். அங்கிருந்து கோவை மாவட்டம் மஞ்சம் பாளையத்துக்கு வந்து குடியேறிய அவர்கள், திண்ணைப் பள்ளிக்கூடம் நடத்தினார்கள். இது தவிர கிராமங்களில் நடக்கும் சுபகாரியங்களை முன்நின்று செய்தும் வந்தனர். இதனால் கிராமங்களில் அவர்களுக்கு தனி மரியாதை இருந்தது.

அந்த வகையறாவில் கந்தசாமி – அர்த்தநாரி அம்மை தம்பதியரின் மகனாக 1876–ல் சுவாமிகள் பிறந்தார். ஆனால் அவர்கள் திடீரென மரணம் அடைந்ததால், சுவாமிகள் யாரும் இல்லாத ஆதரவற்றவராகினார்.

பல ஊர்களில், பல வேலைகள் செய்து எப்படியோ பிழைத்து வந்த அவர், கர்நாடகா மாநிலம் பெல்லாரியில் உள்ள செள்ளகுரிக்கி எனுமிடத்தில் இருந்த எரிதாதா சுவாமிகளிடம் போய் சீடராக சேர்ந்தார்.

அதுதான் சுவாமிகளின் வாழ்க்கையையே புரட்டிப் போட்டது. அப்போது சுவாமிகளுக்கு சுமார் 10 வயதுதான் இருக்கும். ஆனால் அவரது நடவடிக்கைகள் அனைத்தும் ஆத்ம ஞானம் பெற்றவர் போல இருந்தது.

நெற்றி நிறைய விபூதி பூசி இருப்பார். அவரது கண்கள் தீட்சண்ய மானவை. கூர்மையாக இருக்கும். உன்னிப்பாகப் பார்த்தால் அவர் கண்களில் இருந்து ஒளி வீசுவது போல இருக்கும்.

எரிதாதா சுவாமிகளும் இதை கவனிக்கத் தவறவில்லை. ‘‘இவன் சக்திவாய்ந்தவன்’’ என்பதை அவர் புரிந்து கொண்டார். இதனால் சுவாமிகளை சீடனாக ஏற்றுக் கொண்டு எல்லா யோக ரகசியங்களையும் சொல்லிக் கொடுத்தார்.

இதனால் 11 வயதிலேயே எல்லா யோகக் கலைகளையும் தெரிந்து கொண்டு புடம் போட்ட தங்கமாக சுவாமிகள் மிளிர்ந்தார். குறிப்பாக அந்த சிறு வயதிலேயே சுவாமிகள் நவகண்ட யோகத்தில் தேர்ச்சிப் பெற்றார். நவகண்ட

யோகம் என்பது 9 துவாரங்கள் உள்ள உடலை 9 துண்டுகளாக்கி சிவனை நினைத்து செய்யும் யோக முறைகளில் ஒன்றாகும். இந்த சித்தாடல் மிகவும் ஆபத்தானது என்று சொல்வார்கள். ஆனால் இளம் வயதிலேயே அந்த யோகத்தில் சுவாமிகள் வல்லமை பெற்றிருந்தார்.

ஒருநாள் சுவாமிகளை அழைத்த எரிதாதா சுவாமிகள், “உனக்கு இறைவன் அளித்துள்ள வாழ்வை பிறருக்கு பயன்படுத்த வேண்டும். எனவே இறைவனுக்கு இறை பணியையும், மக்களுக்கு பிணிகளை நீக்கும் பணியையும் செய்” என்றார்.

“அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்? எங்கிருந்து இந்த பணிகளை செய்ய வேண்டும்?” என்று ராமலிங்க சுவாமிகள் கேட்டார். அதற்கு எரிதாதா சுவாமிகள், “இப்போதே புறப்படு தெற்கு நோக்கிச் செல். உனக்குரிய இடம் வரும்” என்றார்.

குருவின் உத்தரவை ஏற்று ராமலிங்க சுவாமிகள் கர்நாடகாவில் இருந்து தெற்கு நோக்கி நடந்து தமிழ்நாட்டுக்கு வந்தார். தஞ்சை தரணியில் அகத்திய நதி எனப்படும் வெட்டாற்றின் கரையில் அமைந்துள்ள அமைதியான கிராமமான பாடகச்சேரிக்கு வந்தார். இங்கு வெட்டாறு தெற்கில் இருந்து வடக்கு நோக்கிப் பாய்வதால் அது காசிக்கு இணையான புனிதமான இடமாக கருதப்படுகிறது. அந்த ஊரின் அமைதி பிடித்துப் போகவே அங்கேயே நிரந்தர மாக தங்க முடிவு செய்தார். அப்போது சுவாமிகளுக்கு வயது 12. இந்த சிறு வயதில் சும்மா இருந்தால் யார் சோறு தருவார்கள்?

எனவே பாடகச்சேரிக்கு மேற்கே உள்ள பட்டம் எனும் கிராமத்தில் உள்ள பண்ணையார் வீட்டில் மாடுகளை மேய்க்கும் வேலையில் சேர்ந்தார். தினம் காலையில் காட்டுக்குள் மாடுகளை ஓட்டிச் சென்று அவைகளை மேய விட்டு, பிறகு மாலை வீட்டுக்கு கொண்டு வந்து சேர்க்க வேண்டும். இதுதான் சுவாமிகளுக்கு கொடுக்கப்பட்ட வேலை. சில ஆண்டுகள் அவர் இப்படி மாடுகளை பராமரிக்கும் பணியை செய்து வந்தார். தான் ஒரு சித்தப்புருஷர் என்பதை அவர் வெளிப்படுத்திக் கொள்ளவில்லை.

அந்தக் காலக் கட்டத்தில் வடலூர் வள்ளலார், சூட்சும ரூபமாக வந்து சுவாமிகளுக்கு ஞான உபதேசம் செய்து வைத்ததாக சொல்லப்படுகிறது.

இந்த ஞான உபதேசம் காரணமாக கூடு விட்டு கூடு பாய்வது, ஒரே நேரத்தில் 2 ஊர்களில் தோன்றுதல் உள்பட பல சக்திகள் கை வரப்பெற்றார்.

கால ஓட்டத்தில் அவருக்கு 17 வயதாகி இருந்தது. அந்த சமயத்தில் நேபாள மன்னரும், பைரவ உபாசகருமான ராஜாராம் சுவாமிகளின் ஆசியை பெறும் பாக்கியம் சுவாமிகளுக்கு கிடைத்தது. அதன் பயனாக பைரவ உபதேசத்தையும் சுவாமிகள் பெற்றார். எரிதாதா சுவாமிகள், வடலூர் வள்ளலார், பைரவ உபாசகர் ராஜாராம் சுவாமிகள் ஆகிய மூன்று பேரும் கொடுத்த உபதேசங்கள் ஒருங்கிணைந்ததால் ராமலிங்க சுவாமிகள் ஆத்ம ஞானத்தின் உச்சத்தைத் தொட்டார். அவர் பார்க்கும் பார்வையே பரிகாரத்தை தர வல்லது என்ற நிலைக்கு உயர்ந்தார்.

இதையடுத்து அவர் தன்னை வெளிப்படுத்தும் நிகழ்ச்சி நடந்தது.


ஜீவ சமாதி ஆலயம்

ஒருமுறை அவர் மாடு மேய்க்க போனார். மாலை நவ கண்ட யோகத்தில் ஈடுபட்டவர், அப்படியே அதில் ஆழ்ந்து விட்டார். மாடுகள் வீடு திரும்பாததால் சந்தேகம் அடைந்த பண்ணையார் தன் வேலைக்காரர்களை காட்டுக்குள் அனுப்பி பார்த்து வரச்சொன்னார்.

காட்டுக்குள் வந்தவர்கள் நவகண்ட யோகத்தில் இருந்த அதாவது உடம்பை 9 துண்டுகளாக பிரித்துப்போட்டு கொண்டிருந்த சுவாமிகளை பார்த்து அதிர்ச்சி அடைந்தனர்.

மாடு மேய்க்கும் இளைஞனை யாரோ வெட்டிப்போட்டு விட்டார்கள் என்று அலறியபடி ஊருக்குள் திரும்பி ஓடி வந்தனர்.

ஆனால் அடுத்த சில நிமிடங்களில் மாடுகளுடன் சுவாமிகள் திரும்பிக் கொண்டிருந்தார். அதன்பிறகே தன்னிடம் வேலை பார்க்கும் இளைஞன், சாதாரண நபர் அல்ல என்பதை பண்ணையார் உணர்ந்தார்.

சுவாமிகளை அழைத்தார். ‘‘தம்பி... நீங்க பெரிய மகான். அப்படிப்பட்ட உங்களை வேலை வாங்கினால், நான் பெரிய பாவம் செய்தவன் ஆகி விடுவேன்’’ என்று கூறி கையெடுத்துக் கும்பிட்டார்.

இதையடுத்து சுவாமிகள் அந்த பண்ணையார் வீட்டு வேலையில் இருந்து விலகினார். பாடகச்சேரிக்கு வந்த அவர் வெட்டாற்றுக்கு எதிர் திசையில் ஓரிடத்தில் வேல் நட்டி, ‘‘தண்டபாணி ஆலயம்’’ என்ற பெயரில் முருகன் கோவில் கட்டி வழிபட தொடங்கினார்.

முதலில் இறைபணியாகத் தொடங்கிய அவரது சேவை, நோய்களை தீர்க்கும் மருத்துவ சேவையாகவும், பசியைப் போக்கும் அன்னதான சேவையாகவும் மாறியது. பணக்காரர்கள், ஏழை—எளியவர்கள் என்று எல்லா தரப்பினரும் அவரைத்தேடி வந்தனர். அவர்களுக்கு மூலிகைகளும், விபூதியும் கொடுத்து நோய்களைத் தீர்த்து வைத்தார்.

இதனால் தினமும் நிறைய பேர் அவரைத் தேடி வந்தனர். பாடகச்சேரியில் இருந்து இந்த பணிகளை செய்ததால், அவரை எல்லோரும், ‘‘பாடகச்சேரி சுவாமிகள்’’ என்றழைத்தனர். நாளடைவில் அதுவே அவரது பெயராக மாறியது.

பாடகச்சேரி மக்களை அவர் ஆத்ம ஞானப்பாதைக்கு அழைத்து வந்தார். அன்னதானம் செய்ய வைத்தார். அது மட்டுமின்றி பாடகச்சேரியில் உள்ள ஆலயங்களையும், மடங்களையும் பராமரிக்க பிடி அரிசி திட்டத்தை மக்களிடம் அறிமுகம் செய்தார். ஒவ்வொரு வீட்டிலும் சமையல் செய்யும்

போது ஒரு பிடி அரிசியை தர்மத்துக்கு என்று எடுத்து வைப்பதே பிடி அரிசி திட்டமாகும். இதனால் அவர் புகழ் பரவியது.


சித்தரின் சிலை

1922—ம் ஆண்டு மற்றும் 1932—ம் ஆண்டுகளில் அவர் சுமார் 1 லட்சம் பேருக்கும் மேலானவர்களைத் திரட்டி அன்னதானம் வழங்கினார். தகவல்—தொடர்பு இல்லாத அந்த காலத்தில் அவர் அத்தனை பேரைத் திரட்டி அன்னதானம் கொடுத்தது பிரமிப்புடன் பேசப்பட்டது. அன்னதானம் மட்டுமின்றி அவர் நடத்திய பைரவ பூஜையும் மக்கள் மத்தியில் நம்ப முடியாத ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. பைரவ பூஜை என்றால் பைரவர் சிலைக்கு செய்யப்படும் அபிஷேக ஆராதனைகள் அல்ல.

நூற்றுக்கணக்கான நாய்களை ஓரிடத்தில் வரச்செய்து செய்யப்படும் பூஜையைத்தான் சுவாமிகள், “பைரவ பூஜை” என்று கூறி வந்தார். பைரவக்கடவுளின் அம்சமாகவும், வாகனமாகவும் நாய் இருப்பதால், நாய்களை வரவழைத்து பூஜை செய்வதை அவர் வழக்கத்தில் வைத்திருந்தார்.

நேபாள மன்னரும், பைரவ உபாசகருமான ராஜாராம் சுவாமிகள் காட்டிய வழியில் இந்த பைரவ பூஜை நடத்தப்பட்டது. அந்த பூஜையை சுவாமிகள் நடத்திய விதம் அலாதியானது. பைரவ பூஜை செய்வதற்கு முந்தைய தினம் மாலை பாடகச்சேரி அருகில் உள்ள சுற்றுவட்டார கிராமங்களுக்கு சுவாமிகள்

செல்வார். அங்குள்ள நாய்களைப் பார்த்து சிரித்தபடி ஏதோ சொல்லி விட்டு வருவாராம். மறுநாள் காலை 300 பேருக்கு சமையல் செய்யுங்கள் என்பார். அதன்படி வடை பாயாசத்துடன் சாப்பாடு தயாராகும். பிறகு வாழை இலை போட்டு அனைத்து வகை உணவுகளையும் பரிமாறுவார்கள்.

ஊரே திரண்டு அதைப்பார்த்துக் கொண்டிருக்கும் போது, சுவாமிகள் ஒரு சிறு கம்பால் தரையைத் தட்டுவார். அடுத்த வினாடி எங்கிருந்து தான் வருமோ, நூற்றுக்கணக்கான நாய்கள் வரிசையாக அங்கு வந்து விடும். ஒவ்வொரு இலை முன்பும் தலா ஒரு நாய் போய் நிற்கும். ‘‘ம்ம்.... சாப்பிடுங்கள்’’ என்று சுவாமிகள் சொன்னதும், இலையில் உள்ள உணவு வகைகளை நாய்கள் சாப்பிட தொடங்கும். சாப்பிட்டு முடித்த பிறகு அப்படியே, அதே இடத்தில் நாய்கள் நிற்கும்.

‘‘ம்ம்... நல்லா சாப்பிட்டீங்களா.... போய் வாருங்கள்’’ என்பார். உடனே அனைத்து நாய்களும் ஒன்றன் பின் ஒன்றாக அங்கிருந்து வெளியேறி செல்லும்.

ஒரே இடத்தில் சுமார் 300 நாய்களுக்கு சுவாமிகள் அடிக்கடி இப்படி பைரவ பூஜை நடத்தியதுண்டு. இந்த நாய்கள் எங்கிருந்தன? எப்படி பாடகச்சேரிக்கு வந்தன? எப்படி திரும்பிச் செல்கின்றன? என்பனவெல்லாம் நேரில் பார்த்த மக்களுக்கு மிகுந்த ஆச்சரியத்தை ஏற்படுத்தின. ஒரு இடத்தில் 2 நாய்கள் இருந்தாலே சண்டை போடுவது தவிர்க்க முடியாதது. ஆனால் 300 நாய்கள் ஓரிடத்தில் வந்து, சண்டை போடாமல் நின்று சாப்பிட்டு விட்டு செல்வதை மக்கள் நம்ப முடியாமல் பார்த்தனர்.

மக்களின் பார்வைக்குத்தான் அவை நாய்கள். ஆனால் சுவாமிகளுக்கு அந்த நாய்கள், தேவர்களாகவும், மனிதர்களாகவும் தெரிவார்களாம். இத்தகைய பூஜையை சுவாமிகள் அடிக்கடி நடத்தியதால் அவருக்கு ஸ்ரீபைரவ சித்தர் என்ற பெயரும் ஓட்டிக்கொண்டது.

சுவாமிகளிடம் மற்றொரு அபூர்வ ஆற்றலும் இருந்தது. அவர் தன்னிடம் உள்ள விபூதியை எடுத்து, ‘‘ஆபத்சகாயம்’’ என்று சொல்லி யார் மீது பூசி விடுகிறாரோ, அவரது நோய் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடும். இதை அறிந்த ராமநாதபுரத்தில் உள்ள விஜயபுரம் பகுதியைச் சேர்ந்த ஆதப்ப

செட்டியார், சுவாமிகளைத் தேடி வந்தார். அவருக்கு தொழு நோய் பாதித்திருந்தது.

சுவாமிகள் அவருக்கு திருநீறு பூசி விட்டு ஒரு குளிகையைக் கொடுத்தார். அதை சாப்பிட்ட சில நிமிடங்களில் ஆதப்ப செட்டியாரின் தொழுநோய் மறைந்து போனது.

இதனால் மகிழ்ச்சி அடைந்த ஆதப்ப செட்டியார் சுவாமிகளுக்காக பாடகச்சேரியில் மடம் ஒன்றைக் கட்டி கொடுத்தார். அந்த மடத்தில் இருந்து பாடகச்சேரி சுவாமி கள் இறைபணி செய்து வந்தபோது சில இளைஞர்கள் அவரை எதிரிபோல நினைக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது.

சுவாமிகள் தங்களுக்கு அறிவுரை கூறுவதை விரும்பாத அந்த இளைஞர்கள் பாடகச்சேரி சுவாமிகளை வெட்டிக்கொல்லத் திட்டமிட்டனர். அன்றைய தினம் சுவாமிகள் நவகண்ட யோகத்தில் இருந்தபோது அரிவாளுடன் வந்த இளைஞர்கள், சுவாமிகள் உடல் துண்டு, துண்டுகளாக சிதறி கிடப்பதை கண்டு அலறியடித்து ஓடினார்கள். இந்த சம்பவத்துக்கு பிறகு பாடகச்சேரி சுவாமிகள் கும்பகோணத்துக்கு இடம் மாறி அங்கு கிருஷ்ணப்பநாயக்கர் தெருவில் உள்ள கோதண்டபாணி என்பவர் வீட்டில் குடியேறினார்.

அங்கு சுமார் 10 ஆண்டுகள் தங்கியிருந்த சுவாமிகள் ஏராளமான ஆலயங்களில் திருப்பணிகளை செய்தார். 1923—ம் ஆண்டு கும்பகோணம் நாகேஸ்வரர் கோவில் கோபுரத்தை சீரமைத்து நன்கொடை வசூலித்து கும்பாபிஷேகம் நடத்தினார்.

அந்த கும்பாபிஷேகத்தின்போது அர்ச்சகர்களுக்கு முதல் உரிமை கொடுப்பதா? விஸ்வகர்மாக்களுக்கு முதல் உரிமை கொடுப்பதா? என்பதில் சர்ச்சை ஏற்பட்டு விழா நடப்பதில் முட்டுக்கட்டை ஏற்பட்டது.

பிரச்சினை கோர்ட்டுக்கு சென்றதால் திட்டமிட்டப்படி கும்பாபிஷேகத்தை நடத்த முடியுமா என்ற சந்தேகம் ஏற்பட்டது. உடனே பாடகச்சேரி சுவாமிகள் சிலரை அழைத்து தன்னை ஆடிப்புரம் அம்மன் சன்னதிக்குள் வைத்து பூட்டும்படியும், மீண்டும் மாலை திறக்கும்படியும் கூறினாராம்.

அதன்படி சுவாமிகளை அந்த அறைக்குள் வைத்து பூட்டி விட்டு திறந்தபோது கும்பாபிஷேகம் நடத்த சென்னை ஐகோர்ட் நீதிபதி கொடுத்த அனுமதி

கடிதத்துடன் அவர் சிரித்தபடி வெளியில் வந்தார். அவர் கும்பகோணத்தில் மறைந்து, சென்னையில் தோன்றி கோர்ட்டு உத்தரவை வாங்கி வந்ததை அறிந்து பக்தர்கள் ஆச்சரியத்தில் உறைந்தனர். ஒரு நாள் கும்பகோணம் முன்னாள் சேர்மன் ராமநாத அய்யரின் மனைவி மரணம் அடைந்த தகவல் அறிந்து சென்றார். எல்லோரும் அழுவதைக் கண்ட அவர், ‘‘ஏன் அழுறீங்க... அவளுக்கு இன்னும் ஆயுள் இருக்கு’’ என்று கூறி விபூதியை எடுத்துப் பூசினார். அடுத்த நிமிடம் அந்த அம்மாள், தூங்கி விழித்தவர் போல எழுந்தார்.

மற்றொரு தடவை தனக்கு சமையல் செய்து கொடுக்கும் பெண் மரணம் அடைந்தபோது, விபூதி பூசி உயிர் கொடுத்தார். அதுபோல வடலூரில் தைப்பூசம் விழாவில் கூட்ட நெரிசலில் சிக்கி உயிரிழந்த ஒருவரையும் விபூதி பூசி உயிருடன் எழுச் செய்தார்.

இப்படி அற்புதத்துக்கு மேல் அற்புதங்கள் செய்த பாடகச்சேரி சுவாமிகள் தன் இறுதி நாட்களில் சென்னை திருவொற்றியூருக்கு வந்து தங்கினார். 1949—ம் ஆண்டு ஆடிப்பூரம் தினத்தன்று அவர் திருவொற்றியூரில் பரிபூரணம் ஆனார்.

திருவொற்றியூரில் பட்டினத்தார் கோவில் தெருவில் உள்ள மடத்தில் பாடகச்சேரி சுவாமிகளின் ஜீவசமாதி உள்ளது. அந்த ஜீவசமாதி மீது லிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

வியாழக்கிழமைகளில் இங்கு விளக்கேற்றி பூஜை செய்தால் நியாயமான கோரிக்கைகள் நிறைவேறுகிறது. அதுபோல பாடகச் சேரியில் உள்ள மடத்திலும் சிறப்பு பூஜைகள் நடத்தப்படுகிறது. பவுர்ணமி தோறும் அங்கு 9 நாய்களுக்கு விருந்து கொடுக்கும் வழக்கம் உள்ளது. அங்கு நாய்களுக்கு விருந்து கொடுத்தால் பூர்வ ஜென்ம வினைகள் நீங்கும் என்பது நம்பிக்கையாக உள்ளது.





# 20.ஸ்ரீ சிதம்பரம் பெரிய சுவாமிகள்

வேளச்சேரி, சென்னை

20. ஸ்ரீ சிதம்பரம் பெரிய சுவாமிகள்

சென்னையில் ஒரு சித்தர், விபூதியைக் கொடுத்து அதை பணமாக மாற்றி அற்புதம் செய்தார்.

அந்த சித்தர் ஸ்ரீசிதம்பரம் பெரிய சுவாமிகள்.

சிதம்பரம் என்ற பெயர் வரும் வகையில் பல சித்தப் புருஷர்கள், மகான்கள் இருப்பதால் இவர் ஸ்ரீசிதம்பரம் பெரிய சுவாமிகள் என்று அழைக்கப்படுகிறார்.



அருட்தந்தை சித்தர் சிதம்பர பெரியசுவாமிகள்

வேளச்சேரியில் உள்ள தண்டீஸ்வரர் ஆலயத்தை சீரமைத்த போதுதான், அவர் விபூதியை பொட்டலம் போட்டுக் கொடுத்து, அதை பணமாகவும், தங்கக் காசாகவும் மாற்றி அற்புதம் செய்தார். சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்பு வேளச்சேரி பகுதி நெல் விளையும் பூமியாகவும் ரம்மியமான கிராமங்கள் கொண்ட பகுதியாகவும் இருந்த போது இந்த அற்புதம் நடந்தது.



ஸ்ரீ சிதம்பரம் பெரிய சுவாமிகள் ஆலய கோபுரம்

இந்த அற்புதத்தை நிகழ்த்திய ஸ்ரீசிதம்பரம் பெரிய சுவாமிகள் சிவ தொண்டு செய்வதற்காகவே இறைவனால் பூமியில் அவதாரம் எடுத்தவர். இவரது பூர்வீகம் திருச்சி அருகில் உள்ள அரியபாக்கம் எனும் ஊர். முனியப்பன்— பெரியநாயகி தம்பதியின் மகனாக இவர் பிறந்தார். இவருக்கு வீராசாமி என்று பெயரிட்டனர்.

ஆனால் 7 வயதிலேயே அவர் துறவு பூண்டார். 12—வது வயதில் ஊர், ஊராகச் சென்று சிவத் தொண்டு செய்யத் தொடங்கினார்.

எந்த ஊரில் சிவாலயம் சிதிலம் அடைந்து காணப்படுகிறதோ, அந்த ஊரில் தங்கி இருந்து திருப்பணிகள் செய்வார். அந்த ஆலயத்தை முழுமையாக சீரமைத்து முடித்ததும் அடுத்த ஊருக்குச் சென்று விடுவார். சிறு வயதிலேயே

அவருக்கு சித்த புருஷருக்குரிய ஆற்றல்கள் கைவரப் பெற்றிருந்ததால் அவரால் இந்த புனரமைப்புப் பணிகளை செய்ய முடிந்தது. அவருக்கு சிதம்பரம் பெரிய சுவாமிகள் என்ற பெயர் ஏற்பட்டது.

ஊர் ஊராக சென்ற அவர் 1840களில் சென்னை வேளச்சேரிக்கு வந்தார். அப்போது வேளச்சேரி, ‘‘வேதசிரோணி’’ என்று அழைக்கப்பட்டு வந்தது. அங்கிருந்த தண்டீஸ்வரர் ஆலயம் வழிபாடு இல்லாமல் சிதிலம் அடைந்து கிடந் ததைக் கண்டு சிதம்பரம் பெரிய சுவாமிகள் மனம் வேதனைப்பட்டது. அந்த சமயத்தில் அவருக்கு 90 வயது ஆகி இருந்தது.

ஒருநாள் அவர் கோவில் குளத்தில் நீராடி விட்டு வெளியில் வந்து கொண்டிருந்தபோது, ஒரு மூதாட்டி அருகில் வந்தாள். ‘‘இந்த ஆலயத்தை சீரமைக்க வேண்டியது உன் கடமை.உன்னால்தான் அது முடியும். அந்த திருப்பணியை நீ செய்’’ என்று கூறினாள்.

உடனே சிதம்பரம் பெரிய சுவாமிகள், ‘‘ஈசன் சித்தம் அதுவாயின், அது என் பாக்கியம்’’ என்றார். அதைக் கேட்டு சிரித்த மூதாட்டி நடந்து சென்று கொண்டிருந்தபோதே மறைந்து விட்டாள். அன்றிரவு சிதம்பரம் பெரிய சுவாமிகள் கனவில் தண்டீசுவரர் தலத்து அம்பாள் கர்ணாம்பிகை தோன்றினாள். ‘‘நான்தான் மூதாட்டி வடிவத்தில் வந்து உன்னிடம் திருப்பணி செய்யக் கூறினேன்’’ என்றாள்.

அம்பிகை தன் மீது கொண்ட அளவற்ற பாசத்தால் உருகிய சிதம்பரம் பெரிய சுவாமிகள் மறுநாளே தண்டீசுவரர் ஆலய சீரமைப்புப் பணியை செய்ய முடிவு செய்தார். சித்தப் புருஷர்கள் கையால் ஒரு பைசா கூட தொட மாட்டார்கள். ஸ்ரீசிதம்பரம் பெரிய சுவாமிகளும் அப்படித்தான் கையில் எதுவும் இல்லாமல் இருந்தார்.

பணம் இல்லாமல் எப்படி ஆலயத்தை சீரமைப்பது? வேளச்சேரி ஊர் மக்களிடம் கை ஏந்தினார்.

ஆனால் அவரை நம்பி ஒருவர் கூட பணம் கொடுக்க முன்வரவில்லை. திட்டி துரத்தி விட்டனர்.

அதற்காக கவலைப்படாத சுவாமிகள் மற்ற ஊர்களுக்கு சென்று யாசகம் மேற் கொண்டார். அந்த பணத்தை வைத்து சிறுசிறு திருப்பணிகளை செய்து

வந்தார்.

ஒருநாள் அலைந்த களைப்பு தீர்வதற்காக ஒரு மரத்தடியில் படுத்துத் தூங்கினார். அவர் முகத்தில் வெயில் பட்டது.

அப்போது அங்கு வந்த ஒரு நாகம் படம் எடுத்து அவர் முகம் மீது சூரிய ஒளி படாதபடி நின்றது. வயலுக்கு சென்று கொண்டிருந்த 2 விவசாயிகள் அதை பார்த்தனர்.

ஆச்சரியம் அடைந்த அவர்கள் ஊருக்குள் ஓடிச் சென்று அனைவரையும் அழைத்து வந்தனர். பாம்பு படம் விரித்துள்ள நிழலில் சுவாமிகள் அயர்ந்து தூங்குவதைக் கண்டு கிராமமே வியந்து நின்றது. இந்த சம்பவத்துக்குப் பிறகே தங்கள் ஊருக்கு வந்திருப்பவர் சாதாரண மகான் அல்ல... மிகப்பெரிய சித்தப்புருஷர் என்பதை புரிந்து கொண்டனர். சுவாமிகளிடம் மன்னிப்புக் கேட்ட ஊர் மக்கள், தண்டீஸ்வரர் ஆலய திருப்பணிக்கு தேவையான பொருள் உதவிகளை செய்தனர்.

ஒருநாள் மாலை சுவாமிகளிடம் கூலி கொடுக்க பணம் எதுவும் இல்லாத நிலை ஏற்பட்டிருந்தது. தொழிலாளர்கள் வேலை முடிந்து அவரிடம் வந்து நின்றனர். அவர்கள் கையில் ஆளுக்கு ஒரு விபூதி பொட்டலத்தை சுவாமிகள் எடுத்துக் கொடுத்தார்.

“இந்த பொட்டலத்தை இங்கு வைத்து பிரிக்காதீர்கள். வீட்டுக்குப் போய் பிரித்துப் பாருங்கள்” என்று உத்தரவிட்டார்.

அதன்படி தொழிலாளர்கள் வீடு திரும்பியதும் விபூதி பொட்டலத்தைப் பிரித்துப் பார்த்தனர். அதற்குள் இருந்த விபூதி அவரவர் உழைப்புக்கு ஏற்ற பணமாகவோ, தங்கக் காசாகவோ மாறி இருந்தது. இப்படி பல்வேறு அற்புதங்கள் செய்த சுவாமிகள் விரைவில் தண்டீஸ்வரர் ஆலயத் திருப்பணிகளை செய்து முடித்தார். இனி வேறு சிவஸ்தலத்துக்கு சென்று திருப்பணிகளை செய்யலாம் என்று முடிவு செய்தார்.

தண்டீஸ்வரர் ஆலயத்துக்குள் சென்று ஈசனை வழிபட்டு விட்டு புறப்பட்டார். கிழக்கு வாசலுக்கு வந்தபோது மிகப்பெரிய பாம்பு ஒன்று வாசல் மத்தியில் நின்று கொண்டு அவரை வெளியில் விட மறுத்தது. வேறு வழியாக

வெளியேறலாம் என்று நினைத்தபடி வடக்கு வாசலுக்கு சென்றார். அங்கும் அதே நாகம் வந்து நின்று அவரை வெளியேற விடாமல் தடுத்தது.



**கருவறையில் உள்ள பிரமாண்ட சிலை.**

இந்த ஊரிலேயே இருக்க வேண்டும் என்று தண்டீஸ்வரர் விரும்புகிறார் என்பதைப் புரிந்து கொண்ட சுவாமிகள் வாழ்நாள் இறுதி வரை வேளச்சேரியிலேயே இருக்க முடிவு செய்தார். ஆலயம் அருகிலேயே குடில் அமைத்து தங்கினார்.

அவரை நாடி ஏராளமானோர் வந்தனர். வறுமையில் வாடும் நேர்மையானவர்களுக்கு மண்ணை அள்ளிக் கொடுப்பார். அது தங்கமாக மாறி இருக்கும். இப்படி சுவாமிகள் செய்த அற்புதங்களை கேள்விப்பட்ட திவான் ஒருவர் சுவாமிகளை வந்து சந்தித்தார். அவரைப் பார்த்ததுமே, ‘‘என்ன.... உமக்கு வயிற்று வலி தீரவே மாட்டேங்குதா....? கவலைப்படாதீர்கள். இந்த விபூதியை தண்ணீரில் கரைத்து குடியுங்கள்... எல்லாம் சரியாகி விடும்’’ என்றார்.

திவான் இதுவரை எத்தனையோ பேரிடம் தன் வயிற்று வலிக்கு வைத்தியம் பார்த்து விட்டார். எந்த பலனும் கிடைக்கவில்லை. வெறும் விபூதியால் எப்படி வயிற்று வலி குணமாகும் என்று சந்தேகத்துடனே அதை கரைத்து குடித்தார்.

அன்றே திவானின் வயிற்று வலி குணமானது. ஒரு மாதம் வரை பார்த்தார். வயிற்று வலி வரவே இல்லை.

''சுவாமிகளிடம் திரும்பி வந்த அவர் உங்களுக்கு நான் ஏதாவது உதவி செய்ய வேண்டும். சொல்லுங்கள், உங்களுக்குத் தேவையானதைத் தருகிறேன்'' என்றார். ஆனால் சுவாமிகள் அவரிடம் இருந்து எந்த உதவியையும் எதிர்பார்க்கவில்லை.

என்றாலும் திவான் விடவில்லை. வேளச்சேரியில் 10 ஏக்கர் நிலத்தை (தற்போது ஜீவசமாதி ஆலயம் உள்ள இடம்) சுவாமிகளுக்கு அவர் தானமாகக் கொடுத்தார்.

அங்கிருந்தபடி சுவாமிகள் மக்களுக்கு உதவி வந்தார். தினமும் அவர் ஒரு பெண்ணின் வீட்டுக்கு சென்று யாசகம் கேட்டு உணவு வாங்கி சாப்பிடுவதை வழக்கத்தில் வைத்திருந்தார். அந்த அம்மையாரும் தினமும் சுவாமிகளுக்கு உணவு சமைத்து கொடுப்பதை பாக்கியமாக கருதினார்.

ஒருநாள் அந்த அம்மையார் சமைத்து முடித்து விட்டு அசதியில் படுத்திருந்தார். அப்போது சுவாமிகள் வந்து, ''அம்மா... பசிக்கிறது. சாப்பாடு தாருங்கள்'' என்று கேட்டார்.

வேறு யாரோ பிச்சைக்காரன் வந்திருக்கிறான் என்று தவறுதலாக புரிந்து கொண்ட அந்த அம்மையார், போப்பா சாப்பாடு இல்லை என்றார். சுவாமிகளும் உணவு கிடைக்காமல் திரும்பி விட்டார்.

இதற்கிடையே அந்த அம்மையாரின் கணவர் சாப்பிட வீட்டுக்கு வந்தார். அந்த அம்மையார் சாப்பாடு எடுக்க சென்ற போது பாத்திரங்களில் உணவு இல்லாமல் வெறுமையாக இருப்பதைப் பார்த்து திடுக்கிட்டார்.

அப்போதுதான் அவருக்கு சுவாமிகள் சாப்பாடு கேட்டதும், தான் தூக்கக் கலக்கத்தில் இல்லை என்றதும் நினைவுக்கு வந்தது. உடனே அவர் சுவாமிகளிடம் ஓடோடி சென்று மன்னிப்புக் கேட்டார்.

அந்த அம்மையாருக்கு ஆசி வழங்கிய சுவாமிகள், ‘‘வீட்டுக்குப் போ உணவு இருக்கும்’’ என்றார். வீடு திரும்பிய அந்த அம்மையார் மீண்டும் பாத்திரங்களை திறந்து பார்த்தபோது, அறுசுவை உணவு வகைகள் தயாராக இருப்பதை கண்டு ஆச்சரியம் அடைந்தார். மற்றொரு தடவை தண்டீஸ்வரர் கோவில் தென்னந்தோப்பில் தினமும் தேங்காய் திருட்டுப் போவது அவர் கவனத்துக்கு வந்தது. உடனே அவர் ஒரு தென்னை மரத்திடம் சென்று, ‘‘இன்றிரவு திருடனைப் பிடித்து வை’’ என்றார்.

அருகில் இருந்தவர்கள் சிரித்தபடி, ‘‘அது எப்படி தென்னை மரம் திருடனைப் பிடிக்கும்?’’ என்றனர். அன்றிரவு தேங்காய் திருட வந்த திருடன் தென்னை மரத்தில் ஏறியபோது, அவன் கால்கள் மரத்தை சுற்றி இறுகிவிட்டன. திருடனால் ஏறவும் முடியவில்லை, இறங்கவும் முடியவில்லை. மரம் அவனைப் பிடித்துக் கொண்டது.

மறுநாள் காலை அங்கு வந்த சுவாமிகள், தென்னை மரத்தைப் பார்த்து, ‘‘விட்டு விடு’’ என்றார். அதன் பிறகே திருடனால் தென்னை மரத்தில் இருந்து கீழே இறங்க முடிந்தது. அவனுக்கு சுவாமிகள் அறிவுரை கூறி அனுப்பி வைத்தார்.

இப்படி சுவாமிகள் நடத்திய அற்புதங்கள் ஏராளம். ஏராளம். அவரால் வளமான வாழ்வு பெற்ற பல குடும்ப வாரிசுகள் இன்றும் சென்னை முழுவதும் உள்ளனர்.

1856ல் அவர் ‘‘உபதேச உண்மை’’ என்ற செய்யுள் வடிவ நூலை எழுதி வெளியிட்டார். 1858ம் ஆண்டு கார்த்திகை மாதம் அவர் உயிருடன் ஜீவ சமாதியில் பரிபூரணம் பெற விரும்பினார்.

அப்போதைய ஆங்கிலேய ஆட்சியாளர்கள் மகான்கள் பரிபூரணம் பெறுவதை தற்கொலையாக கருதினார்கள். என்றாலும் சுவாமிகளின் சிறப்பை உணர்ந்த ஆங்கிலேயர்கள் மருத்து வர்கள் பரிசோதனைக்குப் பிறகு அவர் ஜீவ சமாதியாக ஒப்புதல் வழங்கினார்கள்.

1858ம் ஆண்டு டிசம்பர் மாதம் 4—ந்தேதி சனிக்கிழமை விசாகம் நட்சத்திரம் தினத்தன்று காலை 9.45 மணிக்கு வேளச்சேரியில் தான் தங்கி இருந்த இடத்தில் சுவாமிகள் ஜீவ சமாதி கட்டினார்கள்.

வழக்கமாக சித்தர்களின் ஜீவ சமாதி மீது லிங்கம்தான் அமைத்திருப்பார்கள். ஆனால் வேளச்சேரியில் சுவாமிகளின் ஜீவ சமாதி மீது அவரது திருவுருவச் சிலை நிறுவப்பட்டுள்ளது.

கருணைப் பார்வையுடன் கம்பீரமாக இருக்கும் ஸ்ரீசிதம்பரம் பெரிய சுவாமிகளின் சிலையை எத்தனைத் தடவை பார்த்தாலும் சலிப்பே வருவதில்லை. மாறாக மனம் அமைதி கொள்கிறது.

அந்த அளவுக்கு அதிர்வலை கொண்டதாக சிதம்பரம் பெரிய சுவாமிகளின் ஜீவ சமாதி உள்ளது. சுவாமிகளின் சிலைக்கு நடராஜன் என்பவர் செய்யும் பூஜையும், ஆராதனையும் மேலும் மெருகூட்டுவதாக உள்ளது. சித்தர் சிதம்பர பெரிய சுவாமிகள் அடிக்கடி "சிந்தனைக்கு எட்டாத சிவரூபத்தை காண்" என்று சொல்வதுண்டு. அதை இந்த ஜீவ சமாதி தலத்துக்கு சென்றால் உணர முடியும்.

இந்த ஜீவ சமாதி ஆலயத்தை, சுவாமிகள் வாழ்ந்த போது அவருக்கு உதவியாக இருந்த பரசுராமர் என்பவரின் பேரன் சி.செல்வமணி சற்குருவின் உத்தம சீடராக இருந்து பராமரித்து நடத்தி வருகிறார்.

வியாழன் தோறும் இத்தலத்தில் மாலை 6.30 மணிக்கு அபிஷேகம், இரவு 8.30 மணிக்கு அன்னதானமும் நடத்துக்கிறார்கள். பவுர்ணமி நாட்களில் காலை 11 மணிக்கு யாகம், 12 மணிக்கு அபிஷேகம், 1.30 மணிக்கு அன்னதானம் நடத்தப்படுகிறது.

முதலில் இத்தலத்தில் சுவாமிகளின் ஜீவசமாதி கற்களால் கட்டப்பட்டு வணங்கப்பட்டு வந்தது. மருதம் சொக்கப்ப செட்டியார் மகன் அப்புக்குட்டிச் செட்டியார்—அன்னம்மாள் தம்பதிக்கு 1946—ல் இங்கு வந்த பிறகுதான் குழந்தை பிறந்தது.

அவர்கள் ஜீவசமாதியை சுற்றி கருங்கல் மண்டபம் அமைத்துக் கொடுத்தனர். 2000—ம் ஆண்டு சுவாமிகளின் சீடர் செல்வமணி பொறுப்பு ஏற்ற பிறகு மற்ற கடவுள் சன்னதிகள் கட்டப்பட்டன.

பஞ்சமுக சர்வேஸ்வர், தாயார் யோகேஸ்வரி, ஸ்ரீ காமாட்சி அம்மன், தெட்சிணாமூர்த்தி, பிரணவ மூர்த்தி விநாயகர், ஆஞ்சநேயர், நால்வர், குபேர பெருமாள், 18 சித்தர்கள், நவக்கிரகம், 6 ஆதார சக்திகள் இங்கு உள்ளனர்.

இதனால் பெரிய ஆலயத்துக்குள் வலம் வந்த உணர்வு இங்கு ஏற்படுகிறது.

ஜீவசமாதி முன்பு தியானம் செய்ய விசாலமான இடம் உள்ளது. இது சுவாமிகளை நாடி வருபவர்கள் அமைதியாக அமர்ந்திருக்க மிகவும் வசதியாக உள்ளது.

2010—ம் ஆண்டு இத்தலத்தில் ராஜகோபுரம் கட்டினார்கள். இதன் மூலம் தமிழ்நாட்டில் சித்தர்களின் ஜீவசமாதிகளில் ராஜகோபுரத்துடன் கூடிய ஒரே ஜீவசமாதி என்ற சிறப்பை இத்தலம் பெற்றுள்ளது.

வேளச்சேரி மெயின் ரோட்டில் சாலையோரத்திலேயே இத்தலம் உள்ளதால் சென்னையின் அனைத்துப் பகுதிகளில் இருந்தும் மிக, மிக எளிதாக இத்தலத்துக்கு செல்ல முடியும்.





# 21.ஸ்ரீ ஈசான்ய ஞானதேசிகர்

திருவண்ணாமலை

## 21. ஸ்ரீ ஈசான்ய ஞானதேசிகர்

ஸ்ரீஈசான்ய ஞானதேசிகர் சித்தர் ஆழ்ந்த தவம் இருக்கத் தொடங்கி விட்டால்.... நாள் கணக்கில் தவத்தில் மூழ்கி விடுவார்.

பசி, உறக்கம் எதுவும் இடையூறாக இல்லாமல் அவரது தவம் நீடிக்கும். எப்போது நினைவுக்கு திரும்புவார் என்பதை சொல்ல முடியாது.



ஸ்ரீ ஈசானிய ஞான தேசிகர்

அந்த சமயத்தில் இரண்டு புலிகள் காட்டுக்குள் இருந்து வரும். ஈசான்ய ஞான தேசிகரின் தவம் கலைந்து விடாமல் இருக்கும் வகையில் அந்த புலிகள் காவல் காக்கும்.

நல்லவர்கள் வருகிறார்கள் என்றால் அவருக்கு பாதுகாவலர்கள் போல இருக்கும் இரு புலிகளும் தாமாகவே எழுந்து சென்று விடும். தீய எண்ணம்

உடையவர்கள் வந்தால் புலிகள் கர்ஜித்து, பாய்ந்து பயம் காட்டி அவர்களை விரட்டி விடும்.

அண்ணாமலையாரும், உண்ணாமலை அம்மனுமே இரு புலிகளாக வந்து ஈசான்ய ஞானதேசிகருக்கு காவல் காத்தனர் என்று கூறப்படுவதுண்டு. அந்த அளவுக்கு அண்ணாமலையார் மனதில் ஸ்ரீஈசான்ய ஞானதேசிகர் இடம் பிடித்திருந்தார்.

ஒரு புலி இடது புறமும், மற்றொரு புலி வலது புறமும் படுத்திருக்க மத்தியில் ஈசான்ய ஞானதேசிகர் தவம் இருப்பார். சுமார் 230 ஆண்டுகளுக்கு முன்பு இந்த அதிசயம் நடந்தது.

நடந்த இடம் – திருவண்ணாமலை. இந்த சித்தரின் ஜீவ சமாதி ஆலயம் திருவண்ணாமலை கிரிவலப் பாதையில் உள்ளது. ஆனால் திருவண்ணாமலைக்கு கிரிவலம் செல்பவர்களில் பலரும் இந்த சித்தப்புருஷரின் சிறப்பை இன்னமும் முழுமையாக உணர்ந்து கொள்ளாமல் இருக்கிறார்கள்.

திருவண்ணாமலையை நாடி வந்த முதல் ஞானி என்று அவரைச் சொல்வார்கள். அக்காலத்தில் திருவண்ணாமலை மலையைச் சுற்றி ஒத்தையடி தடமாகத்தான் கிரிவலப் பாதை இருந்தது. பாதையின் இரு பக்கமும் அடர்ந்த காடாகவும், குளங்களாகவும் இருந்தன.

கிரிவலப் பாதையின் ஈசான்ய மூலைப் பகுதியில் "கோரக்கர் குளம்" என்றொரு குளம் இருந்தது. அந்த குளக்கரையில் ஒரு பெரிய ஆலமரம், ஒரு வில்வ மரம் இருந்தன.

ஆலமரத்தடியில் தவம் இருக்கும் ஈசான்ய ஞான தேசிக சித்தர் வில்வ மரத்தடியில் நின்று அண்ணாமலையாரை வழிபடுவதை வழக்கத்தில் வைத்திருந்தார். தினமும் அவரை ஏராளமானவர்கள் நாடி வந்து மன நோயையும், உடல் நோயையும் தீர்த்துச் சென்றனர்.

ஈசான்ய ஞானதேசிகர், சித்தப் புருஷராக மாறியதற்கு காரணமே அண்ணாமலையார்தான்.

இவரது பூர்வீகம் ராயவேலூர். பெற்றோர் – திருநீலக் கண்டர் – உமைபார்வதி. திருமணமாகி நீண்ட நாட்களாகியும் இவர்களுக்கு குழந்தை

பாக்கியம் கிடைக்கவில்லை.

திருநீலக் கண்டரும், உமைபார்வதியும் மனம் வருந்தியபடி கிரிவலம் வந்து அண்ணாமலையாரை வழிபட்டனர். அதன் பயனாக அவர்களுக்கு 1750—ம் ஆண்டு மகன் பிறந்தான்.

“கந்தப்பன்” என்று பெயர் சூட்டி அவரை பாசத்தோடு திருநீலக்கண்டர் வளர்த்து வந்தார். பள்ளிக்கு அனுப்பப்பட்ட கந்தப்பன், ஆசிரியர் பாடம் நடத்தும் போது, பாடங்களின் விடைகளை முன்பே கூறி முதல் அற்புதத்தை நிகழ்த்தினார்.

ஆசிரியர்கள் அவரது அறிவுத்திறனைக் கண்டு, “தெய்வீகக் குழந்தை” என்று போற்றினார்கள். இதனால் மகிழ்ச்சி அடைந்த திருநீலக்கண்டர் தமது வேளாள குலத்துக்குரிய மரபுப்படி கந்தப்பருக்கு அவரது 7—வது வயதில் “சிவதீட்சை” செய்வித்து “தேசிகர்” எனும் பட்டத்தையும் சூட்டினார்.

இதனால் கந்தப்பர் ஒருநாள் கூட தவறாமல் சிவபூஜை செய்து அண்ணாமலையாரை வழிபட்டார். தம்மைத் தாமே பக்குவப்படுத்திக் கொள்ள பள்ளிக்கு செல்வதாகக் கூறி விட்டு எங்காவது ரகசிய இடத்துக்கு சென்று நிஷ்டையில் மவுனமாக அமர்ந்தார். இதன் காரணமாக மிக இளம் வயதிலேயே சித்தர்களுக்குரிய சக்திகள் கந்தப்பரிடம் கை கூடியது. திருவிளையாடல் பல புரிந்து அதிசய இளைஞனாக வலம் வந்த கந்தப்பருக்கு அவரது 16—வது வயதில் திருமணம் செய்து வைக்க திருநீலக்கண்டரும், உமை பார்வதியும் திட்டமிட்டனர்.

இதை அறிந்த கந்தப்பர் அதை ஏற்க மறுத்து, ஆழ்ந்த தியானம் செய்து, ஈசனின் பேரானந்த பெருவெள்ளத்தை கண்டு வாழவே ஆசைப்படுவதாக உறுதிபட கூறினார். பிறகு பெற்றோரிடம் அனுமதி பெற்று ராயவேலூரில் இருந்து யாத்திரை புறப்பட்டார்.

ஆத்ம ஞானம் தேடி அவர் சென்ற முதல் இடம்—சிதம்பரம்.

அங்கிருந்த மவுனகுரு சாமிகளிடம் உபதேசம் பெறச் சென்றார். ஆனால் கந்தப்பரை மவுனகுரு சாமிகள் கண்டு கொள்ளவே இல்லை.

விரக்தியும் — வருத்தமும் அடைந்த கந்தப்பர் மவுன குரு சுவாமிகளிடம் உபதேசம் பெற்றே தீருவது என்று வைராக்கியம் கொண்டார். ஒருநாள் பலத்த மழையில் நனைந்தபடி வந்து நின்று வணங்கிய கந்தப்பரை கண்டதும் மவுனகுரு சாமிகள் மனம் நெகிழ்ந்தார்.

அப்போதே அவர் கந்தப்பருக்கு ஞானமுத்திரை பிடித்து உண்மை உணர்த்தினார். அதோடு வேதாந்த, சித்தாந்த சமரச சன்மார்க்கத்தையும் சொல்லிக் கொடுத்தார்.

தன் நிலை உணர்ந்த கந்தப்ப தேசிகர் குரு பக்தி மேலிட்டதால் கண்ணீர் மல்க மவுனகுரு சாமிகள் மீது ‘‘பஞ்சரத்தினம்’’ எனும் பாமாலை பாடினார். இதனால் மிகவும் மகிழ்ச்சி அடைந்த மவுனகுரு சுவாமிகள், சித்தர்களுக்குரிய யோகத்தண்டு, யோகப்பட்டையை கந்தப்ப தேசிகருக்கு அணிவித்தார். அன்றே மன சஞ்சலங்கள் அனைத்தும் கந்தப்ப தேசிகரிடம் இருந்து ஓடி விட்டது. இதையடுத்து சிதம்பரத்தில் இருந்து புறப்பட்ட அவர் திருவாரூருக்குச் சென்றார்.

அங்கு குரு தெட்சிணாமூர்த் தி சுவாமிகளுடன் சில காலம் சேர்ந்து வாழ்ந்தார். பிறகு அவர் சிக்கல் அருகில் பொருள் வைத்த சேரியில் ஸ்ரீஉகந்தலிங்க ஞானதேசிகரிடம் மாணவராக சேர்ந்து வேதாந்த உண்மைகளை உணர்ந்தார்.

என்றாலும் கந்தப்ப தேசிகர் மனதில் முழு அமைதி வரவில்லை. மனம் கொந்தளிப்பாகவே இருந்தது. விரக்தி தோன்றியது. நிர்விகல்ப சமாதி கூட வேண்டும் என்ற மன உந்துதல் ஏற்பட்டது.

மனித நடமாட்டம் இல்லாத இடத்துக்குச் சென்றால்தான் இதெல்லாம் சாத்தியப்படும் என்று நினைத்தார். உடனே ஸ்ரீ உகந்தலிங்க ஞான தேசிகரிடம் விடை பெற்று புறப்பட்டு விட்டார்.

மனம் போன போக்கில் நடந்தார். எந்த இடமும் அவருக்குப் பிடிக்கவில்லை. சில தினங்கள் கழித்து திருவண்ணாமலை அருகில் வேட்டவலம் பக்கத்தில் உள்ள மலையில் ஒரு ரகசிய குகை இருப்பதை கண்டுபிடித்தார்.

அந்த குகையைப் பார்த்ததுமே அவர் மனம் ஆனந்தம் கொண்டது. அதற்குள் போய் ஆழ்ந்த தியானத்தில் உட்கார்ந்து விட்டார்.

முத்துசாமி உடையார் என்பவர் காட்டுக்குள் மாடு மேய்க்க வந்தபோது குகைக்குள் தியானத்தில் இருந்த கந்தப்ப தேசிகரை கண்டார். அவர் தினமும் மாட்டில் இருந்து பால் கறந்து கந்தப்ப தேசிகருக்கு கொடுத்து வந்தார்.

ஒரு சித்தப்புருஷருக்கு தன்னலமற்ற தொண்டு செய்வது என்பது எவ்வளவு பெரிய புண்ணியத்தைத் தரும் என்பதை விரைவிலேயே முத்துசாமி உடையார் உணர்ந்தார். வீடு கட்ட அஸ்திவாரம் தோண்டிய போது மிகப்பெரிய புதையல் அவருக்கு கிடைத்தது.

இதனால் முத்துசாமி உடையார் மிகப்பெரும் பணக்காரராக மாறினார். இதைப் பார்த்த ஊர்க்காரர்கள் தங்களுக்கும் ஏதாவது அற்புதம் செய்ய வேண்டும் என்று கந்தப்ப தேசிகரிடம் போய் தினம், தினம் தொந்தரவு செய்தனர்.

நிம்மதி இழந்த கந்தப்ப தேசிகர் அந்த மலை குகையை காலி செய்து விட்டு, நேராக திருவண்ணாமலைக்கு வந்து விட்டார். அங்கு ஈசான்ய மூலை பகுதியில் கோரக்கர் குளக்கரையில் ஆலமரத்தடியில் அவர் தவம் இருக்கத் தொடங்கினார்.


ஜீவசமாதி தோற்றம்

இனியும் அவர் தவம் கெடக் கூடாது என்பதற்காகத்தான் அண்ணாமலையாரும், உண்ணாமலை அம்மனும் புலி வடிவில் அங்கு பாதுகாவலர்கள் போல இருந்தனர் என்று சொல்கிறார்கள். அங்குள்ள வில்வ மரத்தடியில் நின்று வணங்கிய போது அவருக்கு அண்ணாமலையார் காட்சி கொடுத்ததாக குறிப்புகள் உள்ளது.

இதற்கிடையே வேட்டவலம் பாக்கத்து மலைக் குகையில் இருந்த கந்தப்ப தேசிகர் காணாமல் போய் விட்டதால் முத்துசாமி உடையார் கண்ணீர் விட்டு அழுதார். அவர் கனவில் தோன்றிய சிவபெருமான், திருவண்ணாமலையில் கோரக்கர் குளக்கரையில் கந்தப்பர் இருக்கும் தகவலை தெரிவித்தார்.

அதுபோல கந்தப்பர் கனவில் தோன்றிய சிவபெருமான், நாளை முத்துசாமி உடையார் வருவார் என்று கூறினார். ஈசனின் இந்த கருணையை எண்ணி மனம் உருகிய கந்தப்ப தேசிகர், ‘‘அண்ணாமலையார் வெண்பா’’, ‘‘அண்ணாமலை வெண்பா’’, ‘‘அண்ணாமலையார் கன்னி’’, ‘‘தோத்திரப் பாமாலை’’ ஆகிய பாடல்களைப் பாடினார்.

திருவண்ணாமலை ஈசான்ய பகுதியில் சிவயோக சித்தர் ஒருவர் இருக்கிறார் என்ற தகவல் பரவியதும் தினமும் ஏராளமானவர்கள் அவரை வந்து பார்த்தனர். ஈசான்ய பகுதியில் தவம் இருந்ததால் அவரை ஈசான்ய ஞானதேசிகர் என்றழைத்தனர். இதனால் கந்தப்ப தேசிகர் என்பது மறைந்து ஈசான்ய ஞானதேசிகர் என்ற பெயர் அவருக்கு நிலைத்தது.

அவரால் ஆதாயம் அடைந்த பணக்காரர்கள், ஈசான்ய ஞானதேசிகர் என்ன சொன்னாலும் செய்வதற்கு தயாராக இருந்தனர். ஆனால் யாரிடமும் தேசிகர் கை ஏந்தி ஒரு பைசா கூட பெற்றதில்லை. புதுச்சேரியைச் சேர்ந்த அருணாசலம் என்ற கோடீசுவரர் தன் சொத்துக்கள் அனைத்தையும் ஈசான்ய ஞானதேசிகர் காலடியில் கொட்ட தயாராக இருந்தார். ஆனால் சித்தர் அதை ஏற்கவில்லை.

என்றாலும் புதுச்சேரியில் உள்ள சொத்துக்களை விற்று வர அருணாசலம் புறப்பட்டார்.

அவரை தடுத்த ஈசான்ய ஞானதேசிகர், ‘‘போகாதே, புதுச்சேரிக்கு போனால்... நீ திரும்பி வர மாட்டாய்’’ என்றார்.

அதையும் மீறி அருணாசலம் புதுச்சேரி சென்று, தன் சொத்துக்கள் அனைத்தையும் விற்று தங்கக் கட்டிகளாக மாற்றினார்.

பல கோடி மதிப்புள்ள அந்தத் தங்கக் கட்டிகளுடன் திருவண்ணாமலைக்கு புறப்பட்டு வந்தபோது, வழியில் மாட்டு வண்டி பள்ளத்தில் குடை சாய்ந்ததால் அருணாசலம் உயிரிழந்தார்.

அன்றிலிருந்து ஸ்ரீஈசான்ய ஞானதேசிகர் என்ன சொன்னாலும், யாரும் மறுத்துப் பேசுவதே இல்லை. அவர் வார்த்தையை வேத வாக்காகக் கருதினார்கள்.

தமிழர்கள் மட்டுமல்ல.... அப்போது பாரதத்தை ஆண்ட ஆங்கிலேயர்களும் கூட ஈசான்ய ஞானதேசிகரிடம் கட்டுப்பட்டு இருந்தனர். அதற்கு உதாரணமாக ஐடன் துரையை சொல்லலாம்.

அவர் தென்ஆற்காடு மாவட்ட கலெக்டராக இருந்தார். கடுமையான காச நோயால் பாதிக்கப்பட்டிருந்த அவரை ஈசான்ய ஞானதேசிகர் ஒரே ஒரு மூலிகை சாறால் குணப் படுத்தினார்.

இதனால் மகிழ்ச்சி அடைந்த ஐடன்துரை, ‘‘தாத்தா’’ என்றே ஈசான்ய தேசிகரை அழைத்தார். சித்தருக்கு நிறைய நிலத்தை தானம் தர விரும்பினார். அவற்றையெல்லாம் அண்ணாமலையாருக்கு எழுதி வைக்கும்படி சித்தர் கூறி விட்டார்.

அந்த காலத்தில் திருவண்ணாமலை கார்த்திகை தீப தேரோட்டத்தை மாவட்ட கலெக்டர்தான் தொடங்கி வைப்பது வழக்கம். ஆனால் கலெக்டர் ஐடன் துரை ஒதுங்கி நின்று கொண்டு, ‘‘தாத்தாவே முன்னின்று செய்யட்டும்‘‘ என்பாராம்.

ஒரு வருடம், அவர் கார்த்திகை தீப தேரோட்டத்தைத் தொடங்கி வைக்க குதிரையில் வந்தபோது, பெண்ணையாற்றில் வெள்ளம் கரை புரண்டோடியது. மற்றவர்கள் பயந்து நிற்க, ஐடன் துரை, ‘‘தாத்தா, சற்குரு நாதா நீயே துணை’’ என்று கூறிக் கொண்டே குதிரையுடன் ஆற்றில் இறங்கி விட்டார்.

அதே சமயம், தியானத்தில் ஆழ்ந்திருந்த ஈசான்ய ஞான தேசிகர் திடுக்கிட்டு, தனது கையை சிறிது தென்புறமாகத் தாழ்த்திப் பிறகு உயர்த்தினார். அதைக் கண்டு ஆச்சரியம் அடைந்த பக்தர்கள், ‘‘சுவாமி என்ன விஷயம்?’’ என்றனர்.

அதற்கு ஈசான்ய ஞானதேசிகர், ‘‘நம் அடியவர் ஆற்றில் விழுந்தால் நாம்தானே காப்பாற்ற வேண்டும்’’ என்று கூறி விட்டு மீண்டும் தியானத்தில் ஆழ்ந்து

விட்டார். அவர் அப்படி செய்ததால், பெண்ணையாற்றில் நீர் விலகி ஐடன் துரையின் குதிரை செல்ல வழி கிடைத்த அற்புதம் நடந்ததாம்.

இப்படி ஏராளமான அற்புதங்கள் செய்த ஈசான்ய ஞானதேசிகர் தம் 79—வது வயதில் பரிபூரணம் ஆக முடிவு செய்தார். எந்த தேதியில் சிவத்துடன் கலக்க உள்ளார் என்பதை அவர் மிகத் தெளிவாக ஓலை நறுக்கில் எழுதி அதை தமது ஆசனத்தின் கீழ் வைத்து விட்டார். அதன்படி 1829—ம் ஆண்டு விரோதி வருடம் மார்கழி மாதம் 26—ந்தேதி குருவாரம் மிருகசீரிட நட்சத்திரம் கூடிய தினத்தன்று அவர் பரிபூரணம் ஆனார். அவர் எப்போதும் கோரக்கர் குளக்கரையில் உள்ள வில்வ மரத்தடியில் நின்று அண்ணாமலையாரை வழிபட்டு வந்ததால், சுவாமிகளின் திருமேனியை அங்கேயே ஜீவ சமாதி வைத்தனர்.

அந்த இடத்தில் தற்போது ஸ்ரீஈசான்ய ஞானதேசிகரின் ஜீவ சமாதி ஆலயம் கட்டப்பட்டுள்ளது. கோவிலூர் ஆதீனம் மடம் இங்கு தினசரி பூஜை, குரு பூஜை உள்ளிட்ட அனைத்து நிர்வாகத்தையும் செய்து வருகிறது. ஈசான்ய ஞானதேசிகர் ஜீவ சமாதியில் கடந்த 2017—ம் ஆண்டு கும்பாபிஷேகம் நடத்தப்பட்டது.

தமிழ்நாட்டில் ஜீவ சமாதிகளில் கும்பாபிஷேகம் நடத்தப்படுவது மிகவும் அரிது.

திருவண்ணாமலை செல்பவர்கள், கிரிவலப் பாதையில் ஈசான்ய லிங்கம் எதிரே உள்ள ஈசான்ய ஞானதேசிகர் ஜீவ சமாதி ஆலயத்துக்கும் சென்று வழிபடுங்கள்.

ஆத்ம ஞானம் பெறுவதற்கான வழிகள் உங்களுக்கும் கைகூடி வரும்.





# 22.ஸ்ரீ சாங்கு சித்தர்

கிண்டி, சென்னை

22. ஸ்ரீ சாங்கு சித்தர்

ஒவ்வொருவரும் தங்களை உணர வேண்டும். "நான் யார்?" என்ற கேள்விக்கு விடை காண வேண்டும்? அந்த ஆத்ம ஞானத்தை பெறச் செய்யவே சித்தர்கள் அற்புதங்களை நிகழ்த்திக் காட்டினார்கள்.




அப்படித்தான் சென்னையில் வாழ்ந்த ஒரு சித்தர் ஒரே நிமிடத்துக்குள் சென்னையில் இருந்து லண்டன் சென்று அற்புதம் செய்தார். நினைத்துப் பார்த்தால் பிரமிப்பூட்டும் இந்த அற்புதத்தைச் செய்தவர் சாங்கு சித்த சிவலிங்க நாயனார் என்ற சித்தர் ஆவார். 1835—ம் ஆண்டு பிறந்து 1900—ம் ஆண்டு வரை சென்னை பரங்கிமலையில் வாழ்ந்த இந்த சித்தரின் ஒவ்வொரு நாளும் ஆச்சரியங்கள் நிறைந்ததாகும்.

இவரது பெற்றோர் அரங்கையர் — குள்ளம்மாள். அவர்கள் தம் மகனுக்கு "சிவலிங்கம்" என்று பெயரிட்டு வளர்த்து வந்தனர். சிறு வயதில் இருந்தே சிவலிங்கம் ஏராளமான புத்தகங்களைப் படித்தார். பத்து வயதுக்குள் பெரும்பாலான புராண நூல்களை படித்து முடித்து விட்டார்.

பதிமூன்று வயதுக்குள் பதினென் சித்தர்கள் பாடிய அனைத்து பாடல்கள் நூல்களையும் கற்றார். இதனால் மிகச் சிறிய வயதிலேயே கல்வி மற்றும் யோகத்தில் அவர் சிறப்புப் பெற்றார்.

இருபது வயதுக்குள் அனைத்து விதமான சாஸ்திரங்களும் அவருக்கு அத்துப்படியாகி இருந்தது. பிரம்மத்தை தெளிவாகத் தெரிந்து கொள்ள, தீராத ஆர்வம் கொண்டு பித்துப்பிடித்தவர் போல புத்தகங்களைத் தேடி, தேடி கண்டுபிடித்து ஆழ்ந்து படித்தார்.

உலகில் தெரியாத விஷயமே இல்லை என்று சொல்லும் அளவுக்கு படித்தார். இதனால் கல்வியில் தன்னை விட தேர்ச்சி பெற்ற பண்டிதர் வேறு யாரும் இல்லை என்று இறுமாப்பு ஏற்பட்டது.

ஆனால் விரைவில் அந்த இறுமாப்பு கரைந்தது. காவல் இல்லாத பயிரும், கரை இல்லாத ஏரியும் எவ்வாறு கெடுமோ, அது போல ஏட்டுக்கல்வி தமது ஆத்ம ஞானத்துக்கு உதவாது என்பதை உணர்ந்தார்.

குரு இருந்தால்தான் எல்லாம் கை கூடும் என்பதை புரிந்து கொண்டார். குருவைத் தேடி அலைந்தார். அப்போது அவருக்கு "ஒழிவிலொடுக்கம்" என்ற நூல்தான் குருவைக் காட்டிக் கொடுத்தது. அந்த நூல், "தன்னைத் தான் உணரத் தீருந்தகையறு பிறவி" என்ற கருத்தினை மையமாகக் கொண்டது.

அந்த நூலை எழுதியவர் "கண்ணுடைய வள்ளலார்" என்பவர் ஆவார். அவரை சிவலிங்கம் தமது குருவாக ஏற்றுக் கொண்டார். (இவரது ஜீவசமாதி கும்பகோணத்தில் உள்ளது.)

குருவருள் பெற்ற காரணத்தால் "பூரணாந்தோதயம்" எனும் நூலை எழுதினார். அந்த நூலின் சிறப்பைப் பாராட்டிய தமிழ் அறிஞர்கள் அவருக்கு "சாங்கு சித்த சிவலிங்க நாயனார்" என்று பெயர் சூட்டி பாராட்டினார்கள்.

அவர் குருவாக ஏற்ற கண்ணுடைய வள்ளலார் அருள் ஆற்றல்கள் நிரம்பப் பெற்றவர். திருஞான சம்பந்தரின் சீடர் வரிசையில் வந்தவர். அவர் கொடுத்த

யோகப் பயிற்சிகளின் மூலம் அனைத்து விதமான சித்திகளையும் சாங்கு சித்த சிவலிங்க நாயனார் பெற்றார். குருவால் அவர் சக்தி வாய்ந்த சித்தராக மாறினார். நவ கண்ட யோகம் எனும் உடலை 9 துண்டு, துண்டாகப் பிரித்துப் போட்டுக் கொண்டு செய்யும் யோகப் பயிற்சியை எளிதில் கைவரப் பெற்றார்.

கூடு விட்டு கூடு பாயும் வித்தையும் அவருக்கு கிடைத்தது. ஒரே நேரத்தில் இரு வேறு இடங்களில் தோன்றும் அதிசயத்தை சர்வ சாதாரணமாக நடத்திக் காட்டினார். இந்த சித்திகள் அனைத்துக்கும் சிகரம் வைத்தது போன்று, தரையில் இருந்து சில அடி உயரத்துக்கு தம் உடலை எழும்பச் செய்து, அந்த நிலையில் அந்தரத்தில் தியானம் செய்யும் கலையில் சாங்கு சித்த சிவலிங்க நாயனார் கை தேர்ந்தவராக இருந்தார்.




1855—ம் ஆண்டு வேலாயி என்ற பெண்ணை அவருக்கு திருமணம் செய்து வைத்தனர். அதுவரை தியானம், யோகம் என்று மூழ்கி இருந்த சாங்கு இதனால் அவர் மனைவியுடன் பரங்கிமலையில் இருந்து சேத்துப்பட்டு ஜெகநாதபுரத்துக்கு வந்தார். பென்னி அண்ட் கம்பெனி நிறுவனத்தின்

இயக்குனராக இருந்த ஆங்கிலேயரான சிம்சன் துரை வீட்டில் பணியாளராகச் சேர்ந்தார்.

வேலையில் இருந்தாலும் சாங்கு சித்தர் தியானத்தையும், யோகப் பயிற்சிகளையும் கைவிடவில்லை. தீவிர ஆழ்நிலை தியானம், அரிய யோகப் பயிற்சிகள் அவருக்கு, எதிர்காலத்தில் நடக்கப் போவதை முன் கூட்டியே அறியும் தீர்க்கத் தரிசன ஆற்றலைக் கொடுத்தது.

அவர் சொல்வதெல்லாம் நடந்தது. ஒருநாள் சிம்சன்துரை அவசரம், அவசரமாக காரில் ஏறிப் புறப்பட்டார்.

அவரைத் தடுத்த சாங்கு சித்தர், ‘‘இன்று வேறு வழியில் செல்லுங்கள்’’ என்றார். அதை ஏற்க மறுத்த சிம்சன் துரை வழக்கமான பாதையில் சென்றார். அவர் வாகனம் விபத்துக்குள்ளாகி சிம்சன் துரை காயம் அடைந்தார்.

அப்போது அவரிடம் சாங்கு சித்தரின் சக்தி பற்றி சொல்லப்பட்டது. ஆனால் சிம்சன் அதை நம்பவில்லை. தன்னிடம் வேலைப் பார்க்கும் பணியாளர் தானே என்று சாதாரணமாக நினைத்தார்.

மற்றொரு நாள் இரவு சிம்சன் துரை தன் அறையில் படுத்துத் தூங்கச் சென்றபோது சாங்கு சித்தர் தடுத்தார். இன்றிரவு அந்த அறையில் தூங்க வேண்டாம் என்றார்.

இதைக் கேட்டு கோபப்பட்ட சிம்சன், அந்த அறைக்குள் சென்று தூங்கி விட்டார். சாங்கு சித்தர், மற்ற பணியாளர்கள் உதவியுடன் சிம்சனை அந்த அறையில் இருந்து அகற்றினார். அடுத்த சில நிமிடங்களில் அந்த அறையின் மேல்தளம் பெரும் சத்தத்துடன் இடிந்து விழுந்தது.

இந்த சம்பவத்துக்குப் பிறகே சாங்கு சித்தர், மிகப்பெரும் மகான் என்பதை சிம்சன் துரை உணர்ந்து கொண்டார். அன்று முதல் சித்தரிடம் அடிக்கடி அறிவுரைக் கேட்டு செயல்படத் தொடங்கினார். ஒருநாள் சிம்சன் துரை அலுவலக சாவியை வீட்டில் மறந்து வைத்து விட்டதாக கூறி திரும்பி வந்தார். வீட்டில் ஒரு அறைக்குள் சாங்கு சித்தர் உடல் துண்டு, துண்டாக சிதறிக் கிடப்பதைக் கண்டு அதிர்ச்சி அடைந்தார்.

அதன் பிறகுதான் அது ‘‘நவகண்ட யோகம்’’ என்று சிம்சன் துரைக்கு தெரிய வந்தது. அது போல மற்றொரு சமயம், தரையில் இருந்து இரண்டடி

உயரத்தில் அந்தரத்தில் சாங்கு சித்தர் தியானம் செய்ததை கண்டு பிரமித்தார்.

சாங்கு சித்தரிடம் தெய்வத் தன்மை நிறைந்து இருப்பதாகப் போற்றினார். அதற்கு மதிப்பு அளிக்கும் வகையில் சாங்கு சித்தர் தியானம், யோக பயிற்சிகள் செய்ய தன் வீட்டில் தனி அறை ஒன்றையும் ஒதுக்கிக் கொடுத்தார். இந்த நிலையில் ஒரு நாள் சிம்சன் துரைக்கு லண்டனில் இருந்து ஒரு தந்தி வந்தது. அதில் சிம்சனின் மனைவி பிரசவ வலியுடன் ஆபத்தான நிலையில் இருப்பதாக கூறப்பட்டிருந்தது. இதை சாங்கு சித்தரிடம் சொல்லி சிம்சன் துரை வருத்தப் பட்டார். அவரை ஆறுதல்படுத்திய சித்தர், நல்லதே நடக்கும் என்று கூறியபடி ஒரு அறைக்குள் சென்று கதவைப் பூட்டிக் கொண்டார்.

சிறிது நேரம் கழித்து, ‘‘சாங்கு சித்தர் லண்டனுக்கு வந்து உதவி செய்ததால் துரை மனைவி பிழைத்துக் கொண்டார்’’ என்று மற்றொரு தந்தி தகவல் வந்தது. அப்போதுதான் அறைக்குள் சென்று  கதவைப் பூட்டிய சாங்கு சித்தர் ஒரே நிமிடத்தில் லண்டன் சென்று வந்தது தெரிந்தது.

இப்படி சிம்சன்துரை வாழ்வில் அற்புதத்துக்கு மேல் அற்புதங்கள் செய்த சாங்கு சித்தர், ஒருநாள் சிம்சன் அறைக்குள் சென்றபோது அவர் ஒரு பல்லியை அடித்துக் கொல்ல முயன்று கொண்டிருப்பதைக் கண்டார். துரையைத் தடுத்த சித்தர், ‘‘அதை அடிக்காதீர்கள். இதன் ஜோடி நாளை வரப் போகிறது’’ என்றார்.

அவர் சொன்னது போலவே மறுநாள் சிம்சன் துரைக்கு வந்த பார்சலில் இருந்து ஒரு பல்லி துள்ளிக் குதித்தோடி, சுவரில் இருந்த பல்லியுடன் சேர்ந்து கொண்டது. இதைக் கண்டதும் சிம்சன் துரை மெய்சிலிர்த்தார்.

(இதே போன்று ஒரு அற்புதம் சாய்பாபாவின் சீரடி தலத்தில் உள்ள துவாரகமாயி மசூதிக்குள்ளும் ஒரு தடவை நடந்தது.)

சிம்சன் துரை சென்னையில் இருந்து விடைபெற்று இங்கிலாந்துக்கு திரும்பிய போது கப்பலில் சென்றார். நடுக் கடலில் கடல் கொந்தளிப்பு ஏற்பட்டு கப்பல் கவிழும் நிலை ஏற்பட்டது.

எல்லா பயணிகளும் உயிர் பிழைக்க அலறினார்கள். சிம்சன் துரை தன்னிடம் இருந்த சாங்கு சித்தர் படத்தை எடுத்து வைத்து மனம் உருக வணங்கினார். அடுத்த வினாடி சிம்சன் துரை முன்பு சாங்கு சித்தர் தோன்றினார். சிறிது நேரத்தில் கடல் கொந்தளிப்பு அடங்கியது. சித்தரும் மறைந்தார்.

இதே போன்று இங்கிலாந்தில் 2 தடவை சிம்சன் முன்பு சாங்கு சித்தர் தோன்றி பேசி விட்டு மறைந்ததாக சொல்கிறார்கள். சித்தரை முழுமையாக நம்பிய சிம்சன், இங்கிலாந்து திரும்பும்போது கிண்டியில் 22 ஏக்கர் அளவுக்கு நிலம் வாங்கி அன்பளிப்பாக கொடுத்தார். இந்த இடத்தில் சாங்கு சித்தர், திருஞான சம்பந்தர் பெயரில் ஒரு மடாலயத்தை நிறுவினார். தாம் பெற்ற ஞானத்தை மற்றவர்களும் பெற பயிற்சி அளித்தார். ஆனால் மாணவர்களைத் தேர்வு செய்வதில் அவர் மிகவும் கவனமாக இருந்தார். செப்புக்காசை தங்கமாக மாற்றி தம்மிடம் வருபவர்களிடம் கொடுப்பார். அதை ஆசையோடு வாங்கிக் கொள்பவர்களை தம் பக்கத்திலேயே சேர்த்துக் கொள்ள மாட்டார்.

பக்தி, சித்து, யோகம் போன்றவற்றை பக்குவமடைந்தவர் களுக்கு மட்டுமே பயிற்சியாக சொல்லிக் கொடுத்தார். ஒரு நாள் அவர் வேதாந்த சொற்பொழிவு நடத்திக் கொண்டிருந்தபோது மிகப்பெரிய பாம்பு வந்து அவர் முன்பு படம் எடுத்து நின்றது.

அதைப் பார்த்து சிரித்த சாங்கு சித்தர், ‘‘சரி... போ’’ என்றார். மறுவினாடி அந்த பாம்பு அங்கு இருந்து சென்று விட்டது. இல்லற வாழ்வில் பற்றற்று இருந்த சாங்கு சித்தர் பொருளாசையும் இல்லாதவராக இருந்தார். நிறைய பேருக்கு ஆத்ம ஞானம் பெற உதவிய சித்தர் 12.7.1900 அன்று ஆனி மாதம் மூல நட்சத்திர நாளில் பவுர்ணமி தினத்தன்று பரிபூரணம் அடைந்தார்.

அவர் ஜீவனை சமாதி ஆக்கியுள்ள இடத்தில் லிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டு ஜீவ சமாதி ஆலயம் ஆக்கப்பட்டுள்ளது. அந்த ஜீவ சமாதி வளாகத்தில் கொல்லபுரி சுவாமிகளின் ஜீவ ஒடுக்கமும் உள்ளது. சாங்கு சித்தர் ஜீவ சமாதி உள்ள இடம் முதலில் பிருங்கு சைலம் என்றழைக்கப்பட்டது. பிறகு பிருங்குமாநகர் என்று மாறியது.

கிண்டி — தாம்பரம் மெயின் ரோட்டில் இருந்து பிரியும் எம்.கே.என். சாலையில் மாங்குளம் பஸ் நிறுத்தம் எதிரே அருணா லாட்ஜ் கட்டிட வளாக பின்புறத்தில்

இந்த ஜீவ சமாதி  உள்ளது. பவுர்ணமி மற்றும் வியாழன் தோறும் இங்கு சிறப்பு பூஜைகள், தியான பயிற்சிகள் நடக்கிறது. இந்த ஜீவ சமாதியில் சற்று நேரம் அமர்ந்து தியானம் செய்தாலே மன அமைதி கிடைப்பதாக சொல்கிறார்கள்.





# 23.ஸ்ரீ காரைச் சித்தர்

**வலங்கைமான்**

23. ஸ்ரீ காரை சித்தர்

கர்மம்... கர்மம் என்று சிலர் தலையில் அடித்துக் கொள்வதைப் பார்த்து இருப்பீர்கள். கர்மம் சேர சேர தொல்லைதான். கர்மத்தை உடனுக்குடன் தொலைத்து விட வேண்டும். கர்மத்தை போக்கினால்தான் முக்தி பெற முடியும்.

கர்மத்தை எப்படி போக்குவது? அதுவும் நாம் கொஞ்சம் கூட நோகாமல் எப்படி கர்மத்தைப் போக்குவது?



ஸ்ரீ காரைச் சித்தர்

எந்திரமயமான தற்போதைய கணினி யுகத்தில் நிறைய பேரின் எதிர்பார்ப்பு இப்படித்தானே உள்ளது. அதற்கு உதவும் சித்தபுருஷர்கள் எத்தனையோ எளிய வழிகளை நமக்குக் காட்டியுள்ளனர். ஸ்ரீகாரைச் சித்தர் கர்மம் போக்குவதற்காகவே "கனக வைப்பு" எனும் ஒரு நூலை நமக்கு தந்து சென்றுள் ளார். இந்த நூலில் 390 பாடல்கள் உள்ளன.

பாடல்களா என்று முன் வைத்த காலை, பின் வைத்து விடாதீர்கள். எல்லாப் பாடல்களும் தேனென இனிக்கும் எளிய தமிழில் உள்ளன. இந்த அரிய நூலில் கர்ம மார்க்கம், பக்தி மார்க்கம், ஞான மார்க்கம், யோக மார்க்கம் ஆகிய எல்லா ஆன்மிகத் துறைகளுக்கும் வழிகாட்டும் தத்துவங்கள் நிறைந்துள்ளன.

இதனால் காரைச் சித்தரின் கனகவைப்பு நூல் "தத்துவ ஞானப் பொக்கிஷம்" ஆகத் திகழ்கிறது. ஆனால் அந்த பொக்கிஷத்தைப் பெற்று ஞானத்தை மேம்படுத்திக் கொள்பவர்கள் எண்ணிக்கையோ மிக மிகக் குறைவாக உள்ளது.

அதற்காக சத்குரு மகான் ஸ்ரீகாரைச் சித்தரை மிகவும் சாதாரணமாக நினைத்து விடக்கூடாது. ஒரு இரும்புக் கம்பியைப் பார்த்து அவர் லேசாக சிரித்தாலே போதும், அது சொக்கத்தங்கமாக மாறிவிடும். அந்த அளவுக்கு அட்டமா சக்திகள் அனைத்தையும் பெற்றவர் அவர்.



**காரைச் சித்தர் கட்டிய மரப்பாலம்**

அவரைப் பொறுத்தவரை மண்ணையும் பொன்னையும் ஒரே மாதிரி பாவித்தவர். ரூபாய் நோட்டுகள் நமக்குத்தான் பணம். ஆனால் அவருக்கு அவை வெறும் காகிதக் குப்பை. இத்தகைய சிறப்புடைய இந்த மகான் சமீப காலத்தில் கும்பகோணம் அருகே வலங்கைமான் பக்கம் இருக்கும் சாந்த வெளியில்

வாழ்ந்தவர். அவரது சித்து விளையாட்டுக்களை நிறைய பேர் நேரில் பார்த்து ஆச்சரியத்தில் மூழ்கியதுண்டு.

புகழுக்காகவோ, பணத்துக்காகவோ அவர் எந்த சித்தாடலையும் செய்தது இல்லை. பித்தர்களை பக்தர்களாக்கி, அந்த பக்தர்கள், பரம்பொருளைக் காணும் பேறு பெறவே சித்தாடல்களை நிகழ்த்தினார். இந்த மகான் 1918—ம் ஆண்டு திருவனந்தபுரத்தில் பிறந்தார். இவரது பூர்வீகம் வலங்கைமான் அருகே உள்ள நாகரசம்பேட்டை எனும் சிறிய ஊராகும்.

இவரது பெற்றோர் கிருஷ்ணமாச்சாரியார், ருக்மணி அம்மாள். இவர்களுக்கு இரண்டாவது மகனாக சித்தர்பெருமான் பிறந்தார்.

அவருக்கு சக்கரவர்த்தி ராகவய்யங்கார் என்று பெயர் சூட்டினார்கள். சிறு வயதிலேயே அவர் சாதி, மத வித்தியாசமின்றி அனைவரிடமும் இயல்பாகப் பழகினார். தாழ்த்தப்பட்டவர்களின் வீடுகளுக்கு சென்று சர்வசாதாரணமாக சாப்பிடுவார்.

கல்வி கற்க அவருக்கு நாட்டமே வரவில்லை. குஸ்தி சண்டையில்தான் அவர் மனம் லயித்தது. யாருக்கும் அடங்காத பிள்ளையாக இருந்தார்.

அவருடைய போக்கு உறவினர்கள் யாருக்கும் பிடிக்க வில்லை. இதனால் 12 வயதில் வீட்டை விட்டு வெளியேறினார்.

சுமார் 3 ஆண்டுகள் இமயமலைப் பகுதியிலும், சுமார் ஓராண்டு திருப்பதி மலைக் காட்டுக்குள்ளும் சுற்றித் திரிந்தார். ஊர் திரும்பிய அவருக்கு சுலோசனா என்ற பெண்ணை திருமணம் செய்து வைத்தனர். அதன் பலனாக ரேணுகா என்ற மகளும், ரவிக்குமார் என்ற மகனும் சித்தருக்குப் பிறந்தனர். அவர்களுக்காக புனா சென்று அரசாங்க ஆயுதச் சாலையில் சிறிது நாள் பணியாற்றினார்.

இல்லற வாழ்க்கையில் அவர் மனம் செல்லவில்லை. ஆன்மிக உணர்வு அவரை இருக்க விடவில்லை. குடும்பத்தைத் துறந்து மீண்டும் இமயமலைக்கு ஓடினார்.

மனதில் நிம்மதி இல்லாமல் மலேசியா, இலங்கையில் சுற்றித் திரிந்தார். பிறகு இந்தியா திரும்பி வர்தா சென்று மகாத்மா காந்தியுடன் சில மாதங்கள் தங்கியிருந்தார். பிறகு மீண்டும் இமயமலை சென்றார். ரிஷிகேசில் அவர்

மகான் ஆகும் அதிசயம் நடந்தது. அங்குள்ள லட்சுமண் ஜூலாவில் ஒரு யோகியைக் கண்டார். அந்த யோகி தன் இடுப்பைப் பிடித்துக் கொண்டு ‘‘அய்யோ இடுப்பு வலி தாங்க முடியவில்லை. யாராவது என் இடுப்பில் மிதித்தால்தான் வலி தீரும்’’ என்று கதறினார்.

யாரும் அவர் அருகில் செல்லவில்லை. அப்போது நமது சித்தர் எந்த தயக்கமும் இல்லாமல் அந்த யோகி இடுப்பில் ஒரு உதை விட்டார். அந்த யோகி தன் முதுகுவலி நீங்கி விட்டதாக கூறி சித்தரை ஆசிர்வதித்து விட்டுச் சென்றார். அன்று முதல் ராகவய்யங்கார் அட்டமா சக்திகள் அனைத்தையும் பெற்றவரானார். தவம் இருக்கும் ஆற்றலையும் பெற்றார். தன்னை உணர்ந்த அவர் சித்தரானார்.

ஊர் திரும்பிய அவர் முற்றிலும் மாறி இருந்தார். புன்னகை தவழும் சாந்தமான முகம், இனிய பேச்சு, சுடர்விட்டு பிரகாசிக்கும் விழிகள் என்று ஆளே மாறி இருந்தார். ஆனால் அவர் சிறப்பை ஊரார் உணராமல் இருந்தனர்.

ஒரு தடவை அவர் தன் சகோதரி வாழும் காரைக்கோட்டைக்கு சென்றார். அங்குள்ள ஒரு ரவுடி அவரை வெட்டுவதற்காக அரிவாளை ஓங்கியபடி ஓடி வந்தான்.

சித்தர் அவனைப் பார்த்து ஒரு சிரிப்பு, சிரித்து விட்டு சென்று விட்டார். அந்த ரவுடியின் ஓங்கிய கை அப்படியே நின்று விட்டது. மூன்று நாட்களாக அவனால் அசையக் கூட முடியவில்லை.

அந்த ரவுடியின் உறவினர்கள் சித்தரிடம் மன்னிப்பு கேட்ட பிறகே ரவுடியின் கை குணமானது. காரைக்கோட்டையில் நடந்த இந்த சம்பவத்துக்குப் பிறகு சித்தர் ‘‘காரைச் சித்தர்’’ என்று அழைக்கப்பட்டார்.

ஒரு நாள் அவர் கனவில் தோன்றிய குரு, ஆண்டான் கோவிலில் குடமுருட்டி ஆற்றோரம் உள்ள ஆல மரத்தடியில் ஆஞ்சநேயர் உள்ளார். அவரை பராமரிக்கும்படி சொல்லி மறைந்தார்.

அதை ஏற்று காரைச் சித்தர் அங்கு சென்றார். ஏராளமான விழுதுகளுடன் மிக பிரமாண்டமாக இருக்கும் ஆல மரத்தடியில் ஆஞ்சநேயர் காணப்பட்டார். அந்த இடம் அமைதியாக இருந்ததால் ‘‘சாந்தவெளி’’ என்று பெயர் பெற்றது.

அந்த சாந்தவெளியே ஸ்ரீகாரைச் சித்தரின் இருப்பிடமாக மாறியது. சாந்தவெளி ஆஞ்ச நேயருக்கு ஆலயம் கட்ட எத்தனையோ பேர் தீவிர முயற்சி செய்தனர். ஆனால் யாராலும் ஆலயம் கட்ட முடியவில்லை.

அனுமார் அங்கு ஆலயத்தை விரும்பவில்லை என்று மக்கள் முடிவு செய்தனர். என்றாலும் அனுமாருக்கு அமுதுபடைக்க காரைச் சித்தர் அங்கு ஒரு மடப்பள்ளி கட்டினார்.

அதன் திறப்பு விழாவுக்கு ஆயிரக்கணக்கானவர்கள் வந்தனர். ஆனால் திடீரென மழை பெய்ததால் அவர்களால் குடமுருட்டி ஆற்றை கடந்து வர முடியவில்லை.

உடனே மூங்கில் கம்புகளை கொண்டு வரச் செய்த சித்தர், அங்கு ஒரு பாலம் அமைத்தார். கரை புரண்டோடும் வெள்ளத்தில், வெறும் கம்பால் பாலம் அமைக்கப்பட்டதைக் கண்டு அதிகாரிகள் ஆச்சரியம் அடைந்தனர். அந்த அதிகாரிகளுக்கு சித்தர் ஆற்று மணலை அள்ளிக் கொடுத்தார். அவை வெல்லக்கட்டியாக மாறி இருந்தது. இந்த நிகழ்வுக்குப் பிறகு ஸ்ரீகாரைச் சித்தரிடம் அருள் பெற தினம், தினம் ஏராளமானோர் சாந்தவெளியில் குவிந்தனர்.



ஸ்ரீ காரைச் சித்தர் ஜீவ சமாதி

அவர்களது துயர் தீர்ப்பதில் காரைச் சித்தர் மிகுந்த ஆர்வம் காட்டினார். மிக அதிகமான நோய் தாக்குதலுடன் வருபவர்களுக்கு கையில் இருந்து சந்தனத்

தூள் வரவழைத்துக் கொடுப்பார். அந்த சமயங்களில் அவர் மக்களுக்கு மாயக் கண்ணனாகத் தோன்றினார்.

சென்னை, கோவை உள்பட வெளியூர்களுக்கும் காரைச் சித்தர் சென்று வருவதுண்டு. ஒரு தடவை திருமுல்லைவாயிலில் உள்ள வைஷ்ணவி கோவிலுக்குச் சென்றார். அப்போது அங்கு வந்த ஒரு பக்தர், இன்று நிறைய பூக்கள் கிடைக்கவில்லை என்று கூறி வருத்தப்பட்டார். அதைக் கேட்ட காரைச் சித்தர், தூரத்தில் இருந்த ஒரு செடியைக் காட்டி அதில் நிறைய பூக்கள் இருப்பதாக கூறினார். உடனே அந்த பக்தர் சென்று அந்த செடியில் இருந்து பூக்களைப் பறிக்கத் தொடங்கினார். பூக்கள் பறிக்க, பறிக்க வந்து கொண்டே இருந்தது. பூ பறித்த பக்தருக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை.

மற்றொரு சமயம் காரைச் சித்தர் தம் பக்தர்கள் 4 பேருடன் வெளியூர் சென்றிருந்தார். ஒரு இடத்தில் தங்கியபோது கடும் குளிர் தாக்கியது. எல்லோரும் தாங்கள் வைத்திருந்த போர்வையை எடுத்துப் போர்த்திக் கொண்டனர்.

சித்தரிடம் மட்டும் போர்வை இல்லை. இதுபற்றி பக்தர்கள் ஆதங்கத்தை வெளியிட்டபோது, ‘‘கவலைப்படாதீர்கள். எனக்கு 2 பேர் போர்வை கொண்டு வருவார்கள்’’ என்றார்.

அவர் சொன்ன மாதிரியே இரண்டு பேர் வந்தனர். சித்தரை தரிசனம் செய்தனர். அடுத்த வினாடி சித்தர் தோளில் ஒரு புதுப் போர்வை காணப்பட்டது.

அந்த 2 பேரிடமும் இது பற்றி கேட்டபோது, ‘‘நாங்கள் வெறும் கையுடன்தான் வந்தோம். எதுவும் எடுத்து வரவில்லை’’ என்றனர்.

அப்படியானால் அந்த புதுப்போர்வை எப்படி வந்தது? சித்தரிடம் கேட்டபோது அவர் எதையும் சொல்ல மறுத்து விட்டார்.

இன்னொரு நாள் காரைச் சித்தர் சிலருடன் பேசிக் கொண்டிருந்தார். திடீரென அவர், ‘‘ஒருவரைப் பார்க்க ரெயில்வே ஸ்டேசனுக்கு வருவதாக கூறியிருந்தேன். மறந்தே போய் விட்டேனே...’’ என்றவர் எழுந்து அருகில் உள்ள தோட்டத்துக்குள் சென்றார். அப்படியே மறைந்து விட்டார்.

சுமார் ஒரு மணி நேரம் கழித்து மீண்டும் வந்தார். ரெயில்வே ஸ்டேசனில் நண்பரைப் பார்த்து விட்டு வந்ததாக கூறினார்.

அதுபற்றி சில பக்தர்கள் விசாரித்தபோது ரெயில்வே ஸ்டேஷனுக்கு செல்ல எந்த காரும் கிடைக்காததால் அவர் கூடு விட்டு கூடு பாய்ந்து சென்றிப்பதை கண்டுபிடித்தனர். சில சமயம் குடமுருட்டி ஆற்றின் ஒரு பக்கத்தில் நின்று கொண்டிருப்பார்.

அடுத்த வினாடி ஆற்றின் மற்றொரு கரை வழியாக நடந்து சென்றபடி இருப்பார். இந்த அதிசயத்தை நேரில் பார்த்து வியந்தவர்கள் வலங்கைமான் பகுதியில் இன்றும் இருக்கிறார்கள்.

ஒருசமயம் குடமுருட்டி ஆற்றில் உள்ள சிப்பிகளை சிறுமிகள் சேகரித்து விளையாடிக் கெண்டிருந்தனர். அப்போது அங்கு வந்த காரைச்சித்தர், எல்லா சிப்பிகளையும் ஒரு பெட்டிக்குள் போட்டு குலுக்கி விட்டுக் கொடுத்தார். அந்த சிப்பிகள் எல்லாம் ஆரஞ்சு மிட்டாய்களாக மாறியிருந்தன.

சிறுவர், சிறுமிகள் ஆசையோடு கேட்கும் போதெல்லாம் இந்த அற்புதத்தை ஸ்ரீ காரைச்சித்தர் செய்தார். ஒருதடவை ரிஷிகேசத்தில் இருந்து வந்திருந்த 2 பேர் ஸ்ரீ காரைச்சித்தர் எந்த அளவுக்கு சக்திப் படைத்தவர் என்பதை அறிய விரும்பினார்கள். அவர்கள் வந்த நோக்கத்தைப் புரிந்து கொண்ட சித்தர், தான் பல் துலக்கிய குச்சியை எடுத்து வீசினார். அந்தக் குச்சி அவர் மீது பட்டு வெள்ளித் துண்டாக மாறி விழுந்தது.

மற்றொரு குச்சியை எடுத்து இன்னொருவர் மீது வீசினார். அது தங்கக்குச்சியாக மாறியது. இதுகண்டு அதிர்ச்சி அடைந்த இருவரும் சித்தரிடம் மன்னிப்பு கேட்டுச் சென்றனர். 1962—ம் ஆண்டு ஸ்ரீ காரைச் சித்தர் திடீரென இமயமலை யாத்திரை மேற்கொண்டார். ரிஷிகேசில் உள்ள ஆசிரமத்துக்கு சென்ற அவர் சிவானந்த சரஸ்வதி சுவாமிகளை சந்தித்தார்.



கருவறையில் உள்ள சிலை

அப்போது தன் வலது கையை மேலே உயர்த்தினார். அதில் எலுமிச்சம் பழம் வந்தது. அதை சிவானந்த சரஸ்வதி சுவாமியிடம் கொடுத்து ஆசீர்வதித்தார். மீண்டும் சாந்தவெளிக்கு திரும்பிய பிறகு அவர் செய்த சித்தாடல்கள் அதிகரித்தது. திடீரென ஒரு இரும்பை எடுத்துக் கொடுத்து அடுப்பில் போட்டு காய்ச்சி எடுத்து வா என்பார். அந்த இரும்புத் துண்டு தங்கமாக மாறி இருக்கும்.

அந்த தங்கத்தை விற்கும் காசை ஒரே நாளில் செலவு செய்து விடுவார். மீண்டும் எப்போது சாப்பாடு வாங்க காசு இல்லையோ இப்போது தகரத்தை தங்கமாக்கும் வித்தையைச் செய்வார்.

இதை அறிந்த பலர் இரும்புத் துண்டு எடுத்து வந்து அவர் கையில் கொடுத்து வாங்கிச் சென்று நெருப்பில் போட்டு காய்ச்சி எடுத்துப் பார்த்ததுண்டு. அந்த இரும்புத் துண்டுகள் தங்கமாக மாறவில்லை. ஒரு சமயம் சித்தர் ஒரு பட்டு நூலை தொட்டதுமே தங்கமாக மாறிப் போனது. அவர் இரும்புக் கம்பியை பார்வையாலும் தங்கமாக மாற்றியதாக குறிப்புகள் உள்ளன.

ரசவாத வித்தையை கற்கும் வெறியுடன் அலைந்த ஒருவன் அதற்காக ஸ்ரீகாரைச் சித்தரிடம் கோபத்துடன் வந்தான். சித்தரை தாக்கவும் முயன்றான்.

உடனே சித்தர் அவரிடம், "ஒருபிடி மண்ணை அள்ளு" என்றார். அவனும் மணலை அள்ளினான். அந்த மணலை கைக்குள் மூடி திறந்து பார் என்றார்.

அவனும் அப்படியே செய்ய அந்த புழுதி மணல் தங்கமாக மாறி இருந்தது. அதன்பிறகே அவன், ஆத்மஞானம் பெற்றால் மட்டுமே அனைத்தும் சித்திக்கும் என்பதை உணர்ந்தான்.

உலகமே தங்கம், பணம் என்ற மோகத்தில் இருப்பதை கண்ட சி த்தர், அந்த மாயையை விரட்டவே கனகவைப்பு நூலை இயற்றினார். இந்த நூலில் உள்ள ரகசியங்கள் குறிப்பிட்ட காலகட்டங்களில் தெளிவாக்கப்படும் என்று காஞ்சி மகா பெரியவா கூறி இருப்பதில் இருந்து 'கனகவைப்பு' நூலின் மேன்மையை உணர்ந்து கொள்ளலாம்.

சித்தர் இந்த நூலை அருளிய பிறகும் மக்கள் அவரிடம் சித்தாடல்களையே எதிர்பார்த்தனர். எனவே அவர் வறுமையில் வந்தவர்களுக்கு மட்டும் நாணயங்கள் வரவழைத்து உதவினார்.

இப்படி ஆச்சரியங்களின் அதிசய குவியலாகத் திகழ்ந்த ஸ்ரீகாரைச் சித்தர் 1964—ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 24—ந்தேதி பரிபூரணம் அடைந்தார். அவருடைய நினைவாலயம் வலங்கைமான் அருகே சாந்தவெளியில் ஜெயவீர ஆஞ்சநேயர் கோவிலுக்கு மேற்கே கட்டப்பட்டுள்ளது.

கருவறை பீடத்தின் மீது காரைச்சித்தர் உருவச்சிலையை பிரதிஷ்டை செய்துள்ளனர். அந்த சிலை ஒவ்வொருவரின் மனநிலைக்கு ஏற்ப மாறுபட்ட காட்சிகளுடன் தோற்றம் தருவதாக சொல்கிறார்கள். ஒவ்வொரு மாதமும் 24—ந்தேதி மாலை 6 மணி முதல் 6.05 மணி வரை அங்கு தியானம் இருந்தால் நினைத்த கோரிக்கைகள் நிறைவேறுவதாக ஸ்ரீகாரைச்சித்தரை பூஜிக்கும் பக்தர்கள் நம்பிக்கையோடு தெரிவித்தனர்.





# 24.விராலிமலை ஸ்ரீ சதாசிவ சுவாமிகள்

திருபுவனம்

## 24. விராலிமலை ஸ்ரீ சதாசிவ சுவாமிகள்

சித்தர்கள் என்றதும் கற்பனைக்கு எட்டாத அதிசயங்களை செய்து காட்டுபவர்கள் என்றே பெரும்பாலானவர்கள் நினைக்கிறார்கள். ஆனால் கடவுளைக் கண்டு தெளிந்தவர்களான சித்தர்கள், மக்களுக்கு சேவை செய்வதை மட்டுமே நோக்கமாகக் கொண்டிருந்தனர் என்பது சிலருக்கே தெரிந்ததாக உள்ளது.

நோய் தீர்ப்பதைத் தான் பெரும்பாலான சித்தர்கள் தங்களது முதன்மைப் பணியாகக் கொண்டிருந்தனர். அந்த மருத்துவ சேவை சித்தருக்கு சித்தர் மாறுபடும். ஒவ்வொரு சித்தரும், ஒவ்வொரு விதமான அதிசயங்களை நிகழ்த்தி நோய் தீர்த்தனர்.




சில சித்தர்கள், மிகக் கடுமையான நோயாளிகளைக் கூட தங்களது ஒரே ஒரு பார்வையால் குணப்படுத்தி மக்களை ஆச்சரியப்படுத்தியுள்ளனர். பொதுவாக சித்த புருஷர்கள் யார் ஒருவரை உற்றுப் பார்க்கிறார்களோ... அவரது அனைத்து விதமான தோஷங்களும் பறந்தோடி விடும் என்பது உண்மை.

சில சித்தர்கள் தங்கள் கையால் விபூதி எடுத்துக் கொடுத்தால் போதும். நோய்கள் இருந்த இடம் தெரியாமல் ஓடி விடும். மிக உயர்ந்த சக்தி பெற்ற

சித்தர்கள், ஒருவரைப் பார்த்ததுமே, அவர் உடலுக்குள் என்ன பிரச்சினை உள்ளது என்பதை ஸ்கேன் ரிப்போர்ட்டைப் பார்த்து சொல்வது போல சொல்லி விடுவார்கள்.

அந்த வரிசையில் விராலிமலை ஸ்ரீசதாசிவ சுவாமிகள் தான் தோண்டிய கிணற்று நீரையே பக்தர்களுக்கு தீர்த்தமாக கொடுத்து எல்லாவித பிரச்சினைகளையும் தீர்த்து வைத்தார். பைசா செலவில்லாமல் கிணறு தீர்த்தத்தால் அவரிடம் பலன் பெற்றவர்கள் ஏராளம். இத்தகை சிறப்பான அவர் 1800—களில் கும்பகோணம் அருகே திருபுவனத்தில் வாழ்ந்தார். அவரது ஜீவசமாதி திருபுவனத்தில் கம்பகேஸ்வரர் ஆலயம் அருகில் அமைந்துள்ளது. அந்த ஜீவ சமாதி கருவறை முன்பு ஸ்ரீசதாசிவ சுவாமிகள் ஏற்படுத்திய கிணறு உள்ளது. இது சாதாரண கிணறு அல்ல. அனைத்து வித பிரச்சினைகளையும் தீர்த்து வைக்கும் ஆற்றல் உடைய மருந்து தண்ணீரை தீர்த்தமாகக் கொண்ட கிணறு.

தமிழகத்தில் உள்ள வேறு எந்த ஜீவ சமாதியிலும் இப்படி தீர்த்த கிணறு கருவறை முன்பு இருக்கும் சிறப்புடன் இல்லை. இந்த கிணற்றை விராலிமலை ஸ்ரீசதாசிவ சுவாமிகள் தன் தவ வலிமையால் எப்படி உருவாக்கினார் என்பதைத் தெரிந்து கொள்ளும் முன்பு அவரைப் பற்றி தெரிந்து கொள்வோம்.

காசியில் வாழ்ந்த தமிழ்க் குடும்பத்தில் சுவாமிகள் பிறந்தார். சிறு வயதில் தாயை இழந்த அவர் தந்தை பராமரிப்பில் வளர்ந்து வந்தார். சிறந்த தவயோகியான அவரது தந்தை, தன் மகனுக்கு ஓரளவு வயதானதும் தீட்சை கொடுத்தார்.

இளம் வயதில் துறவறம் பூண்ட அவர் இமயமலைக்குச் சென்றார். அங்கு பல மகான்களுடன் பழகினார். அதன் பயனாக யோகம், ஞானம், வேதம், ஆகமம் ஆகியவற்றை நுட்பமாகக் கற்றுத் தேர்ந்தார். ஒருநாள் திடீரென இமயமலையில் இருந்து புறப்பட்டு சேலம் வந்தார். அங்கு பவானந்தரிடம் பல விஷயங்களை கற்று ஆத்ம ஞானம் பெற்றார்.

பவானந்தர் உத்தரவின்பேரில் ஒரு நாள் சுவாமிகள் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள விராலிமலைக்கு வந்தார். அங்கு மலை அடிவாரத்தில் உள்ள ஒரு குகைக்குள் சென்று தவத்தில் ஆழ்ந்தார். விராலிமலை சுற்றுப்

பகுதி மக்கள் அவரை நாடி வந்து தங்கள் நோய்கள் பற்றி வேதனையுடன் கூறினார்கள். அவர்களது நோயை சித்தர் தீர்த்து வைத்தார். அதன் பிறகே அவர் சக்தி வாய்ந்த சித்தர் என்பதை மக்கள் உணர்ந்தனர்.

விராலிமலை அடிவாரத்தில் உள்ள குடகு குகைக்குள் அவர் தவம் இருந்ததால் அவரை சிலர் குடகு சித்தர் என்று அழைத்தனர். ஆனால் வெளியூர் பக்தர்கள் அவரை விராலி மலை சித்தர் என்றே சொன்னார்கள். இதனால் அவருக்கு விராலிமலை சித்தர் என்ற பெயர் நிலைத்தது. அவரது புகழ் அன்றைய புதுக்கோட்டை சமஸ்தான ஆட்சிக் காலத்தில் விரிவாகப் பரவியது. இதனால் சமஸ் தானத்தின் பல பகுதிகளிலும் இருந்து வந்தவர்கள், சித்தரிடம் இரும்பை தங்கமாக்கும் ரசவாத வித்தையை கற்றுத் தரும்படி வலியுறுத்தினார்கள் .




இது சித்தருக்கு வெறுப்பை ஏற்படுத்தியது. பொருள் ஆசை, பண ஆசை மாயையில் சிக்கி இருப்பவர்களை எப்படி திருத்த முடியும்? எனவே அவர் ஒருநாள் திடீரென்று விராலிமலை குகையில் இருந்து வெளியேறி திருக்காட்டுப்பள்ளிக்கு அருகில் உள்ள திருசடை விளந்தை என்ற ஊருக்கு சென்று மடம் அமைத்து தங்கினார். அந்த ஊரில் புவனேஸ்வரி அம்மனுக்கு

கோவில் கட்ட ஏற்பாடு செய்தார். திருவண்ணாமலையில் இருந்து கற்கள் எல்லாம் வந்து விட்டன.

இதையடுத்து கோவில் கட்டும் பணி நடந்தது. கட்டுமானப் பணியாளர்களுக்கு அவர் கூலிக்குப் பதில் விபூதி பிரசாதத்தை தாளில் மடித்துக் கொடுப்பாராம். அதை வாங்கிக் கொண்டு  வீட்டுக்குச் சென்று திறந்து பார்த்தால் கூலிக்கான பணம் இருக்குமாம்.

அந்த கோவில் கட்டும் பணி முடிந்த நிலையில் சுவாமிகள் தமிழ் இலக்கணம் கற்றுக் கொடுக்கும் பணியையும் செய்து வந்தார். அவரிடம் நிறைய பேர் மாணவர்களாக இருந்தனர். ஆங்கிலேயர் ஒருவரின் மகனும் தமிழ் கற்க அவரிடம் சேர்ந் திருந்தான். ஒருநாள் மகனை அழைத்துச் செல்ல குதிரையில் வந்திருந்த ஆங்கிலேய துரை திடீரென வயிற்று வலியால் துடித்தார். அதைப் பார்த்த சித்தர் ஒரு மூலிகைச் செடி இலையையும் திருநீறையும் சேர்த்துக் கொடுத்தார்.

அவற்றை சாப்பிட்ட அடுத்த 30 நிமிடத்தில் ஆங்கிலேய துரையின் வயிற்று வலி இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது. மிகவும் ஆச்சரியம் அடைந்த ஆங்கிலேய துரை, "உங்களுக்கு என்ன வேண்டுமோ கேளுங்கள், உடனே செய்து தருகிறேன்" என்றார்.

சித்தர் உடனே திருச்சடை விளந்தையில் உள்ள காவிரி ஆற்றுப் பாலத்தை சீரமைத்துத் தரும்படி கூறினார். அதன்படி அந்த பாலம் பெரும் பொருட்செலவில் சீரமைக்கப்பட்டது. இந்த நிலையில் சித்தருக்கு திடீரென ஒரு சோதனை ஏற்பட்டது. சிலர் அவரிடம் இரும்பைத் தங்கமாக்கும் ரசவாத வித்தையை சொல்லிக் கொடுக்கும்படி கேட்டு அடிக்கடி துன்புறுத்தினார்கள்.

இதனால் விராலிமலை சித்தர் அந்த ஊரில் இருந்தும் வெளியேறி திருவிடைமருதூருக்குச் சென்றார். அங்கு தங்கி இருந்து அவர் மக்களின் குறைகளைத் தீர்த்து வந்தார்.

அப்போது கும்பகோணம் அருகில் உள்ள திருபுவனத்தைச் சேர்ந்த கிருஷ்ணசாமி நாயுடு என்பவர் தனக்கு குழந்தை பாக்கியம் கேட்டு விராலிமலை சித்தரை அணுகினார். சித்தரின் அருளால் கிருஷ்ணசாமி நாயுடுக்கு குழந்தை பாக்கியம் கிடைத்தது.

இதனால் மகிழ்ச்சி அடைந்த திருபுவனத்தைச் சேர்ந்த நாயுடு சமூகத்தினர், சித்தரை தங்கள் ஊருக்கு வந்து தங்கி இருந்து அருளும்படி கோரிக்கை வைத்தனர். அது மட்டுமின்றி திருபுவனம் கம்பகேஸ்வரர் கோவிலின் தென்புறத்தில் உள்ள ஒரு இடத்தை வாங்கி மடம் கட்டுவதற்கும் ஏற்பாடு செய்தனர்.

இதனால் மகிழ்ச்சி அடைந்த விராலிமலை சதாசிவ சுவாமிகள் திரு விடைமருதூரில் இருந்து வெளியேறி திருபுவனத்துக்கு வந்து சேர்ந்தார். அங்கு அவருக்காக வாங்கப்பட்ட இடத்தில் அமர்ந்து ஏராளமான சேவைகளும், அற்புதங்களும் செய்தார்.

அவருக்கு பணிவிடை செய்ய சுந்தரேச அய்யர் என்பவர் நியமனம் செய்யப்பட்டார். ஆடுதுறையைச் சேர்ந்த ஆறுமுகம் செட்டியாரும் சுவாமிகளுக்கு பணிவிடைகள் செய்தார்.

விராலிமலை ஸ்ரீசதாசிவ சித்தர் உப்புமாவையும் காபியையும் மிகவும் விரும்பி சாப்பிடுவார். தினமும் அவருக்கு அதையே செய்து கொடுத்தனர்.

திருபுவனம் மடத்தில் அமர்ந்த பிறகே விராலிமலை சித்தர் நிறைய அற்புதங்களை நிகழ்த்தினார். குறிப்பாக உடலை 9 துண்டுகளாக பி ரித்து போட்டுக் கொண்டு தவம் இருக்கும் நவகண்ட யோகத்தை அடிக்கடி செய்து மக்களிடம் ஆச்சரியத்தை ஏற்படுத்தினார். சுமார் 100 ஆண்டுகளுக்கு முன்பு திருபுவனத்தில் சித்தர் குடியேறிய இடம் மிகப்பெரிய மாந்தோப்பாக இருந்தது. அதன் ஒரு பகுதியில் சிறிய குளம் ஒன்றும் இருந்தது.

விராலிமலை சித்தர் தினமும் அந்த கு ளத்துக்குள் இறங்கி நீராடுவார். தண்ணீருக்குள் அவர் மூழ்கிய மறுநிமிடம் சித்தரின் உடல் பாகங்கள் ஒவ்வொன்றும் தனித்தனியாக கழன்று விடுமாம்.


விராலிமலை சுவாமிகள் ஜீவசமாதியில் கருவறை முன்பு உள்ள கிணறு

அதாவது தலை வேறு, கை வேறு, கால் வேறு, உடல் பகுதி வேறு என்று பிரிந்து விடும். அந்த உடல் பாகங்கள் தனித்தனியாக தண்ணீரில் மிதக்கும். அதை பலரும் பல தடவை நேரில் பார்த்துள்ளார்கள். அப்போது அவர்கள் அய்யோ, சாமிக்கு என்ன ஆனதோ தெரியவில்லையே என்று கடும் அதிர்ச்சி அடைந்ததுண்டு. அடுத்த சில நிமிடங்களில் சித்தர் தண்ணீருக்குள் இருந்து வெளியேறுவார். அப்போது அவர் கை, கால்கள், தலை ஒட்டி இருக்கும். எல்லோரும் ஆச்சரியத்தில் வாயைப் பிளந்தபடி நிற்பார்கள்.

ஆனால் விராலிமலை சித்தரோ எதுவுமே நடக்காதது மாதிரி தலையைத் துண்டால் துவட்டியபடி வருவாராம். நாளடைவில் இந்த ஆச்சரியத்தை பார்க்க கூட்டம் கூடத் தொடங்கியதாம்.

இதையடுத்து விராலிமலை சித்தர் தன் பயன்பாட்டுக்காக தன் இருப்பிடம் அருகிலேயே ஒரு கிணறு தோண்டினார். அந்த கிணற்றை அவர் தனது தவ வலிமையால் பல அபூர்வ சக்தி வாய்ந்த தீர்த்தங்கள் கொண்ட கிணறாக மாற்றியிருந்தார்.

அந்த கிணற்று தீர்த்தத்தை குடித்தவர்களுக்கு தோஷங்கள் விலகியது. நோய்கள் விலகியது. செல்வம் குவிந்தது. கடன் பிரச்சினைகள் ஓய்ந்தது, குழந்தை பாக்கியம் கிடைத்தது. இப்படி எல்லாவித வேண்டுதல்களுக்கும் அந்த கிணற்று தண்ணீரே மாமருந்தாக மாறியது. இந்த நிலையில் திருபுவனத்தைச் சேர்ந்த குஷ்ட நோயால் அவதிப்பட்ட ஒருவர் வந்து

விராலிமலை சித்தரிடம் தீர்த்தம் தருமாறு வேண்டினார். ஆனால் அவருக்கு சித்தர் தீர்த்தம் கொடுப்பதற்கு பதில் தைலம் ஒன்றைக் கொடுத்தார்.

தினமும் அந்த தைலத்தில் 2 சொட்டு பால் விட்டு குடிக்கும்படி கூறினார். அதன்பிறகு அந்த தைலத்தை யாரும் எடுக்க முடியாதபடி அலமாரியில் வைத்து பூட்டி விடும்படி உத்தரவிட்டார்.

அந்த நோயாளியும் அப்படியே செய்து வந்தார். 48 நாட்களில் அந்த நோயாளியின் உடம்பில் இருந்த குஷ்டம் முழுமையாக மறைந்திருந்தது.

அதோடு மற்றொரு அதிசயமும் நடந்தது. அந்த தைலம் வைக்கப்பட்டிருந்த அலமாரி சாவி தங்கமாக மாறி இருந்தது. அந்த சாவியையும், மீதமான தைலத்தையும் அந்த நபர் எடுத்துச் சென்று சித்தரிடம் கொடுத்தார்.

உடனே விராலிமலை சித்தர் அவற்றை வாங்கி, தன் தவ வலிமையால் உருவாக்கி இருந்த கிணற்றுக்குள் போட்டு விட்டார். இதனால் அந்த கிணறு அனைத்து வித நோய்களையும் நீக்கும் சக்தி கொண்ட மருந்து கிணறாக மாறியது.

இந்த கிணற்றில் இருந்து பெறப்பட்ட தீர்த்தத்தை குடித்த பல்லாயிரக்கணக்கானவர்கள் பலன் அடைந்துள்ளனர். கேட்பதை எல்லாம் தரும் கற்பக விருட்சமாக இன்றும் அந்த அதிசயக் கிணறு பயன்பட்டு வருகிறது. விராலிமலை சித்தர் அங்கு வாழ்ந்த காலத்தில் உயிருக்கு ஆபத்தான நிலையில் இருந்தவர்களை காப்பாற்றியுள்ளார். அது மட்டுமின்றி சிறுவர், சிறுமிகளுக்கும் அவர் பிடித்தமான சாமியாக இருந்தார். சிறுவர்கள் அடிக்கடி அவரிடம் வந்து மிட்டாய் வேண்டும் என்று கேட்பார்கள். உடனே சித்தர் அவர்கள் அனைவரையும் வரிசையாக நிற்க சொல்வார்.

‘‘உங்கள் கைகளை மூடுங்கள். உங்களுக்கு என்ன மிட்டாய் வேண்டுமோ அதை நினைத்துக் கொண்டு கைவிரலை திறங்கள்’’ என்பார்.

சிறுவர்கள் கையைத் திறக்கும்போது அவர்கள் ஆசைப்பட்ட இனிப்பு இருக்குமாம். இப்படி திருபுவனம் மக்களிடம் ஒன்று கலந்து வாழ்ந்த விராலிமலை சித்தர் 1929—ம் ஆண்டு டிசம்பர் மாதம் 6—ந்தேதி பரிபூரணம் அடைந்தார்.

அவர் முக்தி அடையும் முன்பு லிங்க சிலை ஒன்றை வரவழைத்து தயாராக வைத்திருந்தார். அந்த லிங்கத்தை சித்தரின் ஜீவசமாதி மீது பிரதிஷ்டை செய்து (மருந்து கிணறு முன்பு) கருவறை அமைத்தனர். அந்த அதிஷ்டானத்துக்குள் விராலிமலை சித்தர் பூஜித்த கணபதி, வள்ளி தேவசேனா சமேத சுப்பிரமணியர் சிலைகளும் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன.

வியாழக்கிழமைகளிலும் மூலம் நட்சத்திர நாட்களிலும் அங்கு சிறப்பு அபிஷேக, ஆராதனைகள் செய்யப்படுகின்றன. கார்த்திகை மாத மூல நட்சத்திரம் தினத்தன்று குருபூஜை நடத்துகிறார்கள்.





# 25.ஸ்ரீ சர்க்கரை அம்மா

திருவான்மியூர், சென்னை

25. ஸ்ரீ சர்க்கரை அம்மா

வானத்தில் பறவை போல அந்த பெண் பறந்து வந்து கொண்டிருந்தார். தரை இறங்குவதற்கு தகுந்த இடத்தை அந்தப் பெண்ணின் கண்கள் தேடியது.

அதோ... ஒரு மொட்டை மாடித் தெரிகிறது. அங்கு போய் இறங்கலாம் என்று முடிவு செய்தார்.

அடுத்த நிமிடம் அந்த பெண், மாடியில் தரை இறங்கினார். பறவை போல அழகாகப் பறந்து வந்து அவர் இறங்கியதை தமிழ் அறிஞரான திரு.வி.க. தம் கண்களால் நேரில் பார்த்து மிகுந்த ஆச்சரியம் அடைந்தார்.


ஸ்ரீ சர்க்கரை அம்மா

அப்போது அவர் ராயப்பேட்டை வெஸ்லி கல்லூரி விடுதியில் தங்கி இருந்தார். அந்த விடுதி மாடியில்தான் அந்த பெண் பறந்து வந்து இறங்கியிருந்தார்.

திரு.வி.க.வை பிரமிப்புக்குள்ளாக்கிய இந்த சம்பவம் சென்னையில் சுமார் 130 ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது.

பிரமிப்பில் இருந்து விடுபட்ட பிறகு திரு.வி.க. அந்த பெண் பற்றி விசாரித்தார்.

அப்போது அந்த பெண்ணின் பெயர் சர்க்கரை அம்மா என்பதும் அவர் சக்தி வாய்ந்த சித்தர் என்பதும் திரு.வி.க.வுக்கு தெரிய வந்தது. இதுபற்றி அவர் தாம் நடத்தி வந்த "உள்ளொளி" என்ற புத்தகத்தில் எழுதினார்.

உடனே நிறைய பேர் வந்து சர்க்கரை அம்மாவை ஆய்வு செய்தனர். அந்த ஆய்வுகளில் சர்க்கரை அம்மா மிகுந்த சக்திப் படைத்தவர் என்பது உறுதியானது.

என்றாலும் நிறைய பேருக்கு சர்க்கரை அம்மா எப்படி வானத்தில் பறந்தார் என்ற சந்தேகம் மட்டும் இருந்து கொண்டே இருந்தது. ஆனால் அதை நிரூபித்துக் காட்ட வேண்டிய மனநிலையில் சர்க்கரை அம்மா ஒரு போதும் இருந்ததில்லை.

ஏனெனில் அவர் மனம் முழுக்க ஆனந்த மயத்துடன் வாழ்ந்தார். எப்போதும் சிரிப்புதான். படத்தில் அவர் முகத்தைப் பாருங்கள். குளிர்ச்சித் தரும் வகையில் அவர் சிரிப்பு இருக்கும். அவர் நம்மையும் 24 மணி நேரமும் சிரிக்க சொல்லியுள்ளார்.

மனதை எப்போதும் மகிழ்ச்சியாகவும், மலர்ச்சியாகவும் வைத்துக் கொள்ளுங்கள். நாம் பிறவிப் பெருங் கடலில் இருந்து விலகி முக்தி பெறுவதற்கு அதுதான் முதல் படிக்கட்டு என்று சர்க்கரை அம்மா அருளிச் சென்றுள்ளார்.



ஸ்ரீ சர்க்கரை அம்மாவின் அறை

ஆனால் நாம் இன்றைய எந்திரமயமான உலக வாழ்வில் சிக்கிக் கொண்டு, அதிகாலையில் இருந்தே காலில் சக்கரம் கட்டியபடி ஓடிக் கொண்டிருக்கிறோம். எதற்காக இப்படி கால் சக்கரத்தோடு ஓடுகிறோம்?

ஆழமாக யோசித்துப் பார்த்தால் விடை கிடைக்கும். ஆனால் நிறையப் பேருக்கு கால் சக்கரத்தை சுழற்றி விடுவது எப்படி என்பது தெரியவில்லை.

இத்தகைய மனநிலையில் உள்ளவர்களுக்கு சர்க்கரை அம்மாவிடம் அற்புதமான தீர்வும், மருந்தும் இருக்கிறது.

யார் இந்த சர்க்கரை அம்மா?

சென்னையில் சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்பு ஆங்கிலேயர்கள் ஆட்சி நடந்தபோது வாழ்ந்தவர்.

இவரது உண்மையான பெயர் ஆனந்தாம்பாள். இந்த பெயர் அமைந்ததாலோ... என்னவோ இவர் வாழ்நாள் முழுவதும் தன்னை ஆனந்தமாக வைத்துக்

கொண்டார்.

நீங்களும் நானும் அப்படி ஒரு ஆனந்தத்தை அனுபவிக்க முடியாது. ஆனால் அவரது உடலின் ஒவ்வொரு அணுவிலும் ஆனந்தம் கலந்திருந்தது.

அந்த ஆனந்த அனுபவ நிலையே அவரை சித்தர் நிலைக்கு உயர்த்தியது. அவரது வாழ்க்கையை முழுமையாகத் தெரிந்து கொண்டால்தான் அவர் எப்படி ஆனந்தமாக இருந்தார்? மற்றவர்கள் ஆனந்தமாக இருக்க என்னென்ன சித்தாடல்கள் செய்தார் என்பதை உணர முடியும்.

ஆனந்தாம்பாள் 1854—ம் ஆண்டு திருவண்ணாமலை மாவட்டம் போளூர் அருகே உள்ள தேவிகாபுரத்தில் பிறந்தார். தந்தை பெயர் சேஷ குருக்கள். தேவிகாபுரத்தில் மிகவும் புகழ் பெற்ற சக்தித்தலமான பெரிய நாயகி அம்மன் ஆலயம் உள்ளது. இந்த ஆலயத்தில் சேஷ குருக்கள் அர்ச்சகராக இருந்தார்.

சிறு வயதிலேயே தாயை இழந்து விட்டதால் சேஷ குருக்கள் ஆலயப் பணிக்கு செல்லும்போது மகள் ஆனந்தாம்பாளையும் உடன் அழைத்து செல்வார். ஆனந்தாம்பாள் மற்ற சிறுமிகளுடன் விளையாடச் செல்லவில்லை. பெரியநாயகியைப் பார்த்து பரவசம் கொள்வாள். அவள் அழகில் மனதைப் பறிகொடுப்பாள். அப்படியே தியானத்தில் அமர்ந்து விடுவாள்.

அவள் வயது சிறுமிகள் பல்லாங்குழியும், பாண்டியும் விளையாடி மகிழ்ச்சி அடைந்தபோது ஆனந்தாம்பாள் மட்டும் தியானத்தில் மகிழ்ச்சிப் பெற்றாள். அவள் சித்தராக மாறுவாள் என்பதற்கான ஆழமான விதை அந்த சக்தித் தலத்தில் ஊன்றப்பட்டு விட்டது.

ஆனந்தாம்பாளுக்கு 9 வயதான போது, அவளுக்குத் திருமணம் செய்து வைக்க சேஷ குருக்கள் முடிவு செய்தார். அவரது 2—வது மனைவியின் தம்பி சாம்பசிவத்தை மணமகனாக்க தீர்மானித்தனர்.

சாம்பசிவம் ஏற்கனவே திருமணமாகி மனைவியை இழந்தவர். 24 வயது இளைஞராக இருந்தார். வயது வித்தியாசம் இருந்தாலும் சென்னை கோமளீஸ்வரன்பேட்டை (தற்போது புதுப்பேட்டை)யில் உள்ள சட்டநாத மடத்தின் அதிபதியாக இருந்ததால் அவருக்கே திருமணம் செய்து வைத்தனர்.


கணகவர் அலங்காரத்தில்
ஸ்ரீ சர்க்கரை அம்மா

இதனால் ஆனந்தாம்பாள் தேவிகாபுரத்தில் இருந்து சென்னைக்கு குடிமாறினாள். சட்டநாத மடம் அருகில் உள்ள கோமளீஸ்வரர் ஆலயத்தில் தனது தினசரி தியானத்தைத் தொடர்ந்தாள்.

ஆனந்தாம்பாளின் அருமையை உணராத சாம்பசிவம் தனது தவறான நடத்தைகள் காரணமாக 35—ம் வயதிலேயே காலமானார். அப்போது ஆனந்தாம்பாளுக்கு 20 வயதே ஆனது.

அக்கால வழக்கப்படி அவளுக்கு தலைமுடியை மழித்து முக்காடு போட்டார்கள். இந்த மாற்றத்தைக் கண்டு ஆனந்தாம்பாள் மிரண்டு விடவில்லை. ஏனெனில் அவளுக்கு தன் உடலைப் பற்றிய ஒரு பிரக்ஞையே இல்லை.

11—ம் நாள் வீட்டின் மொட்டை மாடியில் உள்ள திண்டில் அமர்ந்து மவுன தவத்தில் ஈடுபட்டார். குளியல், உணவு எதுவும் இல்லாமல் நீண்ட நாட்கள் அவரது தவம் நீடித்தது. கணவரின் மரணம் ஆனந்தாம்பாளை ஆழ்நிலைத் தியானத்துக்குள் இழுத்துச் சென்றிருந்தது.

அந்த சமயத்தில் சேஷ குருக்கள் சென்னை வந்து ஆனந்தாம்பாளை மீண்டும் தேவிகா புரத்துக்கு அழைத்துச் சென்றார். அங்கு ஆனந்தாம்பாள் மனம் முழுமையாக இறைபக்தியால் நிரம் பியது.



ஸ்ரீ சக்கரை அம்மா ஜீவ சமாதி ஆலயம்

ஆனந்தாம்பாள் எப்போதும் தம்முடன் ஒரு ஸ்படிக லிங்கம் வைத்திருந்தார். அந்த சிறிய ஸ்படிக லிங்கத்துக்கு தினமும் வித விதமான பூஜைகள் செய்து மகிழ்ந்தார்.

இந்த நிலையில் சேஷ குருக்களுக்கு வயதாகி விட்டதால் அவரையும், ஆனந்தாம்பாளையும் அவரது சகோதரர் அருணாசலம் தேவிகாபுரத்தில் இருந்து போளூருக்கு அழைத்துச் சென்றார்.

போளூர் அருகே நட்சத்திரக்குன்று என்ற சிறு குன்று உள்ளது. அந்த குன்றில் குணாம்பாள் என்ற சித்தர் வசித்து வந்தார். ஒருநாள் அவரை ஆனந்தாம்பாள் சந்தித்தார். அன்றே ஆனந்தாம்பாள் முதிர்ந்த ஆன்மாவாக மாறினார்.

சித்தர் பெருமக்களைத் தேடிச் சென்று வழிபட்டார். ரமணர், சேஷாத்திரி சுவாமிகள், அடிமுடி சித்தர் என்று ஒவ்வொரு சித்தரிடமும் தனக்கு முக்திப் பாதைக்கு வழிகாட்ட கேட்டுக் கொண்டார்.

அடிமுடி சித்தர்தான் ஆனந்தாம்பாள் மிக எளிதாக முக்தி நிலையை அடைய பல்வேறு அறிவுரைகளை சொல்லி வழிகாட்டினார். ‘‘எப்போதும் இறைவனை நினைத்துக் கொண்டே நம் கடமைகளைச் செய்ய வேண்டும். இதுவே முக்தி அடைவதற்கு சிறந்த வழி’’ என்று அடிமுடி சித்தர் அருளினார்.

இப்படி ஆன்ம ஞானத்தில் மெல்ல, மெல்ல உச்சநிலைக்கு வந்த ஆனந்தாம்பாள் ஸ்படிக லிங்க பூஜையைத் தவறாமல் செய்தார். ஒருநாள் அந்த ஸ்படிக லிங்கத்தில் சிறு கீறல் விழுந்ததைக் கண்டு வேதனைப்பட்ட ஆனந்தாம்பாள் தன் தொடையை அறுத்து உள்ளிருந்து மெல்லிய நரம்பை எடுத்து அந்த ஸ்படிக லிங்கத்தை ஒட்ட வைக்க முயன்றார்.

எல்லோரும் இதைக் கண்டு பதற, மறு வினாடி ஆனந்தாம்பாள் தொடை தாமாகவே மூடி விட்டதாம். அன்றுதான் ஆனந்தாம்பாளிடம் அமானுஷ்ய சக்தி இருப்பதை உணர்ந்தனர்.

இப்படி காலங்கள் உருண்டோடிய நிலையில் நட்சத்திரக் குன்று குணாம்பாளிடம் ஆனந்தாம்பாளுக்கு குரு பக்தி ஏற்பட்டது. ஆனந்தாம்பாளை தம் சிஷ்யையாக அவர் ஏற்றுக் கொண்டார். ‘‘இனியும் எதற்கு இந்த சுமை?’’ என்று கூறிய குணாம்பாள், ஸ்படிக லிங்கத்தை சுனைக்குள் போட்டு விடும்படி கூறினார். அதை ஏற்று ஆனந்தாம்பாள் தன் ஸ்படிக லிங்கத்தை சுனையில் வீச, அன்று அவருக்கு பூரணமான பற்றற்ற நிலை ஏற்பட்டதாம்.

முப்பதாவது வயதில் ஆனந்தாம்பாள், தனது சகோதரர் அருணாசலத்துடன் மீண்டும் கோமளீஸ்வரன்பேட்டைக்கு திரும்பும் சூழ்நிலை ஏற்பட்டது. அப்போது அவர் குணாம்பாளிடம், ‘‘குருவே இனி நான் எப்படி உங்களை நினைத்த போதெல்லாம் சந்திக்க முடியும்?’’ என்று ஏக்கத்தோடு கேட்டார்.

‘‘அதுபற்றி கவலைப்படாதே’’ என்ற குணாம்பாள், லகிமா என்ற ஆன்மிக சக்தியை ஆனந்தாம்பாளுக்குள் ஏற்படச் செய்தார். லகிமா என்பது உடலை லேசாக மாற்றிக் கொள்வதாகும். இந்த சித்தியை கை வரப்பெற்றவர்கள் வானில் எளிதாக பறந்து செல்ல முடியும்.

மேலும் இறைச்சக்தியைத் தேவி வடிவில் மந்திர ரூபமாக வழிபடும் ஸ்ரீலலிதா சகஸ்ரநாம ஸ்ரீசக்கர வழிபாட்டையும் ஆனந்தாம்பாளுக்கு, குணாம்பாள் சொல்லிக் கொடுத்தார். அதோடு தமது ஆன்மிக ஆற்றல்கள் அனைத்தை யும் ஆனந் தாம் பாளுக் குள் குணாம் பாள் ஏற்றி னார். இது ஆனந்தாம்பாளை முழுமையான சித்தராக மாற்றியது.

சாதாரண இளம் பெண்ணாக சென்னையில் இருந்து சென்றிருந்த ஆனந்தாம்பாள் மிகப்பெரிய சித்தராக திரும்பி இருந்தார். கோமளீஸ்வரன்

பேட்டை வீட்டின் மொட்டை மாடித் திண்ணையும் அருகில் உள்ள சிறு அறையும் ஆனந்தாம்பாளின் இருப்பிடமாக மாறியது.




தினமும் கோமளீஸ்வரரை 3 தடவை சுற்றி வந்து வணங்குவார். மற்ற நேரங்களில் எல்லாம் தியானத்தில் ஆழ்ந்தார். உணவு, குளியல் எதுவும் இல்லாமல் தியானம் இருந்தார்.

ஸ்ரீசக்கர வழிபாட்டையும் இடை விடாமல் செய்து வந்தார். ஒருநாள் அவருக்குள் ஆனந்தம் பரவியது. தானே ஒளியாக மிளிர்வது போன்று உணர்ந்தார். அந்த பேரின்ப பெருவொளி அவருக்குள் ஐக்கியமானது.

அந்த மகிழ்ச்சியால் அவர் சிரித்தார். வாய் விட்டு சிரித்தார். கணவர் இறந்து விட்டதால் அவர் மனநலம் பாதிக்கப்பட்டு சிரிப்பதாக புரியாதவர்கள் பேசினார்கள்.

அவரது சிரிப்பு தெய்வீகமாக இருக்கும். அவரது முக மலர்ச்சியும் பேரானந்தம் தருவதாக இருக்கும். மிகச் சிறந்த சித்த புருஷர்களுக்கு மட்டுமே இந்த சக்தி கிடைக்கும்.

அந்த சக்தியின் அருமையை முதலில் எல்லோரும் உணராமல் இருந்தனர். ஆனால் டாக்டர் நஞ்சுண்டராவ் மூலம் சித்தர் அம்மாவின் அற்புதம் வெளி உலகுக்குத் தெரியத் தொடங்கியது. அதுவும் ஒரு அற்புத நிகழ்வாக இருந்தது.

ஆனந்தாம்பாளின் சகோதரர் அருணாசலத்துக்கு ஒரு தடவை உடல் நலக்குறைவு ஏற்பட்டது. அவருக்கு சிகிச்சை அளிப்பதற்காக டாக்டர் நஞ்சுண்டராவை அழைத்தனர்.

டாக்டர் நஞ்சுண்டராவ் தேசப்பக்தராகவும், ஆன்மிக வாதியாகவும் திகழ்ந்தவர். ஆங்கிலேயர்களிடம் இருந்து பாரதியாரைக் காப்பாற்றியவர். ஏழை— எளியவர்களுக்கு இலவசமாக சிகிச்சை செய்தவர்.

அவர் அருணாசலத்துக்கு சிகிச்சை அளித்துக் கொண்டி ருந்தபோது மாடியில் ஆனந்தாம்பாள் சிரிக்கும் சத்தம் கேட்டது. ‘‘யார் அது?’’ என்று டாக்டர் கேட்டார்.

கணவரை இழந்ததால் மனநலம் பாதிக்கப்பட்ட ஆனந்தாம்பாள் அப்படி சிரிப்பதாக உறவினர்கள் கூறினார்கள். ஆனால் டாக்டர் நஞ்சுண்டராவ் ஆன்மிகப் பற்று கொண்டிருந்த தால் அவருக்கு அந்த சிரிப்பு மாறுபட்ட சிந்தனையை ஏற்படுத்தியது.

அந்த சிரிப்பு தன்னை அழைப்பது போல உணர்ந்தார். மாடி ஏறிச் சென்றார். முதுகைக் காட்டியபடி அமர்ந்திருந்த ஆனந்தாம்பாள், ‘‘வா... மகனே’’ என்றார். அதை கேட்டதும் நஞ்சுண்டராவ் ஆடிப்போய் விட்டார்.

ஆனந்தாம்பாள் கண்களில் பிரகாசித்த ஒளியைப் பார்த்ததும் அவர் சித்தர் என்பதை புரிந்து கொண்டார். இந்த சந்திப்புக்குப் பிறகு டாக்டர் நஞ்சுண்டராவ் அடிக்கடி ஆனந்தாம்பாளை சந்தித்து ஆசி பெற்றார். அவர் மூலம் ஆனந்தாம்பாள் பற்றிய தகவல்கள் பரவியது. நிறைய பேர் ஆனந்தாம்பாளை தேடி வந்து ஆசிப் பெற்றனர். அப்போது அவர் ஸ்ரீ சக்கர வழிபாட்டை செய்வதை கண்டு அவரை சக்கரத்தம்மா என்று அழைத்தனர். அதுவே நாளடைவில் சர்க்கரை அம்மா என்று மருவி விட்டது.

ஒருநாள் சர்க்கரை அம்மா கோமளீஸ்வரன் கோவில் வாசலில் உட்கார்ந்திருந்தார். அப்போது அங்கு வந்த டாக்டர் நஞ்சுண்டராவைப் பார்த்து கலகலவென சிரித்தார்.

‘‘ஏன் சிரிக்கிறீர்கள் அம்மா?’’ என்று டாக்டர் கேட்டார். அதற்கு சர்க்கரை அம்மா, ‘‘மகனே மனித உடலின் உள்ளே உறைந்திருக்கும் ஆத்மா எப்போதும் ஆனந்தம் நிறைந்தது. இன்ப— துன்பங்கள் உடலுக்குத்தானே அன்றி ஆன்மாவுக்கு இல்லை. நீ உடல் அல்ல. நீ உடலில் இருக்கிறாய் அவ்வளவுதான். உனது தற்காலிகக் கூடாரமான இந்த உடலைப் பாராமல் கூடாரத்தின் உள்ளே நிரந்தர வஸ்துவாக வசிக்கும் உன் ஆன்மாவைப் பார்.

அப்படிப் பார்க்கத் தொடங்கினால் நிலையான பேரின்பத்தை அடைய முடியும்" என்றார்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் டாக்டர் நஞ்சுண்டராவ் மனம் விவரிக்க முடியாத ஆனந்தத்தைப் பெற்றது. அந்த வினாடியே அவர் சர்க்கரை அம்மாதான் தனது குரு என்ற முடிவுக்கு வந்தார். அடிக்கடி சர்க்கரை அம்மாவை சந்தித்து உரையாடினார். சர்க்கரை அம்மாவை காசி, ராமேசுவரம், திருவண்ணாமலை என்று பல இடங்களுக்கு அழைத்துச் சென்றார்.

டாக்டர் நஞ்சுண்டராவ் அழைத்து செல்லாத நாட்களில் அவரே பறவை போல பறந்து திருவண்ணாமலை உள்பட நினைத்த இடங்களுக்கு சென்று வந்து விடுவார். திருவண்ணாமலைக்கு பறந்தபடியே கிரிவலம் சென்று வந்து விடுவாராம்.


தியான மண்டபம்

அப்படி அவர் பறந்து விட்டு சென்னை திரும்பிய போதுதான் தமிழ் அறிஞர் திரு.வி.க. நேரில் பார்க்க நேரிட்டது. இந்த நிகழ்வுக்குப் பிறகு நிறைய சித்தாடல்களை சர்க்கரை அம்மா நிகழ்த்தினார்.

ஒரு நாள் தேவராஜன் என்பவர் அம்மாவை தரிசிக்க மாடிக்கு சென்றபோது, அங்கு அம்மா உடல் பல துண்டுகளாகச் சிதறி கிடந்தது கண்டு அலறி விட்டார். அடுத்த வினாடி அந்த உடல் பாகங்கள் ஒன்றாக சேர்ந்தது. சர்க்கரை அம்மா சிரித்தபடி எழுந்து ஆசி வழங்கினார்.

பெரும்பாலும் சர்க்கரை அம்மா தியானத்தில் இருப்பார். அப்போது அவர் இடையை சுற்றியபடி உயிருள்ள ஒரு நாகப்பாம்பு இருக்குமாம். பக்தர்கள் வரும் சத்தம் கேட்டால் அது மெல்ல இறங்கி சென்று விடுமாம்.

இத்தகைய அற்புதங்கள் காரணமாக ஒரு கட்டத்தில் சர்க்கரை அம்மாவை தினமும் நூற்றுக்கும் மேற்பட்டவர்கள் வந்து சந்தித்து விட்டுச் செல்வார்களாம். வரும்போது கவலையோடு வருபவர்கள், திரும்பிச் செல்லும்போது உடல் நலம் பெற்றும், திருமணத் தடை தோஷம் நீங்கியும், குழந்தை பாக்கியத்துக்கான ஆசியையும் பெற்றுச் செல்வார்கள். இந்த அற்புதங்கள் எல்லாம் டாக்டர் நஞ்சுண்டராவ் தனது டைரிகளில் குறிப்புகளாக எழுதி வைத்துள்ளார்.

அவர் எழுதிய ஒரு குறிப்பில், ‘‘அம்மாவின் கண்கள் மிகவும் சக்தி வாய்ந்தவை. அவர் ஒருவரைப் பார்த்ததும் அவரது பிரச்சினைகள், நோய்களை அறிந்து கொள்வார். அந்த பிரச்சினைகளை தாமே முன் நின்று தீர்த்து விடுவார். அந்த அளவுக்கு சர்க்கரை அம்மா சக்தி வாய்ந்தவர்’’ என்று குறிப்பிட்டுள்ளார்.

1901—ம் ஆண்டு நஞ்சுண்டராவ் உள்பட தன் சிஷ்யர்களுடன் மருந்தீஸ்வரர் கோவிலுக்கு சர்க்கரை அம்மா சென்றார். அங்கு அம்பாளிடம் தன் சிஷ்யர்களைக் காட்டி இவர்களைப் பார்த்துக் கொள் என்றார். திரும்பி வரும்போது சவுக்கு தோப்பாக இருந்த ஒரு இடத்தை சுட்டிக்காட்டிய சர்க்கரை அம்மா, இந்த இடத்தை வாங்குமாறும், அங்கு தன்னை ஜீவ சமாதி வைக்கும்படியும் கூறினார்.

அதற்கு சிஷ்யர்கள், ‘‘அம்மா இந்த காட்டுக்குள் யார் வருவார்கள்?’’ என்று கேட்டுள்ளனர். சர்க்கரை அம்மா சிரித்தபடி, ‘‘இன்னும் 100 ஆண்டுகள் கழித்து இந்த இடம் நகரமாக இருக்கும். 100 ஆண்டுகளுக்குப் பிறகே என் ஜீவ சமாதி மக்கள் கவனத்தை ஈர்க்கும். என் இருப்பிடத்தைத் தேடி மக்கள் வருவார்கள்’’ என்றார்.

அவர் சொன்னபடிதான் நடந்தது. 1901—ம் ஆண்டு பிப்ரவரி மாதம் சர்க்கரை அம்மா அடிக்கடி தன்னைப் பார்ப்பவர்களிடம், ‘‘அம்மாடி நான் சீக்கிரத்தில் போய் விடுவேன்’’ என்றார்.

அப்போது அவருக்கு 47 வயதுதான் ஆகியிருந்தது. எனவே அவர் சொன்னதை யாரும் கண்டு கொள்ளவில்லை.

ஆனால் பிப்ரவரி 28—ந்தேதி (வியாழக்கிழமை) பிற்பகல் 3.30 மணிக்கு அவர் இடது கால் விரல் நுனியில் லேசான நடுக்கம் ஏற்பட்டது. அந்த நடுக்கம் அப்படியே பாதம், தொடை என்று மேலே ஏறியது.

உடனே 2 சிஷ்யைகள் சர்க்கரை அம்மாவை பிடித்தனர். அப்போது சர்க்கரை அம்மா "விட்டுடுங்கோடி" என்றார். அந்த நடுக்கம் தொடர்ந்து மேல் நோக்கி சென்று அவர் உச்சி தலை வழியாக வெளியேறியது. சர்க்கரை அம்மா அப்படியே கண்களை மூடி பரிபூரணம் ஆகி விட்டார். அவர் சொன்னபடி அவர் காட்டிய இடத்தில் ஜீவ சமாதி அமைக்கப்பட்டது. அதன் பிறகு சர்க்கரை அம்மாவை நிறைய பேர் மறந்து விட்டனர். ஆனால் சர்க்கரை அம்மாவின் சிறப்பை உணர்ந்த காஞ்சி மகா பெரியவர் சந்திர சேகரேந்திர சுவாமிகள் 1948—ம் ஆண்டு ஜனவரி மாதம் அந்த அதிஷ்டானத்துக்கு வந்து 5 நாட்கள் வரை அமர்ந்து தியானம் செய்து விட்டுச் சென்றார்.

சர்க்கரை அம்மா சொன்னது போல மிகச் சரியாக 100 ஆண்டுகள் கழித்து 2002—ம் ஆண்டு அந்த ஜீவ சமாதியில் கும்பாபிஷேகம் நடத்தப்பட்டது. தற்போது சர்க்கரை அம்மா ஜீவ சமாதிக்கு தினமும் நூற்றுக்கணக்கானோர் வந்து தங்கள் குறை தீர்த்து செல்கிறார்கள்.

திருவான்மியூரில் கலாசேத்ரா சாலையும், காமராஜர் சாலையும் சேருமிடத்தில் இந்த ஜீவ சமாதி ஆலயம் உள்ளது. சென்னையில் உள்ள ஜீவ சமாதிகளில் மிக அழகான கருவறை விமானத்துடன் மிக, மிக சுத்தமாக, நேர்த்தியாக, இருக்கும் ஜீவ சமாதி இதுதான். உள்ளே நுழைந்ததும் சற்று உயரமான இடத்தில் ஜீவ சமாதி உள்ளது. கருவறையில் சர்க்கரை அம்மாவின் கல் சிலை பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. அருகில் லிங்கம் உள்ளது. சுற்றி வந்து வழிபட பச்சை பசேலென விரிந்திருக்கும் புல்வெளிக்கு மத்தியில் பாதை இருக்கிறது.

இடது புறம் ஆன்மிக சொற்பொழிவாற்ற சிறு அரங்கம் உள்ளது. பின்பகுதியில் சீரடி சாய்பாபாவை வழிபட ஏற்பாடு செய்துள்ளனர்.

சர்க்கரை அம்மாவைப் பார்த்தபடி தியானம் இருக்க இட வசதி உள்ளது. வலது புறம் மிக அழகிய தியான மண்டபம் கட்டப்பட்டுள்ளது. அங்கு கண்ணாடிப் பேழைக்குள் சர்க்கரை அம்மாவின் தத்ரூபமான சிலை நிறுவப்பட்டுள்ளது.

அங்கு அமர்ந்து கண் மூடி தியானம் செய்தால் மனம் இலவம் பஞ்சு போல லேசாகி விடுகிறது. திருவாதிரை, பவுர்ணமி நாட்களிலும், ஞாயிற்றுக்கிழமை மாலையும் அபிஷேகம் செய்கிறார்கள். "உலக இன்பங்களைப் பொருட் படுத்தாதீர்கள். பற்றற்ற நிலையை பயிற்சி செய்யுங்கள்" என்று சர்க்கரை அம்மா அருளியுள்ளார். இந்த தத்துவத்தை கடைப் பிடித்தால் மாசு இல்லாத வாழ்வை, மலர்ச்சியான வாழ்வை நாம் பெற முடியும்.





# 26.ஸ்ரீ ஜோதி மவுன நிர்வாண சுவாமிகள்

கசவனம்பட்டி, திண்டுக்கல்.

## 26. ஸ்ரீ ஜோதி மவுன நிர்வாண சுவாமிகள்

நீங்களும், நானும் சிகரெட் புகைத்தால்தான் துன்பம் வரும். அதே சிகரெட்டை ஒரு மிகப்பெரிய மகான் புகைத்தால் அவர் விடும் சிகரெட் புகையானது துன்பங்களை கரைப்பதாக இருந்தது.

ஆம்.... அவர் சிகரெட்டை பற்ற வைத்து ஒரு இழுப்பு இழுத்து புகையை வெளியே விட்டார் என்றால், அந்த புகை எப்படி காற்றில் மிதந்து, பரவி, கலைந்து மாயமாகி விடுகிறதோ, அதுபோல சிகரெட் வாங்கிக் கொடுத்தவரின் தோஷங்கள், துன்பங்கள், பிரச்சினைகள், தொல்லைகள், துயரங்கள் எல்லாம் காற்றோடு, காற்றாக கரைந்து மறைந்தன.


ஸ்ரீ ஜோதி மவுன
நிர்வாண சுவாமிகள்

நம்புவதற்கும், ஜீரணித்துக் கொள்வதற்கும் இது கொஞ்சம் கஷ்டமாகத்தான் தெரியும். ஆனால் மகிமை கலந்த அந்த அதிசயம் தமிழ்நாட்டில் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது.

ஒருநாள், இருநாள் அல்ல தினந்தோறும் நடந்தது. இப்போதும் கூட அந்த அதிசயம் நடந்து வருகிறது.

அந்த அதிசயத்தை அனுபவப் பூர்வமாக உணர வேண்டும் என்று நினைத்தால் நீங்கள் கசவனம்பட்டி எனும் கிராமத்துக்குச் செல்ல வேண்டும். இந்த கிராமம் திண்டுக்கல் நகரில் இருந்து மேற்கு திசையில் சுமார் 15 கி.மீ. தொலைவில் உள்ளது.

இந்த ஊரில்தான் சித்தர்களுக்கு எல்லாம் சித்தராக, மகான்களுக்கு எல்லாம் மகானாகத் திகழ்ந்த ஸ்ரீஜோதி மவுன நிர்வாண சுவாமிகள் வசித்து வந்தார். இவர்தான் சிகரெட் புகையால் பல்லாயிரக்கணக்கானவர்களின் துன்பங்களை, துயரங்களைத் துடைத்தெறிந்தார்.

இவர் பார்வைப்பட்டாலே போதும், தோஷங்கள் விலகி புத்துணர்ச்சி பெற்றதை பக்தர்கள் தம் வாழ்வில் கண்கூடாகக் கண்டனர். இந்த சித்தப்புருஷர் நிறைய பல்வேறு தனித்துவங்களுடன் காணப்பட்டார்.

இந்த புனித மகான், தனது துறவு வாழ்க்கைக்கு கசவனம் பட்டியை தேர்ந்து எடுத்துக் கொண்டார். அந்த ஊருக்கு அவர் வந்தபோது அவருக்கு 10 அல்லது 12 வயதுதான் இருக்கும்.

அவர் எங்கு பிறந்தார்? பெற்றோர் யார்? பள்ளி சென்றாரா? எப்படி கசவனம்பட்டிக்கு வந்தார்? — இவை போன்ற எந்த கேள்விகளுக்கும் இதுவரை யாருக்கும் விடை தெரியாது.

கசவனம்பட்டிக்கு கிழக்கே குட்டத்து ஆவரம்பட்டி எனும் ஊர் உள்ளது. அந்த ஊர் பகுதியில் ஆடு, மாடுகளை மேய்க்க கசவனம்பட்டிக்காரர்கள் செல்வதுண்டு. அப்படி ஒரு நாள் அங்கு விவசாயம் செய்யவும், ஆடு மேய்க்கவும் சென்றவர்களின் கண்களில் மவுன நிர்வாண சுவாமிகள் தென்பட்டார்கள்.

அப்போதே சுவாமிகள் அவதூதராகத்தான் (நிர்வாண நிலை) இருந்தார். சில செடி, கொடிகளில் உள்ள இலைகளைப் பறித்து அவர் தின்று கொண்டிருந்தார்.

கசவனம்பட்டிக்காரர்கள் தினமும் அந்த சிறுவனைப் பார்த்தனர். செடி இலைகளைத் தின்ற சிறுவனைப் பார்த்ததும் அவர்களுக்கு இரக்கம் வந்து

விட்டது. தாங்கள் கொண்டு சென்ற உணவை எடுத்து சாப்பிடக் கொடுத்தனர். இப்படித்தான் கசவனம்பட்டிக் காரர்களுக்கும் சுவாமிகளுக்கும் தொடர்பு ஏற்பட்டது.

உணவு கொடுத்தவர்கள், உடையையும் கொடுத்தனர். ஆனால் சுவாமிகள் உடையை ஏற்றுக் கொள்ளவில்லை. உதறித்தள்ளினார். பல தடவை இது நடந்தது. அதன்பிறகே இந்த இளைஞன் சாதாரணமானவன் அல்ல, உயர்ந்த, தெய்வாம்சம் பொருந்திய சித்தர் புருஷர் என்றும் மும்மூர்த்திகளின் பிரதிபிம்பமான மகான் என்பதையும் புரிந்து கொண்டனர்.

சக்தி வாய்ந்த மகான் என்று தெரிந்த பிறகு அவரை காட்டுக்குள் விட்டு வைப்பார்களா? அவரை தங்கள் ஊருக்குள் வந்து த ங்கி இருக்கும்படி கசவனம்பட்டிக்காரர்கள் அழைத்துச் சென்றனர்.

முதலில் ஒரு இளைஞனை முழு நிர்வாணக் கோலத்தில் பார்த்ததும், கசவனம்பட்டிக்காரர்கள் முகம் சுளித்தனர். அதிருப்தி அடைந்தனர். அருவருப்புடன் பார்த்தனர். ஆனால் மிகக்குறுகிய காலத்துக்குள் கசவனம்பட்டி மக்கள் அந்த இளைஞனை அருவருப்பாகப் பார்க்கும் மனநிலையில் இருந்து மாறினார்கள். ஆண்டவனாகப் பார்க்கும் பக்குவத்தைப் பெற்றனர். கசவனம்பட்டி ஊருக்கு கிடைத்த மிகப்பெரிய பாக்கியமாக இதைச் சொல்லலாம்.




என்றாலும் மவுன நிர்வாண சுவாமிகள் கசவனம்பட்டியில் தங்காமல் வேறு ஊர்களுக்கு சென்று விடுவதுண்டு. கசவனம்பட்டிக்காரர்கள் ஒவ்வொரு தடவையும் விடுவது இல்லை. தேடிக் கண்டுபிடித்து சுவாமிகளைத் தோளில் தூக்கி வைத்து தங்கள் ஊருக்கே கொண்டு வந்து விடுவார்கள். ஒரு கட்டத்துக்குப் பிறகு நிர்வாண சுவாமிகள் வேறு எங்கும் செல்லவில்லை. கசவனம்பட்டியே கதி என்று தங்கி விட்டார்.

யாரிடமும், எதுவும் பேசாமல் ஊரையே அவர் சுற்றி, சுற்றி வந்தார். பெயர் தெரியாததால் சுவாமிகளை அந்த ஊர்க்காரர்கள் முதலில் ''பெருமாள் சாமி'' என்று பெயர் சூட்டி அழைத்த னர். பிறகு நிர்வாண சாமி, மவுன சாமி என்றெல்லாம் அழைத்தனர்.

சிறுவன், இளைஞனாக மாறி நடுத்தர வயதைக் கடந்தார். ஆனாலும் அவதூதர் (நிர்வாணம்) நிலை மாறவில்லை. கசவனம்பட்டி தெருக்களில் இரவு—பகலாக அவர் நிர்வாணமாக சுற்றித்திரிந்தார்.

அந்த ஊர் மக்கள் அவரை பார்க்கும் பார்வையே நாளடைவில் மாறியது. அவரது நிர்வாணக் கோலத்தை கண்டு யாரும் கேலி—கிண்டல்

செய்யவில்லை. தங்கள் வீட்டு பாலகனாக நினைத்து உபசரித்தனர்.

சுவாமிகளும் ஏழை—பணக்காரர், சாதி, சமயம் வித்தியாசம் எதையும் பார்க்கவில்லை. அவர் விரும்பும் வீட்டுக்குள் சென்று கூழோ, கஞ்சியோ கொடுத்ததை வாங்கிச் சாப்பிட்டார். நீண்ட நாட்களுக்குப்பிறகுதான் அவர் வினை அறுக்க வந்த கண்கண்ட தெய்வம் என்பதை அந்த ஊர் மக்கள் முழுமையாக புரிந்து கொண்டனர். அதன்பிறகு அவர்கள் மவுன நிர்வாண சுவாமிகளின் பக்தர்களாக மாறினார்கள்.

மவுன சுவாமிகள் தவம் இருந்ததில்லை. மந்திரங்கள் முழங்கியது இல்லை. புராணங்கள் படித்ததில்லை. ஆனால் உலகின் அத்தனை விஷயங்களும் அவருக்குத் தெரிந்திருந்தது. தமிழ் தவிர தெலுங்கு, கன்னட மொழிகளில் அவர் ஓரிரு வார்த்தைகள் பேசி ஆச்சரியப்படுத்தினார்.

ஒரு காலகட்டத்தில் மவுன நிர்வாண சுவாமிகள் தன்னிடம் வருபவர்களை அடித்தார். கல்லைத் தூக்கி எறிந்தார். தாம்பூலத்தில் பூ, பழம் வைத்துக் கொடுத்தால் எட்டி உதைத்தார்.

முதலில் பக்தர்கள் வருத்தப்பட்டனர். பிறகுதான் தெரிந்தது.... மவுன நிர்வாண சுவாமிகள் கொடுக்கும் ஆசீர்வாதமே அதுதான் என்பது. எனவே தொடர்ந்து காபி, சிகரெட் கொடுத்து ஆசி பெற்றனர்.

ஒரு பக்தர் அவரிடம் சென்று விட்டால் உடனே சுவாமிகள் குச்சியை எடுத்து தரையில் ஏதேதோ கிறுக்கலாக எழுதுவார். என்ன எழுதுகிறார் என்பதே யாருக்கும் தெரியாது. நீண்ட நாட்களுக்குப் பிறகுதான் நிர்வாண சுவாமிகள் பக்தர்களின் தலையெழுத்தையே அதில் மாற்றி எழுதுகிறார் என்ற விஷயம் தெரியவந்தது.


ஜீவ சமாதி சிலை

அவ்வாறு எழுதும் குச்சிகளை சில சமயம் சுவாமிகள் பக்தர்க ளிடமே கொடுத்து விடுவதுண்டு. அந்த குச்சிகளை இப்போதும் சில பக்தர்கள் தங்கள் வீடுகளில் வைத்து பூஜித்து வருகிறார்கள்.

சுவாமிகள் புகை பிடிப்பதையும் முதலில் பக்தர்கள் சாதாரணமாகத் தான் நினைத்தனர். ஆனால் சிகரெட் சாம்பலை எடுத்து விபூதியுடன் கலந்து பூசிக்கொள்ள, வெற்றி மீது வெற்றி வருவதை பக்தர்கள் உணர்ந்தனர். இதனால் நிர்வாண சுவாமிகளிடம் ஆசி பெற வரும் பக்தர்கள் சிகரெட்டுடன் வரத் தொடங்கினார்கள்.

மக்களின் பிரச்சினைகள், நோய்களை சுவாமிகள் மிக எளிதாக தீர்த்து வைக்கும் தகவல் மெல்ல மெல்ல மதுரை, திண்டுக்கல், ராமநாதபுரம், விருதுநகர், சிவகங்கை மாவட்டங்களில் பரவியது. கசவனம்பட்டிக்கு சரியான வழித்தடம் இல்லாத நிலையிலும் மற்ற ஊர்களில் இருந்து மக்கள் வரத் தொடங்கினார்கள். பிரச்சினைகள் தீர்ந்து மனஅமைதி பெற்றுத் திரும்பிச் சென்றனர்.

சுவாமிகள் இரவில் தங்குவதற்கு முத்தாலம்மன் கோவிலில் படுக்கையுடன் வசதி செய்து கொடுத்தனர். முத்தாலம்மன் கருவறையில் அமரும் சுவாமிகள் சில சமயம் ஏதோ முணுமுணுத்துக் கொண்டே இருப்பார். அது என்ன என்று யாருக்குமே தெரியவில்லை.

அவரது மவுனமும், நிர்வாணக் கோலமுமே உலக வாழ்வியலை மக்களுக்கு உணர்த்தியது. எல்லையற்ற பரம்பொருளின் வெளிப்பாடாக அவர் திகழ்ந்தார். கசவனம்பட்டியில் சாமியார் போல இருந்த ஒருவருக்கு நிர்வாண சுவாமிகள் மீது பொறாமை ஏற்பட்டது. ‘‘இவரைப் பேச வைத்து காட்டுகிறேன், பாருங்கள்’’ என்று கூறி வலுக்கட்டாயமாக இழுத்துச் சென்று விநாயகர் கோவிலுக்குள் தள்ளி பூட்டி விட்டார். மறுநாள் விடிந்ததும் கோவிலைத் திறந்து பா ர்த்தால் உள்ளே சுவாமிகள் இல்லை.

வெளியில் தூரத்தில் நிர்வாண சுவாமிகள் சிகரெட் பிடித்தபடி சிரித்துக் கொண்டே வந்தார். ஊரே ஆச்சரியத்தில் மூழ்கியது. சுவாமிகளை கோவிலுக்குள் அடைத்த சாமியார் காணாமலே போய் விட்டார்.


சித்தர் பாதம்

இப்படி எத்தனையோ ஆச்சரியங்களை நிகழ்த்திய சுவாமிகள் பற்றி தமிழ்நாட்டில் உள்ள புகழ்பெற்ற மகான்கள் எல்லாம் தங்களைத் தரிசிக்க

வரும் பக்தர்களிடம் கூறினார்கள். புரவிப்பாளையம் கோடி சுவாமிகள், ‘‘மகான்களுக்கு எல்லாம் மகான்’’ என்று நிர்வாண சுவாமிகளைப் புகழ்ந்தார்.

திருக்கோயிலூர் ஞானானந்தகிரி சுவாமிகள், ஜோதி என்றும், துருவ நட்சத்திரம் என்றும் சுவாமிகளை புகழ்ந்தார். திருவண்ணாமலை விசிறி சுவாமிகள் யோகிராம் சுரத்குமார் கூறுகையில், ‘‘நான் ஒரு அலை என்றால் கசவனம்பட்டி நிர்வாண சுவாமிகள் கடல்’’ என்றார்.

விசிறி சுவாமிகளை ஒரு தடவை சிவகாசியைச் சேர்ந்த ராஜதுரை நாடாரும், எஸ்எஸ்டி சண்முகமும் சந்தித்து பேசிக் கொண்டிருந்தனர். அப்போது அவர்களிடம் விசிறி சுவாமிகள், ‘‘இன்றிரவு கசவனம்பட்டி சென்று நிர்வாண சுவாமிகளைப் பாருங்கள். உங்களுக்கு அங்கு ஒரு அற்புதம் காத்துக் கொண்டிருக்கிறது’’ என்றார். உடனே ராஜதுரை நாடாரும், சண்முகமும் கசவனம்பட்டிக்கு புறப்பட்டு வந்தனர். அங்கு அவர்களுக்கு நிர்வாண சுவாமிகள், பழனி பாலமுருகனாகக் காட்சி அளித்தார்.

வத்தலக்குண்டு அருகில் உள்ள கொண்டம நாயக்கன்பட்டியைச் சேர்ந்த ராசாமணி அய்யர் தொழுநோயின் உச்சக்கட்ட கொடூர பிடியில் இருந்தார். அவரை நிர்வாண சுவாமிகள் ஒரே நாள் இரவில் குணமாக்கி எல்லாரையும் பிரமிக்க வைத்தார்.

நிறைய பக்தர்கள் கனவில் சென்று சுவாமிகள் அதிசயங்கள் நடத்தி உள்ளார். கன்னியாகுமரியில் ஆதிபராசக்தியின் அவதாரமாகத் திகழ்ந்த மாயம்மா ஒரு தடவை மவுன நிர்வாண சுவாமிகளைப் பார்த்து விட்டு, ‘‘இந்த மகான் சூரியன்’’ என்று புகழ்ந்தார்.

கசவனம்பட்டியைச் சேர்ந்த உடைச்சரத்தேவர் மனைவி பூங்கணியம்மாள் பிரசவ வலியில் துடித்தபோது குழந்தை பிறப்பில் சிக்கல் ஏற்பட்டது. அப்போது எங்கிருந்தோ வந்த நிர்வாண சுவாமிகள் பிரசவம் நடத்தப்பட்ட வீட்டுக்குள் சென்று கீழே தரையில் அமர்ந்தார்.

அடுத்த நிமிடம் சிக்கல்கள் விலகி அழகான ஆண் குழந்தை பிறந்தது. அந்த குழந்தைக்கு மவுனகுரு என்று சுவாமி பெயரையே வைத்தனர்.

திண்டுக்கல் மாவட்ட வருவாய் அலுவராக இருந்த வரும், தற்போது பழங்குடியினர் நலத்துறை இணை இயக்குனராக உள்ள கா.பேச்சியம்மாள்

வாழ்வில், சுவாமிகள் நடத்திய அற்புதங்கள் ஏராளம். இந்த அற்புதங்களையெல்லாம் மவுன நிர்வாண சுவாமிகள் டிரஸ்ட் செயலாளர் ஆனந்தன் தொகுத்து பெரிய புத்தகமாக வெளியிட்டுள்ளார்.

பழனி ஆண்டவர் கலை பண்பாட்டுக் கல்லூரியில் பேராசிரியராக பணிபுரிந்து தற்போது கும்பகோணத்தில் வசித்து வரும் கண்ணன், பழனியில் மளிகைக்கடை வைத்திருக்கும் ஜெயபால் இருவரும் தங்கள் நண்பர்களுடன் ஒரு தடவை காரில் சுவாமிகளை பார்க்க சென்றனர். வழியில் ஒரு சாக்கடைக்குள் சுவாமிகள் உட்கார்ந்து இருப்பதை கண்டு ஆச்சரியப்பட்டு அங்கேயே ஓரமாக நின்றனர்.

அந்த சாக்கடை நாற்றம் தாங்க முடியாத அளவுக்கு இருந்ததாம். பேராசிரியர் கண்ணனுக்கு வயிற்றை புரட்டுவது போல இருந்ததாம். ஆனால் சுவாமிகள் சுமார் 1 மணி நேரம் மிகவும் சுகமாக சா க்கடைக்குள் மூழ்கி இருந்தாராம். பிறகு வெளியில் வந்த சுவாமிகள் ஒரு டம்ளரில் சாக்கடையை எடுத்து, வந்து முகர்ந்து பார்த்து விட்டு, ஜெயபாலிடம் கொடுத்து ‘‘ம்... குடிடா’’ என்றாராம். ஜெயபாலும் அதை வாங்கிக் குடிக்க அந்த சாக்கடை தண்ணீர் இளநீர் போல இனித்ததாம்.

நிர்வாண சுவாமிகளின் பாதத்தில் படிந்திருந்த விபூதியை பிரசாதமாக எடுத்துச் செ ன்று பலர் பலன் அடைந்துள்ளனர். 1982—ம் ஆண்டு ஆண்டு அக்டோபர் தொடக்கத்தில் சில பக்தர்களுக்கு சுவாமிகள் தமது ஒளிவடிவைக் காட்டி அருள்பாலித்தார். அடுத்த சில தினங்களில் (22—10—1982) சுவாமிகள் மகாசமாதி அடைந்தார். அவர் உடல் மறுநாள் ஜீவசமாதி வைக்கப்படும் வரை ஆன்ம ஒளியாக மிளிர்ந்தது.

அவர் ஜீவசமாதி வைக்கப்பட்டபோது மேகக் கூட்டங்கள் திரண்டு வந்து குறிப்பிட்ட எல்லையில் மட்டும் முக்கோடி தேவர்கள் பூமாரி பொழிந்ததுபோல அடைமழை பெய்தது. 2 கருடன்கள் வட்டமிட்டுச் சென்றன.

கசவனம்பட்டியில் முத்தாலம்மன் கோவில் எதிரில் ஜீவசமாதி வைக்கப்பட்டுள்ள இடத்தில் காசியில் இருந்து லிங்கம் கொண்டு வந்து பிரதிஷ்டை செய்து அங்கு ஜீவசமாதி ஆலயம் கட்டியுள்ளனர். அங்கு

சுவாமிகளின் பெரிய மூலவர் சிலை உள்ளது. ஐம்பொன்னால் செய்யப்பட்ட சிறு உற்சவர் சிலையும் உள்ளது.

பிரதோஷ நாட்களில் அந்த உற்சவர் சிலையை வெள்ளிப் பல்லக்கில் வைத்து பிரகார வீதியுலாவாக எடுத்து செல்கிறார்கள். பவுர்ணமி, அமாவாசை மற்றும் வியாழக்கிழமைகளிலும் சிறப்பு பூஜை செய்கிறார்கள். தினமும் 5 கால பூஜை நடக்கும் இந்த சமாதி ஆலயத்தில் ஐப்பசி மூல நட்சத்திர தினத்தன்று குரு பூஜை நடத்துகிறார்கள்.

ஜீவசமாதி கருவறை முகப்பில் சிவன், விஷ்ணு, பிரம்மா சுதை சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. நிர்வாண சுவாமிகள் மும்மூர்த்தியாக இருந்து அருள்வது போல அது உள்ளது. மூலவர் சிலையில் நிறைய பக்தர்கள் தங்கள் ஜாதக ஜெராக்சை வை த்து வேண்டுதல் செய்து செல்கிறார்கள். இந்த வழிபாடு ஜாதகத்தில் உள்ள குறைகளை, தோஷங்களை நீக்க உதவுகி றதாம். சுவாமிகளுக்கு தேங்காய் உடைத்தும் வழிபடுகிறார்கள்.





# 27.கட்டிக்குளம் சூட்டுக்கோல் மாயாண்டி சுவாமிகள்

**திருப்பரங்குன்றம், மதுரை.**

## 27. கட்டிக்குளம் சூட்டுக்கோல் மாயாண்டி சுவாமிகள்

மாயாண்டி சித்தரின் ஜீவசமாதிக்கு சென்று வழிபட்டுவிட்டு, அவரைப் பற்றியும், அவர் சொன்ன அறிவுரைகள் குறித்தும், அவரால் நிகழ்த்தப்பட்ட அற்புதங்கள் பற்றியும் தெரியவந்தபோது நான் அடைந்த ஆச்சரியத்துக்கு அளவே இல்லை!



சூட்டுக்கோல் மாயாண்டி சுவாமிகள்

'ஒரு சித்த புருஷர்... எப்படி இவ்வளவு சித்தாடல்களை நிகழ்த்தினார்?' என்று பிரமிப்புக்கு மேல் பிரமிப்பு ஏற்பட்டது. அவர் பிறப்பே ஆச்சரியம்தான்!

அந்த அபூர்வ சித்தரின் ஜீவசமாதி, மதுரை திருப்பரங்குன்றத்தில் இருக்கிறது.

காலை மடக்கி, வித்தியாசமான முறையில் சபரிமலை அய்யப்பன் போலகுத்துக்காலிட்டு அமர்ந்துள்ள மாயாண்டி சித்தரின் படத்தைப் பார்க்கும்போது, சாதாரணமாக தோன்றும்.

ஆனால், அவர் நமக்கு காட்டிச் சென்றுள்ள ஆத்ம ஞானத் தேடல் வழி என்பது சாதாரணமானதல்ல... மிகவும் உயர்ந்தது. இவரை பக்தர்கள்

‘கட்டிக்குளம் சூட்டுக்கோல் மாயாண்டி சுவாமிகள்’ என்று அழைக்கிறார்கள்.

மதுரையில் இருந்து மானாமதுரை செல்லும் வழியில் இருக்கும் திருப்பாச்சேத்தியில் இருந்து 8 கி.மீ. தொலைவில் கட்டிக்குளம் உள்ளது.

அங்கு குப்பமுத்து—கூத்தாயி அம்மாள் ஆகியோரின் மகனாக 1855—ம் ஆண்டு பூராட நட்சத்திரத்தில் மாயாண்டி சுவாமிகள் அவதரித்தார்.

நீண்ட ஆண்டுகளாக குழந்தைப் பாக்கியம் இல்லாமல் இருந்து வந்த நிலையில் சூட்டுக்கோல் ராமலிங்க சுவாமிகள் ஆசீர்வாதத்தால் பிறந்ததால், மாயாண்டி சுவாமிகளை தெய்வக் குழந்தையாக பார்த்தார் குப்பமுத்து. ஆனால், உண்மையிலேயே அது தெய்வக் குழந்தைதான் என்பது மாயாண்டி சுவாமிகள் நடத்திய ஒரு சித்தாடலுக்கு பிறகே தெரியவந்தது.

அப்போது மாயாண்டி சுவாமிகளுக்கு 8 வயதிருக்கும். கட்டிக்குளத்தில் உள்ள அய்யனார் கோவிலின் பூசாரியாக இருந்த குப்பமுத்து, ஒரு நாள் தம் மகனையும் கோவிலுக்கு அழைத்துச் சென்றிருந்தார்.பூஜையை முடித்துவிட்டு வெளியில் வந்த மகன் குத்துக்காலிட்டு ஆழ்ந்த தவநிலையில் இருப்பதையும், அவரது உடலை மிகப்பெரிய நல்ல பாம்பு சுற்றிக்கொண்டு, தலையின் பின்புறம் படம் எடுத்து நிற்பதையும் பார்த்து அதிர்ச்சி அடைந்தார். ‘அந்த பாம்பு... மகனை கடித்துவிடுமோ?’ என பயந்தார்.

‘சாஸ்தாவே... என் மகனைக் காப்பாற்று’ என்று ஆலயத்தைப் பார்த்து கும்பிட்டுக் கதறினார். பிறகு, அவர் திரும்பிப் பார்த்தபோது, மகன் மாயாண்டி சுவாமிகள்... பாம்பிடம், ‘நாகராஜா... போயிட்டு வாங்க...’ எனச் சொல்ல, அந்த நாகம் மெதுவாக இறங்கிச் சென்றது.

இந்த காட்சியைப் பார்த்து குப்பமுத்து விக்கித்து போனார். உண்மையிலேயே தம் மகன் அபூர்வ பிறவி என்பதை உணர்ந்தார். அதன்பிறகு தனி மரியாதை செலுத்தினார். இதன் காரணமாக மாயாண்டி சுவாமிகள் சிறிய வயதிலேயே மிக எளிதாக சித்தர் பாதைக்குள் செல்ல முடிந்தது. 10 வயது ஆகும்போதே தனிமையில் அமர்ந்து, ஆழ்ந்த தியானத்துக்குள் சென்றுவிடுவார்.

மற்ற சித்தர்கள் கால்களை தளர்த்தி தியானம் இருந்த நிலையில், இவரோ கால்களை உயர்த்தி மடக்கி, குத்துக்காலிட்டு இருப்பதை வழக்கத்தில் கொண்டிருந்தார். சித்தர் பாடல்களை தேடிப் பிடித்து படித்தார்.

ஆலயங்களுக்குச் சென்று தியானம் செய்தார். அவரது ஆன்மிகத் தேடல்கள் அதிகரித்தன.

இதைக் கண்டு தாய் கூத்தாயி அம்மாளுக்கு பயம் ஏற்பட்டது. தனது ஒரே செல்ல மகன், பல காலம் தவம் இருந்து பெற்ற வாரிசு சாமியாராக போய்விடுவானோ என்று நினைத்தார். அவரையும் ஒரு சித்தாடல் மூலம் மாயாண்டி சுவாமிகள் ஆட்கொண்டார்.



ஜீவ சமாதி அரங்கம்

ஒரு நாள் குருகுலம் சென்றுவிட்டு திரும்பியபோது, தன் தாயைப் பார்க்க களத்து மேட்டுக்குச் சென்றார். அவரைக் கண்ட தாயார், ‘நெல் காய போட்டுள்ளேன். காக்கைகள் வந்து கொத்தித் தின்னாமல் பார்த்துக்கொள்’ என்று கூறிவிட்டுச் சென்றார்.

மாயாண்டி சுவாமிகளுக்கு மிகவும் மகிழ்ச்சியாகிவிட்டது. கொஞ்ச நேரம் தனிமை கிடைத்தால் தியானம் செய்யலாமே என்று நினைத்து, களத்து மேட்டு ஓரத்தில் தியானத்தில் அமர்ந்துவிட்டார். அடுத்த சில நிமிடங்களில் ஏராளமான காக்கைகள் அங்கு வந்து, நெல்லை கொத்தித் தின்றன. அவை எழுப்பிய சத்தம், தியானத்துக்கு இடையூறாக இருந்தது.

அவர் கண் திறந்து பார்த்தார். மறுவிநாடி... காக்கைகள் எல்லாம் அப்படியே சுருண்டு விழுந்துவிட்டன. சுவாமிகள் சிரித்தபடியே ஆழ்ந்த தியானத்துக்குள் சென்றுவிட்டார். சுமார் ஒரு மணி நேரம் கழித்து தாயார் அங்கு வந்தார்.

ஏராளமான காக்கைகள் களத்து மேட்டில் ஆங்காங்கே கிடப்பதைக் கண்டதும், தனது மகன்தான் அவற்றை கொன்றுவிட்டதாக கருதி பதறிப் போனார்.

“டேய்... காக்கைகளை விரட்டத்தானே சொன்னேன். ஏன் இப்படி அவற்றைக் கொன்று போட்டுள்ளாய்?” என்றார்.

தாயாரின் குரல் கேட்டு, தவத்தில் இருந்து விடுபட்ட சுவாமிகள், “அம்மா... பயப்படாதீர்கள். அவை சாகவில்லை. நான்தான் எல்லா காக்கைகளையும் மயங்கிக் கிடக்க செய்தேன். இப்போது போய்விடும் பாருங்கள்” என்றபடி “ம்... எல்லோரும் எழுந்து போங்க” என்றார். அடுத்த விநாடி... எல்லா காக்கைகளும் சிறகுகளை அடித்தபடி பறந்து சென்றன.

கூத்தாயி அம்மாளுக்கு வியர்த்துக் கொட்டியது. ‘தான் காண்பது கனவா... அல்லது நினைவா?’ என்ற அதிர்ச்சியில் உறைந்து போனார். சுய நினைவுக்கு வந்தவர், தம் மகனிடம் ஏதோ ஒரு சக்தி இருப்பதை உணர்ந்தார். ‘இவனை இப்படியே விட்டால், சரி வராது. உடனே திருமணம் செய்தால் மனம் மாறிவிடுவான்’ என்ற முடிவுக்கு வந்தார்.

தங்கள் உறவு வகையில் இருந்து மீனாட்சி என்ற பெண்ணை திருமணம் செய்து வைத்தனர். அந்த தாம்பத்திய வாழ்வின் அடையாளமாக அவருக்கு ஒரு மகனும்(கணபதி), மகளும் (மீனாட்சி) பிறந்தனர். மனைவி, குழந்தைகளோடு வாழ்ந்தாலும் அவரது நினைவெல்லாம் ஆன்மிகம் மீதே மையம் கொண்டிருந்தது.

தமது ஆன்மிகத் தேடல்களுக்கு உரிய வழிகாட்ட உகந்த குரு கிடைக்க மாட்டாரா என்ற ஏக்கத்தோடு இருந்தார். அவருடைய அவதாரத்துக்கு வித்திட்ட சூட்டுக்கோல் ராமலிங்க சுவாமிகளே இதற்கும் உதவினார். ஒரு நாள் அவரின் நேரடி சீடர் செல்லப்ப சுவாமிகள், ராமேஸ்வரம் யாத்திரை செல்லும் வழியில் கட்டிக்குளத்தில் தங்கி இருந்தார்.

இதை அறிந்த மாயாண்டி சுவாமிகள் ஓடோடி சென்று அவரது கால்களைப் பிடித்துக்கொண்டு கதறினார். தனக்கு குருவாக இருந்து வழிகாட்ட வேண்டும் என்றார். அவருக்கு செல்லப்ப சுவாமிகள் தீட்சை கொடுத்து, ராமலிங்க சுவாமிகள் கொடுத்த சூட்டுக் கோலையும் அளித்தார்.

அன்றே மாயாண்டி சுவாமிகள் இல்லற வாழ்வைத் துறந்தார். மனைவி, குழந்தைகளிடம், ‘எனக்கு நிறைய வேலைகள் உள்ளன’ என்று கூறி புறப்பட்டார். மனைவி மீனாட்சி, ‘‘போகாதீங்க’’ என பிடித்து இழுத்தபோது சுவாமிகளின் வேட்டி அவிழ்ந்து, அவர் கையில் சென்றுவிட்டது. ‘‘இனி இந்த வேட்டிதான் உனக்கு சொந்தம்’’ என்றபடி சுவாமிகள், வீட்டைவிட்டு வெளியேறினார்.

தென் தமிழகம் முழுவதும் கோவில் கோவிலாக சுற்றினார். கன்னியாகுமரி, சுசீந்திரம், நாகர்கோவில், பொதிகை மலை, குற்றாலம், நெல்லை, ராமநாதபுரம், உத்தரகோசமங்கை, திருப்புல்லாணி, ராமேஸ்வரம், கல்லங்குடி, விலத்தூர், தஞ்சாவூர் என்று நடந்துகொண்டே இருந்தார். ஒரு நாள் மார்நாடு என்ற கிராமத்தில் தங்கிஇருந்தார்.

அங்கு தவத்தில் ஆழ்ந்தபோது, அந்த ஊர் கண்மாய்க் கரையில் சிவன் கோவிலும், மீனாட்சி கோவிலும் புதையுண்டு கிடப்பதை அறிந்தார். இதை மக்களிடம் கூறினார். மண்வெட்டி, கடப்பாரையுடன் ஊரார் திரண்டு வந்து தோண்டினார்கள்.

பூமிக்குள் புதையுண்டு கிடந்த கோவிலை கண்டு ஆச்சரியப் பட்டனர். சித்தரை வணங்கி, ஆலயத்தை சுத்தப்படுத்தி வழிபட்டனர். இன்றும் மார்நாடு கிராம மக்கள் அதை பராமரித்து வருகிறார்கள்.

அந்த ஊரில் சிறிது காலம் மாயாண்டி சுவாமிகள் தங்கினார். 1882—ம் ஆண்டு மதுரை வந்தார். கோரிப்பாளையத்தில் கள்ளிச்செடிகள் மீது படுத்து தூங்கினார். அந்த பகுதியில் உள்ளவர்கள் முதலில் அவரை மனநலம் பாதிக்கப்பட்டவர் என்று நினைத்து கண்டுகொள்ளாமல் இருந்தனர்.

ஒரு நாள் அந்த ஊரைச் சேர்ந்த காசி என்பவரின் மகன், பாம்பு கடித்து இறந்து போனான். அவனை புதைக்க பாடை கட்டி எடுத்துச் சென்று கொண்டிருந்தனர். அதைப் பார்த்த மாயாண்டி சுவாமிகள், சவ ஊர்வலத்தை மறித்தார்.‘‘ஏன்டா... உயிரோடு இருக்கிறவனை புதைக்க தூக்கிட்டுப் போறீங்க?’’ என்றார். எல்லோரும் கோபத்துடன், ‘‘பைத்தியமே... தூரப் போ’’ என்று விரட்டினார்கள்.

காசி மட்டும் நம்பிக்கை யோடு, 'சாமீ, எம் புள்ள உயிரோடு இருக்கானா?'' எனக் கேட்டார். அதற்கு சுவாமிகள், ''ஆமா'' என்றார். பிறகு, பாடையை இறக்கச் சொன்னார்.

சவமாக கிடந்த உடலை தலை முதல் கால் வரை தடவி விட்டார். பின்னர், ''டேய் எழுந்திருடா'' என்றார். சுவாமிகளின் கைபட்ட மறுவிநாடி... அந்த வாலிபனின் உடலில் உஷ்ணம் பரவியது. அவன் துள்ளிக் குதித்து எழுந்து உட்கார்ந்தான். ''என்னை ஏன் இப்படி தூக்கிட்டு வந்தீங்க?'' என்று தந்தையிடம் கேட்டுவிட்டு, 'விறு விறு'வென வீட்டை நோக்கி நடந்தான்.

காசி, சுவாமிகளின் காலில் விழுந்து கதறினார். அப்போதுதான் அவர் மாபெரும் சித்த புருஷர் என்பது கோரிப்பாளையம் பகுதி மக்களுக்கு தெரியவந்தது. எல்லோரும் மன்னிப்பு கேட்டபடி காலில் விழுந்தனர். ஆனால், எதையும் கண்டுகொள்ளாத சுவாமிகள், மீண்டும் கள்ளிச்செடியில் போய் படுத்துக்கொண்டார்.

பாடையில் போன இளைஞனுக்கு உயிர் கொடுத்த சம்பவம் மதுரை மாவட்டம் முழுவதும் காட்டுத்தீ போல பரவியது. ஆயிரக்கணக்கானவர்கள் தினம் தினம் மாயாண்டி சுவாமிகளைப் பார்த்து தங்கள் பிரச்சினைகளை தீர்த்துச் சென்றனர். நூற்றுக்கணக்கான நோயாளிகள் உடல் நலம் பெற்றனர்.

இந்த அற்புதங்களை எல்லாம் மதுரை வடக்கு மாசி வீதியில் வசித்து வந்த கருப்பண்ணர் பார்த்து சுவாமிகளை சந்தித்து பேச ஆர்வம் கொண்டார். அவரது ஒரே மகன் இருளப்பர். இவரது ஜாதகத்தில், '26 வயதில் ஆயுள் முடிந்துவிடுவதாக இருந்தது. இதனால் இருளப்பர், கவலையோடு இருந்தார். இதை அறிந்த மாயாண்டி சுவாமிகளின் சீடர்களில் ஒருவரான மூக்கையா சுவாமிகள், ''கவலைப்படாதீர்கள், மாயாண்டி சுவாமிகளிடம் கேட்கலாம்'' என்றார்.

மறுநாள் அவர் இருளப்பரை அழைத்துக் கொண்டு கோரிப்பாளையம் சென்றார். அங்கு நூற்றுக்கணக்கானவர்கள் நிற்பதைக் கண்டு சுவாமிகளைப் பார்க்க முடியுமா என்று நினைத்தார். அடுத்த நிமிடம் ஒருவர் வெளியில் வந்து, ''இருளப்பர் என்பவர் யார்? சுவாமிகள் கூப்பிடுகிறார்'' என்றார்

இருளப்பருக்கு ஆச்சரியம் தாங்க இயலவில்லை. அறைக்குள் சென்று சுவாமிகள் முன்பு உட்கார்ந்தார். ‘‘என்னப்பு... 26 வயசுல ஆயுள் முடிஞ்சுரும்னு சொன்னாங்களா?’’ என்றார் சுவாமிகள்.

இருளப்பர் ஆடிப் போனார். கதறியபடி சுவாமிகள் காலில் விழுந்து வணங்கினார்.

அவரைப் பார்த்து சிரித்த சுவாமிகள், ‘‘எதை நினைத்தும் கலங்காதே! உன் ஆயுள் தழைக்கும். உனக்கு ஆண் குழந்தையும் பிறக்கும்’’ என்றார். பிறகு, ‘‘உன் ஆயுசை நீட்டிக்க நான் ஒன்று செய்ய வேண்டியதுள்ளது. என்னோடு நீ பத்து நாட்கள் தங்கி இருக்கணும்’’ என்றார்.

இருளப்பரும் அதற்கு சம்மதித்தார். அவர் சுவாமிகளுடன் கட்டிக்குளம் புறப்பட்டு சென்றார். கருப்பனேந்தல் ஞான மடத்தில் இருவரும் தங்கினார்கள். அங்கு ஒரு குழி வெட்டச் செய்து, அதற்குள் இறங்கிய சுவாமிகள்... குத்துக்காலிட்டு அமர்ந்தார். மேலே பலகையால் குழியை மூடச் சொல்லி, அதன் மீது மண்ணைப் போட்டு நிரப்ப உத்தரவிட்டார்.

ஒரு நாள் முழுவதும் அந்தக் குழிக்குள் சுவாமிகள் நிஷ்டையில் இருந்தார். மறுநாள் வெளியில் வந்தவர், இருளப்பரை அழைத்து, ‘‘உன் ஆயுசை நீட்டியாச்சி. உனக்கு இனி கவலை இல்லை. ஆனால், இனி ஆன்மிக பணிகளிலும், அறச் செயல்களிலும் ஈடுபட வேண்டும்’’ என்றார். அதை இருளப்பர் முழு மனதுடன் ஏற்றுக்கொண்டார். அதன்பிறகு சுவாமிகளுடனே இருந்துவிட்டார்.

ஒரு நாள் மாயாண்டி சுவாமிகள் தம் அடியார்களுடன் திருப்பரங்குன்றம் ஆலயத்துக்குச் சென்றார். முருகனை வழிபட்ட அவர் அன்றிரவு அங்கு தங்க வேண்டும் என்று விரும்பினார். அதன்படி சரவணப் பொய்கையின் ஈசான மூலையில் உள்ள படித்துறையில் தங்கினார்.

விடிந்ததும் அதிகாலையில், முருகனை தியானித்தபடி குளத்தில் மூழ்கினார். மண் எடுத்தார். அதை சிவலிங்கமாக பிடித்தார். அதை திருப்பரங்குன்றம் அருகில் உள்ள காக புஜண்டர் மலை எனப்படும் திருக்கூடல் மலைக்கு எடுத்து வந்தார். அங்குள்ள குகையில் லிங்கத்தை பிரதிஷ்டை செய்தார்.



திருப்பரங்குன்றத்தில் உள்ள ஜீவ சமாதி

அந்த காகபுஜண்டர் மலை, சித்தர்கள் ஏராளமானோர் வாழும் அருள் மிகுந்ததாகும். மாயாண்டி சுவாமிகளை சகசித்தர்கள் அரூப நிலையில் ஆசீர்வதித்தனர். அந்த மலையிலேயே தங்கும்படி கேட்டுக்கொண்டனர். இதையடுத்து திருக்கூடல் மலையிலேயே நிரந்தரமாக தங்கிட முடிவு செய்தார்.

அவர் உத்தரவை ஏற்று மலை உச்சியில் தண்டபாணி கோவில் உருவானது. அடிவாரத்தில் நிலங்களை வாங்கி பல்வேறு மண்டபங்களை இருளப்பர் கட்டிக் கொடுத்தார். திருக்கூடல் மலையில் நிரந்தரமாக தங்கிய பிறகு சுவாமிகள் நிகழ்த்திய அற்புதங்கள் நம்ப முடியாத அளவுக்கு பக்தர்களை மிரள வைத்தன. 'எப்படி இவரால் இந்த மாதிரி வித்தியாசமான சித்தாடல்களைச் செய்ய முடிகிறது?' என்று திகைத்தனர்.

ஒரு தடவை ராமநாதபுரம் மன்னர் சேதுபதி மிகுந்த வயிற்று வலியால் அவதிப்பட்டார். வைத்தியர்கள் பலர் பார்த்தும் குணமாகவில்லை. அப்போது மாயாண்டி சுவாமிகள் பற்றி கேள்விப்பட்ட மன்னர் சேதுபதி, அவரை அழைத்து வர காவலர்களை அனுப்பினார். அந்த காவலர்கள், சுவாமிகளை சந்தித்து விஷயத்தைக் கூறி அழைத்தனர். சுவாமிகளும் அதை ஏற்று புறப்பட்டார். காவலர்கள் அவரிடம், 'சாரட் வண்டியில் ஏறுங்கள். வேகமாக போய்விடலாம்'' என்றனர். அதற்கு சுவாமிகள் சிரித்துக்கொண்டே,

“அப்படியா... சரி, நீங்கள் சாரட் வண்டியில் செல்லுங்கள். நான் வருகிறேன்” என்றார்.

சாரட் வண்டி பாய்ந்து சென்றது. காவலர்கள் விரைவில் ராமநாதபுரம் அரண்மனைக்கு சென்றிருந்தனர். உள்ளே போன அவர்களுக்கு கடும் அதிர்ச்சி காத்திருந்தது.

மன்னர் சேதுபதிக்கு, மாயாண்டி சுவாமிகள் சிகிச்சை அளித்து கொண்டிருந்தார். ‘காவலர்களுக்கு முன் அவர் எப்படி ராமநாதபுரத்துக்கு வந்து சேர்ந்தார்?’— இன்று வரை அதற்கு விடை தெரியவில்லை.

மற்றொரு சமயம் மாயாண்டி சுவாமிகள் மதுரையில் இருந்து மானாமதுரைக்கு ரெயிலில் சென்றுகொண்டிருந்தார். ரெயில் பெட்டியில் ஒரு ஓரமாக அமர்ந்து தியானத்தில் மூழ்கி இருந்தார். ‘டிக்கெட்’ பரிசோதகரான ஆங்கிலேய அதிகாரி வந்தார். சுவாமிகளை பார்த்ததும் பிச்சைக்காரர் என்று நினைத்துக் கொண்டு, பென்சிலால் தட்டி எழுப்பி ‘டிக்கெட்’ கேட்டார்.

சுவாமிகள் “இல்லை” என்றார். அதிகாரிக்கு கோபம் வந்துவிட்டது. ரெயிலை நிறுத்திய அவர், சுவாமிகளை வலுக்கட்டாயமாக நடுவழியில் இறக்கிவிட்டார்.

சுவாமிகள் சுற்றும் முற்றும் பார்த்தார். அருகில் இருந்த ஆலமரத்தடிக்குச் சென்று தியானத்தில் உட்கார்ந்துவிட்டார். ஆங்கிலேயே அதிகாரி ‘விசில்’ அடித்து, பச்சை கொடியைக் காட்டினார். ஆனால், ரெயில் ஓர் அங்குலம்கூட நகரவில்லை.

என்னவெல்லாமோ செய்து பார்த்தார்கள். பழுது நீக்குபவர்கள் வந்தனர். சுமார் 3 மணி நேரம் போராடியும் ரெயில் நகரவே இல்லை. ‘அடுத்து என்ன செய்வது?’ என்று அதிகாரிகளுக்கு புரியவில்லை.

அப்போதுதான் ‘டிக்கெட்’ பரிசோதகரால் மாயாண்டி சுவாமிகள் இறக்கி விடப்பட்டது சில பயணிகளுக்கு தெரியவந்தது. அவரிடம் சென்று, “மாயாண்டி சுவாமிகள் ஏறினால்தான் ரெயில் ஓடும்” என்றனர்.

ஆச்சரியம் அடைந்த அந்த ஆங்கிலேய அதிகாரி, சுவாமிகளிடம் சென்று அழைக்க... அவர் வந்து அமர்ந்ததும் மீண்டும் ரெயில் ஓடத் தொடங்கியது. ரெயிலில் இருந்த பயணிகள் அனைவரும் இதைக் கண்டு அதிசயித்தனர்.

மானாமதுரைக்கு சென்றதும் ரெயில் நிலைய வாசலில் நிறைய பேர் திரண்டு வந்து, சுவாமிகளுக்கு மாலை அணிவித்து மரியாதை செலுத்தினார்கள். ஆங்கிலேய அதிகாரியோ காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டார்.

சுவாமிகள், "என்னைப் போன்ற பரதேசிகளிடம் பணம் ஏது? நாங்கள் வெறும் சிவனடியார்கள்தான். எங்களிடம் 'டிக்கெட்' கேட்கலாமா?" என்றார். இந்த சம்பவத்தைத் தொடர்ந்து, 'ராமேஸ்வரம் செல்லும் ரெயிலில் சாதுக்கள் இலவசமாக பயணம் செய்ய அனுமதிக்கப்படுவார்கள்' என்று ஆங்கிலேய அரசு அறிவித்தது. நீண்ட நாட்களுக்கு அது நடைமுறையில் இருந்தது. பசும்பொன் முத்துராம லிங்க தேவர், கிருபானந்த வாரியார், 'ஸ்கந்தாஸ்ரமம்' ஸ்ரீசாந்தானந்த சுவாமிகள் மற்றும் விரல் விட்டு எண்ண முடியாத அளவுக்கு சித்தர்களை உருவாக்கிய சிறப்பு மாயாண்டி சுவாமிகளுக்கு உண்டு.

ராமநாதபுரம் மாவட்டம் பசும்பொன் கிராமத்தில் வாழ்ந்த 56 ஊர்களுக்கு சொந்தக்காரரான உக்கிரப்பாண்டித் தேவருக்கு நீண்ட நாட்களாக குழந்தைப் பாக்கியம் இல்லாமல் இருந்தது. எவ்வளவோ வைத்தியம் பார்த்தும் பலன் இல்லாமல் சலித்துப் போன அவர் ஒரு தடவை மாயாண்டி சுவாமிகளைப் பார்க்க வந்தார்.

அவர் பேசும் முன்பே, "என்ன... 56 ஊர்களுக்கு சொந்தக்காரர், இங்க வந்திருக்கிறார்?" என்றார்.

உக்கிரப் பாண்டித் தேவருக்கு பிரமிப்பாக இருந்தது. மீண்டும் கண்களை மூடி தியானம் செய்த சுவாமிகள், "உங்களுக்கு குழந்தை வேண்டும்... அப்படித்தானே! சரி, குழந்தை வேண்டுமா...நாடே போற்றும் குழந்தை வேண்டுமா?" என்றார்.

அதற்கு, "நாடே போற்றும் குழந்தை வேண்டும்" என்றார் உக்கிரப்பாண்டித் தேவர். உடனே சுவாமிகள், "உங்கள் மனைவி வயிற்றில் உள்ள முத்து, அடுத்த ஆண்டு குழந்தையாக பிறக்கப் போகிறது.

அதனால் குழந்தைக்கு 'முத்து' என்பதையும், எனது குருநாதரான ராமலிங்க மகானின் பெயரையும் சேர்த்து வையுங்கள்" எனச் சொல்லி ஆசீர்வதித்தார். சுவாமிகள் சொன்னது போல அடுத்த ஆண்டே (1908) உக்கிரப்பாண்டித் தேவருக்கு ஆண் குழந்தை பிறந்தது. சுவாமிகள் சொன்னபடி முத்துவையும்,

ராமலிங்கத்தையும் சேர்த்து ‘முத்துராமலிங்கம்’ என்று பெயர் சூட்டினார்கள். அந்தக் குழந்தைதான் பின்னாளில் நாடே போற்றும் வகையில் மறக்க முடியாத மாமனிதராக வாழ்ந்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர் ஆனார்.

ஒரு தடவை நாகப்பட்டினத்தில் சுவாமிகள் நிறைய பேருக்கு திருநீறு வழங்கி ஆசீர்வதித்துக்கொண்டிருந்தார். ஒரு சிறுவனுக்கு திருநீறு கொடுக்கு ம்போது, அவனை நன்கு உற்றுப் பார்த்து விட்டு, ‘‘காசு கொடுத்து, இவன் பேச்சைக் கேட்பார்கள். அந்த அளவுக்கு இவன் புகழ் பெறுவான்’’ என்று ஆசீர்வதித்தார். அந்த சிறுவன் பிற்காலத்தில் கிருபானந்த வாரியார் ஆனார்.

அது போல ஒரு நாள் மதுரை அருகே ஒரு கிராமத்தில் உள்ள பிராமணரான ராமசாமி என்பவர் வீட்டுக்குள் சுவாமிகள் திடீரென நுழைந்தார்.

ராமசாமியைப் பார்த்து, ‘‘உனக்கு 10—வதாக ஒரு ஆண் குழந்தை பிறக்கும். சுப்பிரமணியம் என்று பெயர் வை. சில காலம் மட்டுமே அவன் உங்களுடன் இருப்பான். பிறகு, புவனேஸ்வரி அருள் பெற்று, இந்த உலக நன்மைக்காக வேள்விகள் செய்ய சென்றுவிடுவான்’’ என்றார்.

அவர் ஆசீர்வதித்தது போன்று பிறந்த சிறுவன்தான் பிற்காலத்தில் சேலம், புதுக்கோட்டை, சென்னை ஆகிய ஊர்களில் ‘ஸ்கந்தாஸ்ரமம்’ அமைத்து சித்தியான ஸ்ரீசாந்தானந்த சுவாமிகள் ஆவார். கற்றங்குடி ரெட்டி சுவாமிகள், மூக்கையா சுவாமிகள், சோமப்பா சுவாமிகள் என்று நிறைய பேர் மாயாண்டி சுவாமிகளிடம் தீட்சைப் பெற்று சித்தரானார்கள்.

ஒரு சமயம் சுவாமிகள் தண்ணீர் மீது நடந்தும், தண்ணீர் ஊற்றி விளக்கு எரித்தும் ஆச்சரியப்படுத்தினார். தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் இவர் அமைத்த மடாலயங்கள் உள்ளன. மடாலயங்களில் கிணறும், தியான குகையும் அமைத்தார். ஏதாவது ஒரு ஊருக்கு செல்ல விரும்பினால், தான் இருக்கும் மடாலய கிணற்றுக்குள் இறங்குவார். சில நிமிடங்களில் வேறு ஊர் கிணற்றில் இருந்து வெளியே ஏறி வருவார். அது போல ஒரு ஊர் குகைக்குள் செல்பவர், பல நூறு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள மடாலயக் குகையில் இருந்து வெளியில் வருவார்.

தற்போதைய நவீன யுகத்தில் சுரங்க ரெயில் பாதை அமைக்கவே நாம் அல்லாடிக் கொண்டிருக்கும் நிலையில், இவர் எப்படி ஒரு ஊர் கிணற்றில்

இறங்கி... தூரத்தில் உள்ள மற்றொரு ஊர் கிணறு வழியாக வெளியில் வந்தார் என்பது இன்னமும் ஆச்சரியத்தில் திணற வைக்கும் அமானுஷ்யமாக உள்ளது.

அது மட்டுமல்ல... ஒரே நாளில் ஒரே நேரத்தில் சுவாமிகள் மதுரையிலும், ராமநாதபுரத்திலும் இருவர் வீட்டில் தங்கி இருந்து உணவு சாப்பிட்டுச் சென்ற அதிசயத்தை நிகழ்த்தினார். ஒரு தடவை மலேசியாவில் உள்ள பக்தர் வீட்டில் தோன்றி பரபரப்பு ஏற்படுத்தினார்.

அவர் நிகழ்த்திய அற்புதங்கள் இன்னும் ஏராளமாக உள்ளன. இந்த அற்புதங்கள் எல்லாம் அவர் சும்மா வேடிக்கைக்காக செய்யவில்லை. ஒவ்வொரு ஆத்மாவும் ஈசனை நாடிச் சென்று தம்மை ஒப்படைத்துக்கொள்ள வேண்டும் என்ற உயரிய கோட்பாடுடனே அந்த அற்புதங்களை செய்தார்.

தனது இந்த லட்சியக் கோட்பாடு காலம் காலமாக தொடர வேண்டும் என்பதற்காக ஒவ்வொரு ஆண்டும் ஆடி பவுர்ணமி தினத்தன்று திருக்கூடல் மலையில் இருந்து கட்டிக்குளம் வரை ஸ்ரீநவநீத பெருமாள் பல்லக்கு ஊர்வலத்தை தொடங்கினார். சுவாமிகளின் நிழலாக இருந்த இருளப்பரின் வாரிசுகள் தற்போதும் அந்த தெய்வீக பணியை செய்து வருகிறார்கள்.

இத்தகைய மகத்துவம் வாய்ந்த சுவாமிகள் 1928—ம் ஆண்டு தமது பக்தர்களிடம், “இன்னும் 2 ஆண்டுகளில் சட்டையைக் கழற்றிவிடுவேன்” என்றார். தனது உடலை அடக்கம் செய்ய வேண்டிய இடத்தை குறிப்பிட்டு, அங்கே சமாதிக் குழியும் வெட்டச் செய்தார்.

சொன்னபடி 1930—ம் ஆண்டு புரட்டாசி மாதம் 11—ந்தேதி இரவு இருளப்பரின் தோளில் சாய்ந்தபடி, “அப்பு... இந்த சட்டையைக் கழற்றிவிடலாமா?” என்று கூறியபடி பரிபூரணம் ஆனார்.

அவரால் குறிப்பிட்டப்படி ஜீவசமாதி கட்டி, அவர் வழிபட்டு வந்த விநாயகர் சிலையை பிரதிஷ்டை செய்துள்ளனர். அதோடு அவரது குருவான ராமலிங்கம் சுவாமிகள் கொடுத்த சூட்டுக்கோலும் அங்கு உள்ளது.

சக்தி வாய்ந்த இந்த ஜீவ சமாதிக்கு திருப்பரங்குன்றம் தியாகராஜர் பொறியியல் கல்லூரி பஸ் நிறுத்தத்தில் இறங்கி எளிதாக செல்லலாம். விநாயகரையும், சூட்டுக்கோலையும், சித்தரையும் வழிபடுங்கள். அது

உங்களை உயர்த்துவதோடு, திருக்கூடல் மலையில் அரூபமாக உள்ள காகபுஜண்டர் உள்ளிட்ட மற்ற சித்தர்களின் ஆசியையும் பெற்றுத் தரும்.





# 28.ஸ்ரீ அருள்வெளி சித்தர் பாபா

**பாரிமுனை - சென்னை, ஸ்ரீபெரும்புதூர்.**

## 28. ஸ்ரீ அருள்வெளி சித்தர் பாபா

சித்தர்கள் என்றதும் அவர்கள் அடர்ந்த காடுகளுக்குள் அல்லது மலைக்குகைக்குள் தவம் இருப்பவர்கள் என்ற எண்ணம்தான் பலருக்கும் நினைவுக்கு வரும். தங்களது தியானம் கலைந்து விடக்கூடாது என்பதற்காகவே சித்தர்கள் தங்களை அப்படி தனிமைப்படுத்திக் கொள்வதுண்டு.

அரிதாக சில சித்தர்கள் மக்களோடு மக்களாக வாழ்ந்து, மக்களை நல்வழிப்படுத்த பல்வேறு அற்புதங்களை செய்வதுண்டு. பெரும்பாலும் அவர்கள் சிறிய நகரங்களில்தான் தங்களை வெளிப்படுத்தியுள்ளனர்.


ஸ்ரீ அருள்வெளி சித்தர் பாபா

ஆனால் சென்னையில் சமீபத்தில் அவதரித்த ஒரு சித்த புருஷர் ஆட்கள் நடமாட்டமும், வாகன நெருக்கடியும் மிகுந்த பாரிமுனை லிங்கிச் செட்டித் தெருவில் சுமார் 40 ஆண்டுகள் வாழ்ந்து, ஏராளமான அற்புதங்களை நிகழ்த்தி சென்றுள்ளார் என்பது வியக்க வைக்கிறது.

பாரிமுனையில் சென்னை ஐகோர்ட்டு எதிரில் (மண்ணடி மல்லிகேஸ்வரர் ஆலயம் செல்லும் வழியில்) உள்ள லிங்கிச் செட்டித் தெருவுக்கு சென்று அந்த சித்தப் புருஷர் வசித்த இடத்தைப் பார்த்தபோது ஆச்சரியத்துக்கு மேல் ஆச்சரியம் ஏற்பட்டது.

குறுகலான தெரு, எதிர்—எதிரே வரும் வாகனங்கள் சுலபமாக கடந்து செல்ல முடியாத நிலை; எப்போதும் கடைகளில் இருந்து வரும் ஆரவாரமான சத்தம்; இவற்றை எல்லாம் கடந்து அந்த மகான் அங்கு தியானம் மேற்கொண்டு, மகத்தான நிகழ்வுகளை நடத்திக் காட்டினார். ஆச்சரியத்தின் பொக்கிஷமாகத் திகழ்ந்த அந்த சித்த புருஷரின் பெயர் ஸ்ரீ அருள்வெளி சித்தர் பாபா.

கடந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் இவர் பிறந்திருக்க லாம் என்று கருதப்படுகிறது. ஆனால் இவர் எங்கு பிறந்தார்? இவர் பூர்வீகம் எது? பெற்றோர் யார்? சென்னைக்கு எப்போது, எப்படி வந்தார் என்பன போன்ற எந்த தகவல்களும் நமக்குத் தெரி யவில்லை.

சென்னைத் துறைமுகத்தில் இவர் மூட்டைத் தூக்கும் வேலை செய்து வந்ததாக ஒரு குறிப்பு உள்ளது . இந்தியா சுதந்திரம் அடைவதற்கு ஓரிரு ஆண்டுகள் முன்னதாகவோ அல்லது பின்போ அவர் துறைமுக வேலையை உதறித் தள்ளினார்.

தனக்கு வர வேண்டிய பணத்தைக் கூட துறைமுக நிர்வாகத்திடம் இருந்து பெறாத அவர் ஆசைகள் அனைத்தையும் துறந்து துறவு பூண்டார். பாரிமுனை, மண்ணடி, முத்தியால்பேட்டை, பிராட்வே பகுதிகளில் சுற்றித்திரிந்தார்.

நாளடைவில் அழுக்கேறிய உடைகள், நீண்ட தாடி, மெலிந்த கருத்த தேகம், ஜடாமுடி என்ற கோலத்தில் அவரைப் பார்த்த பலரும் அவர் பிச்சைக்காரர், மனநலம் பாதிக்கப்பட்டவர் என்று பலவாறாக நினைத்தனர். மல்லிகேஸ்வரர், காளிகாம்பாள், கந்தக்கோட்டம், கச்சபேஸ்வரர் என்று ஆலயப் பகுதிகளுக்கு வருவார். யாராவது உணவு வாங்கிக் கொடுத்தால், விருப்பப்பட்டால் சாப்பிடுவார். இல்லையெனில் ஒதுக்கித் தள்ளி விடுவார். டீ வாங்கிக் கொடுத்தால் அருந்துவார். சிகரெட் புகைப்பார்.

ஒரு கட்டத்தில் அவர் உலா வருவது லிங்கிச் செட்டித் தெருவுக்குள் மட்டும் என்றானது. பிறகு அத்தெரு ஓரத்தில் ஒரு இடத்தில் அமர்ந்தார். எப்போதும்

இரும்பு அடிக்கும் சத்தம் கேட்டுக் கொண்டே இருக்கும் பகுதி அது. என்றாலும் அந்த மகானுக்கு அது, ஆனந்தம் அருளும் இடமாக திகழ்ந்தது.

அவர் ஒரு பெரிய மூட்டையை இடுப்பில் கட்டி இழுத்துக் கொண்டே அலைவதை வழக்கத்தில் வைத்திருந்தார். லிங்கிச் செட்டித் தெருவோரத்தில் அமர்ந்த பிறகு அந்த மூட்டை மீது சாய்ந்தபடி இருப்பார்.

வானத்தைப் பார்த்து ஏதேதோ புரியாத பாஷையில் பேசுவார். அவை அனைத்தும் விண்வெளியில் உள்ள தேவதைகளுடன் அவர் பேசிய சங்கேத வார்த்தைகள் என்று பின்புதான் தெரிந்தது.

சில சமயம் வானத்தையே பார்த்துக் கொண்டிருப்பார். எங்கோ நடக்கும் ஒரு நிகழ்ச்சியைப் பார்த்து ரசிப்பதுப் போல ரசித்துப் பார்ப்பார். திடீரென கைதட்டி சிரிப்பார்.

சில நாட்கள் சூரியனையே வைத்தக் கண் வாங்காமல் பார்த்துக் கொண்டே இருப்பார். சூரிய நாராயணா என்று அவர் வாய் அப்போது முணுமுணுத்தபடி இருக்கும். சில சமயம் 3 மணி நேரம், 4 மணி நேரம் கூட சூரியனையே அவர் பார்த்ததுண்டு.

அவருக்கு எப்படி சித்தபுருஷர்களுக்கு உரிய அனைத்து சக்திகளும் கை கூடியது என்று தெரியவில்லை. அது பற்றிய தகவல்களை அவர் சொன்னதும் இல்லை.

என்றாலும் சில சம்பவங்கள் அவரை மகான் என்று மக்களை உணர வைத்தது. ஒரு சமயம் அவருக்கு ஒருவர் இரக்கப்பட்டு ஒரே ஒரு டீ வாங்கிக் கொடுத்தார்.

உடனே சித்தர் அதை மற்றவர்களுக்கு தம்ளர்களில் ஊற்றிக் கொடுத்தார். அவர் ஊற்ற, ஊற்ற டீ வந்து கொண்டிருந்தது. எல்லோரும் ஆடிப்போய் விட்டனர்.

அவரை சித்தர் என்று அடையாளம் கண்டு கொண்டு வணங்கத் தொடங்கினார்கள். ஆனால் சித்தரோ, யார் ஒருவரையும் தன் காலில் விழ அனுமதித்ததே இல்லை. அது போல அவர் திருநீறு கொடுப்பது, எலுமிச்சம் பழம் கொடுப்பது போன்ற எந்த செயலையும் செய்தது இல்லை.

அவரது கருணை மிகுந்த பார்வையே கர்மங்களை விரட்டுவதாக அமைந்தது. இந்த தகவல் பரவ பரவ நிறைய பேர் சித்தரைத் தேடி வந்தனர்.

முதலில் சாதாரண மக்கள் வந்தனர். பிறகு பணக்காரர்கள் வந்தனர். அவர்களைத் தொடர்ந்து அரசு உயர் பதவிகளில் இருப்பவர்களும் சித்தரைத் தேடி குறுகலான லிங்கிச் செட்டித் தெருவுக்குள் வர ஆரம்பித்தனர்.

இந்துக்கள் மட்டுமல்ல, இஸ்லாமியர்கள், கிறிஸ்தவர்களுக்கும் மிகவும் பிடித்தமானவராக இருந்தார். அவர் ஏழை, பணக்காரன், உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி, மதம், இனம் உள்ளிட்ட எந்த வேறுபாட்டையும் பார்த்ததே இல்லை.

தன்னை நாடி வருபவர்கள் நல்ல உள்ளம் கொண்டவர்களாக இருக்கிறார்களா? என்று மட்டுமே பார்த்தார். ஏழைகளிடம் அதிகப்படியான இரக்கம் காட்டினார்.

அவரைப் பார்த்தால் மன அமைதி கிடைக்கிறது என்பதை அனைவரும் ஆத்மார்த்தமாக அனுபவித்து உணர்ந்தனர். எனவே தினமும் அவரை சுற்றி பலரும் இருப்பார்கள்.

சிலர் நிறைய பணம் கொடுப்பார்கள். அவை எல்லாவற்றையும் அவர் ஏழைகளுக்கும், தன்னைத் தேடி வருபவர்களுக்கும் பிரித்துக் கொடுத்து விடுவார். ஒரு பைசாவை கூட அவர் ஒரு நாளும் தனக்கென வைத்துக் கொண்டதே இல்லை.

(சீரடி சாய்பாபாவும் இப்படித்தான். தனக்கு வரும் அனைத்து தட்சணைகளையும் தினமும் இரவு பிரித்துக் கொடுத்து விடுவார்)

அவர் யாரைப் பார்த்தாலும் “பாபா வாவா” என்றே அழைத்தார். இதனால் அவரை சித்தர் பாபா என்றனர். பின்னர் அவர் மழையோ, வெயிலோ வெட்டவெளியிலேயே இருந்ததால் அருள்வெளி சித்தர் பாபா என்று பெயரிட்டுக் குறிப்பிட்டனர். நாளடைவில் அதுவே அவர் பெயராக நிலைத்து விட்டது.

அவரை சித்தர் என்று நம்பி அனைவரும் வரத் தொடங்கிய பிறகு அவர் நடத்திய அற்புதங்களும், வினோதங்களும் ஏராளம்.... ஏராளம்.

தெருவோரத்தில் உட்கார்ந்திருக்கும் போதே அவர் சில கிலோ மீட்டர் தொலைவில் தன்னை சந்திக்க வருபவர்களின் பெயர், அவர்களது கார்

நம்பரைத் துல்லியமாக சொல்லி விடுவாராம். பல தடவை அவர் அப்படி சொல்லி தனது தொலைத் தூர நிகழ்வுகளை அறியும் சக்தியை நிரூபித்துள்ளார்.

தன் அருகில் வருபவர் எத்தகைய மன நிலையுடன் வந்துள்ளார் என்பதும் அவருக்குத் தெரியும். துளி அளவு ஆணவத்துடன் வந்திருந்தாலும் விரட்டி விடுவார். மற்றபடி அவரது கருணை கலந்த குளிர்ச்சியான பார்வை எத்தனையே பேரின் ஆன்ம சக்தியை விழிப்படையச் செய்வதாக இருந்தது.

அந்த பலனை அடைந்தவர்கள் அவருக்காக உணவு, உடைகள் வாங்கி வருவதுண்டு. வந்தவர் இந்துவாக இருந்தால்  ஏதாவது ஒரு கோவிலிலும், கிறிஸ்தவர்கள் வந்தால் சர்ச்சிலும், இஸ்லாமியர்கள் வந்தால் மசூதியிலும் அவற்றை தானம் செய்யச் சொல்லி விடுவார்.

அவர் குடித்து விட்டு கொடுத்த எச்சில் டீயையும், சிகரெட்டையும் குடித்தவர்கள் இன்று செல்வந்தர்களாக உள்ளனர். கடும் வியாதியுடன் வந்தவர்களை ஒரு இடத்தில் நிற்க சொல்வார். பிறகு, ‘‘உன் சீக்கு (நோய்) போயிடிச்சி.... போடா’’ என்பார். அந்த நோய் குணமாகி விடும்.

சிலருக்கு கிரக தோஷம் இருப்பதை சித்தர் அறிவார். அத்தகையவர்கள் வந்தால் அங்கு கிடக்கும்சிறு துண்டு பேப்பர்களை காலால் தள்ளியபடி ஒன்று சேர்ப்பார். பிறகு அவற்றை தீ வைத்து எரிப்பார். அந்த தாள்கள் எரிந்து முடிந்ததும் கிரக தோஷம் விலகி விட்டது, போ என்று சொல்லி அனுப்புவார்.

நிறைய பக்தர்களுக்கு அவர் செய்யும் இந்த பரிகாரம் முதலில் தெரிந்திருக்கவில்லை. விருகம்பாக்கத்தைச் சேர்ந்த சந்திரமவுலி என்ற வங்கி அதிகாரிதான் இதை உன்னிப்பாக பார்த்து கண்டுபிடித்தார்.

அதுபோல இவர்தான் காகபுஜண்டர் நாடியில், ஸ்ரீஅருள்வெளி சித்தர் பாபா பற்றிய குறிப்புகள் இருப்பதையும் கண்டுபிடித்து இந்த உலகுக்கு தெரிவித்தார். அந்த நாடியில், ‘‘அவன் பித்தனல்ல.... பேரருள் நிலை பெற்ற சித்தன்’’, ‘‘அவன் கண் ஒளிபட்டால், கர்ம வினைகள் நீங்கும்—’’ ‘‘அவன் கிருஷ்ணா நதி தீர்த்தத்தில் தவம் இருந்தவன்’’ என்றெல்லாம் இருந்தது குறிப்பிடத்தக்கது.

இந்த சந்திரமவுலி வாழ்வில் சித்தர் நிகழ்த்திய அற்புதங்கள் பல உள்ளன. சித்தர் கொடுக்கும் காசுகளை சந்திரமவுலி தினமும் தன் வீட்டு பூஜை

அறையில் உள்ள உண்டியலில் சேர்த்து வந்தார். ஒரு தடவை சித்தர் அவருக்கு காசு கொடுத்து விட்டு, ‘‘இதையும் உன் பூஜை அறை உண்டியலில் போட்டு விடு’’ என்று சொல்ல, சந்திரமவுலி ஆடிப் போய் விட்டார்.



ஜீவ சமாதி கட்டப்பட்ட இடத்தில் உள்ள லிங்கம்.

மற்றொரு நாள் அவர் காலையில் அலுவலகம் புறப்பட்டபோது, குழந்தைகள் எதற்கோ அடம் பிடிக்க, கோபத்தில் இரண்டு அடி கொடுத்தார். அன்று மாலை சித்தரை பார்க்கச் சென்றபோது, ‘‘என்ன மேன்.... குழந்தைகளை இப்படி அடிக்காதீர்கள்’’ என்றாராம்.

அதன் பிறகே சித்தருக்கு நாம் என்ன செய்தாலும் தெரிந்து விடும் என்ற உண்மையை சந்திரமவுலி உணர்ந்தார்.

சென்னை நந்தனம் பகுதியைச் சேர்ந்த ஒருவர் புரவிப்பாளையம் கோடி சுவாமிகளின் தீவிர பக்தராக இருந்தார். அவர் அருள்வெளி சித்தர் பாபாவை பார்த்து விட்டு, ‘‘மாடியில் இருக்கும் கோடி சாமிகள் மாதிரியே இருக்கிறாரே’’ என்று மனதுக்குள் நினைத்தார். அடுத்த வினாடி சித்தர், ‘‘ஆமாண்டா... மாடியில் இருக்கிறவனும் நானும் ஒன்னுதான், போடா...’’ என்றாராம். அந்த பக்தர் அதன்பிறகு சித்தரின் தீவிர தொண்டரானார்.

உலக நடப்புகளை சித்தர் எப்போதும் சிலேடை மொழியில் சொல்லிக் கொண்டே இருப்பார். அவர் சொல்வதெல்லாம் 100 சதவீதம் துல்லியமாக மிகச் சரியாக இருந்தது.

ஒரு தடவை தெருவோரத்தில் சிலர் புடை சூழ அவர் மூட்டை மீது சாய்ந்து உட்கார்ந்திருந்தார். அப்போது காற்றில் எங்கிருந்தோ ஒரு நாளிதழின் கிழிந்த பக்கம் பறந்து வந்து அவர் மீது ஒட்டிக் கொண்டது.

அந்த தாளை எடுத்துப் பார்த்தார். அதில் எம்.ஜி.ஆர். படம் இருந்தது. அந்தப் படத்தை சற்று உற்றுப் பார்த்தவர், பெருமூச்சு விட்டபடி ‘‘முடிஞ்சிப் போச்சுடா.. கதை’’ என்றார். சுற்றி இருந்தவர்கள் ஏன் இப்படி சொல்கிறார் என்று பேசிக் கொண்டனர். அன்றிரவு எம்.ஜி.ஆர். உடல் நலம் மிகவும் மோசமாகி மரணம் அடைந்தார்.

மறுநாள் அவர்கள், சித்தருக்கு மட்டும் இந்த விஷயம் எப்படி தெரிந்தது என்று ஆச்சரியத்தோடு பேசிக் கொண்டனர்.

ஒரு தடவை அவர் அமர்ந்திருந்த பகுதியில் ஒரு அடுக்குமாடி குடியிருப்பின் மூன்றாவது மாடியில் இருந்து ஒரு குழந்தை தவறி கீழே விழுந்தது. எல்லோரும் அலறியடித்தபடி கீழே ஓடி வந்தனர். அங்கு அந்த குழந்தை சித்தரின் மடியில் விளையாடியபடி கிடப்பதை கண்டு பிரமித்தனர்.

குழந்தை உயிரைக் காப்பாற்றியதற்காக லிங்கிச் செட்டித் தெருவே திரண்டு வந்து சித்தரின் ஆசி பெற்றது. தன்னிடம் மிகவும் விசுவாசமாக இருந்த சேகருக்கு, சித்தர் தினமும் தரையில் கிடக்கும் காசுகளை எண்ணாமல் அப்படியே அள்ளிக் கொடுப்பார். அதில் மிகச் சரியாக 35 காசுகள்தான் இருக்குமாம். அன்று ஒரு டீயின் விலை 35 காசுகளாகும்.

மழைக் காலங்களில் லிங்கிச் செட்டித் தெருவில் தண்ணீர் பெருக்கெடுத்து ஓடும். ஆனால் சித்தரை சுற்றி மழை விழுந்ததே இல்லை. மழையில் அவர் நனைந்ததும் இல்லை. குளித்ததும் இல்லை.

இப்படி அற்புதங்களுக்கு மேல் அற்புதம் செய்த சித்தர் 1988—ம் ஆண்டு ஜனவரி மாதமே தான் சித்தி அடைய போவதை பல வகைகளில் வெளிப்படுத்தினார். கடைசி ஒரு மாதத்தில் அவர் டீ குடிப்பதை கூட நிறுத்தி விட்டார். வென்னீர் மட்டுமே குடித்தார்.

திருவொற்றியூரைச் சேர்ந்த நாகராஜன் அவரது சீடர் போல இருந்து சித்தரை கவனித்தார். 1988—ம் ஆண்டு தை மாதம் சித்தர் நிறைய தகவல்களை பரிபாஷையாக வெளிப்படுத்தினார்.

அடிக்கடி அவர், மேகநீர், பனைமரத்துமேடு, ஸ்ரீபெரும்புதூர் வடமங்கலம் கூட்டுரோடு என்று சொல்லிக் கொண்டே இருந்தார். அப்போது அது யாருக்கும் புரியவே இல்லை.

ஒருநாள் திடீரென நாகராஜனிடம், ''முடி திருத்துபவரை அழைத்து வா'' என்று கூறியிருக்கிறார். சித்தர் அடித்து விடுவார் என்று பயந்து ஒருவரும் வர மறுத்து விட்டனர்.

உடனே சித்தர் சற்று யோசித்து விட்டு, ஒரு கோவில் பெயரைச் சொல்லி அதன் அருகில் இருக்கும் முடிதிருத்துபவரை அழைத்து வா என்றாராம். அதன்படி அந்த நபர் வந்தார்.

அவரிடம் தலைமுடி, தாடி, மீசையை மழிக்க உத்தரவிட்டார். அந்த முடிகளை எல்லாம் எடுத்துதான் வைத்திருந்த பெரிய மூட்டைக்குள் போட்டு தீ வைத்து எரித்து விட்டார். தீ எரிந்து முடிந்ததும், ''அப்பாடா... வந்த வேலை முடிந்து விட்டது'' என்றாராம்.

அப்போதும் கூட சித்தர் ஏன் இப்படி நடந்து கொள்கிறார் என்று அவருக்கு நெருக்கமான பக்தர்கள் சிந்திக்கவில்லை. மாறாக மொட்டைத் தலையில் பார்க்கும்போது சித்தர் மகாத்மா காந்தி மாதிரி இருப்பதாக கூறி மகிழ்ச்சி அடைந்தனர்.

அவர் பரிபூரணம் ஆவதற்கு 16 நாட்களுக்கு முன்பு ''இன்னும் 400 மணி நேரம்தான் இருக்கு'' என்றாராம். அதையும் பக்தர்கள் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை.

ஒருநாள் தம் நெருங்கிய பக்தர் ஒருவரிடம், ''டேய்... பன்னீர்தாசுக்கு போன் போடுங்கடா'' என்றாராம். அதுவும் பக்தர்களுக்கு புரியவில்லை. பிப்ரவரி மாதம் இறுதியில் தன்னை பார்க்க வந்தவர்களிடம் ''மாசி முப்பது வாடா...'' ''மாசி முப்பது வாடா'' என்று சொல்லி அனுப்பியபடி இருந்தார்.

மாசி 30—ந்தேதி அதாவது 13—3—1988 அன்று பூராடம் நட்சத்திரத்தில் ஸ்ரீஅருள்வெளி சித்தர் சுவாமிகள் தன் மூச்சைத் துறந்து சித்திஆனார். அவரது உடலை ஆழ்வார்பேட்டையைச் சேர்ந்த சந்தானம் என்பவர் எடுத்துச் சென்று தனது வீட்டில் ஜீவ சமாதி அமைக்க முயற்சி செய்தார்.

ஆனால் தெருவாசிகள் கடும் எதிர்ப்பு தெரிவித்ததால் அது நடக்கவில்லை. இந்த நிலையில் சந்திரமவுலி உள்ளிட்ட பலரும் சித்தரை எந்த இடத்தில் ஜீவ சமாதி அடையச் செய்வது என்று ஆலோசித்தனர்.

அப்போது மறைந்த முன்னாள் டி.ஜி.பி. பொன்.பரமகுரு தேவையான உதவிகளை செய்து கொடுத்தார். அந்தக் கால கட்டத்தில் வி.ஜி.பி. சகோதரர்களின் குழுமம் சென்னை புறநகர் பகுதிகளில் நிறைய நிலம் வாங்கிப் போட்டிருந்ததால், அவர்களிடம் ஏதாவது ஒரு சிறு இடம் தருமாறு கோரிக்கை விடப்பட்டது.

அப்போது ஸ்ரீபெரும்புதூர் அருகே வட மங்கலம் பகுதியில் தங்களுக்கு நிலம் கொடுத்த ஒருவர், ஒரு குறிப்பிட்ட பகுதியை மட்டும் ஆலயம் போன்ற பணிகளுக்கு அளிக்க வேண்டும் என்று கூறியிருந்ததை நினைவு கூர்ந்தனர். அந்த இடத்தை சித்தரின் ஜீவ சமாதி ஆலயம் அமைக்க தானமாகக் கொடுத்தனர்.

அந்த இடத்தில் ஸ்ரீஅருள்வெளி சித்தர் பாபா ஜீவ சமாதி செய்யப்பட்டார். அங்கு இருந்த பனை மரத்து புதரை அகற்றிய போது லிங்கம் இருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டனர். எதிரே ஒரு குளம் உள்ளது.

சித்தர் கடந்த சில மாதங்களாக பனைமரத்துமேடு, மேகநீர், வடமங்கலம் என்று கூறியது இந்த இடத்தைதான் என்பதை அறிந்து அனைவரும் மெய்சிலிர்த்தனர். தற்போது அந்த இடத்தில் மிக அழகான ஆலயம் கட்டி முடிக்கப்பட்டுள்ளது.

லிங்கிச் செட்டித் தெருவில் அவர் அமர்ந்திருந்த இடத்திலும் சிறு ஆலயம் கட்டியுள்ளனர். தினமும் அங்கு பூஜைகள் நடத்தப்படுகிறது. தினமும் மதியம் அன்னதானம் வழங்கப்படுகிறது. அமாவாசை, பவுர்ணமி நாட்களில் சிறப்பு அபிஷேக, ஆராதனைகள் நடத்தப்படுகிறது.

தெருவோரத்தில் மிகச் சிறிய ஆலயமாக இருப்பதால் பலரும் அதை சாதாரணமாக நினைக்கக் கூடும். ஆனால் ஸ்ரீஅருள்வெளி சித்தர் பாபாவின் அருள் அலைகள் இப்போதும் அங்கு அதிர்வுகளாக இருப்பதை உண்மையான பக்தர்கள் நிதர்சனமாக உணர முடிகிறது.

அதற்கு பல சம்பவங்கள் உதாரணமாக இருந்தாலும் ஒன்றைக் காணலாம். சுமார் 17 ஆண்டுகளுக்கு முன்பு ஒருநாள்.... லிங்கிச் செட்டித் தெருவில் கடை வைத்திருக்கும் பீர்மைதீன் என்பவர் கனவில் ஸ்ரீஅருள்வெளி சித்தர் பாபா தோன்றினார்.

“நான் எங்கேயும் போய் விடவில்லை. இங்கு தாண்டா... இருக்கிறேன். எனக்கு ஒரு சிலை செய்து வை” என்று சித்தர் கூறினார். இதைக் கேட்டதும் பீர் மைதீனுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை.

அச்சு அசல் அருள்வெளி சித்தர் பாபா போல, அவர் வழக்கமாக எப்படி அமர்ந்து இருப்பாரோ, அதே மாதிரி பஞ்சலோக சிலை ஒன்று தயார் செய்து கொடுத்தார். அந்த சிலை 2001—ம் ஆண்டு பிரதிஷ்டை செய்யப்பட்டது.

சுமார் 30 ஆண்டுகளுக்கு முன்பு வரை சித்தரை நேரில் சந்தித்து தரிசனம் செய்து அமைதி அடைந்தவர்கள், தற்போது அந்த சிலையை வழிபட்டு ஆறுதல் அடைகிறார்கள்.

இந்த சிலையின் நேர்த்தி அந்த அளவுக்கு அதிர்வலைகளைக் கொண்டுள்ளது.

இந்த சிலை தயாரிக்கப்படும் போதே ஒரு அதிசயம் நடந்தது. சென்னை ராஜகீழ்ப்பாக்கத்தைச் சேர்ந்த சிற்பி ரவிக்குமார் அந்த சிலையை செய்தார். முதலில் மாதிரிக்காக களி மண்ணில் சிலை செய்யப்பட்ட போது சித்தர் உருவத்தின் நெஞ்சில் களிமண் உள்ளே சென்று கொண்டே இருந்ததாம். சுமார் 10 கிலோ களிமண்ணை அது உள் வாங்கியதாம்.

சிற்பி ரவிக்குமார் ஒரு கட்டத்தில் பயந்து போனாராம். உலோகவார்ப்படம் நடந்த பிறகு உள்பகுதி களிமண்ணை அகற்றியபோது அந்த 10 கிலோ களிமண் மாயமாக மறைந்திருந்ததாம். அதை இன்றும் ஆச்சரியத்துடன் சொல்கிறார்கள்.

இந்த சிலை நிறுவப்பட்ட மறுநாள், ஆலயத்தின் அடியில் நீர் ஊற்று ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. தினமும் அதில் இருந்து நீர் எடுத்து சித்தர் சிலையை அபிஷேகம் செய்கிறார்கள்.

ஸ்ரீபெரும்புதூர் அருகே வடமங்கலம் ராமானுஜம் நகரில் அமைக்கப்பட்டுள்ள சித்தரின் ஜீவசமாதி ஆலயத்தில், 2005—ம் ஆண்டு பெங்களூரைச் சேர்ந்த

தொழில் அதிபர் சம்பத் செய்து கொடுத்த சிலை நிறுவப்பட்டுள்ளது.

சித்தர் ஆலய குரு பூஜைகள் மிகுந்த மகத்துவம் கொண்டது. அன்று குருவை வழிபட சிவகதி கிட்டும் என்பார்கள். அதாவது சாதாரண வழிபாட்டை விட ஜீவசமாதி வழிபாடு ஆயிரம் மடங்கு அதிகம் நன்மையைத் தரும் என்ற நம்பிக்கை உள்ளது.

அதிலும் ஸ்ரீஅருள்வெளி சித்தர் பாபாவை வழிபட்டால், ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்றும் நீங்கும் என்கிறார்கள்.

முக்திப் பாதைக்குச் செல்ல இதை விட வேறு என்ன வேண்டும்?





# 29.அம்மணி அம்மாள்

திருவண்ணாமலை

29. அம்மணி அம்மாள்

ஒரு பெண் தன்னந்தனி ஆளாக நின்று, 171 அடி உயரத்துக்கு பிரமாண்டமான ஒரு ஆலய கோபுரத்தைக் கட்டுவது என்பது சாதாரண விஷயமல்ல.

அதுவும் 18–ம் நூற்றாண்டில் ஆங்கிலேயர்கள் ஆட்சி நடந்தபோது இந்த சாதனையை அந்த பெண் நிகழ்த்தியது பிரம்மிக்கத்தக்கது.



ஸ்ரீ அம்மணி அம்மாள்

அந்தப் பெண் சாதாரணப் பெண் அல்ல. அவர் ஒரு சித்த புருஷர். சிவபெருமானால் ஆட் கொள்ளப்பட்டு உயர் சித்த நிலைப் பெற்றவர்.

பொதுவாக ஒவ்வொரு சித்தருக்கும் குரு என்று யாராவது இருப்பார்கள். ஆனால் இந்தப் பெண்ணுக்கு சிவபெருமானே குருவாக இருந்தார். குரு என்று வேறு யாரையும் தேடாமல் பிறவியிலேயே சிவன் மீது சித்தம் வைத்த அந்தப் பெண் நடத்திய அற்புதங்கள் ஏராளம்.

அந்தப் பெண்ணின் பெயர் அம்மணி அம்மாள். பஞ்ச பூதத் தலங்களில் அக்னித் தலமான திருவண்ணாமலையில் அவர் வாழ்ந்தார் என்று சொல்வதை விட அற்புதங்களை நிகழ்த்தி அருளாளராகத் திகழ்ந்தார் என்றே சொல்லலாம்.



**ஸ்ரீ அம்மணி அம்மாள் கட்டிய வடக்கு கோபுரம்.**

திருவண்ணாமலை அருணாசலேஸ்வர் ஆலயம் பல்வேறு அரசர்களால் திருப்பணி செய்யப்பட்ட சிறப்புக்குரியது. 25 ஏக்கரில் ஏராளமான சன்னதிகளுடன் பரந்து விரிந்துள்ள அந்த ஆலயத்தில் வடக்குப் பகுதி கோபுரம் மட்டும் கட்டப்படாமல் இருந்தது.

அதாவது கோபுரம் கட்ட அடித்தளம் போடப்பட்டு, பிறகு ஏனோ கட்டப்படாமல் அப்படியே மொட்டையாக நின்று போனது. எத்தனையோ பேர் முயன்றும் அந்த கோபுரத்தைக் கட்ட இயலவில்லை.

ஈசனுக்குத் தெரியும், எந்த வேலையை, யாரிடம் கொடுத்து, எப்படி முடிக்க வேண்டும் என்று. அதன்படி திருவண்ணாமலை ஆலய வடக்குக் கோபுரத்தைக்

கட்ட அம்மணி அம்மாளை ஈசன் தேர்வு செய்து அருள் புரிந்தார். மிகக் குறுகிய காலத்தில் அருணாசலேஸ்வரர் கருணையால், அம்மணி அம்மாள் அந்த கோபுரத்தைக் கட்டி முடித்தார்.

இதற்காக அவரைப் போற்றும் வகையில், அந்த வடக்குக் கோபுரத்துக்கு ‘‘அம் மணி அம்மன் கோபுரம்’’ என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் ஒரு ஆலயத்தின் கோபுரத்துக்கு, ஒரு பெண்ணின் பெயர் சூட்டப்பட் டிருப்பது, இத்தலத்தில் மட்டுமே. வேறு எந்த ஆலயத்திலும் இந்த சிறப்பு இல்லை. இன்னும் எத்தனை கோடி ஆண்டுகள் வந்தாலும், அந்த 171 அடி கோபுரம் அம்மணி அம்மாளின் பெயரைத் தாங்கி நிலைத்து நீடிக்கச் செய்யும்.

இத்தகைய சிறப்புக்குரிய அம்மணி அம்மாள், தமிழகத்தில் அவதரித்த விரல் விட்டு எண்ணக்கூடிய பெண் சித்தர்களில் தனித்துவம் பெற்றவர். திருவண்ணாமலை மாவட்டம் செங்கம் அருகில் உள்ள சென்னசமுத்திரத்தில் கோபால் பிள்ளை— ஆயி தம்பதிக்கு 1735—ம் ஆண்டு மார்கழி மாதம் அவிட்டம் நட்சத்திரத்தில் அம்மணி அம்மாள் பிறந்தார். அவரது உண்மையான பெயர் அருள்மொழி.

சாதாரண விவசாயக் குடும்பத்தில் பிறந்த அவருக்கு சிறு வயதிலேயே திருவண்ணாமலை அருணாசலேஸ்வரர் மீது அளவு கடந்த பக்தி ஏற்பட்டது. சதா இறைநினைவிலேயே இருந்த அவர் ஈசனின் அருள் பெற அனைத்து யோகக் கலைகளையும் கற்றார்.

தங்கள் மகள் எப்போதும் அருணாசலேஸ்வரர் பெயரை உச்சரித்துக் கொண்டே இருப்பதைப் பார்த்து பயந்து போன அவர் பெற்றோர் திருமணத்துக்கு ஏற்பாடு செய்தனர். சொந்த மாமன் மகனை, மணமகனாகப் பேசி முடித்தனர்.

இதை அறிந்த அம்மணி அம்மாள், ‘‘நான் இதற்காக பிறவி எடுக்கவில்லை’’ என்று கூறி, வேதனைத் தாங்காமல் சுமார் 1 மைல் தொலைவில் உள்ள கோமுட்டி குளத்துக்குள் குதித்து விட்டார். ஊரே திரண்டு வந்து குளத்துக்குள் இறங்கித் தேடினார்கள். அம்மணி அம்மாளை காண முடியவில்லை.

மூன்றாவது நாள் குளத்தில் இருந்து அம்மணி அம்மாள் வெளியில் வந்தார். ஊரே திரண்டு ஆச்சரியப்பட்டது.

குளக்கரை மண்ணை எடுத்து அவர் கொடுக்க, அது அவல் பொரியாக மாறியது. அம்மணி அம்மாள் சித்த புருஷராக மாறி இருப்பது அப்போதுதான் அவர் பெற்றோருக்கும், ஊருக்கும் தெரிய வந்தது. அன்று முதல் அவரை சென்னசமுத்திரம் மக்கள் பயபக்தியுடன் கொண்டாடினார்கள்.

சென்னசமுத்திரத்தில் உள்ள புகழ் பெற்ற தெய்வமான சென்னம்மாளே மறுபிறவி எடுத்து வந்திருப்பதாக கருதினார்கள். ஊர் மக்களின் அன்பு காரணமாக அம்மணி அம்மாள் சிறிது காலம் சென்னசமுத்திரத்தில் தங்கியிருந்து சேவை செய்து வந்தார்.

எல்லா உயிர்களிடத்திலும் அன்பைப்பொழிந்தார். சென்ன சமுத்திரத்தின் மேற்கே ஜவ்வாது மலை அடிவாரத்தில் விளாமரக் காட்டுக்குள் விலங்குகள் தண்ணீர் குடிப்பதற்காக ஒரு குளத்தை வெட்டினார். விலங்குகள் வந்து போவதற்கு வசதியாக படிகள் இல்லாமல் உருவாக்கப்பட்ட அந்த குளம் இன்னமும் உள்ளது. விலங்குகள் மீது அவர் கொண்ட இத்தகைய அன்பினால் தானோ என்னவோ, மாட்டையும் தன் சொல் ஏற்று நடக்கச் செய்யும் ஆற்றலை அவர் பெற்றிருந்தார். அருணாசலேஸ்வரருக்காக அவர் பறித்து சேகரிக்கும் பூக்களை மூட்டையாக கட்டி மாடு மீது ஏற்றி அனுப்பு வார்.



ஸ்ரீ அம்மணி அம்மாள் பெட்டி





அம்மணி அம்மாள்
பயன்படுத்திய பொருட்கள்

அந்த மாடு சென்னசமுத்திரத்தில் இருந்து சுமார் 40 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள திருவண்ணாமலை அருணாசலேஸ்வரர் ஆலயத்துக்கு வந்து பூக்கள் மூட்டையை கொடுத்துச் செல்லுமாம். ஒருநாள் அவர் தன்னை அண்ணாமலையார் அழைப்பதாக உணர்ந்தார். அன்றே குடும்பத்தாரிடம் விடை பெற்று திருவண்ணாமலை வந்து விட்டார்.

தினமும் அண்ணாமலையாருக்கு தொண்டு செய்வதும், கிரிவலம் செல்வதுமாக இருந்த அவருக்கு ஒருநாள், "வடக்குக் கோபுரத்தை கட்டும் பணியைத் தொடங்கு" என்று ஈசன் உத்தரவிட்டார். அம்மணி அம்மாள் சித்தர் சக்தி பெற்றிருந்தாலும் முதலில் அவருக்கு பிரமிப்பாகத்தான் இருந்தது.

கையில் ஒரு பைசா கூட இல்லாமல் எப்படி இந்த வேலையைத் தொடங்குவது என்று யோசித்தார். யாசகம் எடுப்பதைத் தவிர வேறு வழி இல்லை என்பதை உணர்ந்தார்.

மறுநாளே கடை கடையாக, ஊர் ஊராக, வீடு, வீடாகச் சென்று யாசகம் கேட்கத் தொடங்கினார். ‘‘அண்ணாமலையார் ஆலய வடக்குக் கோபுரம் மொட்டையாக உள்ளது. அதைக் கட்டி முடிக்க பணம் தாருங்கள்’’ என்பார்.

சிலர் கொடுத்தனர். பெரும்பாலானவர்கள் கொடுக்கவில்லை. அம்மணி அம்மாள் மிக இளம் வயதாகவும், எளிமையான கோலத்துடனும் இருந்ததால் அவர் மீது பலருக்கும் நம்பிக்கை ஏற்படவில்லை.

பொறுத்துப் பார்த்த அம்மணி அம்மாள், அடுத்த அஸ்திரத்தைக் கையில் எடுத்தார். ‘‘பணம் இல்லையம்மா’’ என்று சொல்பவர்களிடம், அவர்களது வீட்டுக்குள் எந்தெந்த இடங்களில் எவ்வளவு பணம், நகைகள் உள்ளது என்பதை மிகத் துல்லியமாக சொல்வார். வணிகர்களிடம் சென்றால், அவர்களது இரும்புப் பெட்டிக்குள் எவ்வளவு நாணயம் உள்ளது, அதில் எத்தனை வெள்ளிக்காசு இருக்கிறது. எத்தனை பித்தளைக்காசு உள்ளது என்பதை மிகத் தெளிவாக சொல்லி விடுவார்.

அம்மணி அம்மாள் தங்களிடம் இருக்கும் பணத்தை துல்லியமாக சொல்வதை அறிந்து வணிகர்களும், பொதுமக்களும் அதிர்ச்சி கலந்த ஆச்சரியம் அடைந்தனர். உடனே அம்மணி அம்மாள், அவர்கள் பயத்தைப் போக்கும் வகையில், ‘‘உங்களிடம் இருக்கும் எல்லாப் பணத்தையும் நான் கேட்கவில்லை. கோபுரம் கட்டுவதற்கு உங்களால் எவ்வளவு பணம் கொடுக்க முடியுமோ, அதைக் கொடுங்கள் போதும்’’ என்பார்.

அம்மணி அம்மாளின் ஆற்றலை அறிந்து வியந்த வணிகர்களும், பொதுமக்களும் தங்களால் இயன்றதைக் கொடுத்தனர். இப்படி சேர்ந்த பணத்தைக் கொண்டு கோபுரம் கட்டும் வேலையை அவர் மேற்கொண்டார். கோபுரம் ஒவ்வொரு நிலையாக கட்டி முடிக்கப்பட்டது.

ஒன்று முதல் ஐந்து நிலைகள் வரை கட்டி முடிக்கப்பட்டபோது, அம்மணி அம்மாளுக்கு மீண்டும் பணம் தேவைப்பட்டது. யாசகம் பெற்ற பொது மக்களிடமும், வணிகர்களிடமும் திரும்ப, திரும்ப எத்தனைத் தடவைதான் பண

உதவியும், பொருள் உதவியும் கேட்க முடியும்? அம்மணி அம்மாள் அடுத்து யாரிடம் சென்று யாசகம் கேட்பது என யோசித்தார்.

அந்தக் காலகட்டத்தில் திருவண்ணாமலை கோவில், மைசூர் மகாராஜாவின் ஆளுகைக்குட்பட்ட பகுதியாக இருந்தது. எனவே மைசூர் மகாராஜாவிடம் போய் பொன் பொருள் உதவிகள் கேட்க அவர் தீர்மானித்தார். மறுநாளே மைசூருக்கு பயணமானார். அரண்மனையை அடைந்தபோது வாசலில் நின்ற வாயிற்காப்பாளன் அவரை உள்ளே விட மறுத்தான். அம்மணி அம்மாளின் எளிமையான கோலத்தைப் பார்த்து சந்தேகம் அடைந்த வாயிற்காப்பாளன் அவரை ஒரு ஓரமாக உட்கார வைத்தான். காலையில் வந்தவர் மதியம் வரை அதே இடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தார்.

அதே சமயத்தில் அரண்மனை உள்ளே தர்பார் மண்டபத்தில் ஒரு சுவாரசியம் நடந்து கொண்டிருந்தது. லகிமா ஆற்றலால் உலகின் எந்தப் பகுதிக்கும் சென்று வந்து விடும் சக்தியைப் பயன்படுத்தி அம்மணி அம்மாள் அரண்மனைக்குள் சென்றிருந்தார். பொதுவாக சித்தர்களுக்கு ஒரே நேரத்தில் 2 அல்லது 3 இடங்களில் தோன்றும் ஆற்றல் உண்டு. இந்த ஆற்றலைப் பயன்படுத்தி அம்மணி அம்மாள் அரண்மனைக்குள் சென்றிருந்தார். அதே சமயத்தில் அரண்மனை வாசலில் வாயில் காப்பாளனால் தடுக்கப்பட்ட இடத்திலும் அம்மணி அம்மாள் இருந்தார்.

உரிய அனுமதியின்றி ஒரு பெண் தன் அருகே வந்து நிற்பதைக் கண்டதும் மகாராஜா மிகவும் ஆச்சரியமடைந்தார். “நீ யார்? எப்படி உள்ளே வந்தாய்? உனக்கு என்ன வேண்டும்?” என்று கேட்டார்.

அம்மணி அம்மாள் தன்னைப் பற்றியும், திருவண்ணாமலை ஆலயத்தில் கோபுரம் கட்டி வரும் தகவலையும் சொல்லி, அந்த கோபுரப் பணியை நிறைவு செய்ய பொன்னும், பொருளும் கேட்க வந்திருப்பதாக கூறினார்.

மேலும் வாயிற்காப்பாளன் தன்னை உள்ளே விட மறுத்ததால், ஒரே நேரத்தில் 2 இடங்களில் தோன்றும் சித்தாடல் மூலம் உள்ளே வந்ததாக தெரிவித்தார். இதைக் கேட்டதும் மைசூர் மகாராஜா நம்ப முடியாமல் பார்த்தார்.

பிறகு வாயிற்காவலனை வரச் சொல்லி உத்தரவிட்டார். மகாராஜா இருக்கும் அவை க்குள் வந்த வாயிற் காவலன், சற்று அதிர்ச்சியுடன் அம்மணி

அம்மாளைப் பார்த்து, "உங்களை நான் உள்ளே விடவில்லையே. வெளியில்தானே அமர்ந்திருந்தீர்கள். உள்ளே எப்படி வந்தீர்கள்?" என்றான்.


ஸ்ரீ அம்மணி_அம்மாள்_ஆலயம்

உடனே மகாராஜா, நீண்ட நேரமாக அந்த அம்மாளுடன் தான் பேசிக் கொண்டிருப்பதாக கூறி விட்டு, வாயிற்காவ லனுடன் விறுவிறு வென வாசல் பகுதிக்கு வந்தார்.

அங்கும் ஒரு ஓரமாக அம்மணி அம்மாள் அமர்ந்திருந்தார். அவரை அழைத்துக் கொண்டு உள்ளே சென்றபோது, சபைக்குள் இருந்த அம்மணி அம்மாள் மாயமாய் மறைந்திருந்தார். உடனே வந்திருப்பவர் சாதாரண பெண் அல்ல என்பதை மகாராஜா புரிந்து கொண்டார்.

அம்மணி அம்மாள் வடிவில் அண்ணாமலையாரே வந்து விட்டதாக கருதினார். நன்கு உபசரித்தார். பட்டுச்சேலை ஒன்று பரிசளித்தார். பிறகு தனது பட்டத்து யானை மற்றும் குதிரைகள், ஒட்டகங்களில் நிறைய பொன்னும், பொருளும் ஏற்றி கோபுரத்தைக் கட்டி முடிக்குமாறு அம்மணி அம்மாளை மகாராஜா அனுப்பி வைத்தார். வழியில் மருசவாடி கனவாய் என்ற இடத்தில் அந்த பொன், பொருளை சிலர் கொள்ளையடித்துச் செல்ல முயன்றனர்.

அம்மணி அம்மாள் கோபத்துடன் பார்க்க, அந்த கொள்ளையர்கள் கண் பார்வை பறிபோனது. அழுதுத் துடித்து மன்னிப்பு கேட்டு கண் பார்வையைத்

திரும்பப் பெற்ற அவர்கள் அம்மணி அம்மாளுடன் திருவண்ணாமலை வந்து கோ புரம் கட்டும் பணியில் ஈடுபட்டனர்.

திருவண்ணாமலை வந்த பிறகுதான் பொன் ஏற்றி வந்த ஒரு ஒட்டகத்தைக் காணவில்லை என்பது அம்மணி அம்மாளுக்குத் தெரிய வந்தது. அவர் ஞான திருஷ்டியில் பார்த்தபோது, மஷார் எனும் ஊரில் குண்டு உடையார் என்பவர் அந்த ஒட்டகத்தில் இருந்த பொன்னை எடுத்து ஒரு இடத்தில் புதைத்து வைத்திருப்பதை அறிந்தார்.

அம்மணி அம்மாள் அவரிடம் சென்று பொன் புதைக்கப்பட்டுள்ள இடத்தைத் துல்லியமாகச் சொ ல்லி அதை எடுத்து வந்து விட்டார். மைசூர் மகாராஜா கொடுத்த பொன், பொருட்களைக் கொண்டு கோபுரத்தின் 6—வது மற்றும் 7—வது நிலைகளை எளிதாகக் கட்டி முடித்தார். இன்னும் 4 நிலைகள் கட்ட வேண்டும். பணத்துக்கு என்ன செய்வது என்று தவித்தார். அண்ணாமலையாரே வழி காட்டுங்கள் என்று ஆழ்ந்த தவத்தில் அமர்ந்து விட்டார்.

அப்போது அண்ணாமலையார், அவர் கனவில் தோன்றி, "கோபுர வேலையைத் தொடங்கு. தினமும் வேலை முடிந்ததும் பணியாளர்களுக்கு விபூதியை அள்ளிக் கொடு. நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றார். அதன்படியே கோபுர வேலை நடந்தது. தினமும் மாலை பணியாட்களுக்கு சம்பளத்துக்கு பதில், அம்மணி அம்மாள் திருநீறை அள்ளிக் கொடுக்க, அது அவரவர் செய்த வேலைக்கு ஏற்ற கூலியாக மாறியது.

இப்படி கோபுரத்தின் 11 நிலைகளும் கட்டி முடிக்கப்பட்டன. இதன் மூலம் மனதில் துணிச்சலும், இறை அருளும் இருந்தால் எதையும் செய்து முடிக்க முடியும் என்பதை அம்மணி அம்மாள் தெளிவுபடுத்தினார். அவரது விடாமுயற்சியைக் கண்டு ஆங்கிலேயர்களும் வியந்து நின்றனர்.

171 அடி உயரத்துக்கு கட்டப்பட்ட அந்த கோபுரம், கிழக்கில் உள்ள ராஜகோபுரத்துக்கு இணையானதாகக் கருதப்படுகிறது. ஏனெனில் அம்மணி அம்மன் கோபுரத்திலும், ராஜகோபுரத்திலும் ஒரே மாதிரி தலா 13 கலசங்கள் இருப்பது குறிப்பிடத்தக்கது.

தெற்கில் உள்ள திருமஞ்சன கோபுரமும் (157 அடி) மேற்கில் உள்ள பே கோபுரமும் (144 அடி) வடக்கு கோபுரத்தை விட உயரம் குறைந்ததாகும்.

திருவண்ணாமலை ஆலயத்தில் ராஜகோபுரத்துக்கு அடுத்தபடியாக பெரிய கோபுரத்தைக் கட்டி சாதனை படைத்ததால் அந்த கோபுரத்தை எல்லோரும் ‘‘அம்மணி அம்மன் கோபுரம்’’ என்று அழைக்க நாளடைவில் அது நிலைத்துப் போனது. இந்தக் கோபுரம் கட்டி முடித்ததும், கோபுரத்துக்கும், ஆலயத்துக்கும் அம்மணி அம்மாள் தாமே முன்நின்று கும்பாபிஷேகத்தை நடத்தினார்.

பிறகு துறவி போல வாழ்ந்த அவர் பல்லாயிரக்கணக் கானவர்களுக்கு திருநீறு கொடுத்து நோய் தீர்த்தார். பலரை திருநீறு கொடுத்து செல்வந்தர்களாக மாற்றினார்.

அவர் நமசிவாய மந்திரத்தை உச்சரித்து திருநீறு கொடுத்தால் உடனே அற்புதம் நடந்தது. அந்த அற்புதங்கள் பேச்சு வழக்கில் மட்டுமே இருந்து பதிவாகாமல் போய் விட்டது. இதனால் அம்மணி அம்மாள் வழங்கிய திருநீறு மகிமை பெரும்பாலானவர்களுக்குத் தெரியவில்லை.

திருநீறு மூலம் அற்புதங்கள் செய்து புகழ் பெற்ற அம்மணி அம்மாள் தன் 50—வது வயதில் 1875—ம் ஆண்டு தைப்பூசம் தினத்தன்று பரிபூரணம் அடைந்தார். திருவண்ணாமலை கிரிவலப் பாதையில் 8—வது லிங்கமான ஈசான்ய லிங்கம் எதிரில் அவருக்கு ஜீவசமாதி அமைக்கப்பட்டுள்ளது. அங்கு வழங்கப்படும் விபூதிப் பிரசாதம் மிகவும் புகழ் பெற்றது. மனக் கவலைகளை விரட்டும் மகத்துவம் அந்த ஜீவ சமாதி திருநீறுக்கு உண்டு.

அம்மணி அம்மாள் ஈசனோடு கலந்து சுமார் 150 ஆண்டுகள் ஆகி விட்ட போதிலும் தன்னை நம்பும் பக்தர்களுக்கு அருவமாக வந்து தேவையான உதவிகளை செய்து கொடுக்கிறார். குறிப்பாக கிரிவலம் வரும் பக்தர்களிடம் அவர் பேசுவதாக, அறிவுரைகள் சொல்வதாக நம்பப்படுகிறது. அவர் ஜீவ சமாதியில் சிறிது நேரம் தியானம் செய்தாலே மனம் லேசாவதை உணரலாம். அவர் பிறந்த சென்ன சமுத்திரத்திலும், அவருக்கு ஆலயம் கட்டி வருகிறார்கள். அம்மணி அம்மாளுக்கு மைசூர் மகாராஜா கொடுத்த பட்டுப்புடவையை அவர் வாரிசுதாரர்கள் இன்னமும் வைத்து வழிபட்டு வருகிறா ர்கள்.

அவர் பயன்படுத்திய விபூதி மடக்கைத் தொட்டாலே நமக்கு சிலிர்க்கும். இப்படி இன்றும் அம்மணி அம்மாள் நம்மோடுதான் வாழ்ந்து கொண்டிருக்கிறார். அம்மணி அம்மாள் பற்றிய கூடுதல் தகவல்களை 90421 40747 என்ற

எண்ணில் ரமேஷ் என்பவரிடம் பெறலாம். திருவண்ணாமலைக்கு கிரிவலம் செல்பவர்கள் அம்மணி அம்மாள் ஜீவ சமாதியில் சிறிது நேரம் அமர்ந்து வந்தால் தோஷங்கள் விலகும். அம்மணி அம்மாள் கருவறை திருநீறைப் பெற்றால், நிச்சயம் உங்கள் வாழ்வில் ஒரு மாற்றத்தைக் காண்பீர்கள்.





# 30.ஸ்ரீ சங்கு சுவாமிகள்

பசுவந்தனை

## 30. ஸ்ரீ சங்கு சுவாமிகள்

சிங்கம்பட்டி மன்னர் நல்லகுத்தி பெரியசாமித்தேவர் ராஜா வயிற்று வலி தாங்காமல் துடித்தார். வலி என்றால் அப்படியொரு வலி. அரசவை மருத்துவர்கள் என்னவெல்லாமோ மருந்து கொடுத்துப் பார்த்து விட்டனர். ம்ஹூம்... வயிற்று வலி குணமாகவில்லை.



ஸ்ரீ சங்கு சுவாமிகள்

ஒருநாள் சிவனடியார் ஒருவர் சிங்கம்பட்டி மன்னரை சந்தித்தார். ‘‘மன்னா.... நீங்கள் சிதம்பரம் தில்லை அம்பல நடராஜரை சென்று வணங்கினால் வயிற்று வலி சரியாகி விடும்‘‘ என்றார்.

மறுநாளே சிங்கம்பட்டி மன்னர் சிதம்பரத்துக்கு புறப்பட்டு விட்டார். சிதம்பரம் புனிதகுளத்தில் நீராடி நடராஜரை தினமும் வழிபட்டார். ஆனால் வயிற்று வலி

தீரவில்லை. மாறாக அதிகரித்தது.

ச்சே... எவ்வளவு நாட்களுக்குத்தான் இப்படி அவஸ்தைப்படுவது — சிங்கம்பட்டி மன்னருக்கு வேதனையும் சலிப்பும் ஏற்பட்டது.

உயிரை மாய்த்துக் கொள்ளலாமா என்று நினைத்தார். நாளை வயிற்றுவலி தீராவிட்டால், சிவகங்கைக் குளத்தில் விழுந்து செத்து விடலாம் என்று அவர் மனம் தீர்மானித்தது. அன்றிரவு சிங்கம்பட்டி மன்னர் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தபோது கனவு வந்தது. கனவில் சிதம்பரம் நடராஜர் தோன்றினார்.

“மன்னா.... கவலைப்படாதே. உன் நோய் தீர ஒரு வழி உள்ளது. உன் ஊர் அருகே பசுவந்தனை என்ற பகுதியில் சங்கு சுவாமிகள் இருக்கிறார். அந்த ஞானியை வணங்கு. பிரச்சினைகள் தீர்ந்து விடும்” என்றார்.

திடுக்கிட்டு விழித்த சிங்கம்பட்டி மன்னர் பசுவந்தனை என்ற ஊர் எங்கிருக்கிறது என்று விசாரித்தார். எட்டயபுரம் மன்னரின் ஆளுகைக்குட்பட்ட ஒரு பகுதியாக அந்த ஊர் இருப்பது தெரிய வந்தது. உடனே புறப்பட்டு பசுவந்தனைக்கு வந்தார்.

படை வீரர்கள், பரிவாரங்களுடன், பல்லக்கில் வந்து இறங்கிய சிங்கம்பட்டி மன்னரை, பசுவந்தனை கிராமமே திரண்டு வந்து வரவேற்றது. மிகவும் மகிழ்ச்சி அடைந்த மன்னர், “இந்த ஊரில் சங்கு சுவாமிகள் எங்கிருக்கிறார். நான் அவரைப் பார்க்க வேண்டும்” என்றார்.

ஊர் மக்கள் குழப்பத்துடன் ஒருவரை ஒருவர் பார்த்தனர். பிறகு, “நீங்கள் சொல்வது போல ஞானி யாரும் எங்கள் ஊரில் இல்லை” என்றனர்.

அப்போது ஒருவர், “சங்கு சுவாமிகள் என்று யாரும் இல்லை. சங்கு—ன்னு ஒரு கிறுக்கன்தான் இருக்கான்” என்றார்.

மன்னருக்கு தூக்கி வாரிப் போட்டது. “அபச்சாரம்.. அபச்சாரம் அப்படி சொல்லாதீர்கள். அவர் எங்கு இருக்கிறார்?” என்று கேட்டார்.

அதற்கு கிராம மக்கள், “அந்த கோட்டி சங்கு, பழைய மண்டபம் அல்லது நந்தவனத்தில் இருப்பார்” என்றனர்.

உடனே மன்னர் நந்தவனத்து க்கு சென்றார். அங்கு சங்கு சுவாமிகள் கண்களை மூடி ஆழ்ந்த தியானத்தில் இருந்தார். சிறிது நேரம் கழித்து தியானம் கலைந்து எழுந்தார்.

மன்னரைப் பார்த்ததும், “என்ன நடராஜன் அனுப்பினானா.... நடனம் ஆடுபவன் நாடகமும் ஆடுகிறான். சரி... இந்தா, இந்த பழத்தைச் சாப்பிடு” என்று கூறி மன்னர் கொண்டு வந்திருந்த பழங்களில் ஒரு பழத்தை எடுத்துக் கொடுத்தார்.

மன்னர் அந்த பழத்தை சாப்பிட்டார். அவர் உடம்புக்குள் மின்சாரம் பாய்ந்தது போன்றிருந்தது. ஆண்டாண்டு காலமாக படாத பாடுபடுத்திய அவரது வயிற்று வலி அந்த நிமிடமே மறைந்தது . மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்த சிங்கம்பட்டி மன்னர் மிகவும் வற்புறுத்தி, சங்கு சுவாமிகளை பல்லக்கில் ஏற்றி பசுவந்தனை ஊரின் முக்கியத் தெருக்கள் வழியாக வலம் வரச் செய்தார். ஊரே சங்கு சுவாமிகளை பார்த்து ஆச்சரியப்பட்டது. ஏனெனில் அதுவரை அவ்வூர் மக்கள் சங்கு சுவாமிகளை மிகவும் சாதாரணமாக நினைத்திருந்தனர்.




அவர் “அவதாரப் புருஷர்” என்பதை பசுவந்தனை ஊர் அன்றுதான் உணர்ந்தது. இந்த ஊர் தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ளது. அதிக போக்குவரத்து வசதியில்லாத இந்த ஊருக்கு கோவில்பட்டியில் இருந்து பேருந்தில் செல்லலாம்.

பசுவந்தனை அடிக்கடி வறட்சியை சந்திக்கும் ஊர். இன்னமும் நிறைவான வசதிகளைப் பெறாத அந்த ஊர், சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்பு எப்படி இருந்திருக்கும் என்று நினைத்தால், அந்த ஊருக்கே எளிதில் செல்ல முடியாத நிலைதான் இருந்திருக்கும் என்றே தோன்றுகிறது. அதனால் தானோ, என்னவோ சித்தர்களின் வாசனை அறியாத அந்த ஊர் மக்கள், அங்கு உதித்த சங்கு சுவாமிகளின் அருமையை மனப்பூர்வமாக ஏற்காமல் இருந்தனர். தனது அவதார சிறப்பை உணரச் செய்ய சிறு வயதிலேயே பல தடவை சங்கு சுவாமிகள் சித்தாடல்களை வெளிப்படுத்தினார்.

பசுவந்தனையில் விவசாயம் செய்து வந்த சிவஞான தேசிகர் — ஞானம்மை தம்பதியரின் 2 மகன்களில் இளைய மகனாக பிறந்த சுவாமிகள், எப்போதும் தனிமையையே விரும்பினார். வானத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருப்பார். திடீரென சிரிப்பார். ஏதேதோ பேசுவார். முணுமுணுப்பார். அவரைப் பித்தர் என்று ஊரே நினைத்தது. சங்கு என்று அழைக்காமல் கோட்டி சங்கு என்று ஏளனமாக பேசினார்கள்.

சுவாமிகள் எதற்கும் கவலைப்படுவதில்லை. சிரித்துக் கொள்வார். சிலர் ஏதாவது வேலை செய்யச் சொல்வார்கள். மறுக்க மாட்டார். செய்வார்.

மற்ற நேரங்களில் மலர்களோடு பேசுவார். பறவைகளைப் பார்த்தால் சிரித்தபடி ஏதேதோ சொல்வார். பெரும்பாலும் ஊர் நடுவே உள்ள கயிலாயநாதர் கோவிலில் சிவ சிந்தனையில் ஆழ்ந்த தியானத்தில் மூழ்கி விடுவார்.

இப்படியே இவனை விட்டு விடக் கூடாது என்று நினைத்த சுவாமிகளின் தந்தை சிவஞானதேசிகர், ஒருநாள் அவரை அழைத்து வயலை ஏர்பூட்டி உழ சொன்னார். உழுது கொண்டிருந்த சுவாமிகள், கடும் வெயிலில் எருமை மாடுகள் திணறுவதைப் பார்த்து மனம் இரங்கினார். வேட்டியை அவிழ்த்து, தண்ணீரில் நனைத்து மாடுகள் மீது போர்த்தி விட்டார். இதைப் பார்த்த அவரது தந்தை ஓடி வந்து சுவாமிகளை அடித்தார்.

உடனே சுவாமிகள், ''அடிக்காதீர்கள், உங்கள் கைதான் வலிக்கும்'' என்றார். அது போலவே சிவஞானதேசிகர் வலியால் துடித்தார். அதைப் பார்த்த சுவாமிகள், ''கவலைப்படாதீர்கள். உங்கள் வலி நீங்கி விடும்'' என்றார். அடுத்த நிமிடமே சிவஞான தேசிகர் கை வலி நீங்கியது.

சிவஞான தேசிகருக்கு சங்குவைப் பார்த்து பயம் ஏற்பட்டது.

மற்றொரு நாள், சங்குவின் அண்ணன் அவரை அழைத்து, ''தம்பி ஏற்றம் இறைத்து நம் வயலுக்கு தண்ணீர் பாய்ச்சி விட்டு வா'' என்றார். சங்குவும் சரி என்று சொல்லி விட்டு வயலுக்குச் சென்றார்.

ஏற்றம் இறைத்தார். பக்கத்து வயல்காரர், அந்தத் தண்ணீரை யெல்லாம் தம் வயலுக்குத் திருப்பிக் கொண்டார். சில மணி நேரம் கழித்து அண்ணன் வந்தார். சங்கு இறைத்து ஊற்றும் தண்ணீர், பக்கத்து வயலில் நிரம்பி இருப்பதைப் பார்த்து ஆத்திரமடைந்தார்.

தம்பியிடம் இதுபற்றி கேட்க, அவர், ''அதுவும் நம் வயல்தானே'' என்றார். கோபமடைந்த அவர் சங்குவைப் போட்டு அடித்தார்.

''அண்ணா... அடிக்காதீங்க. உங்க கைதான் வலிக்கும்'' என்றார் சங்கு. அவர் சொன்ன மறுவினாடி அண்ணன் கைவலியால் துடித்தார். அதைப் பார்த்து வருந்திய சங்கு, ''அண்ணா, கவலைப்படாதீர்கள். உங்கள் கை வலி சரியாகி விடும்'' என்றார்.

என்ன ஆச்சரியம். அண்ணனின் கை வலி மறைந்து போனது. இந்த சம்பவத்துக்குப் பிறகு சங்குவை அவர் குடும்பத்தினர் சற்று மரியாதையுடன் நடத்தினார்கள். இந்த நிலையில் ஒருநாள் வீட்டில் அண்ணனும், தம்பி சங்குவும் சாப்பிட உட்கார்ந்தனர். இருவரது இலையிலும் உணவு பரிமாறப்பட்டது.

சாப்பிடும் முன்பு சங்கு சுவாமிகள் கண்ணை மூடி, சிவ சிந்தனையில் தியானித்து விட்டு, பிறகே சாப்பிடத் தொடங்குவது வழக்கம். அன்றும் கண்ணை மூடித் தியானித்தார்.

அப்போது சங்குவின் இலையில் வைக்கப்பட்ட எல்லா உணவையும் அண்ணன் எடுத்துக் கொண்டார். தம்பி ஏமாந்து விடுவான் என்று நினைத்து ஏளனமாக சுவாமிகளைப் பார்த்து விட்டு மீண்டும் இலையில் பார்த்தபோது, மறுபடியும் உணவு இருந்தது.

அவர் எடுக்க, எடுக்க உணவு வந்து கொண்டே இருந்தது. அண்ணன் பயந்து போனார். ஆனாலும் சங்கு சுவாமிகளின் மகிமையை உணராமலே இருந்தனர்.

மேலும் சங்குவை ஏதோ துஷ்ட ஆவி பிடித்து விட்டதாக நினைத்தனர். ஒரு மந்திரவாதியிடம் அழைத்துச் சென்றனர்.

அந்த மந்திரவாதியை பார்த்ததும், ‘‘விதி முடிந்தவனா... என் விதியை மாற்றப் போகிறான்’’ என்றார். அருகில் இருந்த யாருக்கும் அது அப்போது புரியவில்லை.

மந்திரவாதியோ, எலுமிச்சம் பழம் எடுப்பதற்காக அருகில் இருந்த பூக்கூடைக்குள் கையை விட உள்ளே இருந்த கருநாகம் அவரைத் தீண்டியது. அலறியபடி சரிந்த மந்திர வாதி அந்த இடத்திலேயே உயிரிழந்தார். பூக்கூடையில் இருந்து வெளியில் வந்த கரு நாகம், சங்கு சுவாமிகள் முன் வந்து பணிந்து சென்றது. இந்த சம்பவத்துக்கு பிறகு சங்குவிடம் ஏதோ சக்தி இருப்பதை பசுவந்தனை மக்கள் நம்பினார்கள். அதன்பிறகு சங்கு சுவாமிகளை யாரும் துன்புறுத்த வில்லை. இதனால் அவருக்குத் தனிமை கிடைத்தது. கயிலாயநாதர் ஆலயத்துக்குள் மணிக்கணக்கில் அமர்ந்து தியானம் செய்தார்.

சில சமயம் நள்ளிரவு வரை அவரது தியானம் நீடிக்கும். தியானம் முடிந்ததும் கோவில் பிரகாரத்தை வலம் வருவார். ஒருநாள் அவர் நள்ளிரவில் பிரகாரத்தை வலம் வந்தபோது, அவருக்கு மிகப்பெரிய பாம்பு ஒன்று நவரத்தின கல்லை

வாயில் வைத்து ஒளி வீசியபடி வழிகாட்டிச் சென்றதை பலரும் பார்த்து ஆச்சரியப்பட்டனர். அன்று முதல் அவரை சங்கு என்று அழைக்காமல் சங்கு சுவாமிகள் என்று அழைக்கத் தொடங்கினார்கள்.

இதை அறியாத எட்டயபுரம் மகாராஜா ராஜ ஜெகவீர முத்துக்குமர எட்டப்ப நாயக்கர், பசுவந்தனை கயிலாயநாதரை வழிபட வந்தார். எல்லோரும் அவரை வணங்கி வரவேற்றனர்.

ஆனால் நந்தவனத்தில் இருந்த சங்கு சுவாமிகள் மட்டும் அவரைக் கண்டு கொள்ளாமல் பூ பறித்துக் கொண்டிருந்தார். அவர் தன்னை வணங்காததால், "யார் அவன்?" என்றார் மகாராஜா.

எல்லோரும், அவர் ஒரு பித்தன் என்றனர். உடனே ராஜா, "நீ பித்தனா அல்லது எத்தனா?" என்று கேட்டார்.

அதற்கு சங்கு சுவாமிகள், "நான் அத்தன்" என்றார். ராஜாவுக்கு அவமானமாகி விட்டது.

அரண்மனை திரும்பியதும், "அத்தன்" என்றால் என்ன அர்த்தம் என்று ராஜா விசாரித்தார். அத்தன் என்றால் தந்தை, இறைவன் என்று பொருள்படும் எனச் சொல்ல அரசருக்கு சங்கு சுவாமிகள் மீது மரியாதை ஏற்பட்டது.

அவரை அழைத்து வருமாறு பல்லக்கை அனுப்பினார். சங்கு சுவாமிகளை சந்தித்த சேவகர்கள், ராஜா தங்களை அழைத்து வருமாறு கூறியுள்ளார் என்றனர். சங்கு சுவாமிகளும் சிரித்தபடி பல்லக்கினுள் ஏறி அமர்ந்தார். எட்டயபுரம் அரண்மனை வந்ததும் பல்லக்கு திரைச் சீலையை விலக்கிப் பார்க்க உள்ளே, சங்கு சுவாமிகளை காணவில்லை. மாயமாக மறைந்திருந்தார்.

தன் தவறை உணர்ந்த எட்டயபுரம் மகாராஜா, பிறகு தானே நேரில் சென்று ஆசி பெற்றார். இந்த சம்பவத்துக்குப் பிறகே, சிங்கம்பட்டி மன்னரும் சங்கு சுவாமிகளிடம் வந்து ஆசி பெற்று வயிற்று வலியை தீர்த்தார்.



கோவிலின் கருவறை

இதனால் சங்கு சுவாமிகள் புகழ் பரவியது. அவரைத் தேடி நிறைய பேர் வந்தனர். அவர்கள் அனைவரிடமும் ‘‘மனம் போல் வாழ்வு’’ என்று சொல்லி சுவாமிகள் ஆசீர்வதித்தார். நாளடைவில் ‘‘மனம் போல் வாழ்வு’’ என்பது சங்கு சுவாமிகளின் தாரக மந்திரமாக மாறியது.

ஒரு சமயம் பசுவந்தனையிலும் சுற்றுப்புற ஊர்களிலும் மழை பொய்த்து கடும் வறட்சி ஏற்பட்டது. மனிதர்கள் மட்டுமின்றி ஆடு, மாடுகளும் குடிக்கத் தண்ணீரின்றி அவதிப்பட்டன. அந்த சமயத்தில் சங்கு சுவாமிகள் செய்த சேவை மகத்தானது. அவர் எந்த ஊரில், எந்த இடத்தில் பூமியைத் தொடுகிறாரோ, அந்த இடங்களில் எல்லாம் தண்ணீர் பீறிட்டு வந்தது. அந்த இடங்களில் தோண்டப்பட்டு பெரியகுளம் உருவாக்கப்பட்டன. அவை ‘‘சங்குச் சுவாமி ஊருணிகள்’’ என்று அழைக்கப்பட்டன. இப்போதும் பசுவந்தனை சுற்றுப் பகுதிகளில் 7 சங்கு சுவாமி ஊருணிகள் உள்ளன.

இது மட்டுமல்ல நத்தக்காடு எனும் ஊரில் ஊமைக் குழந்தையை பேச வைத்தது, தூத்துக்குடி அருகே வீரபாண்டியபுரம் பகுதியில் வசித்த காமாட்சி எனும் சிற்றரசருக்கு சோம யாகம் நடத்தி குழந்தைப் பேறு அருளியது என்று ஏராளமான அற்புதங்கள் செய்தார். அவருக்கு நத்தக்காடு சங்கு சுவாமிகள், கோவிந்தபுரம் சங்கு சுவாமிகள், மாவில்பட்டி சங்கு சுவாமிகள், சிங்கிலிப்பட்டி சங்கு சுவாமிகள் என்று 4 சீடர்கள் இருந்தனர். அவர்கள் மூலமாகவும் சங்குச் சுவாமிகள் ஏராளமான அற்புதங்களை நிகழ்த்தினார்.

ஒரு நாள் தமது சீடர்களிடம் ஆவணி மாதம் அசுபதி நட்சத்திரத் தினத்தன்று தனது உடலிலிருந்து உயிரைப்பிரிக்க போவதாக கூறினார். சொன்னபடியே

அன்று அவர் பரிபூரணம் அடைந்தார். வித்தியாசமான சின்முத்திரை காட்டி, பத்மாசனத்தில் அமர்ந்து அவர் தன் மூச்சை நிறுத்தினார். பசுவந்தனையில் அவர் மிகவும் விரும்பி வழிபட்ட கயிலாயநாதர் ஆலயம் அருகில் சங்கு சுவாமிகளுக்கு ஜீவசமாதி அமைக்கப்பட்டுள்ளது.

1785—ல் தோன்றி 1870ல் அவர் பரிபூரணம் ஆகி இருப்பதாக கணிக்கப்பட்டுள்ளது. அதிர்ஷ்டவசமாக அவர் உருவச் சிலை பசுவந்தனை கீழ ரத வீதியில் உள்ள முருகன் கோவிலில் உள்ளது.

பசுவந்தனையில் உள்ள அவரது ஜீவ சமாதி அழகான மண்டப அமைப்புடன் கட்டப்பட்டுள்ளது. ஆவணி மாதம் அங்கு குரு பூஜை நடத்தப்படுகிறது. நல்ல எண்ணங்கள் இருந்தால்தான் மனம்அமைதியாக இருக்கும். வாழ்விலும் மேன்மை உண்டாகும். இதை உணர்த்தவே தம் வாழ் நாள் முழுவதும் ‘‘மனம் போல் வாழ்வு’’ என்று சங்கு சுவாமிகள் பக்தர்களிடம் கூறினார்.

அவரது ஜீவ சமாதியில் சிறிது நேரம் தியானம் செய்தாலே மனம் போல வாழ்வு என்ற அறிவுரை ஆத்மார்த்தமாக மனதில் பதிகிறது.





# 31.ஸ்ரீ முத்து வடுக நாதர்

சிங்கம்புணரி

31. ஸ்ரீ முத்து வடுக நாதர்

திருச்செந்தூரில் சூரனை சம்ஹாரம் செய்வதற்காக, முருகப்பெருமான் சிக்கலில் தன் அன்னையிடம் சக்திவேல் வாங்கியதாக கந்தபுராணத்தில் கூறப்பட்டுள்ளது. இந்த நிகழ்வு ஒவ்வொரு ஆண்டும் சிக்கலில் நடத்தப்படுகிறது.

அந்த சமயத்தில் அன்னையிடம் சக்திவேல் வாங்கும் முருகனுக்கு வியர்த்துக் கொட்டும். இந்த அதிசயம் இன்றும் நடக்கிறது.



முத்து வடுக நாதர்

இதே போன்று அதிசயம் ஒரு சித்தரின் ஜீவ சமாதி ஆலயத்திலும் அடிக்கடி நடக்கிறது. அந்த சித்தரின் உருவச் சிலையில் இருந்து வியர்வைத் துளிகள் வழிந்தோடுகிறது. தமிழ்நாட்டில் எந்த ஒரு சித்தர் ஆலயத்திலும் இத்தகைய ஆச்சரியத்தை காண இயலாது.

அந்த சித்தர், ஜீவ சமாதி ஆகி 185 ஆண்டுகள் ஆகி விட்டது. ஆனாலும் இன்றும் அவர் தன் சிலையில் வியர்வையை வெளிப்படுத்தச் செய்து, ‘‘நான் இங்குதான் இருக்கிறேன்’’ என்று சொல்லாமல் சொல்கிறார். இதன் மூலம் தனது அருள் அலை இந்த மண்ணில் தொடர்ந்து நீடித்து வருவதை

உறுதிபடுத்துகிறார். இதனால் அந்த சித்தரின் ஜீவ சமாதிக்கு வரும் மக்கள் கூட்டம் நாளுக்கு நாள் அதிகரித்தபடி உள்ளது.

தன்னை நம்பி வந்து சரண் அடைபவர்களை சித்தர் கை விட்டதே இல்லை. அளவிட முடியாத அளவுக்கு சித்தாடல்கள் செய்த அந்த மகானின் பெயர், ஸ்ரீமுத்து வடுகநாதர்.

சிங்கம்புணரியில் இவரது ஜீவசமாதி அமைந்துள்ளது. சிவகங்கை மாவட்டத்தில் இந்த ஊர் இருக்கிறது.

300 ஆண்டுகளுக்கு முன்பு ராமநாதபுரம் சமஸ்தானத்துக்கு மன்னராக இருந்தவர் முத்து விஜயரகுநாத சேதுபதி. இவரது மகளுக்குப் பிறந்த பூவலத் தேவன் – குமாராயி தம்பதிக்கு மகனாக 1737–ம் ஆண்டு ஸ்ரீமுத்து வடுகநாதர் பிறந்தார். 22 ஊர்கள் கொண்ட “செம்பிநாடு” எனும் பகுதிக்கு பூவலத் தேவன் தலைவராக இருந்தார்.

1742–ம் ஆண்டு பூவலத்தேவன் திடீரென மரணம் அடைய, அவரது வாரிசான ஸ்ரீமுத்து வடுகநாதரை கொன்று விட்டால், ஆட்சி உரிமையை கைப்பற்றி விடலாம் என்று அவரது பங்காளிகள் திட்டமிட்டனர்.

இந்த சதி பற்றி தெரிய வந்ததும், குமாராயி தன் மகன் முத்து வடுகநாதருடன் அந்த ஊரில் இருந்து தப்பி வெளியேறினார். மதுரை மாவட்டம் அழகர்மலை அருகில் உள்ள பாலமேடு எனும் ஊருக்கு அவர்கள் வந்து சேர்ந்தனர். அந்த ஊரைச் சேர்ந்த ஜெகநாத பிள்ளை இரக்கம் கொண்டு, அவர்களை தம் பண்ணையில் வேலைக்கு சேர்த்துக் கொண்டார். சிறுவனாக இருந்த முத்து வடுகநாதருக்கு ஆடு, மாடு மேய்க்கும் வேலை கொடுக்கப் பட்டது.

துறுதுறுவென்றிருந்த அவரது சொல்லுக்கு, வாயில்லா ஜீவன்களான ஆடு, மாடுகள் கட்டுப்பட்டன. அவரால் பராமரிக்கப்பட்ட ஆடு, மாடுகள் மற்றவர்களின் தோட்டம், வயல்களில் இறங்கி பயிர்களை மேய்வதில்லை. முத்துவடுகநாதர் எந்த இடத்தில் மேய வேண்டும் என்று உத்தரவிடுகிறாரோ, அங்கு மட்டுமே மேய்ந்தன.

இதற்கு காரணம் – பிறக்கும் போதே ஸ்ரீமுத்து வடுகநாதர் சித்தபுருஷராக அவதாரம் எடுத்திருந்ததுதான். ஆனால் அது யாருக்கும் தெரியாது. அவரை

ஈன்றெடுத்த தாய்க்கே தெரியாது. அத்தகைய அவர் உத்தரவுக்கு ஏற்ப மாடுகள் கட்டுக் கோப்புடன் இருந்ததைக் கண்டு ஊரே ஆச்சரியப்பட்டது.

இதனால் முத்து வடுகநாதரை, பணியாளர்களை மேற்பார்வை செய்யும் அந்தஸ்துக்கு ஜெகநாத பிள்ளை உயர்த்தினார். அவர் ஒரு சித்தப்புருஷர் என்பதை யாருமே உணராமல் இருந்தனர். ஒருநாள் முத்து வடுகநாதர் பணியாட்களுடன் வயலுக்கு சென்றார். அன்று உழவுப் பணி நடந்தது. உழவு நடக்கும் போது 2 எருமை மாடுகள் சகதியில் படுத்து விட்டன. என்னவெல்லாமோ செய்து பார்த்தும் அவற்றை எழுப்ப முடியவில்லை. தூரத்தில் இருந்து இதைப் பார்த்துக் கொண்டிருந்த முத்து வடுகநாதர் அங்கு வந்தார்.

மாடுகள் முன்பு நின்று கைக்கூப்பி வணங்கி ஒரு வெண்பா பாடினார்.

‘‘எருமை இரண்டு விழுந்ததே படுத்துராமல்

உரிமையனார் மேழிதொட்டு உழாமல்

அவிழ்க்கும்வரை வரச்செய் அம்மே

இவ்வூர் காத்து நிற்கும் காமாட்சி அம்மே’’

—இவ்வாறு பாடி முடித்ததும் மாடுகள் புத்துணர்ச்சியுடன் எழுந்தன. தானாக உழத் தொடங்கின. ஏர்க்கலப்பையை யாரும் பிடிக்காமலே அவை வயலை உழுது முடித்தன. இந்த அதிசயத்தைக் கண்டு விவசாயிகள் மிரண்டு போனார்கள்.




இதுபற்றி அறிந்த ஜெகநாதபிள்ளை அடுத்த நாள் திடீரென வயலுக்கு வந்தார். விவசாய வேலைகள் மிகக் கச்சிதமாக நடந்து கொண்டிருந்தன. ஒரு மரத்தடியில் முத்து வடுகநாதர் தியானத்தில் ஆழ்ந்திருக்க அவர் தலைக்கு மேல் ஒரு பெரிய நாகம் ஒன்று படம் எடுத்து குடை பிடிப்பதுப் போன்று நின்று கொண்டிருப்பதைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தார்.

இந்த சிறுவன் சாதாரண மனிதப் பிறவி அல்ல, நிச்சயம் இவர் ஒரு மகானாகத்தான் இருக்க வேண்டும் என்பதை உணர்ந்தார். அன்று முதல் அவர் முத்து வடுகநாதரை ஆடு, மாடு மேய்க்கவோ அல்லது வயல் வேலைகளை செய்யச் சொல்லவோ இல்லை. தம் சொந்த மகனைப் போல நடத்தத் தொடங்கினார்.

முத்து வடுகநாதர் சிறந்த கல்வி பெற வேண்டும் என்ற ஆசையில், அவரை அங்குள்ள பள்ளியில் ஜெகநாத பிள்ளை சேர்த்து விட்டார். அந்த பள்ளியில் சாமிநாத செட்டியார் என்பவர் ஆசிரியராக இருந்தார். அவர் என்ன பாடம் நடத்தினாலும், முத்து வடுகநாதர் அது பற்றி அறிந்திருந்தார்.

ஆசிரியருக்கு தெரியாத தகவல்களை எல்லாம் கூறினார். சாமிநாத செட்டியாருக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது. ஒரு நாள் அவர், உன்னால் இந்த ஊர் விநாயகர் பற்றி ஒரு வெண்பா பாட முடியுமா என்றார்.

அடுத்த வினாடி முத்து வடுகநாதர் பாடினார்...

“பள்ளிக்குள்ளே யான் பயில்வதேன்னே நீயடியேன்

உள்ளத்துள்ளே வாழ்ந்துரும்போது—பிள்ளையாரே

சாமிநாத செட்டி என்பாநுண் முன்னிலேனக்

காசா லெனல் பழிப்பேயாம்.”

—— இவ்வாறு அவர் பாடி முடித்ததும் ஆசிரியர் சாமிநாத செட்டியாருக்கு பயம் வந்து விட்டது.

இந்த சிறுவனுக்கு எல்லாம் தெரிகிறது. இவனுக்கு என்னால் பாடம் நடத்த இயலாது என்று கூறி ஜெகநாத பிள்ளையிடம் ஒப்படைத்து விட்டுச் சென்று விட்டார்.

பள்ளிக்கும் செல்லாமல், வயல் வேலைகளுக்கும் செல்லாமல் முத்து வடுகநாதர் வளர்ந்து வந்தார். அச்சமயத்தில் சொக்கநாத பிள்ளைக்கு முதுகில் ராஜபிளவை எனும் நோய் ஏற்பட்டது. வைத்தியர் கொடுத்த மருந்து பலன் அளிக்கவில்லை.

அதைக் கண்ட முத்து வடுகநாதர் தவறான சிகிச்சை அளிக்கப்பட்டுள்ளதாக கூறி வைத்தியரை விமர்சித்தார். இதனால் கோபம் அடைந்த வைத்தியர், உன்னால் இந்த நோயை குணப்படுத்த முடியுமா என்று சவால் விட்டார். உடனே முத்து வடுகநாதர், உடைக்கவா, துடைக்கவா என்று கேட்டபடி ஜெகநாத பிள்ளையின் முதுகைத் தொட்டார்.

ராஜபிளவை நோய் எப்படி மறைந்தது என்பது தெரியாமல் மாயமானது. வைத்தியர் உள்பட அனைவரும் ஆச்சரியத்தில் உறைந்தனர். இந்த தகவல் பாலமேடு சுற்று வட்டார பகுதிகளில் பரவியது. இளம் வயதில் சித்தர் ஒருவர் இருப்பதாக கூறி தினமும் நிறைய பேர் கூட்டம், கூட்டமாக வரத் தொடங்கினார்கள்.

அந்த கூட்டத்தில் இருந்து முத்து வடுகநாதரை எப்படி காப்பாற்றுவது என்று புரியாமல் ஜெகநாத பிள்ளை திணறினார். இனியும் அவருக்கு சிரமம் கொடுக்கக் கூடாது என்று முடிவு செய்த சித்தர் பாலமேடு ஊரில் இருந்து வெளியேறினார்.

ஆத்மஞானத்தை முழுமையாகப் பெற அழகர் மலைக்கு சென்றார். அங்கு பாலைய சுவாமிகளை சந்தித்து அவரை தனது குருவாக ஏற்று உபதேசம் பெற்றார். பிறகு மதுரை – மேலூர் சாலையில் உள்ள பட்டூர் எனும் ஆலம்பட்டிக்கு சென்றார். அங்குள்ள ஒரு ஆலமரத்தடியில் தவம் இருந்தார்.

அந்த ஊர் மக்கள் கல்வி அறிவு பெறாமல் மிகவும் பின் தங்கி இருப்பதைப் பார்த்த அவர், ஒரு பள்ளியைத் தொடங்கினார். அதன் மூலம் நிறைய பேர் படிப்பாளிகளாக மாறினார்கள். இதனால் சித்தரை பலரும் “பட்டூர் வாத்தியார்” என்று அழைத்தனர்.

அந்தக் கால கட்டத்தில் பட்டூர் அருகில் உள்ள சிங்கம் புணரியில் “பீதாம்பரர்கள்” என்ற கொள்ளையர்கள் அடிக்கடி வந்து ஊரையே கொள்ளையடித்து விட்டுச் செல்வதை வழக்கத்தில் வைத்திருந்தனர். எதிர்ப்பவர்களை அந்த கொள்ளையர்கள் தங்களது மந்திர சக்தியால் முடக்கிப் போட்டு விடும் சக்தியைப் பெற்றிருந்தனர். பீதாம்பர கொள்ளையர்களிடம் இருந்து தங்களைக் காப்பாற்றுமாறு சிங்கம்புணரி மக்கள் சென்று சித்தரை அழைத்தனர். அதை ஏற்று பட்டூரில் இருந்து சிங்கம்புணரிக்கு சித்தர் இடம் பெயர்ந்தார்.

ஊர் மக்கள் சொன்னது போலவே, ஒருநாள் சிங்கம்புணரிக்குள் பீதாம்பர கொள்ளையர்கள் நுழைந்தனர். சித்தர் அவர்களை எதிர்கொண்டார். பீதாம்பரர்கள் மிக ஏளனமாக என்னென்ன வித்தைகள் உண்டோ அத்தனையையும் பயன்படுத்தினார்கள். ஆனால் சித்தர் முன்பு எந்த வித்தையும் பலிக்கவில்லை.

பதிலுக்கு முத்து வடுகநாதர் தான் உடுத்தி இருந்த வேட்டியின் ஒரு ஓரத்தில் கிழித்து வீசினார். அது மிகப்பெரிய நல்ல பாம்பாக மாறி, படம் எடுத்தபடி பீதாம்பர கொள்ளையர்களை விரட்டியது. அதன் பிறகு கொள்ளையர்கள் அந்த ஊர் பக்கமே வரவில்லை.

இதனால் மகிழ்ச்சி அடைந்த சிங்கம்புணரி மக்கள், சித்தரை தங்கள் ஊரிலேயே தங்கும்படி கூறி இடம் வசதி செய்து கொடுத்தனர். சித்தரும் அதை ஏற்றுக் கொண்டார்.

முத்து வடுகநாதர் மிகச் சிறந்த வராகி பக்தர். தனது வீட்டில் அவர் வராகி அம்மனை பிரதிஷ்டை செய்து வழிபட்டு வந்தார். ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் அவர் புலால் உணவு படைத்து, ஆடையின்றி அமர்ந்து வராகியை வழிபட்டார். இதன் காரணமாக கூப்பிட்ட குரலுக்கு வராகி அம்மன் ஓடோடி வந்து உதவி செய்யும் அளவுக்கு சித்தர் ஆற்றல் பெற்றிருந்தார்.

இது சிங்கம்புணரியில் உள்ள சிலருக்கு பிடிக்கவில்லை. சித்தரை கொல்ல முடிவு செய்தனர். ஒருநாள் குடிசை வீட்டில் இருந்து வெளியில் வந்த சித்தரை பிடித்து கை, கால்களை கயிற்றால் கட்டி தூக்கிச் சென்றனர். ஒரு குழிக்குள் போட்டு மிளகாய் தூளை கொட்டினார்கள். முள் செடிகளை வெட்டி போட்டனர். பிறகு குழி நிறைய மண் போட்டு மூடி விட்டு சென்று விட்டனர். சித்தர் கதை இன்றோடு முடிந்தது என்று அவர்கள் மகிழ்ச்சியுடன் பேசிக் கொண்டனர்.

அன்றிரவு... ஊர் பெரியவர்கள் சிலர் கனவில் அந்த ஊர் காவல் தெய்வமான சேவுக பெருமாள் அய்யனார் வெள்ளைக்குதிரையில் வந்து தோன்றினார்.

"டேய்.... தப்பு செய்து விட்டீர்கள். இந்த ஊரையும், மக்களையும் காப்பாற்றத்தானே முத்து வடுகநாதர் பாடுபட்டு வருகிறார். அவரைப் போய், குழியில் தள்ளிப் புதைத்து விட்டீர்களே... வராகி தாய் அவரைக் காப்பாற்றி விட்டாள். நீங்கள் எல்லோரும், விடிந்ததும் சித்தரிடம் சென்று அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேளுங்கள். அவர்தான் இந்த ஊரின் காவல் தெய்வம்" என்று அய்யனார் கூறி விட்டு மறைந்து விட்டார்.

மறுநாள் காலை விடிந்ததும் பெரிசுகள் எல்லாம் தங்கள் கனவில் அய்யனார் வந்து உத்தரவிட்டதை பரபரப்பாக பேசினார்கள். சித்தர் வசித்த குடிசைக்கு திரண்டு சென்றனர். அங்கு சித்தர் சிரித்தபடி உட்கார்ந்திருந்தார்.

அவர் உடம்பில் சிறு காயம் கூட இல்லை. எதிரிகள் விக்கித்து விறைத்துப் போனார்கள். அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டனர். இந்த சம்பவத்துக்குப் பிறகு சிங்கம்புணரி ஊரே சித்தரை தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடியது. சித்தரும் அந்த ஊர் மக்களின் அனைத்துக் குறைகளையும் தீர்த்தார். அவர் கைப்பட திருநீறு பூசினால், நோய்கள் பஞ்சாய் பறந்தன.



சந்தன காப்பு அலங்காரத்தில் முத்து வடுகநாதர்.

தம்மைக் காப்பாற்றும் சித்தர் பெருமானுக்கு திருமணம் செய்து வைக்க சிங்கம்புணரி மக்கள் ஆசைப்பட்டனர். சித்தரும் அதை ஏற்றுக் கொண்டார். தூரத்து உறவுப் பெண்ணை அவர் திருமணம் செய்து கொண்டார். அவர்களுக்கு பழனியாண்டி, விஜயன், சேவுகபெருமாள் எனும் 3 மகன்களும், குமாராயி எனும் மகளும் பிறந்தனர். திருமணத்துக்குப் பிறகும் அவரது சித்தாடல்கள் குறையவில்லை.

அவரைத் தரிசிக்க வரும் மக்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்தது. தன்னை நம்பி வந்தவர்களின் துன்பங்களை அவர் தீர்த்தார்.

ஒருநாள் அவர் தான் 1833—ம் ஆண்டு சமாதியாகப் போகும் நாளை பக்தர்களிடம் அறிவித்தார். சிங்கம்புணரியில் இருந்து பிரான்மலை செல்லும் சாலையில் சிறிது தூரத்தில் பாலாற்றின் தென்கரையில் ஒரு இடத்தில் சமாதியும் தோண்டச் செய்தார்.

சிங்கம்புணரி ஊருக்கு வடக்கே அந்த காலத்தில் கற்றாழை செடிகள் நிறைந்திருந்தது. ஒருநாள் அதற்குள் அமர்ந்து சித்தர் தியானத்தில் ஈடுபட்டிருந்தார். அப்போது ஒரு சிற்பி அவரை தரிசிக்க வந்திருந்தார்.

அவரிடம், தாம் யோக நிலையில் இருப்பது போன்று கற்சிலை ஒன்றை வடிக்க உத்தரவிட்டார். அந்த சிற்பியும் சித்தர் யோகத்தில் இருப்பது போல தத்ரூபமாக சிலை செய்து எடுத்து வந்தார்.

அந்த கற்சிலைக்கு ஸ்ரீமுத்து வடுகநாத சித்தரே பூஜைகள் செய்தார். தனது உடலை, அச்சிலை மீது பட செய்து தியானத்தில் ஆழ்ந்தார். இதன் காரணமாக தனது அருள் சக்திகள் அனைத்தையும் முத்து வடுகநாதர் அந்த சிலைக்கு மாற்றினார்.

இதுபற்றி பக்தர்கள் கேட்டபோது, ‘‘தான் ஜீவசமாதி ஆன பிறகு, தமது சிலையால் மக்கள்பலன் அடைய வேண்டும்’’ என்றார்.

அவர் கூறியபடி 1883–ம் ஆண்டு ஆடி மாதம் ரோகிணி நட்சத்திரத்தில் ஜீவசமாதியனார். அவர் ஒடுக்கம் பெற்ற இடத்தின் மீது அவரது சிலையை பிரதிஷ்டை செய்தனர். சித்தர் இன்று உயிரோடு இருந்திருந்தால் என்னென்ன செய்திருப்பாரோ அத்தனையையும் அவர் சொரூபம் செய்கிறது.

நீங்களும் நம்பிக்கையோடு நேரில் சென்றால், அந்த மகானின் மகத்துவத்தை அனுபவப்பூர்வமாக உணரலாம்.





# 32.ஸ்ரீ மகேந்திரகிரி சுவாமிகள்

**மதகுபட்டி, சிவகங்கை.**

## 32. ஸ்ரீ மகேந்திரகிரி சுவாமிகள்

சித்தர்கள் சிரஞ்சீவியாக வாழ்பவர்கள். அவர்களுக்கு அழிவு என்பதே இல்லை. அவர்கள் பரிபூரணம் அடைந்தாலும், அவர்களது ஜீவசமாதி அருள் அலைகளால் நிரம்பி வழியும்.

அதனால்தான் ஜீவசமாதிகளில் அதிர்வுகளை உணர முடியும். அந்த அதிர்வலைகள் நம் ஆத்மாவை சுத்தப்படுத்தி, மேம்படுத்திக்கொள்ள உதவும். குறிப்பாக மன அமைதி தர வல்லது.

சமீபத்தில் ஒடுக்கம் பெற்ற சித்தர்களின் ஜீவ சமாதிகளில் இந்த அதிர்வலைகள் சற்று அதிகமாக இருக்கும். வெகு சிலருக்கே அதை நுகரும் புண்ணியமும், பாக்கியமும் கிடைக்கும்.



ஸ்ரீ மகேந்திரகிரி சுவாமிகள்

அந்த பாக்கியத்தைத் தரும் ஜீவ சமாதியாக சிவகங்கை மாவட்டம் மதகுபட்டியில் உள்ள ஓம்ஸ்ரீ பிரம்மரிஷி மகேந்திரகிரி சுவாமிகளின் ஜீவ சமாதி திகழ்கிறது. 2017—ம் ஆண்டு ஜனவரி மாதம் 26—ந் தேதி அவர் பரிபூரணம் அடைந்தார். மார்ச் மாதம் அவரது ஜீவ சமாதியில் 48—வது நாள்

மண்டல பூஜை நடந்தது. இதில் கணக்கம்பட்டி, கண்டனூரைச் சேர்ந்தவர்கள் திரளாக கலந்து கொண்டனர். ஏனெனில் இந்த இரு ஊர்களும் மகேந்திரிகிரி சுவாமிகளுக்கு மிகவும் பிடித்த ஊர்களாகும். அதனால் அவருக்கு,"கணக்கம்பட்டி, கண்டனூர் சுவாமிகள்" என்றப் பெயரும் உள்ளது.


மகேந்திர கிரி சுவாமிகள் கருவறை

பழனி கணக்கம்பட்டி என்றதும் பெரும்பாலானவர்களுக்கு மூட்டை சுவாமிகள் நினைவுக்கு வரலாம். ஆனால் அந்த மூட்டை சுவாமிகளுக்கே குருவாக இருந்து வழி காட்டியவர்தான் ஓம்ஸ்ரீ பிரம்மரிஷி மகேந்திரகிரி சுவாமிகள்.

இவர் சுமார் 140 ஆண்டுகள் வரை வாழ்ந்ததாக சொல்கிறார்கள். 1960—களில் இவர் முதன் முதலாக கணக்கம்பட்டிக்கு வந்த போதே 70 வயதை கடந்து விட்டதாக கூறினாராம்.

கணக்கம்பட்டியில் உள்ள ஒவ்வொருவருக்கும் வாழ்க்கை ரகசியங்களை அவர் தம் வாழ்வு மூலம் உணர்த்தினார். அந்த ஊரில் உள்ள காளியம்மன் கோவிலில் 2 ஆண்டுகள் இருந்தார்.

பிறகு அந்த ஊரில் கோவில் கட்ட செய்தார். அந்த ஊரையே ஆன்மிக பூங்காவாக மலரச் செய்தார். கணக்கம்பட்டி கோவிலின் கும்பாபிஷேகத்துக்கு

ஒரு நாளுக்கு முன்பு மாயமாகி விட்டார். எங்கு போனார் என்றே அந்த ஊர்க்காரர்களால் கண்டு பிடிக்க இயலவில்லை.

கணக்கம்பட்டியில் இருந்து வெளியேறிய மகேந்திரகிரி சுவாமிகள் கல்லலுக்கு சென்றார். அங்கு 5 ஆண்டுகள் இருந்தார். பிறகு கண்டனூரில் உள்ள வைகறை கருப்பசாமி கோவிலில் 6 ஆண்டுகள் தங்கியிருந்தார்.

இதையடுத்து வத்தலக்குண்டு, கொடைக்கானல், மதுரை, கோவை, டி.கல்லுப்பட்டி என்று ஊர், ஊராக சென்றார். ஒரு ஊரில் 3 அல்லது 4 ஆண்டுகள்தான் இருப்பார். பிறகு புறப்பட்டு வேறு ஊருக்கு சென்றுவிடுவார்.

ஏதாவது ஒரு ஊர் பிடித்திருந்தால் மீண்டும் அந்த ஊருக்கு சுமார் 20 ஆண்டுகள் கழித்து வருவதுண்டு. அப்படித்தான் அவர் கணக்கம்பட்டிக்கு திரும்பி வந்தார். அப்போது அந்த ஊர் மக்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

கணக்கம்பட்டியில் இருந்து மலையடிவாரத்தில் உள்ள கோம்பை வரை 11 கி.மீ. தூரத்துக்கு சாலை அமைத்து கொடுத்த சுவாமிகளை ஊர் மக்கள் ஆதரித்து, ஆராதித்து வணங்கினார்கள். இந்த காலகட்டத்தில்தான் மகேந்திரகிரி சுவாமிகளுக்கு அழுக்குமூட்டை சுவாமிகள் சிஷ்யராக இருந்து பணிவிடை செய்தார். அப்போது அழுக்குமூட்டை சுவாமிகளை பலரும் சாதாரணமாக நினைத்தனர். அவர் சிறப்பை புரிந்து கொள்ளாமல் இருந்தனர். இதை கண்ட மகேந்திரகிரி சுவாமிகள், ‘‘இந்த ஊரே அவனை (அழுக்கு மூட்டை சுவாமிகளை) கையெடுத்துக் கும்பிட போகிறது என்றார். (அன்று அவர் சொன்னது இன்று உண்மையாகி விட்டது. கணக்கம்பட்டியில் அழுக்கு மூட்டை சுவாமிகளுக்கு மிகப்பெரும் ஜீவசமாதி ஆலயத்தை உருவாக்கி இருக்கிறார்கள்.)

கணக்கம்பட்டி மக்கள் குறைவின்றி உபசரித்தாலும், மகேந்திரகிரி சுவாமிகள் அங்கு நிரந்தரமாக தங்கவில்லை. வடநாடு யாத்திரைக்கு சென்று விட்டார்.

சில ஆண்டுகள் கழித்து மீண்டும் கண்டனூருக்கு வந்தார். காங்கிரஸ் மூத்த தலைவர்களில் ஒருவரான ப.சிதம்பரத்தின் குல தெய்வமான வைகறை கருப்பசாமி ஆலயத்தில் தங்கினார். நிறைய பேரின் நோய்களைத் தீர்த்து அருள்புரிந்தார்.

அப்போது நிறைய பேர் கண்டனூர் வரத் தொடங்கினார்கள். காரைக்குடி ‘ஓட்டல் ஜெகன்’’ உரிமையாளர் ராமலிங்கம் சித்தர்கள் மீது மிகுந்த ஈடுபாடு உடையவர்.தன் நண்பர் ஒருவர் மூலம் மகேந்திரிகிரி சுவாமிகள் பற்றி கேள்விப்பட்ட அவர் அன்றே அவரைப் பார்க்க கண்டனூர் சென்றார்.

அங்கு சுவாமிகளைச் சுற்றி நிறைய பேர் இருந்தனர். எல்லோருக்கும் ஆசி வழங்கிக் கொண்டிருந்த சுவாமிகள் ராமலிங்கத்திடம் மட்டும்‘‘ தூர போய் உட்கார்’’ என்றார்.

சிறிது நேரம் கழித்து ராமலிங்கத்தை அழைத்த சுவாமிகள்,‘‘எதற்கும் கவலைப்படாதே. நீ மனதில் நினைத்திருப்பது தடையின்றி நடக்கும். போய் வா’’ என்றார்.

அந்த நிமிடமே சுவாமிகளின் ஆத்மார்த்த சிஷ்யராக ராமலிங்கம் மாறினார். சுவாமிகளை தினமும் காலையில் சென்று பார்த்து விடுவார். அவருக்கு சேவை செய்வதை பிறவிப்பயனாகக் கருதினார்.

அதற்குப் பிறகே மகேந்திரகிரி சுவாமிகள் பற்றிய தகவல்கள் கொஞ்சம், கொஞ்சமாக வெளியில் தெரியத் தொடங்கின.

சுவாமிகள் நாகர்கோவில் அருகே உள்ள மார்த்தாண்டத்தைச் சேர்ந்தவர். ராஜபரம்பரையில் பிறந்த அவருக்கு ‘‘மகேந்திரவர்மன்’’ என்று பெயரிடப்பட்டிருந்ததாம். சிறு வயதில் குடும்பத்தைப் பிரிந்து மும்பை சென்றார்.

பிறகு ஐதராபாத் வந்தார். அங்கு அவருக்கு சித்திக்குரிய ஞானம் கிடைத்தது. ஊர் ஊராக சென்றார்.

1914—ம் ஆண்டு நடந்த முதல் உலகப்போர் பற்றி தனக்கு தெரியும் என்றாராம். அப்போது இளைஞராக இருந்ததாக சுவாமிகள் கூறினாராம். மற்றபடி எந்த தகவலையும் வெளியிடாத அவர் மற்றவர்களின் கர்மாவை குறைப்பதில் அதிக ஆர்வம் காட்டினார்.

புரவிப்பாளையம் ஜமீனில் கோடி சுவாமிகளுடனும் இவர் இருந்துள்ளாராம். ஆனால் அது பற்றிய முழுமையான தகவல்களை அவர் வெளியிடவில்லை. கண்டனூரில் அவர் இருந்த போது, அழுக்குமூட்டை சுவாமிகளுக்கு திடீர் உடல் நலக்குறைவு ஏற்பட்டது. இது பற்றி தெரிய வந்ததும்,‘‘நான் வந்து விட்டேன் அல்லவா. இனி அவன் போய்விடுவான்’’ என்றாராம்.

அவர் சொன்னது போலவே அடுத்த சில நாட்களில் மூட்டை சுவாமிகள் பரிபூரணம் அடைந்தார். அவருக்கு எங்கு ஜீவசமாதி வைப்பது என்று பக்தர்கள் தவித்த போது மோகன் என்பவர் இடத்தில் ஜீவசமாதி அமைக்க மகேந்திர சுவாமிகள்தான் ஆலோசனைத் தெரிவித்தார்.

2016–ம் ஆண்டு மார்கழி மாதம் மகேந்திரகிரி சுவாமிகளுக்கும் சற்று உடல் நல குறைவு ஏற்பட்டது. இதையடுத்து தனது ஜீவ சமாதியுடன் கூடிய ஆசிரமம் அமைக்க இடம் தேடினார்.

கணக்கம்பட்டியைச் சேர்ந்தவர்கள் 3 ஏக்கர், 5 ஏக்கர் என்று கொடுக்க முன்வந்தனர். ஒரு தொழில் அதிபர் ஏழாயிரம் பண்ணையில் 100 ஏக்கர் இடத்தை கொடுக்க முன் வந்தார். ஆனால் எதையும் அவர் ஏற்கவில்லை.

தன்னிடம் மிகவும் பாசத்துடன் இருந்த ராமலிங்கத்திடம், "உன் இடத்தில் 10 ஏக்கர் தருவாயா?" என்றாராம். உடனே ராமலிங்கம் சிவகங்கை அருகே மதகு பட்டியில் இருக்கும் தனது இடத்தை காட்ட, அது சுவாமிகளுக்கு மிகவும் பிடித்து விட்டது.


மகேந்திர கிரி சுவாமிகளின் ஜீவ சமாதி

"உன் உள்ளம் நல்ல உள்ளம்" என்று ராமலிங்கத்தைப் பாராட்டிய சுவாமிகள், மதகுபட்டியில் ஆசிரமம் அமைக்கும் பணிகளைத் தொடங்கினார். பிறகு என்ன நடந்தது என்பதை ராமலிங்கமே சொல்கிறார்...

மகேந்திரகிரி சுவாமிகள் மிகப்பெரிய சித்த புருஷர். அவர் நினைத்திருந்தால் இன்னும் 500 ஆண்டுகள்கூட வாழ்ந்திருக்க முடியும். ஆனால் அவரோ, வந்த வேலை முடிந்து விட்டது. அடுத்த மகத்துக்கு இருக்க மாட்டேன் என்றார். அப்படியே நடந்து விட்டது.

அவர் நினைத்திருந்தால் பல சித்தாடல்களை வெளிப்படையாக நடத்தி பரபரப்பு ஏற்படுத்தி தன்னை விளம்பரப்படுத்தியிருக்கலாம். ஆனால் அவரது சேவைகள் எல்லாம் ஆரவாரம் இல்லாமல் இருந்தன.

எல்லோராலும் அவரை சந்திக்க இயலவில்லை. பூர்வ ஜென்ம பாக்கியம் இருந்தவர்களுக்கு மட்டுமே அவரை பார்க்கும் வாய்ப்பு கிடைத்தது. அவர் பார்க்கும் ஒரு பார்வையே போதும். ஸ்கேன் எடுத்தது போல சொல்லி விடுவார். ஒருவரது மனதில் உள்ளதை மனக்கண்ணால் அறிந்து கொள்ளும் சக்தி அவருக்கு இருந்தது.

ஒருவர் தூரத்தில் வரும் போதே, ‘‘நல்லவன் வருகிறான்’’ என்பார். தீய எண்ணத்தோடு ஒருவர் வந்தால்,‘‘களவாணி வருகிறான்’’ என்பார். அவர்களை அருகில் சேர்க்க மாட்டார். விரட்டி விட்டு விடுவார்.

பெரும்பாலானவர்களிடம்,‘‘உனக்கு நல்லதே நடக்கும்.... போ’’ என்பார். அவர்களுக்கெல்லாம் நல்லதே நடந்தது.

எனக்கு இருதய ரத்தக்குழாய்களில் அடைப்பு இருந்தது. சென்னையில் உள்ள மெட்ராஸ் மெடிக்கல் மிஷன் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வந்தேன்.

ஒரு தடவை சுவாமிகள் என்னை உற்றுப்பார்த்தார். அன்றே என் இருதய நோய்கள் நீங்கி விட்டது. என் ரத்தக் குழாய்களில் இருந்த அடைப்பு எப்படி மாயமானது என்று டாக்டர் லட்சுமணதாஸ் ஆச்சரியப்பட்டார்.

சில சமயம் அவர், இன்று ஆசிரமத்துக்கு எத்தனை பேர் வருவார்கள் என்பதை துல்லியமாக சொல்வார். “5 பேருக்கு சாப்பாடு தயார் செய்யட்டுமா?” என்று நாங்கள் கேட்டால், இன்று மேலும் 2 பேர் வருவார்கள். 7 பேருக்கு தயார் செய் என்பார். அவர் சொன்னது போல அன்று 7 பேர் வந்து விடுவார்கள்.

இரும்பைப் பொன்னாக்கும் ரசவாத கலை அவருக்குத் தெரியும். ஆனால் அவர் எதற்காகவும் அதை செய்ததே இல்லை.

அவர் தன்னை நாடி வருபவர்களின் கர்ம வினைகளை தீர்த்த விதம் வித்தியாசமானது. ‘‘காலை அமுக்கி விடு— உன் வினைத்தீரட்டும்’’ என்பார். அவர் காலைப்பிடித்து விட்டார்கள், வினை தீர்ந்த பாக்கியசாலி ஆனார்கள்.

உடலை 9 துண்டுகளாகப் பிரித்து போட்டுக்கொள்ளும் நவ கண்ட யோகத்தை சுவாமிகள் அடிக்கடி செய்வதுண்டு. கணக்கம்பட்டியைச் சேர்ந்த ஒருவர் ஒரு தடவை சுவாமிகள் உடல் துண்டு, துண்டுகளாகக் கிடப்பதைப் பார்த்து அரண்டு போய் விட்டார்.

ஒரு தடவை கனக்கம்பட்டியைச் சேர்ந்த சுப்பையா என்பவரை வரச் சொல்லுங்கள் என்றார். நான் பல தடவை போன் போட்டும் அவர் கிடைக்கவில்லை.

இதை கவனித்த சுவாமிகள், ‘‘சரி... விடு, நானே அவரை வரவழைத்துக் கொள்கிறேன்’’ என்று அறைக்குள் சென்று விட்டு வந்தார். அடுத்த சில மணி நேரத்துக்குள் சுப்பையா வந்து விட்டார். அவர் எப்படி வந்தார் என்று இதுவரை எனக்குத் தெரியவில்லை.


சித்தருடன் ராமலிங்கம்

ஒரு தடவை திண்டுக்கல்லில் ஒரு ஓட்டலுக்கு நாங்கள் சாப்பிட சென்றிருந்தோம். சாப்பிட்டு முடித்து புறப்படும்போது சுவாமிகள், காருக்குள் இருக்கும் நாய்க்குட்டி பசியோடு இருக்குமே என்று ரொட்டித்துண்டு வாங்கிக் கொடுத்தார். அதை நாய்க்குட்டிக்கு நாங்கள் கொடுத்தபோது அவை சிக்கன்

துண்டுகளாக மாறி இருந்தன. மறுநாள் இதுபற்றி சுவாமிகளிடம் கேட்டேன். அவர் என்னைப் பார்த்து சிரித்தாரே தவிர பதில் சொல்லவில்லை.

நிறைய பேருக்கு அவர் குழந்தை பாக்கியம் அளித்துள்ளார். பலருக்கு உடலில் என்ன நோய் உள்ளது என்று சொல்லிக் குணப்படுத்தியுள்ளார்.

அவரது உடமை என்று இரண்டே இரண்டு பச்சை கலர் வேட்டிதான் இருந்தது. எதற்குமே ஆசைப்படாதே என்று அடிக்கடி சொல்வார்.

எனக்கும், என் குடும்பத்தினருக்கும் இன்றும் அவர்தான் வழிகாட்டுகிறார். அவர் மிகவும் விரும்பி மதகு பட்டியில் ஜீவசமாதி ஆகியுள்ளார். அதனால் இந்த ஜீவசமாதி நினைத்ததை தரும் தலமாக உள்ளது.

குறிப்பிட்டு சொல்ல வேண்டுமானால்,“நல்லதே நடக்கும்” என்ற ஞானத்தை இந்த ஜீவசமாதி தருவதாக ராமலிங்கம் தெரிவித்தார்.

இவரைப் போலவே மகேந்திரகிரி சுவாமிகளின் மனதில் இடம் பிடித்தவர் பாலசுப்பிரமணியம். மதுரை கிருஷ்ணாபுரம் காலனியில் வசித்து வரும் இவர் சுவாமிகள் பற்றி சொல்வதை கேளுங்கள்...

2016—ல் எனக்கு சித்தர் பற்றி தெரிய வந்தது. மதகு பட்டியில் உள்ள ஆசிரமத்துக்கு சென்றேன்.


மதுரை பாலசுப்பிரமணியம்

அப்போது ஆசிரம கட்டுமானப் பணி நடந்து கொண்டிருந்தது. சித்தரும் வேலையாட்களுடன் நின்று செங்கல் எடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

என்னைப் பார்த்ததும்,“சிறிது நேரம் உட்கார்” என்றார். பிறகு என் அருகில் வந்தார். நான் மனதில் என்ன நினைத்திருந்தேனோ, அதை அப்படியே துல்லியமாகச் சொன்னார்.

நான் நினைத்திருப்பது எந்தெந்த காலகட்டத்தில், எப்படி நடக்கும் என்பதை விவரித்தார். நான் மெய் சிலிர்த்துப் போனேன். அவர் என்ன சொன்னாரோ, அப்படித்தான் நடந்து வருகிறது.

திடீரென ஒரு நாள் மதுரையில் உள்ள என் வீட்டுக்கு வந்தார். சுவாமிகள் வந்த தகவல் எப்படித்தான் தெரியுமோ... சுமார் 30 பேர் சுவாமிகளைத் தேடி வந்து விட்டனர். எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

நானும் சுவாமிகளும் ஒரு தடவை வரிசை முகம்மது ராவுத்தர் என்பவர் கடைக்கு டைல்ஸ் வாங்கச் சென்றோம். அங்கிருந்த உரிமையாளரிடம் “உன் தாத்தாவை 1960—ம் ஆண்டே எனக்கு நன்றாகத் தெரியும்” என்றார். அவர்களது குடும்பத்தைப்பற்றி சர்வ சாதாரணமாக சொன்னார். எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

என்னிடம் அடிக்கடி, “பணம் என்பது மாயை. எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல் வாழுங்கள்” என்பார்.

அவரைப்பார்த்தாலே மனதில் உள்ள பாரங்கள் குறைந்து விடும். எந்த பிரச்சினை இருந்தாலும் விலகி ஓடிவிடும். தன்னை நாடி வந்த ஒவ்வொருவரின் கர்ம வினைகளையும் அவர் தீர்த்தார்.

இதற்காக அவர் கூடு விட்டு கூடு பாய்வார். இதைச் செய்யும் போது அவர் எல்லோரையும் அறையில் இருந்து வெளியில் போகச் சொல்லிவிடுவார். சுமார் 20 நிமிடங்கள் படுத்தபடி இருப்பார். அந்த சமயத்தில் அவர் தன் ஆத்மாவை உடலில் இருந்து பிரித்து வெளி உலகிற்கு சென்று வருவார்.

இதை “பரகாயப் பிரவேசம்” என்று சொல்வார்கள். சித்தர்கள் நிகழ்த்தும் அற்புத சித்திகளில் இது முதன்மையானது. மகேந்திரகிரி சித்தர் இதை அடிக்கடி செய்வதுண்டு. இது சாதாரணமான சித்தாடல் அல்ல. ஒரு உடலில் இருந்து மூச்சை அறுத்துக் கொண்டு, வெளியில் சென்று, தம்மைச் சார்ந்தவர்களின் கர்ம வினைகளை விரட்டி விட்டு, மீண்டும் அதே உடலுக்குள் நுழைவதை எளிதில் செய்து விட முடியாது.

அது போல பெரும்பாலும் சித்தர்கள் பரிபாஷையில்தான் பேசுவார்கள். ஆனால் சுவாமிகள் அப்படியல்ல. பரிபாஷை என்பதே இவரிடம் கிடையாது. சாதாரணமாக பேசுவார். மற்ற சித்தர்களுக்கும் இவருக்கும் உள்ள மிகப்பெரிய வித்தியாசம் இதுதான். ஜீவ சமாதியில் அடங்கப்போவதை மட்டும் குறிப்பால் சொன்னார். தை அமாவாசை தினத்தன்று இங்கு கொண்டு வந்து விடு என்றார். அதற்கு முந்தைய தினம் சித்தி ஆகி விட்டார்.

இன்று அவரது ஜீவசமாதி அருள் வெள்ளம் நிரம்பிய நிலையில் உள்ளது. அங்கு ஒரு தடவை சென்று வந்தாலே போதும், கவசமாக இருந்து நம்மை அவர் காப்பாற்றுவார் என்று பாலசுப்பிரமணியம் கூறினார். சமீபத்தில் மதகுபட்டி ஜீவசமாதி ஆலயம் அருகில் அன்னதான கூடம் அமைக்க, அடிக்கல் நாட்டுவதற்காக கோரக்கரின் சிஷ்யராகக் கருதப்படும் வேடசந்தூர் பத்மகிரி பாபா வந்திருந்தார். மகேந்திரகிரி சுவாமிகள் அருளால் இத்தலம் மிகுந்த அதிர்வுடன் இருப்பதாக கூறினார்.

மகேந்திரகிரி சுவாமிகளின் ஜீவ சமாதியில் காலடி எடுத்து வைக்கும் ஒவ்வொருவரும் அனுபவப்பூர்வமாக அதை உணர்கிறார்கள். சுவாமிகள் நடத்தி காட்டிய ஒவ்வொரு செயலும் கற்பக விருட்சத்தின் வித்துகளாக அந்த ஜீவ சமாதியில் பதிந்துள்ளன. அவை ராமலிங்கம், பாலசுப்பிரமணியம் போன்ற சீடர்கள் மூலம் விருட்சமாக மாறும் போது சித்தர் விட்டுச்சென்ற பணிகள், யுகம், யுகமாக தொடரும் சங்கிலிப் பிணையாக மாறினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. நல்லதே நடக்கும்!





# 33.மகான் படேசாகிப் சுவாமிகள்

கண்டமங்கலம்

33. மகான் படேசாகிப் சுவாமிகள்

மகா அவதார் பாபாஜி இன்றும் உயிரோடு இருக்கிறார். பல ஆயிரம் ஆண்டுகளாக அவர் இமயமலையில் வாழ்ந்து வருகிறார் என்று சித்தர் வழிபாடுகளில் தீவிரமாக இருப்பவர்கள் நம்புகிறார்கள். தமிழ்நாட்டில் பரங்கிப்பேட்டையில் பிறந்த இந்த மகான் சாவை வென்று, என்றும் பதினாறு வயதினராக வாழ்ந்து வருவதாக போற்றப்படுகிறார். க்ரியா யோகத்தை உலகம் முழுவதும் பரப்பியது இவர்தான்.



மகான் படேசாகிப் சுவாமிகள்

இதற்காகவே இவர் சிலருக்கு தீட்சை கொடுத்து இருந்தார். 16—ம் நூற்றாண்டில் வாழ்ந்த மகான் கபீர்தாசரும் பாபாவிடம் தீட்சை பெற்றவர்களில் ஒருவராவார்.

இந்த கபீர்தாசர், தென் மாநிலங்களில் க்ரியா யோகம் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்த ஒரு சித்தபுருஷரை தேர்வு செய்தார். அவர் அந்த சித்தரை தமிழ்நாட்டுக்கு அனுப்பி வைத்தார்.

அந்த சித்தருக்கு மகாஅவதார் பாபாஜியின் முழுமையான ஆசி இருந்தது. தமிழகத்தில் தன்னை வெளிப்படுத்த இந்த சித்தரைத்தான் மகா அவதார் பாபாஜி ஒரு கருவியாக கொண்டதாக சொல்கிறார்கள். இவ்வளவு சிறப்புக்குரிய அந்த சித்தர் மகான் படே சாகிப்.

விழுப்புரம் மாவட்டம் கண்டமங்கலம் அருகே உள்ள சின்னபாபு சமுத்திரத்தில் அவரது ஜீவசமாதி அமைந்திருப்பதாக அறிந்து அங்கு சென்றோம். மகான் படே சாகிப் அருளையும், ஆசீர்வாதத்தையும் பெற்ற காரணத்தால், உண்மையிலே அந்த ஊர் புண்ணிய பூமி போல தெரிந்தது.


படேசாகிப்பின் சிலிர்க்கவைக்கும் கருவறை

2018 ம் ஆண்டு மகான் படே சாகிப் ஜீவ சமாதியான 150—வது ஆண்டு குரு பூஜையை கொண்டாடினார்கள். எனவே சின்னபாபு சமுத்திரம் கிராமத்தில் அவர் 200 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தது உறுதியாகி உள்ளது.

ஆனால் இப்போதும் அந்த மகான் அந்த கிராமத்தில் வாழ்வது போன்ற ஒரு பிரமை நிலவுகிறது. அந்த அளவுக்கு மகான் படே சாகிப்பின் அருள் வெள்ளம் அந்த ஊரில் நிறைந்துள்ளது.

அந்த ஊருக்கு மகான்படே சாகிப் எந்த ஆண்டு வந்தார்? எப்படி வந்தார்? எங்கிருந்து வந்தார்? சின்னபாபு சமுத்திரம் மக்கள் மனதில் எப்படி இடம் பிடித்தார்? என்பன போன்ற எந்த தகவல்களும் தெரியவில்லை.

அது போல அவர் எந்த ஊரைச்சேர்ந்தவர்? பெற்றோர் யார்? ஆகிய விஷயங்களும் தெரியவில்லை. மத்திய கிழக்கு ஆசிய நாடுகளில் இவர் பல

ஆண்டுகள் சுற்றித்திரிந்து பல்லாயிரக்கணக்கான மக்களின் நோய்களையும் குறைகளையும் தீர்த்து வைத்தார் என்பது மட்டுமே தெரிய வந்துள்ளது.

நாளடைவில் அவர் இஸ்லாமிய மதத்தைச் சேர்ந்தவர் என்று தெரியவந்தது. இதனால் மக்கள் முதலில் அவரை சாய்பு என்றழைத்தனர்.

ஆத்மஞானியான அவர் சாதி, மதம், இனம் வித்தியாசமின்றி அனைவரது குறைகளையும் தீர்த்தார். எப்போதும் அவர் ஆழ்ந்த அமைதியுடன் இருந்தார். அவர் பார்வையே நோய்களை விரட்டியது. இதனால் அவரை 'மகான்' என்றனர். நாளடைவில் அவர் நிகழ்த்திய ஒவ்வொரு சித்தாடலும் மக்களை மெய்சிலிர்க்க வைத்தது. எனவே மகான் படே சாய்பு என்று அழைக்கத்தொடங்கினார்கள். (படே என்றால் பெரியவர் , உயர்ந்தவர் என்று அர்த்தம்) அது பிறகு மகான் படே சாகிப் என்று மாறியது.

அவரது உண்மையான பெயர் என்ன என்பது இது வரை யாருக்கும் தெரியாது. சின்னபாபு சமுத்திரம் கிராமத்துக்கு வருவதற்கு முன்பு சில ஆண்டுகள் அவர் புதுச்சேரி திருக்கனூரில் இருந்தார்.

திருக்கனூரில் இருந்து அவர் தினமும் அருகில் உள்ள ஊர்களுக்கு நடந்தே சென்று வருவார்.அப்படி ஒரு தடவை சின்னபாபு சமுத்திரத்துக்கு வந்தார். அந்த ஊர்தான் தனக்கு நிரந்தரம் என்று அந்த மகானுக்குத் தோன்றியதோ, என்னவோ அங்கேயே தங்கி விட்டார்.

அந்த ஊர் மகிழ மரத்தடிதான் அவர் இருப்பிடம். தலையில் தொப்பி, தாடி, கையில் தும்புரு வீணை ஆகியவற்றுடன் எப்போதும் காட்சியளித்தார்.




அடிக்கடி ராமரெட்டிக்குளம், மண்டகப்பட்டு, பண்ணக்குப்பம், வனத்தானம் பாளையம் ஆகிய ஊர்களுக்கு சென்று வருவார். ராமரெட்டிக்குளத்தில் சில ஆண்டுகள் தங்கி இருந்தார்.

பிறகு மண்டகப்பட்டு கிராமத்தில் கோவிந்த ரெட்டியார் என்பவர் தன் தோட்டத்தில் குடில் அமைத்து கொடுத்ததால் சுமார் 18 ஆண்டுகள் அங்கு இருந்தார்.

அந்த காலகட்டத்தில் நிறைய சித்தாடல்கள் புரிந்தார். மண்டகப்பட்டு குடிலுக்குள் இருக்கும் அதே நேரத்தில் புதுச்சேரி, ராமரெட்டிகுளம், சின்னபாபு சமுத்திரம் உள்பட பல ஊர்களில் ஒரே நேரத்தில் காட்சியளித்தார். குடிலுக்குள் இருக்கும் போது உடலை 9 துண்டுகளாகப் பிரித்து போட்டுக்கொண்டு நவகண்டயோகத்தில் இருப்பார். நிறையபேர் அதைப்பார்த்து அதிர்ச்சியில் உறைந்துள்ளனர்.

ஒரு நாள் கோவிந்த ரெட்டியார் தோட்டத்து வயல்களில் அறுவடை முடித்து நெல்மூட்டைகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அன்றிரவு 2.30 மணிக்கு தோட்டத்துக்குள் புகுந்த திருடர்கள் நெல் மூட்டைகளைத் திருடி ஒரு வண்டியில் ஏற்றி புறப்பட தயாரானார்கள்.

## இசை கலைஞர்களுக்கு முன்னேற்றம்

மகான் படே சாகிப் தன் கையில் உள்ள தம்புராவை சில சமயம் இசைப்பதுண்டு. அந்த இசையால் தன்னை மறக்கும் வித்தையை கையாண்டார். இதனால் இத்தலம் இசை கலைஞர்களுக்கு சிறப்பான இடமாக கருதப்படுகிறது. இங்கு வந்து சென்றால் இசை உலகில் பிரகாசிக்கலாம் என்று நம்புகிறார்கள். லதா மங்கேஷ்கர், ஆஷா போன்ஸ்லே இங்கு வந்து சென்றுள்ளனர். நடிகர் ஜெய்சங்கர், நடிகை சுலக்சனா இங்கு வந்த பிறகே பிரபலம் ஆனார்கள்.

மகான் படே சாகிப் பல்லாயிரக்கணக்கானவர்களின் நோய்களை தீர்த்தவர். இதனால் மருத்துவத்துறை வல்லுனர்கள், அறுவை சிகிச்சை நிபுணர்களும் இங்கு வந்து வழிபடுவதை வழக்கத்தில் வைத்துள்ளனர்.

அப்போது மகான் படே சாகிப் குடிலுக்குள் இருந்து வெளியில் வந்தார். ஒரே ஒரு சாமியார்தானே நிற்கிறார். அவரை மிரட்டி விரட்டி விடலாம் என்று திருடர்கள் நினைத்தனர். அடுத்த வினாடி மகான் படே சாகிப் உருவம் இரண்டாக மாறியது. இரு உருவம் நான்கானது. நான்கு எட்டானது. எட்டு பதினாறானது. கண் மூடி கண் திறப்பதற்குள் மகான் படே சாகிப் ஐம்பது பேராக ஒரே உருவத்தில் நின்றார்.

அதிர்ச்சி அடைந்த திருடர்கள் வேறு பக்கம் ஓடினார்கள். அங்கும் ஐம்பது படே சாகிப் நின்றனர். திருடர்கள் திரும்பிய திசையெல்லாம் கும்பல், கும்பலாக ஒரே உருவத்தில் மகான் படே சாகிப் வந்தனர்.

திருடர்கள் நிலை குலைந்து போனார்கள். கதறி அழுதபடி மகானின் காலில் விழுந்து மன்னிப்பு கேட்டனர். அன்றே திருட்டுத் தொழிலை கைவிட்டனர். அதோடு மகானின் முதன்மை பக்தர்களாகவும் மாறினார்கள்.

## சக்தி வாய்ந்த லிங்கம்

**ஒ**ரு தடவை இமய மலைக்கு மகான் படே சாகிப் சென்றிருந்தார். அப்போது இமயமலை அடிவாரத்தில் சுமார் 2000 அடி ஆழத்தில் "நிஷ்டதார்யம்" எனப்படும் உளிபடாத கல் இருப்பது இறையருள் மூலம் தெரியவந்தது. அந்த கல்லை எடுத்து மகான் தொட்டார். அடுத்த நிமிடம் அந்த கல், அருணாசலேஸ்வரர் லிங்கமாக மாறியது.

அந்த லிங்கத்தை சின்னபாபு சமுத்திரத்துக்கு கொண்டு வந்த மகான், அதை பிரதிஷ்டை செய்து ஆலயம் கட்டினார். அந்த ஆலயம் அருகில்தான் மகானுக்கு ஜீவசமாதி அமைந்துள்ளது. லிங்கம் அமைந்துள்ள கருவறைக்கும், மகான் ஜீவசமாதி கருவறைக்கும் ரகசிய சுரங்க பாதை இருப்பதாகவும், அதனுள் சித்தர்கள் தற்போதும் தவம் இருப்பதாகவும் ஒரு தகவல் பேசப்படுகிறது.

## முடவன் நடந்தான்

**சி**ன்னபாபு சமுத்திரத்தில் கால்கள் முடமான நிலையில் ஒரு இளைஞர் இருந்தார். ஒரு நாள் அவரை சில இளைஞர்கள் கட்டிலில் வைத்து மகான் இருக்கும் இடத்துக்கு தூக்கி வந்தனர். இதை கண்டதும் மகான் படே சாகிப்புக்கு கோபம் பீறிட்டபடி வந்தது.

அவர் பெரிய கம்பை எடுத்துக் கொண்டு கத்தியபடி இளைஞர்களை நோக்கி ஓடினார். இதனால் பயந்து போன இளைஞர்கள், முடவன் இருந்த கட்டிலை அந்த இடத்திலேயே இறக்கி வைத்து விட்டு ஓட்டம் பிடித்தனர். அப்போது ஒரு அதிசயம் நடந்தது. கட்டிலில் கிடத்தப்பட்டிருந்த முடவனும் எழுந்து ஓடினான். எல்லோருக்கும் அதன்பிறகுதான் மகானின் கோபத்துக்கான காரணம் புரிந்தது.

மகானின் அற்புதத்தை அறிந்த சுற்றுப்பகுதி மக்கள் திரண்டு வந்து மகானிடம் ஆசி பெற்றனர். இந்த நிலையில் மகான் தன் இருப்பிடத்தை சின்னபாபு சமுத்திரத்துக்கு மாற்றி மக்களுக்கு அருள் புரிந்தார்.

மரத்தடியில் அமர்ந்திருக்கும் அவர் காலை முதல் மதியம் வரை எங்கு செல்வார், என்ன செய்வார் என்பது மற்றவர்கள் அறிந்து கொள்ள முடியாதபடி இருந்தது. தினமும் அதிகாலை 4.30 மணிக்கெல்லாம் குளத்துக்குள் இறங்கி நீராடுவார்.

சில நாட்கள் குளத்து தண்ணீரின் அடி பாகத்துக்கு சென்று விடுவார். மணிக்கணக்கில் வெளியில் வராமல் இருப்பார். அவரது மூச்சுக்காற்று கூட அவருக்கு கட்டுப்பட்டு இருந்தது.

## சிறப்பு நாட்கள்

மகான் படே சாகிப் ஜீவ சமாதியில் வழிபட செவ்வாய், வியாழன், ஞாயிறு மிகவும் உகந்த நாட்களாகும். ஆயில்யம் நட்சத்திர தினத்தன்று சிறப்பு பூஜை நடைபெறும். மகானின் சிலையை தேரில் வைத்து எடுத்து வருவார்கள். இத்தலத்தில் தானங்கள் செய்வது சிறப்பானதாக கருதப்படுகிறது. தாமரை இலை பின்பகுதியில் சாதம் வைத்து கொடுத்தால் நோய்கள் தீரும் என்பது நம்பிக்கை. 5 செவ்வாய்க்கிழமை இரவு இங்கு தங்கினால் நினைத்தது நடக்கும் என்கிறார்கள்.

இந்த ஜீவசமாதி இந்து சமய அறநிலையத்துறை கட்டுப்பாட்டில் உள்ளது. 2015–ம் ஆண்டு முதல் தமிழக அரசு இங்கு அன்னதான திட்டத்தை செயல்படுத்தி வருகிறது.

தண்ணீருக்குள் அவர் எங்கு இருக்கிறார் என்பதே யாருக்கும் தெரியாது. எல்லாரும் ஆச்சரியத்துடன் குளத்தையே பார்த்துக் கொண்டிருக்க திடீரென பக்கத்து ஊரில் இருந்து நடந்து வந்து கொண்டிருப்பார். இப்படி ஆச்சரியங்களின் உச்சமாக அவர் திகழ்ந்தார்.

மதியத்துக்குப்பிறகு அவர் வைத்தியம் செய்யத் தொடங்கி விடுவார். தன்னிடம் வரும் ஒவ்வொருவரின் நோய்களை கண்டறிந்து குணப்படுத்தினார்.

## எப்படி செல்வது?

விழுப்புரத்தில் இருந்து புதுச்சேரி செல்லும் வழித்தடத்தில் கண்ட மங்கலம் ரெயில்வே கேட் நிறுத்தம் உள்ளது. அங்கு இறங்கி, ரெயில் தண்ட வாளத்தையொட்டி செல்லும் சாலையில் சுமார் 2 கி.மீ. தொலைவில் சின்னபாபு சமுத்திரத்தில் ஜீவசமாதி அமைந்துள்ளது. சென்னையில் இருந்து செல்பவர்கள் புதுச்சேரி வழியாக சென்றால் எளிதில் செல்லலாம். புதுச்சேரியில் இருந்தும், விழுப்புரத்தில் இருந்தும் தலா 20 கி.மீ. தொலைவில் கண்ட மங்கலம் உள்ளது.

மகான் செய்த வைத்திய முறைகள் மிகவும் வித்தியாசமாக இருந்தன. சிலரை பார்ப்பார் — நோய் குணமாகி விடும், சிலருக்கு விபூதி பூசி விடுவார்—நோய் பறந்து விடும். சிலருக்கு நோய் இருக்கும் இடத்தில் துல்லியமாக கண்டறிந்து அந்த இடத்தில் தன் கட்டை விரலால் அழுத்துவார். அந்த நோய் வந்த சுவடு தெரியாமல் பறந்துவிடும்.

சிலருக்கு காட்டில் இருந்து பறித்து வந்த பச்சிலைகளைக் கொடுத்து நோய் தீர்ப்பார். சிலருக்கு கொட்டாங்குச்சியில் தண்ணீரை ஊற்றிக் கொடுப்பார். எந்த நோயாக இருந்தாலும் குணமாகிவிடும். சிலர் நோய் தாக்கம் தாங்க முடியாமல் வந்து நிற்பார்கள். மகான் சிறிது நேரம் அப்படியே இருந்து விட்டு தலையை அசைப்பார். அவ்வளவு தான் நோய் குணமாகும்.

இவை அனைத்தையும் விட நோய் தீர்க்க மகான் மேற்கொண்ட ஒரு வழிமுறை வித்தியாசமானது. சில நோயாளிகளை அங்குள்ள ஏதாவது ஒரு மரத்தை 3 தடவை சுற்றிவிட்டு வரச் சொல்வார்.

“மரத்தை சுற்றினால் எப்படி நோய் கு ணமாகும்?” என்று பலரும் நினைப்பதுண்டு. ஆனால் மரத்தை சுற்றி முடித்ததும் நோயாளிகள் புத்துணர்ச்சி பெற்றிருப்பார்கள்.

இப்படி நோயுடன் வருபவர்களின் முன்வினை முடிச்சுகளை அவிழ்த்து அற்புதம் செய்த மகான், சிறுவர்—சிறுமிகளை பார்த்தால் குதுகலமாகி விடுவார். அவர்களிடம் கைநிறைய மண் எடுக்க வைத்து, மூடி திறக்கும்படி சொல்வார். சிறுவர்கள் கையை மூடி திறக்கும் போது மணல், விதவிதமான இனிப்புகளாக மாறி இருக்கும்.

சில சமயம் சிறுவர்களிடம் குழிதோண்ட சொல்லி, அதற்குள் உட்கார்ந்து மணல் போட்டு மூட உத்தரவிடுவார். குழியை மூடிய அடுத்த சில நிமிடங்களில், தொலைவில் மகான் கடந்து வந்து கொண்டிருப்பார். சிறுவர்—சிறுமிகள் நம்ப முடியாமல் திகைத்து போவார்கள்.

வாழ்க்கையில் கஷ்டப்பட்டு உழைத்தும் முன்னேற முடியவில்லையே என்று தவிப்பவர்களை கண்டால் மகான் மிகவும் வருத்தப்படுவார். ஏதாவது ஒரு பொருளை எடுத்து ஆசீர்வதித்து கொடுப்பார். அந்த பொருள் மகானின் தவ

வலிமை கொண்டதாக இருக்கும். அந்த பொருளை பூஜித்து வழிபட்டவர்கள் எல்லாரும் வாழ்வில் உயர்ந்த இடத்துக்கு சென்றனர்.

மனிதர்கள் மட்டுமல்ல, மரங்கள் கூட மகான் படே சாகிப் உத்தரவுக்கு கட்டுப்பட்டன. ஒருதடவை மரம் ஏறும் தொழிலாளி ஒருவன் வந்து மகானுக்கு இளநீர் பறிக்க தென்னை மரம் ஏற முயன்றான். எவ்வளவோ முயன்றும் அவனால் முடியவில்லை.

இதை பார்த்துக் கொண்டிருந்த மகான் படேசாகிப் சிரித்துக் கொண்டே ஒரு சொடுக்கு போட்டார். தென்னை மரத்தில் தொங்கிக் கொண்டிருந்த இளநீர் தானாக வந்து அவர் அருகில் விழுந்தது. இன்னொரு சொடுக்குப் போட்டார், இன்னொரு இளநீர் வந்தது.

இத்தகைய சித்தாடல்களை மற்றவர்கள் நலனுக்காகவே செய்த மகான், ஒருபோதும் தனக்காக எதையும் செய்து கொண்டதில்லை. அவருக்கு பசி, உணவு ஆகியவை ஒரு பொருட்டாக இருந்ததில்லை. தினமும் இரவு ஊரை சுற்றி வருவார். யார் வீடு முன்பாவது நிற்பார். சாப்பாடு வேண்டும் என்று கேட்க மாட்டார். உணவு கொடுத்தால் வாங்கிக் கொள்வார்.

உணவு கொடுக்கா விட்டால் அந்த உணவே கெட்டு விடும். இதனால் மகான் வந்து நிற்பது தெரிந்தால் ஊர் மக்கள் உணவு கொடுத்து விடுவார்கள்.

நாளடைவில் சின்னபாபு சமுத்திரம் மக்களின் பாதுகாவலராக மாறி இருந்தார். அந்த ஊர் மக்களுக்கு தேவையான உதவிகளை செய்து கொடுத்தார். ஒருதடவை அந்த ஊர் மணியக்காரர், வரிகட்டாதவர்களின் ஆடு, மாடுகளை பிடித்து சென்று தன் தோட்டத்தில் அடைத்தார். ஊரே திரண்டு வந்து மகான்படே சாகிப்பிடம் கண்ணீருடன் முறையிட்டது.

உடனே மகான் அந்த மணியக்காரர் தோட்டத்துக்கு சென்றார். அவர் தூரத்தில் இருந்து கையசைக்க ஆடு, மாடுகளின் கட்டுகள் தாமாக அவிழ்ந்தன. அவை அவரவர் வீட்டுக்கு சென்றன.

மற்றொரு சமயம் திருக்கனூரைச் சேர்ந்தவர்கள் மணப்பெண்ணுடன் 10 மாட்டு வண்டிகளில் கண்டமங்கலத்தில் உள்ள மணமகன் வீட்டுக்கு சென்று கொண்டிருந்தனர். பலத்த மழை காரணமாக வழியில் உள்ள ஆற்றில் வெள்ளம் கரைபுரண்டோடிக் கொண்டிருந்தது. மணமகளும், உறவினர்களும்

தவிப்புடன் ஆற்றங்கரையோரம் இருந்தனர். அப்போது அங்கு வந்த மகான் படேசாகிப், நிலைமையை அறிந்தார். அடுத்த நிமிடம் ஆற்றுக்குள் இறங்கினார். ஆற்றின் நடுவே சென்றபோது அவர் கழுத்து அளவுக்கு தண்ணீர் ஓடிக்கொண்டிருந்தது.

அவர் தண்ணீரை உற்றுப் பார்த்தார். சில நிமிடங்களில் தண்ணீர் குறைந்து, தரையோடு தரையாக கிடக்கும்படி மாறிவிட்டது. திருமண வீட்டார் எளிதாக ஆற்றை கடந்தனர். அதன்பிறகு மீண்டும் ஆற்றில் வெள்ளம் கரைபுரண்டோடியது.

இந்த சம்பவம் மூலம் மகான் படேசாகிப்பிடம் பஞ்ச பூதங்களும் கட்டுப்பட்டிருந்ததை மக்கள் உணர்ந்தனர்.

1868—ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 12—ந்தேதி மகான் தன் உடலை உதிர்த்து விட்டு பிரிந்து செல்ல தீர்மானித்தார். தன் ஆத்ம பயண நிறைவையும் அவர் ஒரு விளையாட்டு போல நடத்தினார்.

வழக்கம் போல சிறுவர்— சிறுமிகளிடம், தன்னை குழிக்குள் மண் போட்டு மூடி விடும்படி கூறினார். சிறுவர்கள் அப்படியே செய்தனர்.

வழக்கமாக சிறிது நேரத்தில் மீண்டும் காட்சி கொடுத்து விடும் சுவாமிகள் அன்று வரவே இல்லை. இதனால் சிறுவர்— சிறுமிகள் அழுதனர். அப்போது குழிக்குள் இருந்து மகானின் கை மட்டும் வெளியில் நீட்டியபடி வந்தது.

அவர் கையை திறந்தபோது சிறுவர்—சிறுமிகளுக்கு இனிப்பு இருந்தது. அதன்பிறகு மகா ன் தன்னை வெட்டவெளியில் இரண்டற கலக்க செய்து விட்டார். சின்னபாபு சமுத்திரம் ஊர் மக்களுக்கு அதன்பிறகே மகான் பரிபூரணம் ஆகிவிட்டது தெரியவந்தது. மகானின் சீடர்களில் ஒருவரான பம்பாய் சுவாமிகள், மகான் அமரும் மரத்தின் அருகே ஜீவ சமாதியை கட்டினார்.

ஒரு பிரகாரத்துடன் எண்கோண அமைப்பில் ஜீவசமாதி அமைந்துள்ளது. மகான் தினமும் அமரும் மரம் நன்கு வேலியிட்டு பாதுகாப்புடன் உள்ளது. அங்கு அமர்ந்து தியானம் செய்ய நல்ல இட வசதி உள்ளது.

இந்த ஜீவசமாதி கட்டப்பட்டதும், அதை நிர்வகிக்க இந்துக்களுக்கும், இஸ்லாமியர்களுக்கும் இடையே போட்டி ஏற்பட்டது. இதையடுத்து ஜீவசமாதி கதவை மூடி இருதரப்பினரும் வேண்டுதல் செய்ய

தீர்மானிக்கப்பட்டது. யார் வேண்டுதலுக்கு மகான் கதவைத் திறக்கிறாரோ அவர்கள் ஜீவசமாதி ஆலயத்தை நிர்வகிக்கலாம் என்று முடிவு செய்யப்பட்டது.

முதலில் இஸ்லாமியர்கள் 4 மணி நேரம் பிரார்த்தனை செய்தனர். பிறகு இந்துக்கள் பூஜை செய்தனர். அப்போது ஜீவ சமாதி கதவு தாமாக திறந்தது. இதைத் தொடர்ந்து ஆலய நிர்வாகப் பொறுப்பை இந்துக்கள் ஏற்றனர்.

இந்த சித்தர் பீடத்தில் சைவ முறைப்படி விபூதி, வைணவ முறைப்படி துளசிதீர்த்தம் வழங்குகிறார்கள். இஸ்லாமிய வழக்கப்படி சந்தனம் வழங்கி, மயில் இறகால் மந்திரிக்கவும் செய்கிறார்கள்.

வாழ்நாள் முழுக்க மகான் படே சாகிப் அமைதியாக இருந்தார். அமைதியே ஆற்றலும், வளமும் தரும் என்பதை மற்றவர்களுக்கு உணர்த்தினார். இத்தலத்தில் ஒரு தடவை அமைதியாக அமர்ந்து தியானம் செய்தாலே போதும், மகானின் அருள் மடை திறந்த வெள்ளமாக உங்களை வந்து சேரும்.





# 34.ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரர்

நெரூர்

34. ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரர்

நெரூர்... கரூர் அருகே காவிரிக் கரையில் அமைந்துள்ள அமைதியான, இயற்கை எழில் கொஞ்சும் ஊர்.

உலகம் போற்றும் மாபெரும் சித்தபுருஷர்களில் ஒருவரான சதாசிவ பிரம்மேந்திரரின் ஜீவ சமாதி ஆலயத்தை தன்னகத்தே கொண்டுள்ள சிறப்பை இந்த ஊர் தாங்கிக் கொண்டிருக்கிறது.

திருச்சியில் இருந்து நாங்கள் காரில் இந்த ஜீவ சமாதிக்கு சென்றபோது மாலை மணி 4.00. ஜீவ சமாதி— ஆலய நடை திறக்கப்பட்டு பூஜைக்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன.


ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரர்

சுற்றுப் பகுதி கிராமங்களில் இருந்து பெண்கள் சாரைசாரையாக வந்து காசி விசுவநாதர் — விசாலாட்சியை வழிபட்டு விட்டு சதாசிவ பிரம்மேந்திரர் ஜீவ சமாதி அருகே வந்து அமைதியாக அமர்ந்தனர். அவர்களிடம் பேச்சுக்

கொடுத்தபோது, சதாசிவ பிரம்மேந்திரரின் சிறப்புகளை அடுக்கடுக்காக கூறினார்கள்.

அசந்து போய் விட்டோம். அடடா.... இவ்வளவு நாட்களாக இந்த அதிஷ்டானத்துக்கு வராமல் வாழ்நாளை கழித்து விட்டோமே என்ற குற்ற உணர்ச்சி ஏற்பட்டது.

சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த இந்த மகான் இன்றும் தங்களுக்கு அருள்பாலிப்பதாக பக்தர்கள் பரவசத்துடன் கூறினார்கள். போற்றுதலுக்குரிய இந்த சித்தர் மதுரையில் 17—ம் நூற்றாண்டில் அவதரித்தார். தந்தை பெயர் சோமநாத அவதானியர். தாயார் பெயர் பார்வதி அம்மையார்.


ஜீவ சமாதி

இவர்கள் தங்கள் மகனுக்கு சிவராமகிருஷ்ணன் என்று பெயர் சூட்டி வளர்த்தனர். சிறு வயதிலேயே அவர் வடமொழியை கற்றுத் தேர்ந்தார். பிறகு திருவிசை நல்லூர் சென்று ஸ்ரீதர வெங்கடேச அய்யாவாளிடம் வேதம் கற்றார். அப்போது 12 வயதில் சிவராம கிருஷ்ணனுக்கு திருமண ஏற்பாடு செய்தனர். ஒரு நாள் தாங்க முடியாத பசி ஏற்பட்டதால் சிவராமகிருஷ்ணன் வீட்டில் இருந்த உணவை எடுத்து தாமே சாப்பிட்டார்.

அதைக் கண்ட தாய், ‘‘வேதம் படித்த உனக்கு பசியை அடக்க தெரியவில்லையே’’ என்றார். இது சிவராமகிருஷ்ணன் மனதில் ‘‘சுருக்’’கென்று தைத்தது.

வீட்டை விட்டு வெளியேறினார். ஆத்ம ஞானம் தேடி அலைந்தார். இறுதியில் காஞ்சி காமமோடி மடத்தின் 57—வது பீடாதிபதியான ஸ்ரீபரமசிவந்திர சுவாமிகளிடம் தஞ்சம் அடைந்தார்.

அவர் சிவராமகிருஷ்ணனின் பெயரை சதாசிவம் என்று மாற்றினார். அவரிடம் கல்வி கற்று வரும்போது சதாசிவரின் பேச்சுத் திறமையை கேள்விப்பட்டு மைசூர் மகாராஜா அவரை அழைத்து ‘‘சமஸ்தான வித்வான்’’ ஆக்கினார்.

மைசூர் சமஸ்தானத்தில் மற்ற வித்வான்களை எல்லாம் அவர் தன் வாதத் திறமையால் தோற்கடித்தார். இவரது திறமையால் மற்ற புலவர்களுக்கு குறைவான சன்மானங்களே கிடைத்தது.

இதை பரமசிவந்திர சுவாமிகள் கேள்விப்பட்டார். சதாசிவத்தை அழைத்து, ‘‘ஊர் வாயெல்லாம் அடக்க கற்றுக் கொண்ட நீ, உன் வாயை அடக்க கற்றுக் கொள்ளவில்லையே’’ என்றார்.

உடனே மைசூர் சமஸ்தான வித்வான் பதவியை சதாசிவம் உதறித்தள்ளினார். யாரிடமும் பேசாமல் மவுனத்தை கடைப்பிடித்தார்.

பிரம்மஞானம் தேடி காடுகளில் சுற்றித் திரிந்தார். ஒருநாள் களைப்புத் தீர வயல் வரப்பு ஒன்றில் தலை வைத்து படுத்திருந்தார். அந்த வழியாக சென்ற பெண்கள், ‘‘முற்றும் துறந்த சன்னியாசிக்கு படுக்கத் தலையணையாக வரப்புத் தேவைப்படுகிறது’’ என்று கேலி செய்தனர்.

இதைக் கேட்ட சதாசிவம் மறுநாள் தலைக்கு எதுவும் வைக்காமல் படுத்திருந்தார். அன்று அவரைப் பார்த்த பெண்கள், ‘‘இவர் மற்றவர்கள் சொல்வதைத்தான் கேட்பார் போலிருக்கிறது. இறைவனை பற்றி சிந்திக்க மாட்டார் போலிருக்கிறது’’ என்றனர்.

சதாசிவத்துக்கு வாழ்வில் இரண்டாவது முறையாக மனதில் ‘‘சுருக்’’கென்று தைத்தது. ஆடைகளை துறந்து அவதூதராக (நிர்வாணமாக) மாறினார். காடு — மேடாக சுற்றினார். மக்கள் நடமாட்டம் இல்லாத பகுதிகளில் தவத்தில் ஆழ்ந்தார். நாளடைவில் தவ வலிமை பெருக, பெருக, அஷ்டமா சக்திகள் கிடைக்கப் பெற்றார்.

அவரது தவம் அவரை உயர்நிலை சித்தராக மாற்றி இருந்தது. பிரம்ம நிலையை அவர் எட்டினார். கல், தண்ணீர், உயிர் என்று அனைத்தும்

அவருக்கு ஒரே விதமாக தெரிந்தது. எதிலும் அவருக்கு பேதம் தெரியவில்லை. இதனால் அவர் பெயர் சதாசிவ பிரம்மேந்திரர் என்று மாறியது. தன்னை நாடி வந்த ஏழை — எளிய மக்களின் துயர் துடைத்தார். இதற்கிடையே இமயமலைக்கு சென்றார். சில ஆண்டுகள் காசியிலும், நர்மதா நதிக்கரையில் உள்ள ஓங்காரம் எனும் இடத்திலும் வசித்தார். பிறகு கராச்சிக்கு சென்று வந்தார்.

நீண்ட ஆண்டுகள் கழித்து மீண்டும் தென் இந்தியாவுக்கு வந்தார். குற்றாலம் கொடுமுடி, கும்பகோணம், தஞ்சாவூர், புன்னைநல்லூர் உள்பட பல ஊர்களில் அவதூதராக சுற்றித் திரிந்தார். இந்த கால கட்டத்தில் சதாசிவ பிரம்மேந்திரர் செய்த சித்தாடல்கள் ஏராளம்... ஏராளம்.

அவரது மகிமையை உணர்ந்து அரசர்கள் முதல் ஆண்டிகள் வரை அனைத்துத் தரப்பினரும் அவர் பின்னாலேயே சுற்றினார்கள். புதுக்கோட்டை மகாராஜா, மைசூர் மகாராஜா, தஞ்சாவூர் மகாராஜா ஆகிய மூவரும் சதாசிவ பிரம்மேந்திரரின் ஆஸ்தான சீடர்கள் போல திகழ்ந்தனர்.


ஜீவ சமாதி முன்புறத் தோற்றம்

அதிலும் குறிப்பாக புதுக்கோட்டை மகாராஜா இவர் பின்னாடியே சுற்றியபடி இருந்தார். 1738—ம் ஆண்டு ஒரு நாள் திருவரங்குளம் காட்டுப் பகுதியில் சுவாமிகள் இருப்பதை அறிந்து புதுக்கோட்டை மகாராஜா அங்கு சென்றார். எப்படியாவது சித்தரை தனது அரண்மனைக்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்று விரும்பினார். ஆனால் சதாசிவர் மனம் இரங்கவே இல்லை.

இதையடுத்து சுவாமிகளிடம், ‘‘என்னுடன் நீங்கள் வராவிட்டாலும் பரவாயில்லை. எனக்கு நீங்கள் மந்திர தீட்சை அளித்தால் போதும்’’ என்று புதுக்கோட்டை மகாராஜா கெஞ்சினார்.

உடனே சுவாமிகள் மணலில் தட்சிணாமூர்த்தி மந்திரத்தை எழுதினார். ‘‘ஓம் நமோ பகவதே தட்சிணாமூர்த்தியே மஹ்யம் மேதாம் ப்ர.ஃஞாம் பீரயச்ச ஸ்வாகா’’ என்பதே அந்த மந்திரமாகும்.

அந்த மந்திரத்தை தனக்கான உபதேசமாக எடுத்துக் கொண்ட புதுக்கோட்டை மகாராஜா, அந்த மந்திரம் எழுதப்பட்ட மணலை அப்படியே சேர்த்து அள்ளி, தனது ஆடையில் சேகரித்தார். பிறகு அதை புதுக்கோட்டையில் உள்ள அரண்மனைக்கு எடுத்துச் சென்றார். சதாசிவ பிரம்மேந்திரர் வரைந்து காட்டியபடி ஒரு யந்திரத்தை உருவாக்கினார். அதன் மீது தங்கச் சிமிழ் வைத்து மந்திர மணலை அதற்குள் போட்டு பூஜை செய்து வந்தார். தலைமுறைகள் கடந்தும் இன்றும் புதுக்கோட்டை அரச குடும்பத்து வாரிசுகள், அந்த மந்திர மணலை புனிதமாக வழிபட்டு வருகிறார்கள்.

அனைத்துத் தரப்பு மக்களும் தன்னைத் துரத்தினாலும் அவர் இடை இடையே பிரம்ம நிலையில் லயித்திருக்க தவறுவதில்லை. அத்தகைய தவத்தில் அவர் ஆழ்ந்து விட்டால் எப்போது சுய உணர்வுக்கு திரும்புவார் என்று சொல்ல முடியாது.

ஒருமுறை கொடுமுடியில் காவிரி ஆற்றின் குறுக்கே இருந்த பாறையில் அமர்ந்து அவர் தவம் செய்தார். அப்போது ஆற்றில் திடீரென வெள்ளம் கரைபுரண்டு வந்தது. தவத்தில் ஆழ்ந்திருந்த சதாசிவ பிரம்மேந்திரரை வெள்ளம் அடித்துச் சென்றது.

மக்கள் அவரை தண்ணீரில் பல இடங்களில் தேடினார்கள். அவர் கிடைக்கவில்லை. வெள்ளம் அவரை அடித்துச் சென்று விட்டதாக நினைத்தனர்.


தலவிருட்ச நாகர் சிலைகள்

வெள்ளம் வடிந்து சகஜமான பிறகு, சுமார் 3 மாதங்கள் கழித்து சிலர் வீடு கட்ட ஆற்றுக்குள் சென்று மண் அள்ளினார்கள். ஒரு இடத்தில் ஆழமாக வெட்டியபோது ரத்தம் பீறிட்டு வந்தது.

அதிர்ச்சி அடைந்த மக்கள் அந்த இடத்தைத் தோண்டினார்கள். அங்கு மணலுக்குள் சதாசிவ பிரம்மேந்திரர் புதைந்த நிலையில் அப்படியே தவக்கோலத்துடன் காட்சியளித்தார். மக்கள் அவரை சூழ்ந்து கொண்டு பயபக்தியுடன் வணங்கினார்கள்.

சத்தம் கேட்டு சதாசிவ பிரம்மேந்திரர் கண் விழித்தார். யாரையும் கண்டு கொள்ளாத அவர், எதுவுமே நடக்காதது போல எழுந்து விறுவிறுவென்று நடந்து சென்று விட்டார்.

3 மாதமாக அவர் ஆற்று மணலுக்குள் எப்படி புதைந்து கிடந்தார் என்று கொடுமுடி மக்கள் எதுவும் புரியாமல் விக்கித்துப் போய் நின்றனர்.

அதுபோல ஒரு தடவை ஒரு ஊரில் வயல் அறுவடை நடந்தது. நெல் அடித்து விட்டு வைக்கோல் போர் அமைத்தனர். அந்த சமயத்தில் அங்கு வந்த சதாசிவ பிரம்மேந்திரர் யாரும் பார்க்காத நேரம் பார்த்து வைக்கோல் போருக்குள் போய் அமர்ந்து விட்டார். இது தெரியாமல் மேலும் மேலும் வைக்கோல்கள் குவியலைப் போட்டு மிகப்பெரிய படப்பை ஏற்படுத்தி விட்டனர்.

அந்த வைக்கோல் படப்பில் இருந்து கொஞ்சம், கொஞ்சமாக வைக்கோல் போரை உருவி மாடுகளுக்கு போட்டு வந்தனர். இதற்கிடையே சுமார் 6

மாதமாக சித்தரை காணவில்லை எ ன்று பல ஊர்களிலும் பரபரப்பாக பேசினார்கள்.

6 மாதம் கழித்து ஒரு நா ள் வைக்கோல் போரை உருவியபோது உள்ளே ஆழ் தியானத்தில் சதாசிவ பிரம்மேந்திரர் இருப்பது தெரிந்தது. மேலும் சில வாரங்கள் அவர் அங்கேயே ஆடாமல் அசையாமல் இருந்தார். பிறகே தாமாக எழுந்து வேறு ஊருக்கு சென்றார்.

இப்படி சென்ற இடங்களில் எல்லாம் அற்புதம் செய்த சதாசிவ பிரம்மேந்திரர் உடல் உணர்வின்றி அலைந்தார். பிரம்ம லயத்தில் அவர் தன்னை நிலை நிறுத்திக் கொண்டிருந்தார்.

அவதூதராக தொடர்ந்து இருந்தால், அது மக்களுக்கு சிரமத்தை ஏற்படுத்தும் என்று ஒருநாள் நினைத்தார். 1753—ம் ஆண்டு புதுக்கோட்டை மகாராஜா உள்பட தம் அன்பர்கள் அனைவரையும் அழைத்தார். சித்திரை மாதம் தசமி திதியன்று ஜீவ சமாதி அடையப் போவதாக அறிவித்தார்.

காவிரி ஆறு தெற்கில் இருந்து வடக்கு நோக்கி ஓடும் நெரூரில் தனக்கு அதிஷ்டானம் அமைக்கப்பட வேண்டும் என்று அறிவுறுத்தினார். இதையடுத்து நெரூரில் அவருக்காக திருமந்திரத்தில் கூறப்பட்டுள்ள விதிகளின்படி குகை சமாதி உருவாக்கப்பட்டது. குறிப்பிட்ட தினத்தன்று அவர் நெரூரில் ஜீவசமாதி அடைந்தார்.

அதே நேரத்தில் அவர் மானா மதுரையில் ஒரு பக்தனுக்கு காட்சியளித்து விட்டு காரண சரீரமாக அதாவது ஆவி உருவத்தில் ஜீவ சமாதி அடைந்தார். அது போல பாகிஸ்தானில் கராச்சியில் உள்ள ஒரு பக்தனுக்கு காட்சி கொடுத்து விட்டு, சூட்சும சரீரமாகவும் அதாவது ஜோதி வடிவமாகவும் ஜீவ சமாதி அடைந்தார்.




இதனால் நெரூர், மானாமதுரை, கராச்சி ஆகிய 3 இடங்களிலும் சதாசிவ பிரம்மேந்திரருக்கு அதிஷ்டானம் உள்ளது. ஒரு சித்தர் ஒரே சமயத்தில் மூன்று இடங்களில் ஜீவ சமாதி ஆகி இருக்கும் அற்புதத்தை ஏற்படுத்தி இருப்பது இவர் மட்டுமே. மூன்று இடங்களிலும் சிறப்பான வழிபாடுகள் நடந்து வருகிறது. கங்கை, நர்மதா நதிக்கரைகளிலும் அவர் ஜீவ சமாதி இருப்பதாக சொல்லப்படுகிறது.

சமாதி அடைந்த 10–ம் நாள் தனது சமாதிக்குள் இருந்து வில்வம் முளைக்கும். 12–வது நாள் காசியில் இருந்து பிராமணர் ஒருவர் பாணலிங்கம் கொண்டு வருவார்.

அதைப் பெற்று தன் சமாதியில் இருந்து 12 அடி தூரம் முன்னால் பிரதிஷ்டை செய்யுங்கள் என்று சதாசிவ பிரம்மேந்திரர் கூறியிருந்தார்.

அவர் சொன்னபடியே நெரூர் சமாதியில் இருந்து வில்வம் செடி முளைத்தது. அதை பாதுகாத்து வளர்த்தனர். 12–வது நாள் காசியில் இருந்து லிங்கம் வந்தது. பிரதிஷ்டை செய்யப்பட்டது. அந்த லிங்கம் காசி விசுவநாதர் என்றழைக்கப்படுகிறார்.


சித்தர் வடிவ சிலை

சமாதி மீது முளைத்த வில்வம் ஓரளவு வளர்ந்ததும் மூன்று கிளைகளாக மாறியது. அவை சிவன், பிரம்மா, விஷ்ணு ஆகிய மும்மூர்த்திகள் என்று கருதப்பட்டது.

260 ஆண்டுகளைக் கடந்தும் அந்த வில்வம் மரபணு மாற்றம் உதவியுடன் இன்றும் அங்கு செழிப்பாக வளர்ந்து நிற்கிறது. சதாசிவ பிரம்மேந்திரரின் அருளைப் பெற ஆவலுடன் வரும் பக்தர்களுக்கு ஆசி வழங்கும் வகையில் அந்த வில்வம் ஓங்கி உயர்ந்து நிற்கிறது.

அந்த வில்வ மரத்தின் அருகில் சற்று நேரம் தியானம் செய்தாலே "யாமிருக்க பயம் ஏன்?" என்று அந்த வில்வம் நம்மிடம் பேசுவது போல இருக்கும்.

சதாசிவ பிரம்மேந்திரரின் பிரதிபிம்பமாக நமக்கு காட்சியளிக்கும் அந்த வில்வ மரத்துக்கு வஸ்திரம் வாங்கி சாத்துவதை பக்தர்கள் பழக்கத்தில் வைத்துள்ளனர்.

வஸ்திரம் சாத்தினால் தோஷம் நீங்கும் என்பது நம்பிக்கை. காஞ்சி சங்கராச்சாரியார், சிருங்கேரி சுவாமிகள் ஆகியோர் இங்கு வழிபாடு நடத்தியுள்ளனர்.

இந்த ஜீவ சமாதியை பிரதட்சணமாக வந்து வழிபாடு செய்பவர்களுக்கு ஜனன மரணங்களுக்கு விலக்கு பெற்று முக்தி பாதையில் செல்வதற்கு ஏற்ப பந்தங்கள் அகலும்.

பொதுவாக சித்தர்களின் ஜீவ சமாதி மீதே ஆலயங்கள் உருவாகும். ஆனால் இங்கு அதிஷ்டானத்துக்கு 12 அடி தொலைவில் லிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

மிகப்பெரிய அந்த ஆலய வளாகத்தில் விநாயகர், முருகன், கால பைரவர் சன்னதிகளுடன், நந்தவனமும் இடம் பெற்றுள்ளது. இதனால் இந்த ஜீவ சமாதி ஆலயம் மாறுபட்டதாக காணப்படுகிறது.

அதிஷ்டானம் பகுதியில் உள்ள அமைதி மனதை கொள்ளை கொள்கிறது. தினமும் காலை 9 மணிக்கு வில்வ மரத்தின் கீழ் உள்ள சு யம்பு லிங்கத்துக்கு அபிஷேகம் செய்கிறார்கள். அப்போது ருத்ரம், சமகம், புருஷ சூக்தம் ஆகியன பாராயணம் செய்யப்படும்.

பவுர்ணமி தோறும் சித்தருக்கு அபிஷேகம், சகஸ்ர நாம அர்ச்சனை, புஷ்ப அலங்காரம் செய்யப்படுகிறது. புதுக்கோட்டை மகாராஜா குடும்பத்தினர் இந்த அதிஷ்டான ஆலயத்தை பராமரித்து வருகிறார்கள்.

* பணக்காரர்கள் இங்கு சென்றால் பண்புடையவர்களாக மாறுவார்கள்.

* ஆணவக்காரர்கள் இங்கு சென்றால் அன்புடையவர்களாக மாறுவார்கள்.

* மண்ணாசை பிடித்தவர்கள் இங்கு சென்றால் மனிதர்களாக மாறுவார்கள்.

* பெண்ணாசை கொண்டவர்கள் இங்கு சென்றால், கற்புடையவர்களாக மாறுவார்கள்.

* மனிதனாக செல்பவர்கள் பிறவாமை எனும் உன்னதத்தை இங்கு பெறுவார்கள்.





# 35.ஸ்ரீ கோடி சுவாமிகள்

புரவிபாளையம், பொள்ளாச்சி.

## 35 . ஸ்ரீ கோடி சுவாமிகள்

சித்தப்புருஷர்கள் யுகம் யுகமாக வாழ்பவர்கள். பிரம்ம நிலை எடுக்கும் அவர்கள் எத்தனை ஆண்டுகள் வாழ்ந்தனர், வாழ் கிறார்கள், வாழ்வார்கள் என்பதை யாராலும் கணிக்க முடியாது.


ஸ்ரீ கோடி சுவாமிகள்

கோவை மாவட்டம் பொள்ளாச்சி அருகே உள்ள புரவிபாளையம் ஜமீன் அரண்மனையில் வாழ்ந்த கோடி சுவாமிகள் என்ற கோடிதாத்தா 936 ஆண்டுகள் வாழ்ந்ததாக நாடிக் குறிப்புகளின்படி கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. சீரடி சாய்பாபாவின் மறு அவதாரமாகவும் இந்த மகான் கருதப்படுகிறார். மெல்லிய தேகம், பளபளக்கும் வெண் தோல், தாடி, தீட்சண்யமான பார்வை, அதிகம் பேசாத நிலை— இத்தகைய கலவையாக கோடித் தாத்தா திகழ்ந்தார்.

இவர் தன் பக்தர்களிடம் “கோடி, கோடியாக வாழ். கோடி பேருக்கு அன்னம் கொடு” என்று எப்போதும் குறிப்பிடுவார். “கோடி” என்ற சொல்லை இவர் தினமும் பக்தர்களிடம் கூறியதால் இவருக்கு கோடி சுவாமிகள் என்ற பெயர் ஏற்பட்டது.




சிலரிடம் அவர் “என்ன தாத்தா... எப்படி இருக்கீங்க?” என்று நலம் விசாரிப்பதுண்டு. இதனால் கோடியும் தாத்தாவும் சேர்ந்து கோடிதாத்தா என்றும் அழைக்கப்பட்டார்.

தனுஷ்கோடியில்தான் இவர் மக்களிடம் முதன் முதலில் தென்பட்டார். இதனால் அவருக்கு கோடி சுவாமிகள் என்ற பெயர் ஏற்பட்டு இருக்கலாம் என்றும் சொல்கிறார்கள். தனுஷ் கோடியை கடல் ஆழிப்பேரலை கொள்ளைக் கொள்வதற்கு முன்பு இவர் அந்த ஊரில் இருந்தார்.

இவர் யார்? பெற்றோர் யார்? எந்த ஊர்? தனுஷ்கோடிக்கு எப்போது, எப்படி வந்தார்? யாருக்கும் தெரியாது. 1940—ம் ஆண்டு இவர் திடீரென தன்னை வெளிப்படுத்திக் கொண்டார். தனுஷ்கோடி ரெயில் நிலையத்தில் இருந்து சுமார் முக்கால் மைல் தொலைவில் மேற்கு திசையில் அந்தோணியார் கோவில் இருந்தது. அந்த கோவில் அருகில் சிறு மணல் மேடு.

அதன் மீது கோடி சுவாமிகள் ஒற்றைக் காலில் நின்று தவம் செய்தார். அவரைப் பார்த்தவர்கள் எல்லாம், “யாரோ... மகான் தவம் செய்கிறார்” என்று நினைத்துக் கொண்டார்களே தவிர, அவர் அருகில் செல்லவில்லை.

## ராஜீவ் மரணத்தை சூசகமாக சொன்னார்

**1991**–ம் ஆண்டு பாராளுமன்ற தேர்தல் பிரசாரம் விறுவிறுப்பாக நடந்து கொண்டிருந்தது. ராஜீவ்காந்தி தமிழ்நாட்டுக்கு பிரசாரத்துக்கு வருவதற்கு ஒரு நாளைக்கு முன்பு கோவை காங்கிரசார் சிலர் கோடி சுவாமிகளை சந்தித்தனர்.

“ராஜீவ் ஆட்சிக்கு வந்து விடுவாரா?'' என்று ஆர்வத்தோடு கேட்டனர். வழக்கமாக யார், என்ன கேள்வி கேட்டாலும், “பரிபூரணம், எல்லாமே நலம்தான், எல்லாமே ஜெயம்தான், கோடி, கோடியாய் பெருகட்டும்'' என்றெல்லாம் கோடி சுவாமிகள் பதில் அளிப்பார்.

ஆனால் ராஜீவ் பற்றி காங்கிரசார் கேட்ட கேள்விக்கு சுவாமிகள் அப்படி சாதகமான பதில் சொல்லவில்லை. அதற்கு பதில், “எல்லாரும் டெல்லிக்கு வருவார்கள்'' என்று மட்டும் கூறி அமைதியாகி விட்டார்.

இதைக் கேட்ட காங்கிரசார், “ராஜீவை வாழ்த்த, அவர் பதவி ஏற்ப விழாவுக்கு எல்லாரும் வருவார்கள் போலிருக்கிறது'' என்று தவறாகப் புரிந்து கொண்டனர். ஸ்ரீபெரும்புதூரில் பிரசாரத்துக்கு சென்ற ராஜீவ் படுகொலை செய்யப்பட்டு, அவர் உடல் டெல்லி கொண்டு செல்லப் பட்டபோது உலகத் தலைவர்கள் அஞ்சலி செலுத்த திரண்டபோதுதான், கோடி சுவாமிகள் சூசகமாக சொன்னது காங்கிரசாருக்கு புரிந்ததாம்.

அது போல இந்திராகாந்தியை அவரது காவலர்கள் சுட்டபோது, “சுட்டுட்டாங்க... சுட்டுட்டாங்க'' என்று கோடி சுவாமிகள் அருகில் இருந்தவர்களிடம் கவலையோடு சொன்னாராம்.

கேட்டவர்களுக்கு அது என்னவென்று புரியவில்லை. சுமார் 2 மணி நேரம் கழித்து இந்திராகாந்தி சுடப்பட்ட தகவல் வெளியான பிறகே சுவாமிகள் சொன்னது அவர்களுக்கு புரிய வந்தது.

எவ்வளவு வெயில் அடித்தாலும் சரி.... எவ்வளவு மழை பெய்தாலும் சரி... சுவாமிகள் தவத்தை கைவிடவில்லை. பலத்த மழை பெய்யும்போது தலையை சற்று உயர்த்தி வாயை பிளந்து மழை நீரை தண்ணீராகக் குடிப்பார் அவ்வளவுதான். வேறு அவர் எதையும் சாப்பிட்டதே இல்லை.

நாட்கள் ஓடின. கோடி சுவாமிகளை அணுகும் பாக்கியமும், ஆதரிக்கும் புண்ணியமும் ஒருவருக்கு கிடைத்தது. அவர் பெயர் வரதராஜுலு. ஆங்கிலேயர்களின் ஆட்சியின் கீழ் அவர் ரெயில்வே போலீசில் சப்—

இன்ஸ்பெக்டராக பணியாற்றி வந்தார். 1940—களில் சுதந்திரப் போராட்டம் உச்சக்கட்டத்தை நெருங்கிக் கொண்டிருந்ததால் மண்டபத்தில் இருந்து தனுஷ்கோடி வரையிலான துறைமுகம் மற்றும் கப்பல் கட்டும் தளம் உள்ளிட்ட பகுதிகளை கண்காணிக்கும் பொறுப்பு வரதராஜுலுவிடம் ஒப்படைக்கப் பட்டிருந்தது.

எனவே அவர் தினமும் மண்டபத்தில் இருந்து தனுஷ்கோடி வரை ரெயிலில் சென்று வருவார். அப்போதுதான் அவர் தனுஷ்கோடி ரெயில் நிலையம் அருகில் ஒற்றைக் காலில் தவம் நின்ற சுவாமிகளைப் பார்க்க நேரிட்டது. முதலில் வரதராஜுலுவுக்கும் யாரோ ஒரு மகான் தவத்தில் ஆழ்ந்துள்ளார் என்றே நினைப்பு வந்தது.


புரவிபாளையம் ஜமீன்தார் அரண்மனை

பிறகு மின்னல் வெட்டியது போல அவர் மூளை "சுவாமிகளை அருகில் சென்று பார்" என்று கட்டளையிட்டது. திரும்ப திரும்ப அதுவே நினைவுக்கு வந்தபடி இருந்தது. மறுநாள் கோடி சுவாமிகள் தவம் புரிந்த மணல்மேடு பகுதிக்கு சப்—இன்ஸ்பெக்டர் வரதராஜுலு சென்றார். அருகில் சென்று சுவாமிகள் முகத்தை பார்த்த அவருக்கு தூக்கி வாரிப் போட்டது. அதிர்ச்சியும், ஆனந்தமும் அடைந்தார்.

சில ஆண்டுகளுக்கு முன்பு தன் கனவில் தோன்றி பேசியது இந்த சுவாமிகள்தான் என்று அவர் மனம் கூத்தாடியது. கனவில் வந்த சுவாமிகள், "பங்குனி மாதம் 16—ந்தேதி (திங்கட்கிழமை) உனக்கு ஆண் குழந்தை பிறப்பான்" என்று கூறியிருந்தார்.

அவர் சொன்னபடி 16—ந்தேதி ஆண் குழந்தை பிறந்தது. அதன் பிறகு இடமாற்றம் உள்ளிட்ட சில காரணங்களால் அவர் தன் கனவில் வந்தவரை மறந்திருந்தார். இப்போது சுவாமிகளைப் பார்த்ததும் அவர்தான் இவர் என்று மனம் தெளிந்தது. தவத்தில் நின்ற சுவாமிகளை சுற்றி வந்து வரதராஜுலு வணங்கினார். பிறகு சுவாமிகள் எதிரில் அப்படியே உட்கார்ந்து விட்டார்.

சுமார் 1 மணி நேரம் கழித்து சுவாமிகள் தவம் கலைந்தது. கடற்கரையை நோக்கி விறுவிறுவென நடந்தார்.

கடற்கரையை அடைந்ததும் திரும்பினார். ‘‘இங்கு நான் நின்று இருந்தபோது உன்னைக் கண்டேனப்பா... இங்கு கோடான கோடி மக்கள் வந்து செல்கிறார்கள். என்னை யாரும் கண்டுபிடிக்கவில்லை. ஆனால் நீ சிரத்தை எடுத்து கண்டு பிடித்தாய்’’ என்றார்.

பிறகு, ‘‘வருகிற 15—ந்தேதி பவுர்ணமி அன்று நான் உன் வீட்டுக்கு வருகிறேன்’’ என்று சுவாமிகள் கூறினார். சொன்னபடி 15—ந்தேதி வரதராஜுலுவுடன் புறப்பட்டார்.

## 4 லட்சம் பேரை காப்பாற்றினார்?

பிரபல தீர்க்கதரிசி நாஸ்டர்டாம் எழுதிய ஒரு குறிப்பில் 1994–ம் ஆண்டு சூரியனில் ஏற்படும் பிளவால் கதிர்வீச்சு ஏற்பட்டு 4 லட்சம் தமிழர்கள் மரணம் அடைய வாய்ப்புள்ளது என்று குறிப்பிட்டிருந்தார். இதை கோடி சுவாமிகளும் நன்கு உணர்ந்திருந்தாராம்.

குறிப்பிட்ட தினத்தன்று சூரியனில் ஏற்பட்ட பிளவு கதிர் வீச்சை கோடி சுவாமிகள் ஒருவரே ஏற்றுக் கொண்டாராம். இதனால் 4 லட்சம் தமிழர்கள் தப்பியதாக தற்போதைய சித்த புருஷர்கள் சொல்கிறார்கள்.

அவர்கள் பின்னால் ஒரு நாய் ஓடி வந்தது. அதைப் பார்த்த கோடி சுவாமிகள், ‘‘நீ இங்கேயே இருந்து கவனித்துக் கொள். நான் போய் வருகிறேன்’’ என்றார். அடுத்த நிமிடம் அந்த நாய் திரும்பிச் சென்று விட்டது.

கோடி சுவாமிகளும், வரதராஜுலுவும் ரெயிலில் ஏறி பாம்பன் வந்தனர். வீடு வந்ததும், ‘‘எல்லாம் ஓடி விட்டது. உன் தாயாரை எழுந்து வரச் சொல்’’ என்று கோடி சுவாமிகள் கூறினார்.

வரதராஜுலுக்கு மீண்டும் ஆச்சரியம் ஏற்பட்டது. தன் தாயார் நடக்க முடியாமல் வீட்டுக்குள் படுத்த படுக்கையாக கிடந்தது இவருக்கு எப்படி

தெரியும் என்று வியந்தார். பிறகு கோடி சுவாமிகளுக்கு அவர் இலை போட்டு உணவு பரிமாறினார்.

உணவை 3 முறை ஆசீர்வதித்த சுவாமிகள், பரிபூரணம் என்று கூறி விட்டு, அதை குழந்தைகளுக்கு கொடுக்கும்படி கூறினார். வரதராஜுலு வீட்டில் 1 வாரம் தங்கியிருந்த சுவாமிகள் அற்புதத்துக்கு மேல் அற்புதம் நடத்தினார். வரதராஜுலுவின் மூத்த மருமகனுக்கு வேலை கிடைக்கச் செய்தார். கடன்களை முழுவதும் அடைக்க வைத்தார்.

பிறகு சுவாமிகள் தனுஷ்கோடிக்கு திரும்பி சென்று வழக்கம் போல ஒற்றைக் காலில் நின்று தவத்தைத் தொடர்ந்தார். இந்த நிலையில் வரதராஜுலுக்கு சென்னைக்கு மாற்றலாகியது. 6 மாதம் கழித்து மீண்டும் அவருக்கு திருச்சிக்கு இடமாறுதல் கிடைத்தது.

இந்த 6 மாதங்களில் சுவாமிகளைப் பார்க்க முடியாமல் தவித்துக் கொண்டிருந்த வரதராஜுலு, தனுஷ்கோடி சென்று சுவாமிகளை திருச்சிக்கு அழைத்து வந்து விட்டார். திருச்சி கல்லுக்குழி பகுதிக்கு வந்த சுவாமிகள் அங்கிருந்த ஆஞ்சநேயர் கோவிலில் ஒற்றைக் காலில் தவம் இருப்பதை வழக்கமாகக் கொண்டார்.

## எப்படி செல்வது?

**கோ**வையில் இருந்து 41 கி.மீ., பொள்ளாச்சியில் இருந்து 12 கி.மீ. தொலைவில் புரவிப்பாளையம் உள்ளது. பொள்ளாச்சியில் இருந்து செல்பவர்கள் நடுப்புணி எனும் ஊருக்கு செல்லும் டவுன் பஸ்சில் சென்று புரவிப்பாளையத்தை அடையலாம். கோவையில் இருந்து காரில் செல்பவர்கள் கிணத்துக்கடவு வழியாக சென்று வடக்கிப்பாளையம் பிரிவில் திரும்பி சூலக்கல் வழியாக புரவிப்பாளையத்தை அடையலாம்.

சுவாமிகளின் சிறப்புகளை அறிந்து நிறைய பேர் திருச்சி வந்து அவரிடம் ஆசி பெற்றனர். அதன் பிறகு கோடி சுவாமிகளின் நடவடிக்கைகளில் பெரும் மாற்றம் ஏற்பட்டது. ஏழை—எளியவர்கள் மிகவும் விரும்பி அழைத்ததால், அவர்களது ஊருக்கு புறப்பட்டுச் சென்று விடுவார். சிலரிடம், நான் உன் வீட்டுக்கு வருகிறேன் என்று கூறி சென்று விடுவார். இதனால் திருச்சி, வயலூர், சேலம்,

சென்னை, கோவை, பொள்ளாச்சி, புரவிப்பாளையம் என்று அவரது பயணம் நீண்டு கொண்டே இருந்தது.

திருச்சியில் வரதராஜுலு வீட்டில் இருந்த அவரை சென்னை ஐகோர்ட்டில் வக்கீலாக பணிபுரிந்து வந்த ஏகாம்பரம் விரும்பி சென்னைக்கு அழைத்து சென்றார். ஏகாம்பரம் வீட்டின் பின்புறம் இருந்த முனீஸ்வர் கோவிலில் தங்கி இருந்த சுவாமிகள் ஏராளமான சித்தாடல்களை நிகழ்த்திக் காட்டி சென்னை மக்களை வியக்க வைத்தார்.

ஒருநாள் வக்கீல் ஏகாம்பரம் திடீரென மூளைக் காய்ச்சல் ஏற்பட்டு கோமா நிலைக்கு சென்றார். அவர் பிழைப்பது கஷ்டம் என்று டாக்டர்கள் சொல்ல, அப்போது அங்கு கோடி சுவாமிகள் வந்தார்.

## இளையராஜா, டாக்டர் கமலிக்கு கிடைத்த ஆசீர்வாதம்

**1982**–ம் ஆண்டு இளையராஜா முதன் முதலில் சுவாமிகளை சந்தித்தார். இளையராஜா மீது சுமார் 15 நிமிடங்கள் கை வைத்து "போய் வா உலகம் முழுவதும் ராஜாவாக பவனி வா" என்று சுவாமிகள் ஆசீர்வதித்தார். அதன்படி ராஜாவின் இசை உலகம் முழுவதும் பரவியது.

டாக்டர் கமலி ஸ்ரீபால் தன் அனுபவத்தை கூறுகையில், "நாங்கள் சென்றிருந்த போது மாடியில் அமர்ந்து சூரியனையே பார்த்துக் கொண் டிருந்தார். எங்களைப் பார்த்ததும் சிரித்துக் கொண்டே இருந்தார். "பரிபூரணம்" என்று அவர் ஆசீர்வதித்தால் நல்லது நடக்கும் என்பார்கள். அவர் அளித்த ஆசீர்வாதம் மறக்க முடியாதது" என்றார்.

ஏகாம்பரம் நெற்றியில் விரலை வைத்து ஏதோ முணுமுணுத்தார். பிறகு வெளியில் வந்த அவர், "சரியாகி விட்டது. எனக்கும் ஏகாம்பரத்துக்கும் உப்புமா செஞ்சு எடுத்துட்டு வாங்க" என்றார். அவர் சொன்னது போல அடுத்த சில நிமிடங்களில் ஏகாம்பரம் எழுந்து உட்கார்ந்தார்.

இதையடுத்து பக்தர்கள் அழைத்ததால் மன்னார்குடி, கும்பகோணம், பட்டுக்கோட்டை, பழனி ஆகிய ஊர்களுக்கு சென்று விட்டு மீண்டும் சென்னை திரும்பினார். அப்போது கோவையில் வசித்த ஏகாம்பரத்தின் தங்கை ஜெகதாம்பிகை, சுவாமிகள் தங்கள் வீட்டுக்கு வர வேண்டும் என்று அழைத்தார். உடனே சரி என்று சுவாமிகள் கோவைக்கு புறப்பட்டுச் சென்று

விட்டார். கோவையில் நிர்மலா கல்லூரி எதிரில் அப்புசாமி ரோட்டில் தங்கியிருந்தார்.

இதை அறிந்த நெய்க்காரப்பட்டி ஜமீன்தார் ஜெகநாதநாயுடு, அங்கு சென்று சுவாமிகளை சந்தித்தார். அவர் சுவாமிகளை தம்முடன் வருமாறு அழைக்க, மறுப்பு தெரிவிக்காத சுவாமிகள், கோவை ரேஸ்கோர்ஸ் பகுதியில் நெய்க்காரப்பட்டி ஜமீனுக்கு சொந்தமான பங்களாவில் வந்து தங்கினார்.

மறுநாளே ஒரு பக்தர் சிங்காநல்லூரில் உள்ள தன் வீட்டுக்கு சுவாமிகளை அழைத்துச் சென்றார். அங்கு சித்தரை தரிசிக்க புரவிபாளையம் ஜமீனைச் சேர்ந்த பச்சை மரகதவள்ளி தாயாரும், சவுந்தரவள்ளியும் வந்தனர்.

அவர்களைப் பார்த்த அடுத்த வினாடி சுவாமிகள் மளமளவென நடந்து சென்று அவர்களது காரில் ஏறி அமர்ந்தார். ‘‘உங்கள் வீட்டுக்குப் போகலாம்’’ என்றார்.

இதையடுத்து கோவை ராமநாதபுரத்தில் உள்ள அவர்களது பங்களாவுக்கு சுவாமிகள் வந்து சேர்ந்தார். இதை அறிந்த புரவிப்பாளையம் ஜமீன்தார் ஜெகன் மண்டலாபதி கோபண்ண மன்றாடியார், உடனே கோவை வந்தார். சுவாமிகளிடம் ஆசி வாங்கிய அவர், ‘‘புரவிப்பாளையம் வருகிறீர்களா?’’ என்று கேட்டார்.

‘‘ஆகா வருகிறேன்’’ என்று கோடி சுவாமிகள் மகிழ்ச்சியோடு கூறினார். காரில் அழைத்துச் செல்லப்பட்ட அவர் புரவிப்பாளையம் அரண்மனையை அடைந்ததும், காரில் இருந்து இறங்கி மட மடவென மாடி ஏறி ஒரு அறையை தனக்கென தேர்வு செய்து அமர்ந்தார். 1962—ம் ஆண்டு இந்த அற்புதம் நடந்தது.

அவர் ஜீவ சமாதியான 1994—ம் ஆண்டு வரை 32 ஆண்டுகள் அவர் அந்த மாடி அறையில்தான் இருந்தார். ஒரு நாள் கூட அவர் கீழே இறங்கவில்லை.

## அறிவியலுக்கும் அடங்காதவர்

இங்கிலாந்து, ஸ்பெயின் நாடுகளைச் சேர்ந்த வயோதிகம் துறையைச் சேர்ந்த விஞ்ஞானிகள் 1986–ம் ஆண்டு புரவிப்பாளையத்துக்கு வந்து கோடி சுவாமிகளின் டி.என்.ஏ. மூலக் கூறுகள் மற்றும் குரோமோசோம்களை எடுத்து ஆய்வு செய்தனர். கோடி சுவாமிகள் எத்தனை ஆண்டுகளாக வாழ்கிறார் என்பதை கண்டுபிடிப்பது அவர்களது நோக்கமாக இருந்தது.

ஆனால் கோடி சுவாமிகளின் டி.என்.ஏ. மூலக்கூறுகள் அவர்களை குழப்பத்தில் ஆழ்த்தியது. எதையும் கண்டு பிடிக்க இயலவில்லை. அறிவியலுக்கும் அடங்காதவராக சுவாமிகள் திகழ்ந்தார்.

அதுபோல சுவாமிகள் பற்றிய ரகசியங்களை நாடி ஜோதிடம் மூலம் கண்டுபிடித்து விடலாம் என்று சிலர் வந்தனர். சுவாமிகள் அருகில் அமர்ந்து ஆசி பெறுவது போல ரேகை பெற்று நாடி பார்த்தனர்.

அந்த நாடியில் ரேகைக்குரியவருக்கு 7 வயதாகிறது என்று வந்தது. இதனால் அவர்கள் அதிர்ச்சி அடைந்தனர். அப்போது அவர்களைப் பார்த்து சிரித்த கோடி சுவாமிகள், "என்ன.... உங்க நாடி ஜோதிடம் என்ன சொல்கிறது?'' என்றாராம். எந்த ஒரு சக்தியாலும் அவர் அளவிட முடியாதவராகத் திகழ்ந்தார்.

இந்த 32 ஆண்டுகளும் அவர் நடத்திய அற்புதங்கள் கணக்கிட முடியாத அளவுக்கு இருந்தன. பல ஆயிரம் பேர் அவர் முகத்தைப் பார்த்து, தோஷத்தை போக்கி வாழ்வில் தங்களை மேம்படுத்திக் கொண்டனர். இனம், மொழி, மதம் கடந்து மக்கள் அவரை வந்து சந்தித்தனர்.

தினமும் நூற்றுக்கணக்கானவர்கள் அவரை சந்தித்தனர். அவர்களில் பெரும்பாலானவர்கள் சுவாமிக்கு ஆரஞ்சு மிட்டாய், சாக்லேட், பிஸ்கட் மற்றும் உணவு வகைகளை எடுத்து வந்தனர். சிலர் அசைவ உணவு கூட சமைத்து எடுத்து வந்ததுண்டு.

ஆனால் கோடி சுவாமிகள் எந்த உணவையும் கையால் எடுத்து சாப்பிட்டதே இல்லை. யாராவது ஊட்டி விட்டால், 2 கவளம் சாப்பிடுவார். ஆனால் ஒருநாள் கூட அவர் கழிவறைக்குச் சென்று யாரும் பார்த்ததே இல்லை. அவர் தண்ணீர் குடித்ததை யாரும் பார்த்ததே இல்லை. அது போல அவர் ஒருநாள் கூட குளித்ததும் இல்லையாம். என்றாலும் சுவாமிகள் உடலில் இருந்து வியர்வை

வாசனை கூட வந்தது இல்லை. கம, கமவென வாசனைத் திரவியங்களின் மயக்கும் வாசம்தான் வந்ததாம்.

கடும் கோடைக்காலத்தில் எல்லாரும் வெப்பம் தாங்காமல் அவதிப்படும்போது அவர் 4 அல்லது 5 கோட்டுகளை ஒன்றன் மீது ஒன்றாக அணிந்திருப்பார். என்றாவது ஒருநாள் திடீரென எல்லாவற்றையும் கழற்றி வீசி விடுவார். ஒருவரைப் பார்த்ததுமே அவர்களது அனைத்துப் பிறவி வரலாறும் அவருக்கு சினிமா காட்சிகள் போல தெரிந்து விடுமாம். அகம்பாவம் பிடித்தவர்கள், பாவம் செய்தவர்களை அவர் விரட்டி விடுவார்.

நல்ல மனம் கொண்டவர்கள் வந்தால் சிரித்துக் கொண்டே வரவேற்பார். அவர்களை தன் அருகே அழைத்து உச்சந்தலையில் கை வைத்து ஆசீர்வாதம் செய்து அனுப்புவார். கோடி சுவாமிகளின் கை தங்கள் மீது பட்டதுமே அத்தனை பிரச்சினைகளும் தீர்ந்து விட்ட உணர்வு ஏற்படுமாம். பல ஆயிரம் பக்தர்கள் இதை உணர்வுப்பூர்வமாக அனுபவித்துள்ளனர். சிலருக்கு மட்டும் அவர் "கோடி, கோடியாக வாழ்வாய்" என்று ஆசீர்வதித்தார். அவர்கள் எல்லாம் இன்றும் கோடீசுவரர்களாக உள்ளனர்.

சிலரிடம் கோடி பேருக்கு அன்னம் கொடு என்பார். அந்த பக்தர்கள் ஆத்ம ஞானம் பெறும் வகையில் இந்த உத்தரவை பிறப்பித்ததுண்டு. அவர் உத்தரவுக்கு கீழ்படிந்து பலர் பவுர்ணமி, அமாவாசை நாட்களில் புரவிப்பாளையத்தில் அன்னதானம் வ ழங்கினார்கள்.

அது இன்றும் தொடர்கிறது. தன்னுடைய சித்தாடலால் நிறைய பேரின் நோய்களை குணப்படுத்தி உள்ளார். பிறவிக் குருடர்களை பார்க்க வைத்துள்ளார். முடவர்களை நடக்க வைத்தார்.

அவர் கையில் என்ன இருக்கிறதோ... அதுதான் பிரசாதம். அதைத் தூக்கி வீசுவார். யாருக்கு அது கிடைக்கிறதோ.. அவர்கள் வாழ்வில் மாற்றம் ஏற்படும்.

அவர் ஜீவசமாதிக்கு சென்று வழிபடுங்கள். உங்கள் வாழ்விலும் மாற்றும் ஏற்படுத்துவார்.





# 36.ஸ்ரீ சோமப்பா சுவாமிகள்

திருப்பரங்குன்றம், மதுரை..

36. ஸ்ரீ சோமப்பா சுவாமிகள்

சோமப்பாவுக்கு மிகவும் பிடித்த தின்பண்டம் என்ன தெரியுமா? கடலைப் பருப்பு. அதைப் பார்த்து விட்டால் சோமப்பாவுக்கு மகிழ்ச்சியும், உற்சாகமும் வந்து விடும்.

“கொண்டா.... கொண்டா... சோமப்பா, சாப்பிடும்” என்று சொல்லி “வெடுக்”கென்று கடலைப் பருப்பு, கடலை மிட்டாயைப் பறித்து சோமப்பா சாப்பிட்டு விடுவார்.


சோமப்பா சுவாமிகள் ஜீவ சமாதி

யார் இந்த சோமப்பா?

மதுரை அருகே திருப்பரங்குன்றத்தில் 50 ஆண்டுகளுக்கு முன்பு வரை மக்களோடு வாழ்ந்து, மகத்தான சித்தாடல்கள் புரிந்த மிக அபூர்வமான சித்த புருஷர். இறை இன்பத்தை உணராதவர்களுக்கு அவர் புரியாத புதிராக இருந்தார். புரிந்தவர்களுக்கோ.... அவர் தேவாமிர்தமாக திகழ்ந்தார்.

யாரைப் பார்த்தாலும் “சோமப்பா... வா” என்பார். அவர் ஓரிடத்தில் இருந்து மற்றொரு இடத்துக்குப் புறப்பட்டு விட்டால், “சோமப்பா போகப் போவுது” என்பார். அதாவது அவர் தன்னையும் சோமப்பா என்றார். மற்றவர்களையும் சோமப்பா என்றார். அவர் பார்க்கும் எல்லாவற்றையுமே “சோமப்பா” என்றே அழைத்தார். அவருக்கு எல்லாமே சோமப்பாதான்.

சோமன் என்பது பரம்பொருளான ஈசனைக் குறிக்கும். ஈசன் நினைவில் அவர் எப்போதும் திளைத்திருந்தார். இதனால் அவரையும் அறியாமல் அவர் வாய் 24 மணி நேரமும் சோமப்பா.... சோமப்பா என்று சொல்லியது. சர்வமும் சிவ மயம் என்பது போல அவருக்கு சர்வமும் சோமப்பா மயமாக இருந்தது. இதன் காரணமாக அந்த சித்தப் புருஷரின் பெயர் சோமப்பா சித்தர் என்றாகி விட்டது.

அந்த சித்தரின் உண்மையான பெயர் இதுவரை யாருக்கும் தெரியாது. அவர் எங்கு, எப்போது பிறந்தார்? என்பன போன்ற விவரங்களுக்கும் இதுவரை விடை கிடைக்கவில்லை. அவர் எங்கிருந்து, எப்படி திருப்பரங்குன்றத்துக்கு வந்தார் என்பதும் மர்மமாக உள்ளது. ஆனால் அவர் வருகை ஒரு அற்புத திருவிளையாடல் மூலம் வெளியுலகுக்கு தெரிய வந்தது.

அந்தக் காலகட்டத்தில், திருப்பரங்குன்றம் திருக்கூடல் மலையில் கட்டிக்குளம் மாயாண்டி சுவாமிகள் வசித்து வந்தார். அவரை அணுக்கச் சீடராக இருந்து இருளப்பக் கோனார் பராமரித்து கவனித்து வந்தார். மாயாண்டி சுவாமிகள் பெரும்பாலும் பரிபாஷையில்தான் பேசுவார். அந்த பரிபாஷையின் பொருள் என்ன என்பது இருளப்பக் கோனாருக்குத்தான் தெரியும்.

ஒருநாள் இருளப்பக் கோனாரை அழைத்த மாயாண்டி சுவாமிகள், “அப்பு..... ஒரு சிவக்கனி திருக்கூடல் மலைக்கு வந்தாச்சு.. அந்த சிவக்கனி உங்களை எல்லாம் சுகமாக்கப் போகும் பெரும் தவக்கனி. அது புத்தியோடு சித்தி பெற்ற

புனிதக் கனி. பேச்செல்லாம் சிவமாக்கிய அந்த கனியை நீ பேணி பாதுகாக்க வேண்டும்... ரொம்ப முக்கியம் அப்பு. கவனம்'' என்றார்.

இருளப்பக் கோனாருக்கு புரிந்து விட்டது. யாரோ ஒரு மகான் திருக்கூடல் மலைக்கு வந்திருக்கிறார். அவரை கண்டுபிடித்து பராமரிக்க வேண்டும் என்று தெளிவு பெற்றார். அந்த மகான் யாராக இருக்கும் என்று திருக்கூடல் மலை முழுக்க தேடினார். திடீரென அவருக்குள் மலை நுழை வாயில் பகுதிக்கு சென்று பார் என்ற உந்துதல் ஏற்பட்டது. மறுவினாடி அங்கு ஓடினார்.

வாசல் பகுதியில் ஓரிடத்தில் கட்டிட வேலைகளுக்காக மணல் கொட்டி குவித்து வைக்கப்பட்டிருந்தது. அதில் வெள்ளை வேட்டி, வெள்ளை ஜிப்பாவுடன் ஒருவர் கால் நீட்டி படுத்திருந்தார். கண்களை மூடி, கைகளை தலையணையாக வைத்திருந்தார். தலைமுடி ஜடையாக இருந்தது. நீண்ட நாட்களாக மழிக்கப்படாத தாடியுடன் காணப்பட்ட அவரைப் பார்த்த இருளப்பக் கோனாருக்கு, சுவாமிகள் சொன்ன மகான் இவராக இருப்பாரோ? என்ற சந்தேகம் எழுந்தது.

'எதற்கும் அழைத்து பார்ப்போம்' என்று முடிவு செய்த அவர், 'அய்யா..... அய்யா....' என்று குரல் கொடுத்தார். மறு வினாடி மணலில் படுத்திருந்த மகான் கண் திறந்துப்பார்த்தார்.

இருளப்பக் கோனாரைப் பார்க்காமல், வேறு எங்கோ பார்த்தபடி, ''சோமப்பா உன்னிடம் சொல்லி விட்டதா? சோமப்பா சொல்லி விட்டதா? சரி.... சரி..... நீ போ, இனிமேல் சோமப்பா இந்த மலையில்தான் தங்கப் போவுது.... சொல்லி விடு'' என்றார்.

இருளப்பக் கோனார் அவரிடம் அடுத்து பேச முயன்றபோது, ''போ.... சோமப்பா....'' என்றபடி அந்த மகான் எழுந்து ஓடினார். கல், முள் நிறைந்த திருக்கூடல் மலை மீது பாதை இல்லாத ஒரு பகுதியில் மளமளவென புகுந்து மலை உச்சியை நோக்கி ஓடி விட்டார்.

இருளப்பக் கோனாருக்கு எதுவும் புரியவில்லை. மீண்டும் மாயாண்டி சுவாமிகளிடம் வந்து நடந்ததை எல்லாம் கூறினார்.

மாயாண்டி சுவாமிகள் சிரித்தார். ''அப்பு... உனக்கு இன்னுமா புரியல.... அந்த சிவக்கனி, காலங்காலமா... காடு மேடெல்லாம் அலைந்தது. எங்கோ பிறந்து,

எங்கோ வளர்ந்து, இங்கே வந்துள்ளது. பழுத்து பக்குவப்பட்ட அந்த சிவக்கனி பக்தர்களுக்கு சுவை கொடுக்க இந்த மலைக்கு வந்துள்ளது. அந்த சிவக்கனியை சாதாரணமாக நினைத்து விடாதீர்கள். வித்து இல்லாது விளைச்சல் தரும் அற்புதக்கனி. புரிந்து கொள்'' என்றார்.

ஆக... வந்து இருக்கும் சித்தப் புருஷர் மிக, மிக உயர்வானவர் என்ற உண்மையை இருளப்பக் கோனார் உணர்ந்தார். அன்று முதல் வீட்டில் உணவு தயாரானதும், அதை எடுத்துக் கொண்டு அவர் சோமப்பா சித்தரை தேடிக் கண்டுபிடித்து உணவளிப்பதை வழக்கமாகக் கொண்டார்.

சில நாள் மலை இடுக்குகளில் சோமப்பா இருப்பதை எளிதில் கண்டு பிடித்து விடுவார். சில சமயம் திருக்கூடல் மலை முழுவதும் சல்லடை போட்டு தேடினாலும் சோமப்பா எங்கு போனார் என்பதை கண்டுபிடிக்க முடியாது. என்றாலும் இருளப்பக் கோனார் சலித்ததே இல்லை. தேடி பிடித்து உணவு கொடுப்பார்.

சில சமயம், ''சாப்பாடா... கொண்டா...'' என்று ஆசை, ஆசையாக சோமப்பா வாங்கிச் சாப்பிடுவார். சில சமயம் ''சோமப்பாவுக்கு வயிற்றுப் பசியா? எவன் சொன்னான்? நீ சாப்பாடு கொடுத்து என் வயிற்றை நிரப்பி விட முடியுமா?'' என்று கேலியும் கிண்டலும் செய்வார்.


ஜீவசமாதி உள்பகுதி

ஒருநாள் ஆசீர்வதித்துப் பேசுவார். அடுத்த நாள் கண்டபடி திட்டிப் பேசி விரட்டி விட்டு விடுவார். சோமப்பா சித்தர் எப்போது, எப்படி நடந்து கொள்வார்

என்பதை யாராலும் கணிக்கவே இயலாது. அத்தனையையும் சகித்து சமாளித்துக் கொண்டு, சோமப்பா சித்தரை இருளப்பக் கோனார் பராமரித்தார். தன் வாழ்நாளின் இறுதி மூச்சு வரை அவர் அந்த பணியைச் செய்தார்.

இருளப்பக் கோனாருக்குப் பிறகு அவரது மகன் சேது மாதவக் கோனார், சோமப்பாவை கவனித்துக் கொண்டார். அதன் பிறகு அவர் மகன் ராமலிங்கம் பராமரித்தார். அவருக்கு பின்னர் அவர் மகன் தெட்சிணாமூர்த்தி தன்னலம் கருதாமல் சோமப்பாவை பேணி போற்றினார். இந்த 4 தலைமுறையினரிடமும் சோமப்பா சித்தருக்கு ஆத்மார்த்தமான உறவு இருந்தது. அதிலும் தெட்சிணா மூர்த்தியிடம் சித்தர் தம் அன்பை வெளிப் படுத்தத் தவறவில்லை.

சிறுவனாக இருந்த தெட்சிணா மூர்த்தியைப் பார்த்ததும் சோமப்பா சித்தர் குதூகலம் ஆகி விடுவார். தெட்சிணாமூர்த்தியை அருகில் அழைத்து வைத்துக் கொண்டு, ‘‘கொழுந்து எடுக்கின்ற குமரிப்பெண்ணே... கொஞ்சம் நின்று பதில் சொல்லு, எழுந்து தினமும் அலைகின்றாய் என்னடி கண்டாய் பதில் சொல்லு’’

—என்று ராகம் போட்டுப் பாடுவார். அடிக்கடி சோமப்பா சுவாமிகள் இந்த பாடலைப் பாடுவதுண்டு. பாடி முடித்ததும் மலை உச்சிக்கு குடு... குடு...வென ஓடி விடுவார்.


தெட்சிணாமூர்த்தி

திருக்கூடல் மலையில் சோமப்பா சித்தர் நிரந்தரமாக எந்த ஒரு இடத்திலும் தங்கியதே இல்லை. அங்கும் இங்கும் ஓடியபடி இருப்பார். அவர் படுத்துத் தூங்கியதை யாருமே பார்த்தது இல்லை. சில சமயம் காலை நீட்டி, கையை

மடக்கி தலைக்கு ஊன்றியபடி காணப்படுவார். அப்போதும் அவர் வாய், சோமப்பா, சோமப்பா, சோமப்பா..... என்று முணுமுணுத்தபடியே இருக்கும்.

ராமலிங்கக் கோனார் பராமரித்த காலகட்டத்தில் சோமப்பா சித்தர் நிகழ்த்திய அற்புதங்கள் ஏராளம். அவரைத் தேடி தென் மாவட்ட மக்கள் படையெடுத்து தேடி வந்து ஆசி பெற்று சென்றனர். தன்னை நாடி வருபவர்களிடம் அவர் ஒரு போதும் நேரடி பதில் அளித்ததில்லை. எல்லா உத்தரவுகளும், அறிவுறுத்தல்களும் பரிபாஷையிலே இருக்கும்.

“வா சோமப்பா... எல்லாம் சரியா வரும்... போ சோமப்பா...” என்பார். இது மிகப்பெரிய ஆசீர்வாதமாகும். இந்த வாக்கைப் பெற்ற பக்தர்கள் இன்று சுக போகமாக வாழ்கிறார்கள்.

சில பக்தர்களுக்கு அவர் ஆசீர்வாதம் செய்து காசுகள் கூட கொடுத்ததுண்டு. காசு கொடுக்கும் போது “தம்படி வாங்கிக்க சோமப்பா” என்பார். அப்படி அவரிடம் காசு பெற்றவர்கள் இன்று கோடீசுவரர்களாக உள்ளனர்.

அவரைப் பார்க்க திருக்கூடல் மலைக்கு வரும் பக்தர்கள் பெரும்பாலும் கடலைப் பருப்பு வாங்கி வருவார்கள். அல்லது கடலைப் பருப்பு கலந்து செய்த உணவுப் பொருட்கள், பழங்களை வாங்கி வருவார்கள். நாளடைவில் அவருக்கு மலர் மாலை வாங்கி வரும் பழக்கமும் தோன்றியது.

அப்படி பழம், மாலை வாங்கி வரும் பக்தர்களை பிடித்து இருந்தால் மட்டுமே தன் அருகில் அமர சோமப்பா சித்தர் அனுமதிப்பார். அத்தகையவர்கள் கொண்டு வரும் மாலைகளை எடுத்து தானே கழுத்தில் போட்டுக் கொள்வார். உணவுப் பொருட்களை எடுத்து சாப்பிட்டு விட்டு மீதம் கொஞ்சம் கொடுப்பார். அது சோமப்பா சித்தர் தரும் பிரசாதமாகும்.

நோய் தீர்க்கும் அற்புதம் அந்த பிரசாதத்துக்கு இருந்தது. அது மட்டுமல்ல சோமப்பா சித்தர் கனிவோடு பேசினாலே திருமணம் கை கூடுவதும், குழந்தை பாக்கியம் கிடைப்பதும் நடந்தது. அதே சமயத்தில் தீய மனதுடன் பழம், மாலை வாங்கி வருபவர்களை அவர் தம் அருகில் நிற்க கூட விட மாட்டார். பழத்தட்டை மிதித்துத் தள்ளி விட்டு போய் விடுவார். இப்படி நல்ல ஆத்மாக்கள் மட்டுமே அவரை அணுக முடிந்தது.



ஜீவ சமாதியின் வெளிப்புறத் தோற்றம் பழைய படம்.

"தென்னாட்டு நேதாஜி" என்று புகழப்பட்ட பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் மாதத்துக்கு ஒரு தடவை அல்லது 2 தடவை சோமப்பாவை சந்தித்து ஆசி பெறுவதை வழக்கத்தில் வைத்திருந்தார். பசும்பொன்னில் இருந்து காரில் புறப்பட்டு வருவார். திருக்கூடல் மலை வந்ததும் சோமப்பா சித்தர் முன்பு போய் அமர்ந்து விடுவார். ஆடாமல், அசையாமல் உட்கா ர்ந்தபடி இருப்பார்.

சோமப்பா சித்தர், "சோமப்பா... போ... போ... எல்லாம் சிறப்பா இருக்கும்" என்று எப்போது சொல்கிறாரோ அதுவரை உட்கார்ந்திருப்பார். சோமப்பாவின் அருளாசி கிடைத்ததும், முத்துராமலிங்க தேவர் எழுந்து சென்று விடுவார்.

நாதஸ்வரக் கலையில் சிறப்புப் பெற்றிருந்த மதுரை எம்.எஸ்.பொன்னுத்தாய் 1943—ம் ஆண்டில் ஒருநாள் திருக்கூடல் மலையில் சோமப்பாவை சந்தித்து ஆசி பெற்றார்.

"சோமப்பாவுக்கு நாயனம்" என்று சொல்லி பொன்னுத்தாயின் நாயனத்தை வாங்கி வைத்துக் கொண்டார். பொன்னுத் தாய் வாங்கிச் சென்றிருந்த மல்லிகை மாலையையும் "வெடுக்"கென்று பறித்து தன் கழுத்தில் போட்டுக் கொண்டார்.

பிறகு அவர் நாயனத்தை பொன்னுத்தாயிடம் கொடுத்தார். இந்த சம்பவத்துக்குப் பிறகு பொன்னுத்தாய் உலகப் புகழ் பெற்ற நாதஸ்வர வித்வானாக மாறியது குறிப்பிடத்தக்கது. சோமப்பா ஜீவ சமாதியான பிறகு அவர் திருக்கூடல் மலைக்கு செல்வது குறைந்தது. இதனால் பொன்னுத்தாய் பல கஷ்டங்களை அனுபவிக்க நேர்ந்தது.

வாரத்துக்கு ஒரு தடவை சோமப்பாவை சந்தித்த நாட்களில் தாம் சுகமாக வாழ்ந்ததாக பொன்னுத்தாய் ஒரு பேட்டியில் கூறியிருந்தார். மதுரை சோமுவும், சோமப்பா அருளால் தமிழகம் புகழும் பாடகரானார். நிறைய நாடகக் கலைஞர்கள், ஜோதிடர்கள் சோமப்பா சித்தர் அருளால் மறுவாழ்வு பெற்றனர்.

பல்லாயிரக்கணக்கானவர்களின் ஆன்மாவை சுத்தப்படுத்திய அந்த மகான் 1968—ம் ஆண்டு ஆனி மாதம் மிருக சீரிச நட்சத்திரம் தினத்தன்று பரிபூரணம் அடைந்தார். திருக்கூடல் மலையில் மாயாண்டி சுவாமிகள் ஜீவ சமாதியில் இருந்து மலைக்கு செல்லும் பாதையில் சோமப்பா சுவாமிகளுக்கு ஜீவ சமாதி அமைக்கப்பட்டுள்ளது.

அந்த இடத்தில் ஒரு மண்டபம், கருவறையுடன் அழகான, அமைதியான ஆலயத்தை எழுப்பியுள்ளனர். கருவறையில் லிங்க பிரதிஷ்டை செய்து சோமப்பா சித்தரின் படம் வைக்கப்பட்டுள்ளது. பலி பீடம், நந்தியும் உள்ளது. 2003, 2015—ம் ஆண்டுகளில் கும்பாபிஷேகம் நடத்தப்பட்டுள்ளது.

ஆண்டு தோறும் ஆனி மாதம் அங்கு குரு பூஜை நடத்தப்படுகிறது. சோமப்பா சித்தரால் தொட்டுப் பேசி, ஆசீர்வதிக்கப்பட்ட பூர்வ ஜென்ம பாக்கியசாலியான தெட்சிணாமூர்த்தி அங்கு சிறப்புப் பூஜைகள், அபிஷேகம், அன்னதானம் செய்து வருகிறார். ஜீவ சமாதியில் கடலை மிட்டாய் வைத்து வழிபட்டால் மனதில் உள்ள கனவுகள் நிறைவேறும் என்பது பக்தர்களிடம் அசைக்க முடியாத நம்பிக்கையாகும்.

நீங்களும் ஒரே ஒரு கடலை மிட்டாய் வாங்கி வைத்துப் பாருங்கள். சோமப்பா, நிச்சயம் உங்கள் கனவையும் நனவாக்குவார்.





# 37.ஸ்ரீ சச்சிதானந்த சுவாமிகள்

ராஜகீழ்ப்பாக்கம், சென்னை

## 37. ஸ்ரீ சச்சிதானந்த சுவாமிகள்

கோவில், கோவிலாக ஏறி இறங்கினாலும் சில பாவங்கள் மட்டும் போகவே போகாது. நம்மில் நிறைய பேர் அத்தகைய பாவ மூட்டையுடன்தான் அலைந்து கொண்டிருக்கிறோம்.

புராண காலத்தில் இறைவனே மனித உருவம் எடுத்து வந்து, மக்களின் பாவத்தைப் போக்கி அருளியதாக சான்றுகள் உள்ளன. ஆனால் தற்போதைய கலியுகத்தில் கடவுள், நேரில் தோன்றுவதில்லை.


ஸ்ரீ சச்சிதானந்த சுவாமிகள்

அறிவியல் கருவிகளில் அடிமைப்பட்டு, சுக போக வாழ்வில் சிக்கி, பணம், பணம் என்று அலையும் பக்தர்கள், கடவுளை நினைப்பது கூட அரையும் குறையுமாகத்தான் உள்ளது. பிறகு எப்படி கடவுள் தோன்றுவார்?

அப்படியானால் நம் பாவ மூட்டைகளை முற்றிலுமாக ஒழிப்பதற்கு வழியே இல்லையா என்று நீங்கள் நினைக்கலாம். கவலைப்படாதீர்கள், வழி இருக்கிறது. சித்த புருஷர்களிடம் தஞ்சம் புகுவது ஒன்றே அந்த வழி. சித்தர்களால் மட்டுமே உங்களுக்கு பாவத்தை நீக்கி ஆறுதல் தர முடியும்.

நாட்டில் எத்தனையோ.... சித்தர்கள், மகான்கள் இருக்கிறார்கள். யாரை குருவாக ஏற்பது? நிறைய பேருக்கு இந்த விஷயத்தில் குழப்பமும், தடுமாற்றங்களும் இருந்து கொண்டே இருக்கும்.



சச்சிதானந்த சுவாமிகளின் ஜீவ சமாதி

உங்களுக்கான குருவை இதுவரை நீங்கள் அடையாளம் காண இயலவில்லையா? இன்று உங்களுக்கு அந்த குறை தீரப் போகிறது.

சச்சிதானந்த சுவாமிகளை உங்கள் குருவாக ஏற்றுக் கொள்ளுங்கள். அதன் பிறகு உங்கள் பாவ மூட்டைகள் பஞ்சு... பஞ்சாக பறந்தோடுவதை நீங்களே அனுபவப்பூர்வமாக உணர்வீர்கள்.

யார் இந்த ஸ்ரீசச்சிதானந்த சற்குரு சுவாமிகள்? எந்த ஊரைச் சேர்ந்தவர்? அவரால் எப்படி நமது பாவ மூட்டைகளை இறக்கி வைக்க முடியும்? என்றெல்லாம் மனதில் கேள்விகள் எழலாம்.

ஸ்ரீ சச்சிதானந்த சற்குரு சுவாமிகள் யார் என்றே தெரியாது. அவர் பெற்றோர் யார்? அவருக்கு எந்த ஊர்? எதற்குமே இதுவரை விடை கிடைத்தது இல்லை.

தமிழகம்தான் அவரது பூர்வீமாக இருக்கும் என்று கருதப்படுகிறது. தென் இந்தியாவில் தொடங்கிய அவரது பயணம் நாடு முழுவதும் பரவியது.

முதலில் அவர் கேரளாவில் உள்ள மலபாருக்கு சென்றார். "கடவுள் ஒருவரே" என்ற உணர்வை அங்குள்ள மக்கள் மனதில் விதைத்தார். விக்கிரக வழிபாட்டை தவிர்க்க வலியுறுத்தினார்.

ஆத்மாவை உணரும்படி கூறினார். வெறும் கோவணத்துடன் ஊர், ஊராக சென்ற அவர், சத், சித், ஆனந்தமாக இருக்கும்படி மக்களிடம் கேட்டுக் கொண்டார். அதாவது உண்மை, அறிவு, இன்பம் ஆகிய மூன்று இயல்புகளுடன் வாழுமாறு மக்களைத் தெளிவுப்படுத்தினார். இந்த சத், சித்,

ஆனந்தம் மூன்று இயல்புகளும் ஒன்று சேரும் போது, ‘‘சச்சிதானந்தம்’’ என்று சொல்வார்கள்.

சிவம் என்றாலே சச்சிதானந்தம் என்றுதான் பொருள். அந்த அடிப்படையில், ‘‘சச்சிதானந்தத்தை உறுதியாக பற்றிக் கொள்ளுங்கள். அவரை நம்புங்கள். எல்லா சந்தர்ப்பங்களிலும் கலங்காமல் சச்சிதானந்தத்தை மட்டுமே நம்பி சமநிலையுடன் இருங்கள்’’ என்றார்.

மூச்சுக்கு மூச்சு சச்சிதானந்தத்தை உணருங்கள் என்றார். அதனால்தானோ என்னவோ பக்தர்கள் அவரை சச்சிதானந்த சற்குரு சுவாமிகள் என்று அழைக்கத் தொடங்கினார்கள். நாளடைவில் அந்த பெயரே அவருக்கு நிலைத்தது.

தம் பக்தர்களுக்கு அவர் கூறும் அறிவுரைகள் அலாதியானவை. நம் ஒவ்வொருவரது உடம்பில் உள்ள ஐம்புலன்களும் பஞ்சபூதங்களின் கட்டுப்பாட்டில்தான் இயங்குகின்றன. அதை உணர்ந்து மனித உடலான பிண்டத்தில் என்ன இருக்கிறது என்பதை அறிய முயற்சி செய்யுங்கள் என்று தன்னை நாடி வந்தவர்களிடம் போதித்தார்.

சுவாமிகளிடம் சற்று நெருங்கிப் பழகியவர்களிடம், ‘‘மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய நான்கையும் அடக்கினால் வினைகள் தீரும். வினைகள் தீர்ந்தால் நாம் எடுத்த பிறவியின் நோக்கம் புலப்படும்’’ என்றார். சுவாமிகளின் இந்த அறிவுரையால் பல்லாயிரக்கணக்கானவர்கள் கவர்ந்து இழுக்கப்பட்டு பிறவிப் பெருங்கடலில் இருந்து தப்பினார்கள்.

பல பக்தர்களுக்கு அவர் கூறிய இந்த முக்தி வழிக்கான தத்துவம் புரியவில்லை. அத்தகைய பக்தர்களுக்கு சச்சிதானந்த சுவாமிகள் எளிமைப் படுத்திக் கூறினார்.

‘‘முதலில் அகங்காரத்தை கை விட வேண்டும். அதற்கு அமைதி யாக இருக்க வேண்டும். அடுத்து சித்தத்தை ஒழுங்குப்படுத்த வேண்டும். அதற்கு சிவத்தை வழிபட்டு, பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும். மூன்றாவதாக புத்தியை தெளிவுபடுத்த வேண்டும். அதற்கு சத்தியத்தை கடைப்பிடிக்க வேண்டும். இந்த மூன்றும் வந்து விட்டால் உங்கள் மனம் தானாகவே இறைவனுடன் கலந்து விடும்’’ என்றார்.

அத்வைத கொள்கைகளை ஏற்றுக்கொண்ட அவர் ஆலயம், விக்கிரக வழிபாடு போன்ற சில கருத்துகளில் மட்டும் மாறுபட்டார். தமிழ், ஆங்கிலம், இந்தி, தெலுங்கு உள்பட பல மொழிகளில் சரளமாக பேசும் ஆற்றல் பெற்றிருந்த சுவாமிகள் எந்த ஊரிலும் நீண்ட நாட்கள் தங்குவதே இல்லை. தமது கொள்கைகளை மக்களிடம் விதைத்து விட்டு அடுத்த ஊருக்கு நடந்து சென்றபடி இருப்பார். கோவணத்துடன் வலம் வந்த அவர் யாரிடமும் கை ஏந்தியதே இல்லை. காசை கையில் தொட்டதே இல்லை. இதனால் மக்கள் அவர் மீது அளவு கடந்த பாசம் காட்டினார்கள்.

கேரளாவில் இருந்து கோகர்ணம் சென்ற சுவாமிகள் வேத புராணங்களுக்கும், இயல்பான வாழ்க்கைக்கும் உள்ள வேறுபாட்டை உணர்த்தினார். கோகர்ணத்தில் இருந்து மலைப் பாம்புகள் நிறைந்த கொண்டாரன்யத்தில் சிறிது நாள் இருந்தார்.

பிறகு நாசிக் சென்றார். அங்கு ராமாயண நிகழ்வுகளுடன் தொடர்புடைய பஞ்சவடி எனும் இடம் உள்ளது. சூர்ப்பனகையின் மூக்கை ராமர் இந்த பகுதியில் வைத்துதான் அறுத்தார் என்றும், சீதையை ராவணன் அங்கிருந்துதான் பறக்கும் பல்லக்கில் இலங்கைக்கு கடத்தி சென்றான் என்றும் சொல்வார்கள். அவை நடந்த இடங்கள் இன்றும் உள்ளன.

இத்தகைய சிறப்புமிக்க அந்த பஞ்சவடியில் ஒரு குகையில் லட்சுமணர் தவம் செய்ததாக சொல்வார்கள். நாசிக் சென்ற சச்சிதானந்த சுவாமிகள், அந்த குகைக்கு சென்று தியானத்தை மேற்கொண்டார். அந்த பகுதி மலைவாழ் மக்கள் சுவாமிகள் மீது மிகுந்த பாசம் கொண்டிருந்தனர். சுவாமிகளிடம் நெருங்கி சென்று பேசி, பழக பயப்பட்ட அவர்கள், தினமும் உணவு கொடுத்து உபசரித்தனர். சுவாமிகள் சாப்பிட்ட பிறகே அந்த இடத்தை விட்டு அகலும் அளவுக்கு சச்சிதானந்த சற்குரு மீது அவர்கள் பக்தி கொண்டிருந்தனர்.

நாசிக் மலைவாழ் மக்களிடம் இருந்து ஒருநாள் விடைபெற்ற சுவாமிகள் மும்பை சென்றார். குருவின் அவசியம் பற்றி மும்பை மக்களுக்கு அவர் பல நாட்கள் சொற்பொழிவு நிகழ்த்தியுள்ளார்.

மும்பையில் இருந்து காசி சென்ற சுவாமிகள் ஆறு, குளம், காடு, மலை, கிராமம், நகரம் என நடந்தபடி இருந்தார். காசியில் கங்கை கரையில் உள்ள

ஹரிச்சந்திர காட் பகுதியில் சிறிது நாட்கள் தங்கி இருந்தார். சில நாட்கள் காசி விசுவநாதர் ஆலயத்திலும் இருந்தார்.

அங்கிருந்து அயோத்தி சென்றார். அங்குதான் சுவாமிகளுக்கு பல அற்புத சக்திகள் கிடைத்தன. சர்வ சாதாரணமாக சித்தாடல்கள் புரியும் நிலையை அவர் அடைந்தார்.

அயோத்தி பயணத்தை முடித்த பிறகு அலகாபாத், அரித்துவார், குருஷேத்திரம், ரிஷிகேஷ் சென்றார். சில ஆண்டுகள் கழித்து ஆந்திரா வழியாக தமிழகம் திரும்பினார். வைத்தீஸ்வரன் கோவிலுக்கு வந்து இரண்டாண்டுகள் தங்கி இருந்தார். அந்த இரண்டு ஆண்டுகளும் பால் மட்டும் குடித்து விட்டு அவர் யாருடனும் பேசாமல் மவுனமாக இருந்தார்.

பிறகு சீர்காழி, சிதம்பரம் வழியாக சென்னை வந்தார். திடீரென ஒருநாள் ராமேஸ்வரம் சென்று, அங்கிருந்து இலங்கைக்கு சென்றார். அங்கும் அவர் சச்சிதானந்தம் மட்டுமே கடவுள். அவரை மட்டுமே வணங்குங்கள் என்று போதித்தார்.



இலங்கையில் இருந்து நாகப்பட்டினம் வந்த சுவாமிகள் வடலூர், மோகனூர், காட்டுப்புதூர், வேலூர், வேலாயுதம் பாளையம், கரூர், திருச்சி, திருவானைக்காவல் என்று நடந்து கொண்டே இருந்தார். திருவானைக்காவல் சிவாலயத்தில் தங்கியிருந்தபோது நிறைய அற்புதங்கள் செய்து மக்களிடம் பிரமிப்பை ஏற்படுத்தினார்.

1935–ம் ஆண்டு சுவாமிகள் திருவையாறு சென்றார். அங்குள்ள அய்யாரப்பன் ஆலய வளாகத்தில் குடிசை கட்டி ஆசிரமம் அமைத்து தங்கினார். அப்போது

அவர் நிகழ்த்திய சித்தாடல்கள் ஏராளம்.

ஒருநாள் பாம்பு கடித்து ஆட்டுக்குட்டி ஒன்று செத்துப் போனது. ஆசிரமம் அருகில் சுற்றித் திரியும் அந்த ஆட்டுக்குட்டியிடம் சுவாமிகள் பாசம் வைத்திருந்தார். பாம்பு கடித்து அந்த ஆட்டுக்குட்டி செத்து போயிருப்பதை கண்டு ஆலயத்துக்கு வந்தவர்கள் பரிதாபத்துடன் நின்று கொண்டிருந்தனர்.

சுவாமிகள் வந்தார். ஆட்டுக்குட்டி உடல் மீது ஒரு தட்டுத்தட்டி ‘‘சரி எழுந்திரு’’ என்றார். அடுத்த வினாடி அந்த ஆட்டுக்குட்டி சிலிர்த்தப்படி எழுந்து துள்ளிக் குதித்தோடியது. சச்சிதானந்த சுவாமிகளின் இந்த அற்புதத்தை கண்டு பக்தர்கள் மெய் மறந்து போனார்கள்.

அதுபோல அவரை வழிபட சென்னையில் இருந்து சென்றிருந்த ஒரு தம்பதியினர் காவிரி ஆற்றில் குளித்து கொண்டிருந்தபோது, தண்ணீரில் கணவர் அடித்துச் செல்லப்பட்டார். அதை கண்டு அலறிய மனைவி, சுவாமிகளை மனதுக்குள் நினைத்தபடி கதறினார். அடுத்த வினாடி அங்கு தோன்றிய சுவாமிகள், தண்ணீரில் தத்தளித்தபடி மிதந்த கணவரை பிடித்து இழுத்து கரையேற்றி விட்டு மறைந்தாராம்.

மற்றொரு நாள் சுவாமிகளின் ஆசிரமத்துக்கு வந்த உள்ளூர் பக்தர்கள் சிலர், அவர் விளக்கு இல்லாமல் இருட்டில் இருப்பதாக நினைத்துக் கொண்டு தீபம் கொண்டு வந்தனர். அதைக் கண்டு சிரித்த சுவாமிகள், ‘‘எனக்கு எதற்கு தீபம்? இதோ தீபம் இருக்கிறதே’’ என்றார். அடுத்த வினாடி ஜோதி ஒன்று கிளம்பி வந்து அந்த பகுதியையே பிரகாசமாக்கியது. இந்த அற்புதத்தைக் கண்டு மக்கள் ஆச்சரியத்தின் உச்சத்துக்கே சென்றனர். திருவையாறு மக்கள் மனதில் நீங்காத இடம் பிடித்த அந்த மகான் பிறகு மதுரை, பழனி வந்தார். அங்கிருந்து அருகில் உள்ள கணக்கன்பட்டிக்கு 1936—ல் வந்தார்.

ஒருநாள் பொட்டம்பட்டி கிராமத்தில் உள்ள ஒரு கிணற்றில் குளிக்க சென்றார். அங்கிருந்த சிறுவன் அவரை வெளியே விரட்டினான். அடுத்த நிமிடம் அந்த சிறுவனின் கை கால்கள் செயலற்றுப் போனது.

அந்த சிறுவனின் தந்தை ஓடி வந்து சுவாமிகளிடம் மன்னிப்புக் கோரினார். சுவாமிகள் திரும்பிப் பார்க்க அந்த சிறுவனின் உடல்நிலை சரியானது.

மகிழ்ச்சி அடைந்த அந்த சிறுவனின் தந்தை தனது தோட்டத்து நிலத்தின் ஒரு பகுதியை சுவாமிகளுக்கு அன்பளிப்பாக வழங்கினார்.

1938—ம் ஆண்டு கணக்கன் பட்டியில் "அகண்ட பரிபூரண சச்சிதானந்த சபை" தொடங்கப்பட்டது. அங்கு ஒவ்வொரு மாதமும் மூன்றாவது வியாழக்கிழமை சச்சிதானந்த சற்குரு படத்தை பூஜித்து ஊர்வலமாக எடுத்துச் செல்லும் பழக்கம் தோன்றியது.

ஒரு தடவை அவரது படம் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டபோது, அந்த ஊர் இளைஞர்கள் சிலர் கிண்டல் செய்தனர். "படத்தில் இருக்கும் உங்கள் குருநாதர் பேசுவாரா? பேசட்டும் பார்க்கலாம்" என்றனர்.

அந்த சமயத்தில் சுவாமிகள் திண்டுக்கல்லுக்கு இடம் பெயர்ந்திருந்தார். அந்த துணிச்சலில் இளைஞர்கள் கிண்டல் செய்தபடி இருந்தனர்.

அந்த கிண்டல் அதிகரித்தபோது, சுவாமிகள் படத்தில் இருந்து குண்டு வெடிப்பது போல சத்தம் கேட்டது. எல்லாரும் பதறியபடி அந்த படத்தைப் பார்க்க ஓம் எனும் அசரீரி ஒலித்தது. "உங்கள் ஆணவத்தை கைவிடுங்கள். இல்லையெனில் தலை சிதறி விடும். எச்சரிக்கை" என்று குருநாதர் குரல் ஒலித்தது. கிண்டல் செய்த இளைஞர்கள் சப்தநாடியும் ஒடுங்கி நடுங்கினார்கள். சுவாமிகள் சிறப்பை உணர்ந்து அவருக்கு சேவை செய்யும் தொண்டர்களாக மாறினார்கள்.

திண்டுக்கல்லில் சிறிது நாட்கள் தங்கியிருந்த சுவாமிகள், அங்கும் பல அற்புதங்களை நிகழ்த்தினார். தனது கருணைப் பார்வையாலே கிறிஸ்தவப் பெண் புத்தி சுவாதீனத்தை போக்கினார். கோர்ட்டு குமாஸ்தாவுக்கு கண் பார்வை கொடுத்தார். கவர்னர் அலுவலக கிளார்க்கின் வயிற்று வலியை நீக்கினார்.

இதை அறிந்த தொழு நோயாளி ஒருவர் நடக்க முடியாமல் நடந்து சுவாமிகளிடம் வந்தார். சுவாமிகளின் பார்வையில் அவர் நோய் மறைந்தது. இதனால் தினம், தினம் நூற்றுக்கணக்கானவர்கள் அவரைத் தேடி வந்தனர்.

1939—ல் திண்டுக்கல்லில் இருந்து சத்திரப்பட்டிக்கு வந்து 4 ஆண்டுகள் தங்கி இருந்தார். பிறகு அவரது பயணம் கொடைகீழ்பட்டி, திருச்சி, தஞ்சை, கடலூர், மாத்தூர் என்று தொடர்ந்தது. 1946—ல் மாத்தூரில் இருந்தபோது அவர்

“ஸ்ரீஅகண்ட பரிபூரண சச்சிதானந்த சபை”யை பதிவு செய்தார். நிர்வாகிகளையும் நியமனம் செய்தார்.

இதையடுத்து தனது பிறவியை சென்னையில் பூர்த்தி செய்யப் போவதாக கூறி புறப்பட்டு வந்தார். தாம்பரம் வந்ததும், தாம்பரம் வந்து விட்டதா? என்று கேட்டார். அவர் அடியார்களும் “ஆம் வந்து விட்டது” என்றனர்.

உடனே சுவாமிகள், “தான் பரம் ஆகப் போகும் இடம் இதுவே” என்று குறிப்பால் உணர்த்தினார். சென்னை அரசினர் தோட்டத்துக்கு சென்று, தனகோபால், சம்பந்தம் ஆகியோர் ஆதரவுடன் தங்கியிருந்தார்.

சுமார் இரு வாரங்கள் கழித்து 19.11.1946 அன்று அவர் விவேக முக்தி அடைந்தார். அவரது உடல் தாம்பரம்—வேளச்சேரி சாலையில் தற்போது குருசேத்திரமாகத் திகழும் இடத்தில் ஜீவசமாதி செய்யப்பட்டது.

மூன்றாவது நாள் 21—ந்தேதி சனிக்கிழமை வடகிழக்கு ஈசான மூலையில் தோன்றிய அகண்ட ஜோதி அப்படியே மெல்ல, மெல்ல நகர்ந்து வந்து சுவாமிகளின் சமாதிக்குள் சென்று ஐக்கியமாகி மறைந்தது. அன்று முதல், அந்த இடம் “ஸ்ரீஅகண்ட பரிபூரண சச்சிதானந்த சபை” என்று அழைக்கப்பட்டு வருகிறது.

சச்சிதானந்த சற்குரு அங்கு ஜோதி வடிவில் அடங்கி இருப்பதாக மக்கள் பரிபூரணமாக நம்பி வழிபட்டு செல்கிறார்கள். வியாழன் தோறும் குரு ஸ்தோத்திரப் பாடல்களும் சந்தனக் காப்பும் நடத்தப்படுகிறது. மாதத்தின் முதல் வியாழக்கிழமை குருபூஜை நடத்துகிறார்கள்.

இவை தவிர ஞாயிறுதோறும், பஜனை, சொற்பொழிவு நடத்துகிறார்கள். அன்று மதியம் ஆயிரக்கணக்கானவர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது. கிழக்கு தாம்பரத்தில் இருந்து வேளச்சேரி செல்லும் சாலையில் ராஜகீழ்ப்பாக்கத்தில் சாலையோரத்திலேயே இந்த குருசேத்திரம் உள்ளது .





# 38. ஸ்ரீ மூட்டை சுவாமிகள்

**கணக்கன்பட்டி, பழனி**

38. ஸ்ரீ மூட்டை சுவாமிகள்

நல்லதே நடக்கும், நம்பிக்கை இருந்தால்! சரி.... யார் மீது நம்பிக்கை வைக்க வேண்டும்? இறைவன் மீதும் இறைவனின் அவதாரமாக பூமியில் உலாவும் சித்த புருஷர்கள் மீதும் விடாப்பிடியான நம்பிக்கை வைக்க வேண்டும்.

பழனி கணக்கன்பட்டி பழனிசாமி என்ற மூட்டை சுவாமிகள் மீது துளி அளவும் சந்தேகம் இல்லாத நம்பிக்கை வையுங்கள்.


ஸ்ரீ மூட்டை சுவாமிகள்

இவர் சாதாரண மகான் அல்ல. சரித்திரங்கள் பல படைத்து விட்டு சென்றிருக்கும் யுகப்புருஷர். சில ஆண்டுகளுக்கு முன்பு வரை பழனி சுற்றுப்பகுதிகளில் நடமாடிய மகத்தான இந்த மகான், மானிட ரூபத்தில் வாழ்ந்த கடவுள் என இன்று வழிபடப்படுகிறார்.

அவர் வாழ்ந்த விதம், பக்தர்களிடம் பழகிய விதம், பக்தர்களின் கர்ம வினைகளைத் தீர்த்த விதம் அனைத்தும் வித்தியாசமானது. அத்தனையையும்

செய்து விட்டு அவர் சாதாரணமாக இருந்தார்.

அதனால் தானோ... என்னவோ நிறைய பேர் அவரை நம்ப மறுத்தனர். அவரது உருவ அமைப்பும் மக்களிடம் நம்பிக்கையை ஏற்படுத்தவில்லை. சராசரி உயரம், பரட்டைத் தலை, அதை சுற்றி முண்டாசு. மழிக்கப்படாத முகம், கறை படிந்த பற்கள், பச்சைக் கலர் சட்டை அணிந்து உலாவிய அவரை முதன் முறையாகப் பார்த்தவர்கள்... "இவரைப் போய் எப்படி வணங்குவது?" என்றே மலைத்தனர். குழம்பி மருகி நின்றனர்.

ஆனால் மூட்டை சுவாமிகளுக்கு தன்னை நாடி வந்த ஒவ்வொருவரின் அனைத்து ஜென்ம பிறப்பும்— இறப்பும், பாவங்களும் புண்ணியங்களும், விடாது துரத்தும் வினைகளும் தெளிவாகத் தெரிந்தன. அந்த வினைகளை விரட்ட அவர், ஒவ்வொருவருக்கும், ஒவ்வொரு வேலை கொடுத்தார்.


ஸ்ரீ மூட்டை சுவாமிகளின் ஜீவ சமாதி உள்பகுதி

சிலரிடம் மண் வெட்டிக் கொடுத்து மண் தோண்ட சொல்வார். சிலரிடம் பள்ளமாக இருக்கும் குழிகளை மூடச் சொல்வார். சிலரிடம் கற்களை எல்லாம் பொறுக்கி வந்து ஒரு இடத்தில் குவித்துப் போடச் சொல்வார். சிலரிடம் சாக்கடை தண்ணீரை சரி செய்யச் சொல்வார். சிலரிடம் பெரிய பாறாங்கல்லை கொஞ்ச தூரத்துக்கு புரட்டிப் போடச் சொல்வார். சிலரிடம் வடக்கே போ, தெற்கே போ, கிழக்கில் போய் மேற்கு பக்கம் வா என்பார். சிலரிடம் ஒரு குறிப்பிட்ட மரத்தைச் சுற்றி வா என்பார்.

சிலருக்கு அடி விழும். சிலரை ரத்தம் வரும்வரை கூட அவர் அடித்தது உண்டு. சிலருக்கு ஏக வசனத்தில் திட்டு விழும். சில சமயம் சரமாரியாக

கெட்டவார்த்தைகளும் வந்து விடுவதுண்டு. சிலரை பக்கத்திலேயே சேர்க்க மாட்டார்.

சற்றுத் தொலைவில் வரும் போதே, ‘‘அயோக்கிய பய வர்றான். திரும்பிப் போகச் சொல்’’ என்பார்.

சிலரை அருகில் அழைத்து வைத்துக் கொண்டு அன்பாக பேசுவார். கருணையோடுப் பார்ப் பார்.

சிலரிடம், ‘‘போ.... டீ வாங்கிக்கிட்டு வா’’ என்பார்.

சிலரிடம், ‘‘எனக்கு பசிக்குது,சாப்பாடு வாங்கித் தர்றீயா?’’னு கேட்பார்.

வெகு சிலருக்கு அவர் தன்னை பழனி முருகனாகவே உருமாற்றிக் காண்பித்ததுண்டு. இப்படி அவர் எந்த உத்தரவிட்டாலும், அவை மக்களின் கர்ம வினைகளை விரட்டின. காலப் போக்கில்தான் இந்த உண்மையை மக்கள் உணர்ந்தனர்.

அதன்பிறகு மூட்டை சுவாமிகளை நோக்கி தினம், தினம் நூற்றுக்கணக்கானவர்கள் படையெடுத்தனர். அதன் தொடர்ச்சியாக மூட்டை சுவாமிகள் பற்றிய விவரங்கள் வெளி உலகுக்குத் தெரியத் தொடங்கின. பழனி கணக்கன்பட்டிதான் சுவாமிகள் பிறந்த ஊர். அந்த ஊரைச் சேர்ந்த திம்மநாயக்கருக்கு இரண்டு மனைவிகள். அதில் மூத்த தாரத்தின் மகனாகப் பிறந்தவர் சுவாமிகள். அவருக்கு காளிமுத்து என்று முதலில் பெயர் சூட்டப்பட்டிருந்ததாம். சிலர் அவர் பெயர் காளியப்பன் என்கிறார்கள்.

ஆனால் பழனியப்பன் என்பதுதான் அவரது இயற்பெயர் என்ற குறிப்பும் உள்ளது. அதனால்தான் அவர் பெயர் பழனிசாமி என்று மாறியதாக சொல்கிறார்கள்.

சித்தியின் பாரபட்சத்தால் அவர் படிப்பை பாதியில் விட வேண்டியதாயிற்று. இதனால் பால்காரர் ஒருவர் வீட்டில் வேலைக்கு சேர்த்து விடப்பட்டார். ஒரு தடவை பால்காரர் எதிரிகளுடன் சண்டை போட்டதில் இவர் கடுமையாக தாக்கப்பட்டு, பழனி இடும்பன் மலைக்காட்டுக்குள் வீசப்பட்டார். அந்த காட்டுக்குள் அவர் மூன்று நாட்கள் சுய நினைவு இல்லாமல் கிடந்தார். 4—வது நாள் அவரை மீட்டு பழனி ஆஸ்பத்திரியில் சேர்த்தனர். அவரை பரிசோதித்த டாக்டர்கள் இறந்து விட்டதாக அறிவித்தனர்.

உடனே பழனிசாமி உடல் சவக்கிடங்கில் கொண்டுபோய் வைக்கப்பட்டது. ஒருநாள் முழுக்க அவர் உடல் அங்கு இருந்தது. மறுநாள் உடல் மாயமாகி விட்டது.

அடுத்த நாள்... இடும்பன் மலை குகை ஒன்றில் பழனிசாமி தியானத்தில் ஆழ்ந்திருப்பதைக் கண்டு அனைவரும் ஆச்சரியப்பட்டனர். சவக்கிடங்கில் கிடந்தவருக்கு எப்படி உயிர் வந்தது? எப்படி மலை குகைக்கு போனார்? என்பது இதுவரை யாருக்கும் தெரியவில்லை.


ஸ்ரீ மூட்டை சுவாமிகள் இருக்கை

இடும்பன் மலைக்காட்டுக்குள் கிடந்த 3 நாட்களில் அவரிடம் சித்தப்புருஷருக்கான உயர் மாற்றங்கள் ஏற்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது. பழனி இடும்பன் மலை, சிவன் கோவில், உச்சினி மாகாளி அம்மன் கோவில், காந்தி மார்க்கெட் பகுதிகளில் அவர் மாறி, மாறி அலைந்தார்.

முக்காலமும் உணர்ந்த ஞானியாக அவர் உலா வந்தார். பஞ்ச பூதங்களும் அவர் கட்டுப்பாட்டில் இருந்தன. பறவைகள், விலங்குகள் பேசுவது அவருக்கு புரியும். ஆனால் எதையுமே சுவாமிகள் வெளியில் காட்டிக் கொள்ளவில்லை.



ஸ்ரீ மூட்டை சுவாமியின் படுக்கை



சுவாமிகள் பயன்படுத்திய பொருட்கள்

அப்போது சுவாமிகளுக்கு சுமார் 45 வயது இருக்கும். பழனி நகர தெருக்களில் சுற்றித் திரிந்த அவர் மகத்தான மகான் என்பது கொஞ்சம், கொஞ்சமாகத்தான் மக்களுக்கு தெரிய வந்தது.

சிறு துணி மூட்டை ஒன்றை இடது தோளில் சுமந்தபடி அவர் காணப்பட்டார். அந்த மூட்டை மக்களின் பாவம் தீர்க்கும் பாவ மூட்டையாக இருந்தது. யாரையும் அவர் அந்த மூட்டையை தொடவிட்டதில்லை. எப்போதும் மூட்டையுடன் காணப் பட்டதால் அவரை மக்கள், மூட்டை சுவாமிகள் என்று அழைத்தனர்.

மக்களின் பாவங்கள், தோஷங்கள், கர்ம வினைகளை தனக்குள் வாங்கிக் கொண்ட அந்த மகான், பழனியில் தன்னை நாடி வரும் மக்கள் கூட்டம் அதிகரித்ததால் 1979—ம் ஆண்டு தனது இருப்பிடத்தை கணக்கன்பட்டிக்கு மாற்றிக் கொண்டார். அங்கு அவர் யார் வீட்டுக்கும் செல்லவில்லை.

சாலையோரத்தில் நடந்தார். மரத்தடியில் உட்கார்ந்தார். சிறிது நாட்கள் கழித்து மோகன் என்பவரது தோட்டத்தில் அமர்ந்து ஆசி வழங்கத் தொடங்கினார். அதன் பிறகு கணக்கன்பட்டியில் சுமார் 35 ஆண்டுகள் அவரது அருளாட்சி நடந்தது.

இந்த 35 ஆண்டுகளில் அவர் நிகழ்த்திய அற்புதங்கள் ஏராளம். சுனாமி வந்ததையும், கல்பனா சாவ்லாவின் ராக்கெட் வெடித்து சிதறியதையும் அவர் முன்கூட்டியே சொன்னார். பல்லாயிரக்கணக்கானவர்களின் கர்மாவை தன் பார்வையாலே போக்கினார். அவர் நிகழ்த்திய அற்புதங்கள் ஒன்றா... இரண்டா,

பட்டியலிட்டால் நூறு புத்தகத்துக்கு மேல் எழுதலாம். என்றாலும் சிலவற்றை பார்க்கலாம்.

சென்னை தி.நகர் கிருஷ்ணா தெருவில் வசித்து வரும் ஓய்வு பெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரியான "சித்தர் செம்மல்" இரா.கற்பூரசுந்தர பாண்டியனின் மகன் ராஜ்சேகர். சில ஆண்டுகளுக்கு முன்பு அவர் தனது நண்பர்கள் சரவணன், கார்த்தி மற்றும் இன்னொரு நண்பருடன் திண்டுக்கல்லில் நடந்த ஒரு திருமண விழாவுக்கு சென்றிருந்தார்.

விழா முடிந்ததும் நண்பர்கள் நால்வரும் கணக்கன்பட்டியில் உள்ள பழனி மூட்டை சுவாமிகளை சந்திக்க சென்றனர். அவர்களைப் பார்த்ததும் "வாங்க... சாமிகளா, அதோ அந்த கல்லை நகர்த்தி போடுங்கள்" என்று உத்தரவிட்டார்.

அது பெரிய பாறாங்கல், நான்கு நண்பர்களும் அதை நகர்த்தப் போராடினார்கள். அப்போது மூட்டை சுவாமிகள், சிரித்துக் கொண்டே, "நீ மட்டும் இங்கு வா சாமி" என்று சரவணனை பார்த்து அழைத்தார். அவரை மட்டும் தன் அருகில் உட்கார வைத்துக் கொண்டார்.

மற்ற 3 பேரும் கடுமையாகப் போராடி அந்த கல்லை சில அடி தூரம் நகர்த்தி இருந்தனர். அப்போது மூட்டை சுவாமிகள் சரவணனிடம், "சாமி, நீ எனக்குச் சாப்பாடு வாங்கிக் கொடுக்கிறாயா?" என்றார்.

உடனே சரவணன் காரை எடுத்து பழனி சென்று சாப்பாடு வாங்கி வந்தார். சுவாமிகள் ரசம், மோர் இரண்டையும் எடுத்தார். தன்னிடம் இருந்த ஒரு பாட்டிலில் இரண்டையும் ஊற்றி கலக்கி சரவணனிடம் கொடுத்து "குடி" என்றார்.

சரவணன் யோசித்தபடியே அதை வாங்கிக் குடித்தார். எப்படி இருக்குமோ என்று பயந்த அவருக்கு அந்த ரசம், மோர் கலவை தேவாமிர்தமாக இருந்ததாம். சுவாமிகள் கை பட்டதால், அதன் சுவை மாறி இருந்ததை உணர்ந்து சரவணன் சிலிர்த்துப் போனார்.

அந்த சமயத்திலும் மற்ற மூன்று நண்பர்களும் அந்த பெரிய கல்லுடன் போராடியபடி இருந்தனர். அவர்களில் ஒருவர், "சாமி முடியல.... எங்களை விட்டு விடுங்கள்" என்று மனதுக்குள் நினைத்திருக்கிறார். அடுத்த நிமிடம், "சரி போதும் வாருங்கள்" என்று சுவாமி அழைத்தாராம்.

ராஜ்சேகரையும் கார்த்தியையும் அந்த கல் மீது படுத்து விட்டு சுவாமிகள் வரச் சொன்னார். அதன் பிறகு நண்பர்கள் சென்னை திரும்பினார்கள். சுவாமிகள் அருளால் நண்பர்கள் நால்வரும், இன்று மிக உயர்ந்த இடத்தில் இருக்கிறார்கள்.

சுவாமிகள் கையால் தீர்த்தம் பெற்று அருந்திய சரவணன் வேறு யாருமல்ல. நடிகர் சூர்யா. அவர் தம்பி கார்த்தியும் திரை உலகில் புகழ் பெற்றுள்ளார். ராஜ்சேகர் படத் தயாரிப்பாளராக இருக்கிறார். மற்றொரு நண்பர் கோவையில் பெரிய தொழில் அதிபராக உள்ளார்.

இந்த நான்கு பேரும் சேர்ந்து கல்லை புரட்டி போட்ட இடத்தில்தான் இன்று சுவாமிகளின் ஜீவ சமாதி அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இந்த தகவல்களை கற்பூர சுந்தரபாண்டியன் தனது “சித்தர்கள் கூறும் ரகசியங்கள்” நூலில் குறிப்பிட்டுள்ளார். சென்னையில் உள்ள போலீஸ் உதவிக் கமிஷனரான சுசீல்குமாரின் மனைவி சாரா பெற்ற அனுபவம் வித்தியாசமானது. அவர் சொல்கிறார்:

2002—ம் ஆண்டு பழனி மூட்டை சுவாமிகள் பற்றி எங்களுக்குத் தெரிய வந்தது. எண் கணித ஜோதிடர் துரைமுருகர் எங்களை கணக்கன்பட்டிக்கு அழைத்து சென்றார். முதலில் மூட்டை சுவாமிகள் மீது எனக்கும் என் கணவருக்கும் நம்பிக்கை வரவில்லை.

2004—ம் ஆண்டு மீண்டும் அங்கு செல்ல வாய்ப்பு கிடைத்தது. இந்த தடவை “வைப்ரேசனை” உணர முடிந்தது. சுவாமிகள் ஒரு கம்பை வைத்துக் கொண்டு நின்றிருந்தார். தீர்க்கமாகப் பார்த்தார்.

எல்லாரும் கல் ஒன்றை தள்ளிக் கொண்டிருந்தனர். நாங்களும் அவர்களுடன் சேர்ந்து தள்ளினோம். அன்றிரவுஅவர் குடிசை முன்பு சுமார் 50 பேர் உட்கார்ந்து கொண்டிருந்தனர். நாங்களும் கூட்டத்தோடு கூட்டமாக போய் உட்கார்ந்தோம்.

சிறிது நேரத்தில் சுவாமிகள் வந்தார். “பச்சை பனியன் போட்டு இருக்கிற சாமி இங்க வாங்க” என்று என் கணவரை அழைத்தார். கடப்பாரையைக் கொடுத்து பள்ளம் தோண்ட சொன்னார். அதன் பிறகு எனக்கும் என் கணவருக்கும் புத்துணர்ச்சி ஏற்பட்டது. 15 நாளில் மீண்டும் நாங்கள் சென்றோம். பிறகு மாதம்

மாதம் சென்றோம். தீபாவளி, புத்தாண்டு போன்ற சிறப்பு நாட்களில் நாங்கள் சாமிகளுடன்தான் இருப்போம்.

சுவாமிகள் இருந்த வயல் பகுதியில் நிறைய பாம்புகள் உண்டு. ஆனால் யாரையும் தீண்டியதில்லை. சில சமயம் சுவாமிகள் ஏதாவது ஒரு திசையில் கையைக் காட்டி போ... போ... என்பார். நாம் திரும்பிப் பார்த்தால் அங்கு பாம்பு போய் கொண்டிருக்கும்.

சுவாமிகள் எப்போதும் பரிபாஷையில்தான் பேசுவார். எல்லாருக்கும் புரியாது. எனக்கு தேவை என்றால் நிச்சயம் புரியும்.

என் கணவர் காவல் துறையைச் சேர்ந்தவர் என்று அங்கு யாருக்கும் தெரியாது. ஆனால் முதல் தடவை சுவாமிகள் என் கணவரை கூப்பிடும்போது, ‘‘அந்த போலீஸ்காரனை வரச் சொல்’’ என்றார்.

எங்களுக்கு இருந்த எல்லா பிரச்சினைகளையும் சுவாமிகள் தீர்த்து வைத்துள்ளார். நாங்கள் இன்று புத்துணர்ச்சியோடு இருக்கிறோம் என்றால் அதற்கு மூட்டை சுவாமிகள்தான் காரணம் என்றார்.

பழனி அரசு கலைக் கல்லூரியில் பேராசிரியராக பணியாற்றி ஓய்வு பெற்று தற்போது கும்பகோணத்தில் வசிக்கும் கண்ணன், மூட்டை சுவாமிகளிடம் பெற்ற அனுபவங்கள் பல. அதில் சிலவற்றை கூறினார்:

நான் பணி புரிந்த கல்லூரி வாசலில் நீண்ட நாள் இருந்தார். ஒருநாள் என்னிடம் 10 ரூபாய் கேட்டு வாங்கினார். பிறகு ஒருநாள் என் வீட்டுக்கு வந்தார்.

‘‘சாப்பிடுகிறீர்களா?’’ என்று கேட்டேன். உடனே சுவாமிகள், ‘‘என்ன இருக்கு?’’ என்றார். என் மனைவி ‘‘பூரி’’ என்றார். ‘‘சரி சாப்பிடுகிறேன்’’ என்று சுவாமிகள் சாப்பிட தயாரானார்.

என் மனைவி பூரி செய்து கொடுத்தார். ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு.... எட்டு, பதினாறு.... என்று சாப்பிட்டுக் கொண்டே இருந்தார். முதலில் குருமா தீர்ந்தது. என்றாலும் சுவாமிகள் பூரி சாப்பிட்டுக் கொண்டேயிருந்தார்.

முப்பது பூரி தாண்டி நாற்பது பூரி சாப்பிட்ட பிறகும் சாதாரணமாக சாப்பிட்டபடி இருந்தார். மாவு தீரும் நிலை வந்தது. எங்களுக்கு உதறல் எடுத்தது. 47 –வது பூரியை சாப்பிட்டபோது, ‘‘என்னம்மா நிறுத்திக் கொள்ளலாமா?’’ என்றார்.

என் மனைவியும், ‘‘சரிங்க சாமி’’ என்று சொல்ல சாப்பாட்டை முடித்துக் கொண்டார். எதற்காக அவர் என் வீட்டில் 47 பூரி சாப்பிட்டார் என்று தெரியவில்லை.



சுவாமிகளிடம் பாசமாக இருந்த செல்ல நாய்



ஸ்ரீ மூட்டை சுவாமிகள் ஏற்றிய தீபம்

மற்றொருநாள் நான் நடை பயிற்சி சென்று கொண்டிருந்தேன். எதிரே மூட்டை சுவாமிகள் வந்தார். என்னிடம் 2 ரூபாயைக் கொடுத்து, இங்க ஒரு விநாயகர் கோவில் கட்டு என்றார். எனக்கு பிரமிப்பாக இருந்தது. 2 ரூபாயை வைத்து எப்படி கோவில் கட்ட முடியும் என்று கேட்டேன். அதற்கு மூட்டை சுவாமிகள், ‘‘கொஞ்சம் பொறு..... பஞ்சு வியாபாரி வருவான். அவனிடம் சொல். கோவில் கட்டி தருவான்’’ என்றார்.

சுவாமிகள் சொன்னபடியே அந்த பகுதிக்கு சொகுசு கார் ஒன்று வந்தது. அதிலிருந்தவர் என்னிடம் ஏதோ ஒரு முகவரியைக் கேட்டார். அவரிடம் நான் மூட்டை சுவாமிகள் கூறியதைச் சொன்னேன். அந்த பணக்காரர் எந்த மறுப்பும் சொல்லவில்லை. சுவாமிகள் என்னிடம் கொடுத்த 2 ரூபாயை வாங்கிக் கொண்டு, கோவிலைக் கட்டிக் கொடுத்தார்.

ஒரு தடவை இரவு 11.30 மணிக்கு மூட்டை சுவாமிகள் என்னை காட்டுக்குள் அழைத்துச் சென்றார். கண்ணை மூடி திற என்றார். கண்ணை திறந்தேன். என் எதிரில் 18 சித்தர்களும் நின்றனர். அடுத்த வினாடி சைகை காட்டினார். 18 சித்தர்களும் மறைந்து விட்டனர்.

அந்த சித்தர்கள் பற்றி கேட்டபோது, ''எல்லாம் ராமாயண காலத்து பசங்க'' என்று சுவாமிகள் சிரித்துக் கொண்டே சொன்னார். அதை நினைக்கும் போதெல்லாம் எனக்கு பிரமிப்பாக இருக்கிறது. தன்னை நம்பியவர்களுக்கு அவர் நம்பிக்கையானவராக இருந்தார் என்றார்.

—இப்படி எத்தனையோ பக்தர்கள் வாழ்வில் அற்புதங்கள் நிகழ்த்திய சுவாமிகள் வெளி மாநிலம், வெளிநாடுகளில் உள்ள பக்தர்கள் கனவில் சென்று அழைத்து வந்ததுண்டு. மலேசியாவைச் சேர்ந்த லேகா என்ற டாக்டர் இத்தலத்துக்கு வந்து தன் நோயை தீர்த்து சென்றார். காஷ்மீரைச் சேர்ந்த ஒரு ஐ.ஏ.எஸ். அதிகாரி திடீரென கணக்கன்பட்டிக்கு வந்து சுவாமிகள் தன் கனவில் வந்து அருள்பாலித்தார் என்றார்.

ஒரு தடவை முடக்கு வாதத்தால் நடக்க முடியாமல் பாதிக்கப்பட்டிருந்த ஒரு வாலிபரை மதுரையில் இருந்து சுவாமிகளிடம் தூக்கி வந்திருந்தனர். அந்த வாலிபரை கூர்மையாக பார்த்த மூட்டை சுவாமிகள், ''சாமி டீ வாங்கிட்டு வாங்க'' என்று சொன்னதும் அந்த வாலிபர் எழுந்து நடக்கத் தொடங்கினார். இந்த அற்புதத்தை கண்டு பக்தர்கள் மெய்சிலித்தனர்.

கணக்கன்பட்டி அருகில் உள்ள கோம்பைப்பட்டியைச் சேர்ந்தவர் ஈஸ்வரன். டாக்டர்கள் அவருக்கு இதயத்தில் ஓட்டை இருப்பதாகவும் ஆபரேஷன் செய்ய வேண்டும் என்றும் கூறினார்கள். ஆனால் சுவாமிகள் ஈஸ்வரன் மனைவியிடம் ''நீ எங்கும் போக வேண்டாம். இந்த பாலை குடிக்க சொல்'' என்றார்.

ஆனால் ஈஸ்வரனுக்கு சுவாமிகள் மீது நம்பிக்கை இல்லை. என்றாலும் பாலை வாங்கிக் குடித்தார். மறுநாள் அவர் கோவை மருத்துவமனைக்கு சென்றபோது இதயத்தில் இருந்த ஓட்டை மாயமாக மறைந்து இருப்பது கண்டு டாக்டர்கள் ஆச்சரியப்பட்டனர். எப்படி இந்த அதிசயம் நடந்தது என்று அவர்கள் விசாரித்தபோதுதான், மூட்டை சுவாமிகளின் சிறப்பு தெரிய வந்தது. ஓட்டன்சத்திரத்தைச் சேர்ந்த ஒருவரை புற்று நோய் பாதிப்பு காரணமாக படுத்த படுக்கையாக தூக்கி வந்தனர். மூட்டை சுவாமிகள், அவருக்கு திருநீறு கலந்த தண்ணீரை குடிக்க கொடுத்தார். அடுத்த 3 மாதங்களில் அந்த நபருக்கு புற்று நோய் எங்கே போனது என்றே தெரியவில்லை. இந்த தகவல்களை எல்லாம் கணக்கன்பட்டி மூட்டை சுவாமிகள் ஜீவ சமாதி ஆலயத்தின் நிர்வாகிகளில் ஒருவரான மோகன் நம்மிடம் தெரிவித்தார். அவரது தோட்டத்தில்தான் சுவாமிகளின் ஜீவ சமாதி அமைந்துள்ளது.

பொதுவாக சித்தர்கள் ஒருவரை தமது தலத்துக்கு அழைக்க விரும்பினால் யாராவது ஒரு பக்தர் மூலம் அதை செயல்படுத்துவார் என்பார்கள். நம்மையும் இப்படிதான் ஈரோடு கனகராஜ் என்ற பக்தர் மூலம் அழைத்து இருந்தார்.

நிமிடத்துக்கு நிமிடம் அற்புதங்கள் செய்த அந்த மகான் 11.3.2014 அன்று புனர்பூசம் நட்சத்திரத்தில் பரிபூரணமானார்.

எனவே ஒவ்வொரு புனர்பூசம் நட்சத்திர தினத்தன்று சிறப்பு பூஜைகள் நடத்தப்படுகிறது. இது தவிர தினமும் 3 நேரமும் அன்னதானம் வழங்குகிறார்கள்.

அவர் வாழ்ந்த காலத்தில் அவரிடம் ஆசி பெற தவறியவர்கள் இன்று அவரது அருமையை உணர்ந்து அய்யோ கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லையே என்று வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொள்கிறார்கள். இப்போதும் ஒன்றும் கெட்டுப்போகவில்லை.

கணக்கன்பட்டியில் உள்ள ஜீவ சமாதிக்கு சென்று சிறிது நேரம் தியானம் செய்தாலே போதும் சுவாமிகளின் அதிர்வலைகளை உணர முடியும். நம்பிக்கையோடு அவரை அணுகினால் நல்லதே நடக்கும்.





# 39.சீமான் சுவாமிகள்

காரைக்கால்

39. சீமான் சுவாமிகள்

காரைக்கால் என்றதும் நம் எல்லாருக்கும் காரைக்கால் அம்மையார் தான் நினைவுக்கு வருவார்.

அந்த புனிதவதி மூலம் ஈசன் நடத்திய மாம்பழ திருவிளை யாடல் புகழ் பெற்றது.

அந்த புனிதவதி வாழ்ந்த ஊரில் இன்னொரு புனிதரும் வாழ்ந்தார் என்பது காரைக்காலுக்கு கிடைத்த இரட்டிப்பு சிறப்பாகும்.

மகிமைமிக்க அந்த மகானின் பெயர் சீமான். காரைக்கால் கோவில்பத்து பாரதியார் சாலையில் இந்த சித்தபுருஷருக்கு ஜீவசமாதி ஆலயம் அமைந்துள்ளது.




உள்ளே நுழைந்தபோது அமைதி.... அமைதி.... அப்படியொரு அமைதி ஓடி வந்து மனதுக்குள் நிறைந்தது.

சி லர் பிறக்கும் போதே இறை அருளால், சித்தபுருஷர்களாகவே பிறப்பதுண்டு.

தன் நிலை மறந்து, முற்றிலும் பற்றற்ற பழுத்த ஞானியாய், சக மனிதர்களின் துன்பங்களையும் துயரங்களையும் களைந்த மிக, மிக உயர்ந்த ஆன்மாக்களுக்கே அத்தகைய சிறப்பு கிடைப்பதுண்டு.

தவப்புருஷரான சீமான் சித்தருக்கும் அத்தகைய சிறப்பு உண்டு. காரைக்காலில் அருளாட்சி புரிந்த இந்த மகானின் அவதார தோற்றம் நிகழ்ந்தது இலங்கையிலாகும்.

அவர் 1832—ம் ஆண்டு கண்டி நகரில் பிறந்தார். இவரது பெற்றோர் சுப்பிரமணிய குருக்கள்— பத்மாவதி அம்மையார்.

ஆண் குழந்தை பிறந்ததால் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்த பெற்றோர், குழந்தை ஓராண்டு கழித்த பிறகும் வாய் பேசாததைக் கண்டு கவலைப்பட்டனர். தனக்கு பிறகு வேதம் ஓத முடியாதபடி வாய் பேச முடியாத ஊமைக் குழந்தையைக் கொடுத்து விட்டாயே இறைவா என்று தினம், தினம் சுப்பிரமணிய குருக்கள் அழுது கண்ணீர் வடித்தார்.

கண்டி கதிர்காமத்தில் உள்ள கந்தசாமி கோவிலில் பிரதான குருக்களாக சுப்பிரமணிய குருக்கள் இருந்தார். முருகப்பெருமான் மீது அளவு கடந்த பற்றுள்ளவர். அவர் தான் தினமும் பூஜிக்கும் கந்தசாமி மீது கொண்ட பாசத்தால் தன் மகனுக்கும் கந்தசாமி என்றே பெயர் சூட்டியிருந்தார்.

கந்தா.... என்று மகனை அழைப்பார். ஆனால் மகனால் எந்த பதிலும் சொல்ல இயலாது. இப்படியே 4 ஆண்டுகள் ஓடியது.

1836—ம் ஆண்டு ஒருநாள் சுப்பிரமணிய குருக்கள் பூஜைகள் அனைத்தையும் முடித்து விட்டு முருகனையே வைத்தக் கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் மனம், “கந்தா.... கடம்பா... கதிர்வேலா.... என் மகனை வாயைத் திறந்து நாலு வார்த்தை பேச வைக்க மாட்டாயா?” என்று கெஞ்சிக் கொண்டிருந்தது. மனம் முழுக்க அந்த ஏக்கம் வாட்டி வதைத்தது.

அப்போது அவர் காதுக்குள் யாரோ, “முருகா.... முருகா...” என்று சொல்வது போல இருந்தது. பிரமையாக இருக்குமோ என்று முதலில் சுப்பிரமணிய குருக்கள் நினைத்தார். ஆனால் அந்த குரல் மிக, மிக நெருக்கமாகக் கேட்டது.

திரும்பிப் பார்த்தார். அங்கே அவர் மகன் வாய் திறந்து முருகா, முருகா என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

சுப்பிரமணிய குருக்களுக்கு ஆச்சரியம் ஒரு பக்கம். அதிர்ச்சி ஒரு பக்கம். மனதில் ஏற்பட்ட குதூகலத்தில் செய்வதறியாது திகைத்து நின்றார்.

சிறிது நேரம் கழித்தே அவருக்கு சுய நினைவு வந்தது. மகன் கந்தசாமியை அவர் வாரி எடுத்து அணைத்துக் கொண்டு முத்த மழை பொழிந்தார்.



இலங்கையில் மிகச் சரியாக 181 ஆண்டுகளுக்கு முன்பு இந்த அதிசயம் நடந்தது. கண்டி நகர மக்கள் கந்தசாமியை ஆச்சரியத்தோடு பார்த்தனர். முருகன் அருளால் வாய் பேசிய குழந்தை என்பதால் அவரை தெய்வீக அருள் பெற்றவர் என்று கொண்டாடினார்கள்.

அந்த குழந்தை "தெய்வீகக் குழந்தை" என்று தெரிந்து கொண் டாடினார்களோ... அல்லது தெரியாமல் கொண்டாடினார் களோ... நாளடைவில் அந்த குழந்தை தான் ஒரு பிறவி சித்தர் என்ற உண்மையை இந்த உலகுக்கு வெளிப்படுத்தியது.

மற்ற குழந்தைகள் போல கந்தசாமி எந்த ஒரு பொழுது போக்கிலும் ஆர்வம் காட்ட வில்லை. கதிர்காமத்து கோவிலே கதி என்று கிடந்தான். அவன் வாய் முருகா.... முருகா என்றே உச்சரித்தது.

10 வயது 12 வயது 15 வயது கடந்து 17 வயது கட்டிளம் காளைப் பருவத்துக்கு வந்த பிறகும் கந்தசாமியிடம் லௌகீக வாழ்க்கை பாதைக்குத் திரும்பும் எந்த மாற்றமும் ஏற்படவில்லை. மாறாக “சித்தன் போக்கு சிவன் போக்கு” என்பார்களே... அப்படி மாறி விட்டார்.




கதிர்காமத்து ஆலய வளாகத்தில் உட்கார்ந்து வானத்தையே பார்த்துக் கொண்டிருப்பார். வானத்தில் அவருக்கு என்ன காட்சித் தெரியுமோ.... மெல்ல சிரிப்பார். சில சமயம் வானத்தை வெறிக்க... வெறிக்க பார்த்துக் கொண்டே இருப்பார்.

தான் யார் என்பதை மறந்து அவர் மனம் பரபிரம்மத்தை நாடியது. உணவு, உடை, தூக்கம், இருப்பிடம் அத்தனையையும் அவர் மறந்து போனார். அவர் மனதில் வேறு எந்த சலனமும் இல்லை. அவர் மனம் முழுவதையும் பரம்பொருள் ஆக்கிரமித்து இருந்தார்.

தன்நிலை மறந்ததால் உடை உடுப்பதற்கு கூட அவர் மறந்து போனார். இதனால் மற்றவர்கள் அவருக்கு உடை உடுத்தி விட்டனர். ஆனால் கந்தசாமி எழுந்து நடக்கும் போது அந்த உடையும் அவிழ்ந்து விழுந்து விடும்.

ஆனால் கந்தசாமி எந்த உணர்வும் இல்லாமல் வலம் வருவார். சுமார் 22 வயதிலேயே அவர் அவதூதராக மாறி விட்டார்.

எப்போதும் இறை சிந்தனையில் இருந்த கந்தசாமி, திடீரென சிலரைப் பார்த்து, அடுத்து என்னென்ன நடக்கும் என்று சொல்லத் தொடங்கினார். அது அவர்கள் வாழ்வில் அப்படியே நடந்தது.

இந்த தகவல் ஈழத் தமிழர்கள் மத்தியில் பரவியது. கந்தசாமியைப் பார்த்து ஆசி பெற மக்கள் கூட்டம் கூட்டமாக கதிர்காமத்து கோவிலுக்கு வந்தனர். இறைவனின் அருள்கடாட்சம் பெற்ற கந்தசாமி தங்களை பார்த்து ஏதாவது நாலு வார்த்தை நல்ல விதமாக சொல்ல மாட்டாரா என்று ஏங்கித் தவித்தனர். ஏனெனில் கந்தசாமி தம்மை ஒரு தடவை ஏறெடுத்துப் பார்த்தாலே போதும் பிரச்சினைகள் தீர்ந்து விடும் என்று நம்பினார்கள்.

சிலரைப் பார்த்ததும் அவர்கள் உடலில் என்ன நோய் இருக்கிறது என்பதையும் கந்தசாமி மிக, மிக சாதாரணமாக சொன்னதுண்டு. அத்தகைய நோயாளிகளிடம், ‘‘நான் சரிப்படுத்தி விட்டேன். போய் வா....’’ என்பாராம். உண்மையிலேயே அந்தநோய் சில நாட்களில் குணமாகி விடுமாம்.

கந்தசாமி வளர, வளர அவருக்குள் இருந்த சித்த வித்தைகளும் வெளிப்பட்டன. அவர் தம் கைப்பட பூக்களை அள்ளிக் கொடுத்து, அதை பெற்றவர்கள் கோடீசுவரர்களாக மாறினார்கள்.

அவர் ஒருவரைப் பார்த்து சிரித்தாலே போதும், தோஷங்கள், பிரச்சினைகள் பனி போல விலகின. வெகு சிலரைப் பார்த்ததும் அவர்கள் கிரகத் தோஷங்களின் பிடியில் சிக்கித் தவிக்கிறார்கள் என்பதைப் புரிந்து கொள்வார். அத்தகைய நபர்களை அழைத்து அவர்களது தலையில் கை வைத்து தொட்டு ஆசீர்வதிப்பார். அவ்வளவுதான். அந்த நபரின் பிரச்சினைகள் காற்றோடு காற்றாக கலந்து கரைந்து விடும்.

இப்படி அவர் ஈழத் தமிழர்களுக்கு அருளை வாரி வாரி வழங்கினார். வள்ளல் போல வாரி வழங்குபவர்களை நாம் சீமான் என்று சொல்வோம் அல்லவா... கண்டி மக்களும் அவரை ‘‘சீமான் சுவாமிகள்’’ என்று அழைக்கத் தொடங்கினார்கள்.

இதனால் நாளடைவில் கந்தசாமி என்ற இயற்பெயர் மறந்து சீமான் சுவாமிகள் என்ற பெயர் நிலைத்து விட்டது. சீமான் சுவாமிகளைத் தேடி தினம் தினம் நூற்றுக்கணக்கானவர்கள் படையெடுத்தனர்.

இது சீமான் சுவாமிகளுக்கு சற்று இடையூறாக மாறியது. தியானம் செய்ய முடியாமல் கஷ்டப்பட்டார். எனவே அவர் இதில் இருந்து தப்பிக்க அட்டமா சித்திகளை கையாண்டார்.

திடீரென ஒரு இடத்தில் காட்சியளிப்பார். மறுநிமிடம் மறைந்து விடுவார். பல மைல்களுக்கு அப்பால் உள்ள ஏதாவது ஒரு ஊரில் மரத்தடியில் உட்கார்ந்திருப்பார்.



ஜீவசமாதி முன்பக்கத் தோற்றம்

சில சமயம் வயல் வெளிகளில் நடந்து வருவார். அதே சமயம் இன்னொரு ஊரிலும் இருப்பார். யார் உண்மையான சீமான் சுவாமிகள் என்று புரியாமல் மக்கள் திகைத்ததுண்டு.

கண்டியைச் சேர்ந்த கனகசபாபதி என்பவர், சீமான் சுவாமிகளை தேடி தேடி அலைந்து களைத்துப் போனார். ஒரு நாள் திடீரென அவர் முன்பு சீமான் சுவாமிகள் தோன்றினார். ''என்னை ஏன் தினமும் தேடி, தேடி அலைகிறாய். உன் குடும்பத்துக்கு யாராலும் பில்லி சூனியம் வைக்க முடியாது. உன்

வீட்டில் எல்லாருக்கும் நீண்ட ஆயுள் உண்டு. கவலைப்படாமல் போய் வா'' என்று சொல்லி விட்டு மாயமாகி விட்டார்.

இப்படி ஏராளமான சித்தாடல்கள் புரிந்த சீமான் சுவாமிகள் மீது சிலருக்கு பொறாமை ஏற்பட்டது. சீமான் சுவாமிகளால் எல்லாரது பிரச்சினைகளும் தீர்ந்து விட்டால் தங்களுக்கு பிழைப்பு நடக்காது என்று நினைத்தனர். எனவே சீமான் சுவாமிகளை கொல்ல அவர்கள் திட்டமிட்டனர்.

ஒருநாள் சீமான் சுவாமிகள் தியானத்தில் ஆழ்ந்திருந்தபோது, எதிரிகள் அவர் கை, கால்களை கட்டித் தூக்கிச் சென்றனர். அருகில் மழை வெள்ளம் கரை புரண்டோடி கொண்டிருந்த மாணிக்க கங்கை நதிக்குள் வீசினார்கள். சீமான் சுவாமிகள் கதை முடிந்தது என்று மகிழ்ந்தனர். இரண்டு வாரம் கழித்து நதியில் தண்ணீர் வற்றியது. சீமான் சுவாமிகள் உடல் பாதி மண்ணில் புதைந்தபடி கிடப்பதை கண்டு மக்கள் அதிர்ச்சி அடைந்தனர். ஓடோடிச் சென்று மணலை அகற்றி அவரைத் தூக்கினார்கள். உடலில் கட்டப்பட்டிருந்த கயிற்று கட்டுகளை அவிழ்த்தனர்.

அடுத்த வினாடி சீமான் சுவாமிகள் உடலை சிலிர்த்தபடி எழுந்தார். உடலில் ஒட்டியிருந்த மணலைத் தட்டியபடி நிர்வாணக் கோலத்தில் நடந்தவர்.... சற்று தொலைவுக்கு சென்றதும் அப்படியே மறைந்து போனார்.

இனியும் இலங்கையில் வாழ வேண்டாம் என்று சுவாமிகள் நினைத்தாரோ.... என்னவோ அதன்பிறகு அவர் கண்டி நகர மக்களுக்கு காட்சி கொடுக்கவே இல்லை. இந்த சமயத்தில் ஒரு அற்புதம் நடந்தது.

கண்டி கதிர்காமத்தில் மாயமான அந்த சித்தபுருஷர் காரைக்கால் கடற்கரையோரத்தில் கரை ஏறி நின்றார். இலங்கைக்கும்—தமிழகத்துக்கும் இடையில் உள்ள கடலை அவர் எப்படி கடந்தார்? அந்த கேள்விக்கு இதுவரை விடை கிடைக்கவில்லை.

காரைக்கால் கடலோரத்தில் நிர்வாணமாக நடந்து வந்த சீமான் சுவாமிகளை பார்த்ததும் முதலில் மக்கள் முகம் சுளித்தனர். அவரை பைத்தியம் என்று நினைத்தனர்.

ஆனால் அவர் பைத்தியங்களுக்கு வைத்தியம் பார்க்க வந்த வித்தகர் என்பதை சில நாட்களிலேயே காரைக்கால் மக்கள் தெரிந்து கொண்டனர்.

அடுத்தடுத்து சீமான் சுவாமிகள் நடத்திய சித்தாடல்கள், மக்கள் மனதில் அவரை புனிதராக உயர்த்தியது.

ஒரே நேரத்தில் 3 அல்லது 4 இடங்களில் தோன்றி காரைக்கால் மக்களை திகைக்க வைத்தார். அவர் குளித்தும் சாப்பிட்டும் யாரும் பார்த்ததே இல்லை என்ற நிலைதான் முதலில் இருந்தது.

என்றாவது ஒரு நாள் யார் வீடு முன்பாவது போய் நின்று, சாப்பாடு கேட்பார். அப்படி அவர் உணவு கேட்கும் வீடு, அன்று முதல் செல்வ செழிப்பானதாக மாறிவிடும்.

இதை அறிந்த காரைக்கால் நகர மக்கள், ‘‘சித்தர் நம் வீட்டுக்கு வந்து சாப்பாடு கேட்க மாட்டாரா?’’ என்று ஆவலோடு தவம் இருந்ததுண்டு.

ஒருநாள் அவர் வினோதமான செயல் ஒன்றை செய்தார். கடைத்தெரு வழியாக நடந்து வந்து கொண்டிருந்தவர் திடீரென ஒரு கடைக்குள் புகுந்தார். அங்கிருந்த கல்லாப் பெட்டியைத் திறந்தார். அதற்குள் இருந்த காசுகள் அனைத்தையும் இரு கைகளில் அள்ளினார். அதை திருநள்ளாறு சாலையில் நாட்டு மருந்துக் கடை அருகே இருக்கும் கிணற்றுக்குள் போட்டு விட்டு போய் விட்டார். இதைப் பார்த்து மக்கள் குழம்பிப் போனார்கள்.

‘‘ஏன் இப்படி நடந்து கொள்கிறார்?’’ என்று நினைத்தனர். ஆனால் சில தினங்கள் கழித்து மீண்டும் அவர் இன்னொரு கடைக்குள் சென்று பணப்பெட்டியில் இருந்த காசுகளை எடுத்து வந்து கிணற்றுக்குள் வீசினார்.

சீமான் சுவாமிகள் ஏன் இவ்வாறு செய்கிறார் என்று சிலர் ஆராய்ச்சியில் ஈடுபட்டனர். அப்போது ஒரு உண்மை தெரிய வந்தது. சித்தர் காசை வீசினார். அது தண்ணீரில் மூழ்கியது. அதோடு கர்மாக்களும் மூழ்கியது.

காசை வீசினால் கர்மா கரையும் என்ற உண்மையை மக்கள் தெரிந்து கொண்டனர். சீமான் சுவாமிகள் காசு வீசிய கிணறு இன்னும், ‘‘சீமான் கிணறு’’ என்று அழைக்கப்படுகிறது.

அது போல காரைக்காலில் உள்ள ஒரு குளக்கரைக்கு சென்று சுவாமிகள் அடிக்கடி தியானம் செய்வதுண்டு. மணிக்கணக்கில் அவர் அங்கு ஆழ்ந்த தியானத்தில் இருப்பார். இதனால் அந்த குளத்துக்கு ‘‘சீமான் குளம்’’ என்ற பெயர் ஏற்பட்டது. இன்றும் அந்த சீமான் குளம் உள்ளது.

காரைக்காலில் சீமான் சுவாமிகள் நிகழ்த்திய அற்புதங்கள் ஏராளம். ஒரு தடவை காரைக்காலை சேர்ந்த ஒருவரின் கால் எலும்புகள் விபத்தில் சுக்கல்—சுக்கலாக நொறுங்கியது. தனது அமானுஷ்ய சக்தியால் அந்த எலும்புகளை கூட வைத்த சுவாமிகள், அந்த நபரை நடக்க வைத்தும் ஆச்சரியப்படுத்தினார்.

ஒரு தடவை வெண் குஷ்ட நோயால் அவதிப்பட்ட ஒருவரது உடலில் சுவாமிகள் கை வைத்து சக்தியை புகுத்தினார். அடுத்த ஓரிரு வாரங்களில் அந்த நபரின் வெண் குஷ்டம் மறைந்து இயல்பான நிலைக்கு வந்தார்.

சில சமயம் ஏழ்மை நிலையில் உள்ளவர்கள் வீட்டுக்குள் சென்று சாதத்தை அள்ளி தானே சாப்பிடுவார். அன்றோடு அந்த குடும்பத்தின் ஏழ்மை நிலை முடிவுக்கு வந்து விடும். சீமான் சுவாமிகள் அருளால் பணக்காரர்களாக மாறிய குடும்பத்தினரின் வாரிசுகள் இன்றும் காரைக்காலில் வாழ்ந்து வருகிறார்கள்.

ஒரு தடவை பிரெஞ்சு உயர் அதிகாரி ஒருவர் சீமான் சுவாமிகளை சந்தித்தார். அவர் சொல்லும் முன்பே அவருக்கு இருக்கும் நீண்ட நாள் பிரச்சினையை சுவாமிகள் கடகடவென கூறினார்.

அது மட்டுமல்ல அந்த பிரச்சினையை சுவாமிகள் தீர்த்தும் வைத்தார். இதனால் அந்த பிரெஞ்சு அதிகாரி மிகுந்த ஆச்சரியம் அடைந்தார். சீமான் சுவாமிகளின் ஆற்றல் பற்றி பிரெஞ்சு மொழியில் எழுதினார். அந்த குறிப்புகள் இப்போதும் பிரான்சு நாட்டில் உள்ள நூலகத்தில் இருக்கிறது. சித்த மருத்துவம் மற்றும் புதுமையான வட்ட வடிவ ஜாதக முறையை பின்பற்றியும் சீமான் சுவாமிகள் மக்களுக்கு சேவை செய்தார். 1890—ம் ஆண்டு மாசி மாதம் கேட்டை நட்சத்திரத்தில் சுவாமிகள் பரிபூரணம் ஆனார்.

அவர் ஜீவசமாதியான பிறகு 30 ஆண்டுகளாக எந்த பூஜையும் நடக்கவில்லை. 1920—ம் ஆண்டு நெல்லையை சேர்ந்த குமாரானந்த சுவாமிகள் காரைக்கால் வந்து கன்னடிய செட்டியார் தெருவில் ஆன்மிக வகுப்பு நடத்தத் தொடங்கினார். அவர் மூலம் சீமான் சுவாமிகள் பற்றி மீண்டும் வெளிஉலகுக்குத் தெரிய வந்தது. அவர் முயற்சியால் 1924—ம் ஆண்டு சீமான் சுவாமிகளுக்கு காரைக்கால் பாரதியார் சாலையில் ஜீவசமாதி ஆலயம் கட்டப்பட்டது.

இந்த ஜீவசமாதி ஆலயத்தில் வழிபட்டால் ஆத்மபலம், ஆயுள்பலம், ஆரோக்கியம், ஐஸ்வர்யம் அனைத்தும் கிடைக்கும். இந்த ஜீவசமாதி ஆலயத்தின் அருகிலேயே மடம் அமைந்துள்ளது.

ஜீவசமாதி கருவறையில் லிங்க பிரதிஷ்டை செய்துள்ளனர். வாசலின் இருபுறமும் சீமான் சுவாமிகளின் வரை படம் உள்ளது. முன் பக்க மண்டபம், சித்தரை நாடி வருபவர்கள் அமர்ந்து தியானம் செய்ய ஏற்றதாக உள்ளது. தற்போது 5 பேர் கொண்ட குழு இந்த ஜீவசமாதி ஆலயத்தை நிர்வாகம் செய்து வருகிறது. இந்த குழுவினர் அன்னதான மண்டபம் கட்டும் பணியில் ஈடுபட்டுள்ளனர்.

மாதம் தோறும் பவுர்ணமி தினத்தன்று இங்கு சிறப்பு பூஜைகள், அன்னதானம் நடத்தப்படுகிறது. சீமான் சுவாமிகள் தம் வாழ்நாள் முழுவதும் தன்னலமின்றி மற்றவர்களுக்கு உதவ வேண்டும் என்ற சிந்தனையை ஏற்படுத்தினார். நாமும் அந்த சிந்தனைக்கு ஏற்ப வாழ்ந்தால் சீமான் சுவாமிகள் அருளை மிக எளிதாக பெற முடியும். காரைக்கால் புதிய பஸ் நிலையத்தில் இருந்து பொறையாறு, நாகை செல்லும் சாலையில் ஏழை மாரியம்மன் கோவிலுக்கு அருகில் இந்த ஜீவசமாதி ஆலயம் உள்ளது. காரைக்கால் பஸ் நிலையத்தில் இருந்து இரண்டே நிமிடத்தில் நடந்து சென்று விடலாம்.





# 40.ஸ்ரீ அழுக்கு சுவாமிகள்

**வேட்டைக்காரன்புதூர், பொள்ளாச்சி**

## 40. ஸ்ரீ அழுக்கு சுவாமிகள்

அழுக்கு இல்லாத மனிதர்களே கிடையாது. 99.9 சதவீதம் பேர் அழுக்கோடுதான் அலைகிறார்கள்.



**ஸ்ரீ அழுக்கு சுவாமிகள் கருவறை**

உடல் அழுக்கு மட்டுமல்ல...உள்ளத்திலும் ஏகப்பட்ட அழுக்குகள். உடல் அழுக்கை நீக்கி விடலாம். உள்ளத்து அழுக்கை எப்படி நீக்குவது? அது எளிதாக நடக்கிற காரியமா என்ன?

ரொம்பவும் யோசிக்காதீர்கள்... நம் மன அழுக்கைப் போக்க ‘‘அழுக்குச் சித்தர்’’ இருக்கிறார். ஒருவர் மற்றவர்களின் மன அழுக்குகளை நீக்கி, புடம்போட்ட தங்கமாக மாற்றுவது என்பது சாதாரண விஷயமல்ல. எனவே

இந்த பிறவியில் நமக்கு அழுக்குச் சித்தர் கிடைத்திருப்பது, நாம் செய்த பாக்கியமே!

இவர் பொள்ளாச்சியை அடுத்த ஆனைமலை அருகே உள்ள வேட்டைக்காரன் புதூரில் சுமார் 100 ஆண்டுக்கு முன்பு வாழ்ந்த நிகரற்ற சித்தர் ஆவார். அந்த ஊரில் இவருடைய ஜீவசமாதி, அழகான ஆலயம் போல கட்டபட்டுள்ளது. தினமும் நூற்றுக்கணக்கானவர்கள் அந்த ஜீவசமாதி ஆலயத்துக்கு சென்று தங்கள் பிறவிப் பிணி அழுக்குகளை நிவர்த்தி செய்து செல்கிறார்கள்.

இந்த ஜீவசமாதி ஆலயத்துக்கு சென்றாலே மன அழுக்குகள் அகன்று விடுமா என்று நீங்கள் நினைக்கலாம். அதைத் தெரிந்து கொள்ளும் முன்பு அழுக்குச் சித்தர் பற்றி முதலில் அறிந்து கொள்வோம்.

இவர் யார்? இவரது பெற்றோர் யார்? இவருக்கு எந்த ஊர்? இந்த மாதிரி கேள்விகளுக்கு இதுவரை விடை கிடைக்கவில்லை.

உயர்ந்த நிலையில் உள்ள சித்தர்கள் அவ்வளவு எளிதில் சாதாரண மனிதர்களின் கண்களில் தென்பட மாட்டார்கள் என்று சொல்வார்கள். அழுக்குச் சித்தரும் அப்படித்தான் இருந்தார். யார் கண்களிலும் அகப்படாமல் வெள்ளியங்கிரி மலைப் பகுதியில் உலாவிக்கொண்டிருந்தார்.

அந்த காலகட்டத்தில் அவர் உடல் முழுவதும் அழுக்கடைந்த நிலையில், அலங்கோலமான பரட்டை தலையுடன், உடலில் உடை எதுவும் இன்றி அவதூதராகக் காணப்பட்டார். அவர் கண்கள் ஒளிபொருந்தியதாக இருந்தது. சாதாரணமாக பார்க்கும்போது அவரை பிச்சைக்காரர் என்றே நினைக்கத்தோன்றும்.

ஆனால் அவர் அட்டமா சித்துக்கள் அனைத்திலும் உயர்ந்த நிலையில் இருந்தார். ஒரு இடத்தில் மறைந்து இன்னொரு இடத்தில் தோன்றுவார். திடீரென வானத்தில் பறந்து செல்வார்.

யாராவது பார்த்துவிட்டால் மாயமாய் மறைந்து விடுவார். அப்படிப்பட்டவர் ஒரு நாள் 2 பேரிடம் அகப்பட நேரிட்டது. அழுக்குச் சித்தரின் மகிமையை இந்த உலகம் உணர அதுதான் ஒரு திருப்புமுனையை ஏற்படுத்தியது.

அந்த திருப்புமுனையை ஏற்படுத்திய சிறப்புக்குரியவர்கள் வெள்ளியங்கிரி கவுண்டர், குமாரசாமி கவுண்டர். ஒரு தடவை அவர்கள் இருவரும்

வெள்ளியங்கிரி மலைக்கு சென்றிருந்தனர். அப்போது அழுக்குச் சித்தரை பார்த்தனர். அவரை மகான் என்று கண்டுபிடித்து கோவைக்கு அழைத்து வந்தனர்.

சில மாதங்களுக்கு அவர் யாருடனும் பேசாமல் இருந்தார். நாளடைவில் அவர் பேசத் தொடங்கினார். அனைவரும் கேட்டுக்கொண்டதால் கோவணம் மட்டும் அணிந்தார்.

அதோடு நிறைய சித்தாடல்கள் செய்தார். இதனால் கோவை மக்கள் அவரை கண்கண்ட தெய்வமாக கொண்டாடினார்கள். அதன்பிறகு அவர் வேட்டைக்காரன் புதூருக்கு அழைத்து செல்லப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

ஆனால் அவர் தாமாகவே விருப்பம் கொண்டு வேட்டைக்காரன் புதூருக்கு சென்றதாகச் சொல்கிறார்கள். அதற்கு ஒரு சம்பவம் உதாரணமாக சொல்லப்படுகிறது.

வேட்டைக்காரன் புதூரை சேர்ந்த ராமு முதலியார், வெங்கடேச முதலியார் ஆகியோரின் மகன்கள் சென்னையில் படித்து வந்தனர். ஒரு தடவை விடுமுறைக்காக அவர்கள் ஊருக்கு செல்ல ரெயில் நிலையத்துக்கு வந்தனர். அப்போது அவர்களை பார்த்த அழுக்குச் சித்தர், ‘‘நானும் உங்கள் ஊருக்கு வரட்டுமா?’’ என்று கேட்டாராம்.

பிறகு ரெயில் கோவை போத்தனூருக்கு சென்று சேரும் முன்பே சித்தர், அங்கு தயாராக இருந்தார். மாணவர்கள் இருவரும் ஆச்சரியத்துடன், ‘‘நீங்கள் எப்படி எங்களுக்கு முன்பே வந்தீர்கள்? என்று கேட்க ‘‘அழுக்கன் எங்கு வேண்டுமானாலும் வருவாண்டா’’ என்றார். அவர்களுடன் சித்தர் வேட்டைக்காரன் புதூருக்கு சென்றார். அந்த சமயத்தில் வேட்டைக்காரன் புதூரில் உயிர்க்கொல்லி நோயாக கருதப்பட்ட ‘‘பிளேக்’’ நோய் வெகுவேகமாக பரவிக் கொண்டிருந்தது. நிறைய பேர் பலியாகிவிட்டதால் மீதமுள்ளவர்கள் ஊரை காலி செய்துவிட்டு காட்டுக்குள் சென்று விட ஏற்பாடுகள் செய்திருந்தனர். அப்போதுதான் சித்தர் அங்கு போய் சேர்ந்தார்.

பீதியில் இருந்த மக்களுக்கு ஆறுதலும், தைரியமும் கூறிய அவர் சில பச்சிலைகளை அரைத்து சாறு எடுத்து கொடுத்தார். அதன்பிறகு பிளேக் நோய்

அந்த ஊரில் யாரையும் தாக்கவில்லை. அதனால் ஊர் மக்கள் அனைவரும் அவரை போற்றி வழிபட்டனர்.

அந்த ஊர் மக்களின் அன்பும், நன்றியும் அழுக்குச் சித்தரின் மனதை கட்டிப்போட்டது. அவர் அந்த ஊரிலேயே தங்கி விட்டார்.



ஜீவ சமாதி தோற்றம்

பொதுவாக தங்கள் உடலை அணுஅணுவாக பிரிக்கும் ஆற்றல்பெற்ற சித்தப்புருஷர்கள் நிரந்தரமாக ஒரு இடத்தில் தங்களை குறுக்கிக்கொள்ள மாட்டார்கள். அத்தகைய ஆற்றலுடன் திகழ்ந்த அழுக்குச் சித்தர், வேட்டைக்காரன்புதூரில் ஐக்கியமாகி விட திருவுளம் கொண்டதாலும், அந்த ஊர் மக்கள் அர்ப்பணிப்பு உணர்வுடன் இருந்ததாலும் அங்கேயே தங்கிவிட்டார். அவர் ஒரு நாள்கூட குளித்ததே இல்லை. இதனால் அவர் உடல் முழுவதும் அழுக்கு சேர்ந்தது. அவரது உண்மையான பெயர் தெரியாததால் மக்கள் அவரை "அழுக்குச் சித்தர்" என்றழைக்கத் தொடங்கினார்கள். நாளடைவில் அவருக்கு அந்தப் பெயரே நிலைத்துவிட்டது.

குளிக்காவிட்டாலும் அவர் உடலில் இருந்து நாற்றம் எதுவும் வீசியதே இல்லை. மாறாக மல்லிகை, முல்லை, மனோரஞ்சித மலர்களின் மணம் வீசும். இது சித்தரின் மகிமையை உணர்த்தும் வகையில் இருந்தது.

வேட்டைக்காரன் புதூரில் அவர் நடத்திய அற்புதங்கள் ஏராளம்.

சீரடி சாய்பாபா போல அவர் தினமும் யார் வீட்டிலாவது பிச்சை எடுத்து தான் சாப்பிட்டார். பாத்திரத்தில் வாங்கி ஒரு போதும் சாப்பிட்டதில்லை. இரு கைகளையும் ஏந்தி வாங்கிச் சாப்பிடுவார்.

## கம்பங் கூழ் அபிஷேகம்

ஸ்ரீஅழுக்குச் சித்தருக்கு கம்பங் கூழ் என்றால் மிகவும் விருப்பமாகும். வேட்டைக்காரன் புதூரில் உள்ள பழனியப்ப வாத்தியார் வீட்டுக்கு சென்று "கம்பங்கஞ்சி வேண்டும்" என்று கேட்டு வாங்கிக் குடிப்பார். இதைக் கருத்தில் கொண்டு சித்தர் சமாதி லிங்கத்துக்கு தினமும் காலை 7.15 மணிக்கு கம்பங்கூழ் அபிஷேகம் செய்யப்படுகிறது.

பிறகு அந்த அபிஷேக கம்பங்கூழை தண்ணீரில் கலந்து வைத்து விடுவார்கள். காலையில் ஜீவ சமாதிக்கு வரும் பக்தர்கள் அதை பிரசாதமாக கருதி அருந்தி செல்கிறார்கள்.

ராமு முதலியாரும் அவரது மனைவி அலமேலு அம்மாளும் அடிக்கடி சித்தருக்கு உணவு கொடுத்து பராமரித்தனர். ஒரு நாள் அவர்கள் வீட்டுக்குச் சென்ற சித்தர், ‘‘சமையல் கட்டில் 4 இட்லியும் கொத்து மல்லிச்சட்னியும் இருக்கு. எடுத்துக்கிட்டு வா....’’ என்றார்.

அலமேலு அம்மாள் யோசித்தபடியே சமையல் அறைக்கு சென்றார். அங்கு சித்தர் சொன்னது போல மிகச்சரியாக 4 இட்லியும் கொத்துமல்லி சட்னியும் இருப்பது கண்டு ஆச்சரியமடைந்தார். நம் வீட்டில் செய்த சமையல் இவருக்கு எப்படி தெரியும்? என்று திகைத்தார்.

இதுபோல வேட்டைக்காரன் புதூரில் உள்ள பலர் வீட்டில் என்ன உணவு இருக்கிறது என்பதை அவர் மிக, மிக துல்லியமாக சொன்னதுண்டாம். இது தவிர அடுத்து என்ன நடக்கப்போகிறது என்பதை சொல்லும் ஆற்றிலும் அவரிடம் இருந்தது.

ஒரு தடவை ஒரு மரத்தடியில் தூங்கிய சிலரை, ‘‘எழுந்து வேறு இடத்துக்கு சென்று விடுங்கள். மரம் விழப்போகிறது’’ என்றாராம். எல்லாரும் எழுந்து சென்ற அடுத்த வினாடி, அந்த மரம் பலத்த சத்தத்துடன் சரிந்து விழுந்ததாம்.

ஒருவர் மனதில் என்ன நினைக்கிறார் என்பதையும் கூட சித்தர் படம் பிடித்தது போல சொல்லி விடுவதுண்டாம். குறிப்பாக வேட்டைக்காரன் புதூருக்குள் தீய எண்ணத்துடன் வருபவர்களை அவர் நுழைய விட்டதில்லை. எனவே அழுக்குச் சித்தரை அந்த ஊர் மக்கள் ‘‘காவல் தெய்வம்’’ என்றும் கருதினார்கள்.

இரவில் அவர் பெரும்பாலும் தூங்குவதே இல்லை. ஏதாவது ஒரு தெரு வழியாக நடந்து கொண்டே இருப்பார். அப்போது நறுமண மலர்களின் வாசனை அவரிடம் இருந்து வெளிப்படுமாம். அந்த வாசனையை வைத்தே சித்தர் தெருவில் போய் கொண்டிருக்கிறார் என்று சொல்லி விடுவார்களாம்.

சில சமயம் அவர் தெருவில் நடந்து செல்லும் போது, அவர் உடம்பை சுற்றி ஒரு ஒளிவட்டமும் சூழ்ந்திருக்குமாம். அந்த ஒளி கண்களை கூசச் செய்யும் வகையில் பிரகாசமாக இருக்குமாம்.



வில்வ மரமும் அரச மரமும்
பின்னிப்பிணைந்து வளர்ந்துள்ளது

சில சமயம் அவர் கிராமத்தில் உள்ள யாரையாவது அழைத்து கூர்ந்து பார்ப்பதுண்டு. அப்படிப் பார்த்தால், அந்த நபரின் தோஷங்கள், அவருக்கு வர இருக்கும் ஆபத்துகள் நீங்குவதாக அர்த்தமாம். இதனால் தெருவில் அழுக்குச் சித்தர் நடந்து வந்தாலே, நம்மை பார்க்க மாட்டாரா என்று ஊரே ஏங்கியது உண்டாம்.

ஓடையன்குளம் எனும் ஊரில் ஒரு நாள் இரவு மண்எண்ணெய் விளக்கொளியில் கந்தசாமி கவுண்டர் என்பவர் புராண நூல் ஒன்றை படிக்க நிறைய பேர் கேட்டுக் கொண்டிருந்தனர். அப்போது சித்தரும் அங்கு சென்று அமர்ந்து அதைக் கேட்டுக் கொண்டிருந்தார். திடீரென எண்ணெய் குறைந்து விளக்கொளி மங்கலானது. அது அணைந்து விடுமோ என்று ஒருவர் எண்ணெய்யை எடுக்க ஓடினார்.

அப்போது சித்தர் அருகில் பாத்திரத்தில் இருந்த தண்ணீரை எடுத்து விளக்கில் ஊற்றி, ''டேய் இனி நல்லா எரியும்டா'' என்றார். அவர் சொன்னது போல முன்பை விட பிரகாசமாக விளக்கு எரிந்தது. சீரடி சாய்பாபா தண்ணீர் ஊற்றி விளக்கெரித்தது போல அழுக்குச் சித்தரும் தண்ணீர் ஊற்றி விளக்கை எரிய வைத்ததைப் பார்த்து அங்கு இருந்தவர்கள் வியப்பில் ஆழ்ந்தனர்.

## மிருகசீரிட நட்சத்திரத்தில் குழந்தை பிறக்கும்

திருமணமாகி நீண்ட நாட்களாக குழந்தைப் பேறு இல்லாத பலர் அழுக்குச் சித்தரிடம் மனம் உருக வேண்டியதன் பேரில் குழந்தை பாக்கியத்தை பெற்றனர். சித்தர் அருளால் பிறந்த அந்த குழந்தைகள் அனைத்தும் மிருகசீரிடம் நட்சத்திரத்தில் பிறந்தது ஆச்சரியமூட்டும் வகையில் உள்ளது. சித்தர் மிருகசீரிடம் நட்சத்திர தினத்தன்று பரிபூரணம் அடைந்த தால் அவர் அருளால் பிறக்கும் குழந்தைகள் மிருக சீரிடம் நட்சத்திரத்தில் பிறப்பதாக சொல்கிறார்கள்.

மற்றொரு நாள் சோமந்துரை சித்தூரில் உள்ள ஈஸ்வரன் கோவிலுக்கு பூஜை வைக்க சென்ற அர்ச்சகர் கருவறையில் லிங்கம் மீது மிகப்பெரிய கருநாகம் படுத்து இருப்பதைக் கண்டு அலறியபடி வெளியில் ஓடி வந்தார். ஊரே திரண்டு வந்து அந்த நாகத்தை விரட்ட முயன்றும் அது வெளியேறவில்லை.

அப்போது அந்த வழியாக வந்த அழுக்குச் சித்தர் விறுவிறுவென கருவறைக்குள் சென்றார். கருநாகத்தைப் பிடித்துத் தூக்க அது அவர் கையில் சுற்றிக் கொண்டு மாறி, மாறி கொத்தியது. சித்தரின் கையில் இருந்து ரத்தம் ஒழுகும் அளவுக்கு அந்த பாம்பு கொத்தியது.

ஊர்க்காரர்கள் அதிர்ச்சியுடன் பார்த்துக் கொண்டிருக்க சித்தர் அந்த பாம்பை அருகில் உள்ள புதருக்குள் விட்டு, விட்டு எதுவும் நடக்காதது போல நடந்தார். கருநாகம் தீண்டியும் அவருக்கு எதுவும் ஆகவில்லை.

ஒரு தடவை ஆனைமலைக்கு சென்றபோது ஆழியாற்றில் வெள்ளம் கரை புரண்டோடியது. பாலம் கட்டப்படாத அந்த காலத்தில் ஆற்றில் இறங்கிதான் மறுகரைக்கு செல்ல முடியும். மக்கள் வெள்ளத்தில் இறங்காமல் தவித்தப்படி நின்று கொண்டிருக்க சித்தர் மட்டும் தண்ணீருக்குள் இறங்கி மூழ்கினார். அடுத்த நிமிடம் மறுகரையில் எழுந்து வெளியேறினார்.

இந்த சித்தாடலைப் பார்த்து மக்கள் திகைத்து நிற்க, சித்தரோ, ‘‘யாரும் தண்ணீருக்குள் இறங்க வேண்டாம்’’ என்று உத்தரவிட்டு மக்களை காப்பாற்றினார். இதே போல ஒரு தடவை வேட்டைக்காரன் புதூரில் இருந்தவர், அடுத்த வினாடி பழனியில் தோன்றி ஆச்சரியப்படுத்தினார்.

மற்றொரு தடவை அவரை ஒரு அறையில் பூட்டி தூங்கச் செய்தனர். மறுநாள் காலையில் பார்த்தால் சித்தர் வெளியில் நடமாடிக் கொண்டிருந்தார். அவரை அடைத்து பூட்டிய கதவும், பூட்டும் அப்படியே இருந்தது. இந்த அற்புதத்தை கண்டு பலரும் பிரமித்துப் போனார்கள்.

வேட்டைக்காரன் புதூரை சேர்ந்த கணேசன் என்பவர் தீராத வயிற்று வலி காரணமாக மலை உச்சியில் ஏறி குதித்து தற்கொலைக்கு முயன்றார். அவர் குதிக்க எத்தனித்தபோது ‘‘கணேசா நில்’’ என்ற குரல் கேட்டது.

சத்தம் வந்த திசை நோக்கி கணேசன் பார்த்த போது அழுக்குச் சித்தர் உடல் பல துண்டுகளாக சிதறிக் கிடந்ததை கண்டு அதிர்ந்தார். ‘‘அய்யோ சித்தரை யாரோ வெட்டிக் கொன்று விட்டார்களே’’ என்று அவர் நினைத்துக் கொண்டிருந்தபோதே உடல் பாகங்கள் ஒன்றாக சேர்ந்தன. அழுக்குச் சித்தர் சிரித்தபடி எழுந்து நின்றார்.

‘‘என்னப்பா.... நீ சின்ன வயிற்று வலிக்கே உயிரை விடலாமா’’ என்றபடி மலையில் படர்ந்திருந்த ஒரு செடியின் இலையைப் பறித்து இதைத் தின்னு.... இனி உனக்கு வயிற்று வலியே வராது என்றார். கணேசனும் அதை சாப்பிட அவர் வாழ்நாள் முழுக்க வயிற்று வலி வரவில்லையாம். இப்படி வேட்டைக்காரன் புதூர் மக்களுக்கு அவர் தினம், தினம் அற்புதம் செய்தபடி இருந்தார். ஒருநாள் வேட்டைக்காரன்புதூர் ஆதிவிநாயகர் கோவில் வழியாக வந்து கொண்டிருந்தார். அப்போது அங்கு 10 பேர் சேர்ந்து ஒரு பெரிய கல்லை நகர்த்திக் கொண்டிருந்தனர்.

சித்தர் அந்த கல்லின் ஒரு பக்கத்தில் நின்று லேசாகத்தான் தூக்கினார். அந்த பெரிய கல் நகர்ந்து விலகியது. இதைப் பார்த்த 10 தொழிலாளர்களும் மயக்கம் போட்டு விழாத குறையாக அதிர்ச்சியில் உறைந்தனர்.

இப்படி ஆச்சரியங்களின் உச்சமாகத் திகழ்ந்த அழுக்குச் சித்தர் 1919—ம் ஆண்டு தனது உடலை உதிர்த்து விட முடிவு செய்தார். தன் ஜீவசமாதி

அமைய வேண்டிய இடத்தை அவரே தேர்வு செய்தார். ஒருநாள் அலமேலுவை அழைத்துக் கொண்டு வேட்டைக்கார சுவாமி கோவிலுக்கு சென்றார். அந்த ஆலயத்தின் வடபுறம் உப்பாற்றங்கரையில் காடாக கிடந்த இடத்தில் வேம்பு, வில்வம், அரசு, கடம்பம், வன்னி, மகிழம், மந்தாரை, அத்தி, குருந்தம் செடிகளை நட்டு தண்ணீர் ஊற்றி வளர்க்க உத்தரவிட்டார். அதன்படி செடிகள் வைத்து தண்ணீர் ஊற்றி வளர்த்து வந்தனர்.

சில மாதங்கள் ஓடின. ஒருநாள் சித்தர் மழையில் நனைந்தபடி ராமுமுதலியார் வீட்டுக்கு வந்தார். ஒரு அறைக்குள் சென்று அப்படியே தியானத்தில் ஆழ்ந்து விட்டார். 12 நாட்களாக அவர் இவ்வாறு இருந்ததும் அவர் ஜீவ சமாதி ஆகப் போகிறார் என்பதை வேட்டைக்காரன் புதூர் மக்கள் உணர்ந்து கொண்டனர். கார்த்திகை மாதம் மிருகசீரிடம் தினத்தன்று அலமேலுவை அழைத்த சித்தர், ‘‘இந்த அழுக்கனை வில்வ மரம் அருகே ஜீவசமாதி செய்து விடுங்கள்’’ என்றார். பிறகு கைகளை வணங்கியபடி கூப்ப, அவர் தலையில் இருந்து ஜோதி ஒன்று புறப்பட்டுச் சென்றது. சித்தர் பரிபூரணம் ஆகிவிட்டார் என்ற தகவல் பரவியது.

அவர் உத்தரவிட்டபடி வில்வ மரத்தடியில் ஜீவ சமாதி அமைக்கப்பட்டது. அழகான மண்டபம் கட்டி அதை மிகச் சிறந்த ஆலயமாக மாற்றியுள்ளனர். ஒவ்வொரு ஆண்டும் கார்த்திகை மாதம் மிருகசீரிடம் நட்சத்திரத்தினத்தன்று குரு பூஜை நடத்தப்படுகிறது. சரி.... இந்த ஜீவ சமாதிக்கு சென்றால் எப்படி மன அழுக்குகள் நீங்கும் என்று இந்த கட்டுரையின் ஆரம்பத்தில் எழுந்த சந்தேகத்துக்கு உள்ள விடையை இனி காணலாம்.

அழுக்குச் சித்தர் பரிபூரணம் அடைந்து 100 ஆண்டுகளை நெருங்கிவிட்ட போதிலும் இந்த ஜீவசமாதி அதிக அதிர்வுடன் காணப்படுகிறது. அதுவும் மிருகசீரிஷம் நட்சத்திர நாளில் இத்தலத்தில் உள்ள அதிர்வு இரண்டு மடங்காகி விடுகிறது. இதன் மூலம் அழுக்குச் சித்தர் இன்னமும் இத்தலத்தில் உறைந்து அருள் பாலிப்பது உறுதியாகியுள்ளது.

இந்த அருளை முறைப்படி அள்ளிப் பருகினால், நிச்சயம் நமது மன அழுக்குகள் நீங்கும்.

அழுக்குச் சித்தரிடம் நமது மனதை கொடுத்து விட வேண்டும். எப்போதும் அவருடன் ஒரே சிந்தனையில் நாம் மூழ்க வேண்டும். பிறப்பில்லா பெருநிலையைத் தாருங்கள் என்று மனதார கேட்க வேண்டும். இதில் நீங்கள் வெற்றி பெற்று விட்டால், இமயமலையில் இப்போதும் வாழ்வதாகக் கருதப்படும் மகா அவதார் பாபாஜியின் ''கிரியா யோகத்தை'' பெற முடியும். அதாவது நமது உடம்பில் உள்ள 6 சக்கரங்களையும் ஒரே நேர்க்கோட்டில் ஒரே நேரத்தில் சுழல வைக்க முடியும்.

பல நூறு ஆண்டுகள் தவம் இருந்தாலும், பல பிறவிகள் எடுத்தாலும் 6 சக்கரங்களை சுழல வைப்பது என்பது எளிதான காரியம் அல்ல. ஆனால் இத்தலத்தில் வந்து அழுக்குச் சித்தரிடம் மனதை ஒன்ற வைத்தால் ''கிரியா யோகா'' ஆற்றலை பெற முடியும். அதுதான் உங்களை முக்திப் பாதைக்கு அழைத்து செல்லும்.

அழுக்குச் சாமியார் செய்த அற்புதங்கள் பற்றி மட்டுமே எல்லாரும் நினைக்கிறார்கள். அத்தகைய சித்தாடல்களை மக்கள் நலனை முன்னிட்டே சித்தர் செய்தார். எனவே அதில் ஆர்வம் காட்டாமல் நம் உடம்பில் உள்ள 6 சக்கரங்களையும் அழுக்குச் சித்தரிடம் அருள்பெற்று சுழல வைத்தால், அதுதான் நம் ஆன்மாவை மேம்படுத்த உதவும்.

பக்தர்கள் வசதிக்காக இத்தலம் காலை 6 மணி முதல் இரவு 8 மணி வரை திறந்து வைக்கப்படுகிறது. இந்த ஜீவ சமாதியில் பக்தர்கள் உன்னிப்பாக கவனித்து பயன்பெற வேண்டிய சில விஷயங்கள் உள்ளன.

முதலில் அழுக்குச் சித்தர் இந்த ஜீவ சமாதியில் உயிர்ப்புடன் உள்ளார் என்பதை நம்புங்கள். அது உங்கள் துயரங்களை விரட்டும்.

அடுத்து சித்தர் உருவாக்கிய மரங்களைப் பாருங்கள். கருவறை அருகே வில்வ மரமும் அரச மரமும் பின்னிப் பிணைந்து வளர்ந்துள்ளன. இது தெய்வீகமாக கருதப்படுகிறது. அதை வணங்கினால் உங்கள் தோஷம் களையப்படும்.

இத்தலத்தில் மூன்று மகிழ மரங்கள் ஒரே நேர்க்கோட்டில் உள்ளன. மகிழ மரங்களில் ரங்கநாதர் உறைவதாக ஐதீகம். அந்த மரங்களை வழிபட செல்வம் பெறலாம். எதிர்காலத்தில் இத்தலத்துக்கு வருபவர்கள் அருள்

செல்வத்துடன் பொருள் செல்வமும் பெறவே சித்தர் தீர்க்கதரிசனமாக இந்த மரங்களை வளர்க்கச் செய்தார் என்று சொல்கிறார்கள்.

ஆக.... அழுக்குச் சித்தர் ஜீவ சமாதிக்கு சென்றால் முக்திக்கான ஆன்ம பலம் பெறலாம். அதோடு  இம்மை வாழ்க்கைக்கு தேவையான எல்லாவற்றையும் பெறலாம்.

பொள்ளாச்சியை அடுத்துள்ள ஆனைமலையில் இருந்து காளியாபுரம் அல்லது சேத்துமடை பஸ்சில் சென்றால் வேட்டைக்காரன் புதூரில் இறங்கி மிக எளிதாக அழுக்குச் சித்தர் ஜீவ சமாதிக்கு செல்லலாம்.

சித்தர்களின் அதிசயங்கள் நம் தலைவிதியை மாற்றும் ஆற்றல் பெற்றவை. கடல் அலைகள் போன்று அந்த அதிசயங்கள் ஓய்வதே இல்லை.



இந்தியாவின் நம்பர்–1 மாலை நாளிதழான "மாலைமலர்" பத்திரிகையின் சென்னை தலைமை அலுவலகத்தில், இந்நூலின் ஆசிரியர் செ.செந்தில்குமார் பொறுப்பாசிரியராக உள்ளார். பத்திரிகைத்துறையில் சுமார் முப்பது ஆண்டுகள் அனுபவம் பெற்றவர். திருச்செந்தூர் ஆதித்தனார் கல்லூரியில் படித்த போது, கல்லூரி மாத இதழான "கேம்பஸ் நியூஸ்" இதழில் ஏராளமான சிறுகதைகள், கவிதைகள், கட்டுரைகள் எழுதியுள்ளார்.



ராணி வார இதழில் துணை ஆசிரியராக பணிபுரிந்தபோது, வேலூர் மத்திய சிறையில் உள்ள பெண் கொலையாளிகள் பற்றி ஆய்வு செய்து, "பெண் கைதிகளின் உண்மைக் கதையை" தொடராக எழுதினார். அமானுஷ்யம் தொடர்பான "ஆவியே நில் கொல்" என்றொரு தொடர் எழுதியுள்ளார். "கொல்லிமலை குள்ளன்" என்ற சிறுவர் கதையை "சித்து" எனும் புனைப்பெயரில் எழுதியுள்ளார்.

மாலைமலர் தேன்மலரில் "உலகை குலுக்கிய கொலைகள்", "ஆவி சொன்ன பதில்கள்" தொடர்கள் எழுதியுள்ளார். மாலை மலரில் எழுதிய "ஆலய வழிபாடு ஏன் – எதற்கு – எப்படி?" மற்றும் "வாருங்கள்... சீரடி சாய்பாபாவை தரிசிப்போம்" ஆகிய தொடர்கள் தினத்தந்தி பதிப்பகத்தில் நூலாக வெளிவந்துள்ளன. இதில் "வாருங்கள்... சீரடி சாய்பாபாவை தரிசிப்போம்" என்ற நூலுக்கு 2019–ம் ஆண்டின் சிறந்த ஆன்மிக படைப்புக்கான முதல் பரிசை கலைமாமணி ஏர்வாடி எஸ்.ராதாகிருஷ்ணனின் "கவிதை உறவு" மாத இதழ் வழங்கி சிறப்பித்துள்ளது.

"ராணி" வார இதழில் எழுதிய "சித்தர்கள்" தொடர் உங்கள் கைகளில் புத்தகமாக மலர்ந்துள்ளது. மாலைமலரில் "அதிசயங்கள் நிறைந்த திருவண்ணாமலை" எனும் தொடர் எழுதுகிறார்.




விலை
ரூ. 150/-


ISBN 978-81-939380-5-8